உ

சிவமயம்

# பெரியபுராணம்

என்னும்

# திருத்தொண்டர் புராணச் சுருக்கம்

யாழ்ப்பாணம் கட்டுடை வாசரும்,
ஜோகூர் சமஸ்தான சட்டசபை
அங்கத்தினரும் சமாதான நீதிபதியுமாகிய
மூவார் ச. பொன்னம்பலம், J. P., M. S. C.
எழுதியது

திருமயிலை
சே. வெ. ஜம்புலிங்கம் பிள்ளை
அச்சிட்டது.

# பதிப்புரை

இந்நூற் பதிப்பில் யான் சேர்ந்திருப்பதால் இதன் சிறப்பை எடுத்தியம்புவது தற்புகழ்ச்சியின்பாற்படும். பேரறிஞர்களின் பின்வரும் சிறப்புரைகளில் இதன் ஏற்றம் கூறப்படுவதால் பதிப்புரையில் குறிப்பது மிகையுமாகும். நிற்க.

இந்நூலின் முதற் பதிப்பு (முதற் பாகம் மட்டும் சம்பந்தர் புராணம் உட்பட) 1940-ம் ஆண்டில் ஆசிரியர் ச. பொன்னம்பலமவர்களால் (மூவார் சமாதான நீதிபதி) குவாலாலம்பூரில் அச்சிட்டுப் பிரசுரிக்கப்பட்டது. அதனை மலேயாவிலுள்ள சைவரும், ஏனையோரும் மிகவும் பாராட்டினமையால் இரண்டாம் பாகத்தையுஞ் சேர்த்து ஒரே புத்தகமாக இரண்டாம் பதிப்பு வெளியிடவேண்டுமென்று எண்ணி ஆசிரியர் 1941-ம் ஆண்டிலேயே பெருமுயற்சி செய்தனர். அம்முயற்சி கைகூடுவதற்குள் உலகப் பெரும்போரின் கடுமையால் மலேயாவுக்கும், இந்தியா, இலங்கை முதலிய தமிழ் தேசங்களுக்குமிருந்த தொடர்பு அற்றுவிட்டது. பிறகு காகிதப் பஞ்சம் உண்டாகியது. இன்னோரன்ன பல தடைகளால் 1941-ம் ஆண்டிலே வெளியாகவிருந்த இப்பதிப்பு இதுகாறும் தாழ்க்க நேர்ந்தது. இதுவும் இறைவன் செயல்போலும்! இப்பதிப்பின் அச்சுவேலை தொடங்கிய பின்னரும் பல சங்கடங்கள் ஏற்பட்டன. அச்சுச்செலவும் பன்மடங்கு பல்கிப் பெருகியது. இவற்றையெல்லாம் கடந்து இந்நூல் இப்போது நடராசப்பெருமானார் திருவருளால் வெளிவரலாயிற்று. இதனை அச்சிடும் பொறுப்பை முற்றும் ஆசிரியர் என்னிடம் ஒப்புவித்தனர். அதனால், இதிற் காணும் குற்றங் குறைகள் என்னைச் சேர்ந்தவையே.

> "குணநாடிக் குற்றமு நாடி யவற்றுள்
> மிகைநாடி மிக்க கொளல்"

என்னும் திருக்குறளிற் கூறியபடி சைவத் தமிழ்ப் பெருஞ் செல்வர்கள் இந்நூலை ஏற்று ஆதரிப்பார்களென்று நம்பு கிறேன்.

என்னையும் ஒரு பொருளாக மதித்து இந்நூற் பிரசுர மாகிய அரும்பெரும் சிவதொண்டை எனக்குப் பணித்த நண்பர் ச. பொன்னம்பலவருக்கு எனது வந்தனத்தைச் செலுத்துகிறேன்.

தொண்டர்க்குத் தொண்டராம் இச் சிவபுண்ணியம் கிடைத்தது யான் செய்த பாக்கியம்போலும்!

> ஓடிடும் பஞ்சேந் திரியம் ஒடுக்கியென் னூழ்வினைகள்
> வாடிடும் வண்ணம்நின் றெத்தவம் செய்தனன் வானினுள்ளோர்
> சூடிடுஞ் சீர்த்திருப் பாதத்தர் தொண்டத் தொகையினுள்ள
> சேடர்தஞ் செல்வப் பெரும்புக ழந்தாதி செப்பிடவே"

என்னும் நம்பியாண்டார் நம்பிகள் திருப்பாடல் எனக்கு முற்றும் பொருந்தியதாகும்.

சே. வெ. ஜம்புலிங்கம்.

# முன்னுரை

உலகெலாமாகி வேறாய் உடனுமாய் நிற்கும் இறைவன் ஆன்மாக்கள் உய்யும்பொருட்டு அருளிச்செய்த வேதாகமங்களில் கூறப்படும் பதி, பசு, பாசம் என்னும் முப்பொருளின் இயல்பும், இல்லறம் துறவறம் ஆகிய இரண்டு சிறந்த நெறிகளால் எய்தும் பேறுகளும், சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நாற்பாதங்களைக் கடைப்பிடித்துச் செய்யப்படும் சமய அனுட்டானங்களும், இந்நான்கு மார்க்கங்களில் நின்று கடவுளை வழிபட்டுத் திருவருள் கைகூடப்பெற்ற நாயன்மார் வரலாறுகளும், தமிழ் வேதமாகிய திருமுறைகளின் சிறப்பும் ஆகிய இவைகளை எல்லாம் எடுத்து இனிது போதிப்பது **பெரிய புராணம்** என்னும் **திருத்தொண்டர் புராணமாம்.**

"பக்திவலையிற் படுவோன் காண்க" என்றபடி பக்தியோடு செயற்கரிய செய்கை செய்து பெறுதற்கரிய பேறு பெற்ற அடியார் புகழைக் கூறுவது பெரிய புராணம். அறிவினையும் அன்பினையும் வளர்ந்தோங்கச் செய்வதில் தமிழ்க் காவியங்களுள் தலைசிறந்து விளங்குவது. இனிய நன்மொழிகளால் அமைக்கப்பெற்றுள்ளது. பாமாலைகளை ஆங்காங்குத் தன்அகத்தே கொண்டு இலங்கும் அருணூலுமாகும்.

> " அருணூலு மாரணமு மல்லாது மைந்தின்
> பொருணூ றெரியப் புகும்" (திருவருட்பயன்)

அந்நாளில் தொண்டர் சரிதையைப் படியாது அனபாய சோழன் அவகதை கூறும் சிந்தாமணி என்னும் நூலில் பொழுது போக்கியதுபோல, இந்நாளில் நம் சமய மக்களில் பலர் கற்பனை கதைப் புத்தகங்களை வாசிப்பதில் பொழுது போக்கித் தங்கள் வாழ்நாளை வீழ்நாளாய்க் கழிப்பது நல்ல கனியிருக்கக் காய் பறிப்பதுபோலு மன்றோ! அடியார் சரிதங்களை அறிய விரும்பும் அன்பர்கட்குப் பயன்படும்படி இந்நூலைச் சுருக்கமாய் எழுதினேன்.

சேக்கிழார்பெருமான், சுந்தரமூர்த்திநாயனார் அருளிச்செய்த திருத்தொண்டத்தொகையை முதனூலாகவும்,

நம்பியாண்டார் நம்பிகளது திருத்தொண்டர் திருவந்தாதியை வழிநூலாகவும், சுந்தரமூர்த்திகளைக் காப்பியத் தலைவராகவும், பரவையார் சங்கிலியார் என்னும் இருமாதரைத் தலைவியர்களாகவும் வைத்துப் பாடியருளிய பெரிய புராணத்தில் சுந்தரர் சரிதையை முதலிலும், இடையிலும், கடையிலும் வைத்தருளினர். அதனால், சுந்தரர் சரித்திரத்தை இப்பதிப்பின் முதலில் எழுதலானேன்.

சைவ சமயாசாரியர்கள் நால்வர் சரித்திரத்தையும் அறிய விரும்பும் அன்பர்கட்குப் பயனைக் கொடுக்குமென்றெண்ணி மாணிக்கவாசக சுவாமிகள் வரலாற்றையும் எழுதி, இத் திருத்தொண்டர் புராணச் சுருக்கத்தின் இறுதியில் சேர்க்கலானேன்.

இந்நூல் அடியார் பெருமையைக் கூறுவதனால் இதிலுள்ள குறைகளை விடுத்து குணமானவைகளை ஏற்றுக் கொள்வது பெரியோர் கடமை.

இப்பதிப்பை அச்சிடும் ஒன்றரைவருடகாலமாகத் தம் உடல் நலங் கருதாது அச்சுப் பிழைகளைத் திருத்தியும் நூலைப் பரிசோதித்தும் வெளிவருவதற்குப் பெருந் துணையாயிருந்த எனது ஆப்தநண்பர், திருமயிலைச் சைவத் திருவாளர் சே. வெ. ஜம்புலிங்கம் பிள்ளையவர்கட்கு எனது நன்றியும் கடப்பாடும் உரியன.

இந்நூலுக்கு மதிப்புரை சிறப்புரைகளைத்தந்துதவிய சிவ நேசர்கட்கு எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவிக்கின்றேன்.

சென்னைச் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாரினால் நடத்தப்படும் "அப்பர் அச்சகத்"தின் மேற்பார்வையாளராகிய ஸ்ரீ சி. மு. கோவிந்தராச முதலியார் அவர்கள் நல்ல காகிதத்தில் இவ்வெளியீட்டை அழகாகச் செய்துகொடுத்ததற்காக அவர்களைப் பாராட்டுகின்றேன்.

மூவார்,
விரோதி ஐப்பசி
22—10—49.

ச. பொன்னம்பலம், J.P., M. S. C.,
*State of Johore.*

உ

குருபாதம்

தருமபுர ஆதீனத்தைச் சேர்ந்த
புள்ளிருக்குவேளூர்த் தேவஸ்தானீகர்
ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள்

எழுதிய

## சிறப்புரை

*ஞால முய்ய நாமுய்ய நம்பி சைவ நன்னெறியின்*
*சீல முய்யத் திருத்தொண்டத் தொகைமுன் பாடச் செழுமறைகள்*
*ஓல மிடவு முணர்வரியா ரடியா ருடனு முளதென்றால்*
*ஆலீமமுது செய்தபிரா னடியார் பெருமை யறிந்தாரார்.*

சிவனடியார் பெருமையை அளவிட முடியாதென்று அவர்கள் புராணம் பாடியருளிய சேக்கிழார் பெருமானே கூறுகின்றனர். இதனால் பெரிய புராணத்தின் மாட்சி புலப்படும். இப்புராணம் சைவத் திருமுறைகளில் 12-ஆவதாகவும், திருவருட்பாக்களில் 5-ஆவதாகவும் திகழ்வதால் இது ஏனைய தமிழ்ப் புராணங்களோடு எண்ணத்தக்கதன்று. ஜீவன்முக்தரான 63 தனி யடியவர் 9 தொகை யடியவர் ஆகிய சிவஞானிகளின் மகிமையைக் கற்பனை சிறிதுமின்றி உள்ளபடி விளக்கும் 'அருட்பெருங் காவியம்'. பக்தியை விளைக்கவல்லது. சிந்தாமணி, சிலப்பதிகாரம் முதலிய சங்க நூல்களினுஞ் சாலச் சிறந்தது. இம்மைக்கும் மறுமைக்கும் பயன் அளிப்பது. படிப்பவருக்கும் கேட்பவருக்கும் சிவஞானப்பேற்றைத் தருவது. இத்தகைய அருமைவாய்ந்த புராணம் தமிழ்ப்புலமை யுடையோருக்கேயன்றி ஏனையோருக்கும் பயன்விளைப்பதன்றாகலின் இதனை நாவலர் பெருமான் 100 ஆண்டுகளுக்கு முன்னர் வசன நடையிலெழுதி வெளியிட்டனர். அவ்வசனமும் இக்காலத்தவர்களுக்குக் கடினமாகக் காணப்படுவதால் தெள்ளிய நடையில் சுருக்கமாக எழுதவேண்டிய அவசியம் உண்டாயது. அதனை யறிந்து நிறைவேற்றியவர் மூவார் சமாதான நீதிபதியும், ஜோகூர் சமஸ்தான சட்டசபை அங்கத்தினருமாகிய ச. பொன்னம்பலமவர்களாவர்.

சுருக்கமென்ற பெயருக்கு ஏற்ப திருத்தொண்டர் புராண சாரப் பாடல்கள் ஒவ்வொரு நாயனார் சரித்திரச் சுருக்க முகப்பிலும் காணக்கிடக்கின்றன. பெரிய புராணத்து அரும் பாசுரங்கள் உரிய இடங்களிலே எடுத்துக்காட்டப் பட்டும் விளக்கப்பட்டும் உள்ளன. நால்வர் சரித்திரங் களில் தேவார. திருவாசகப் பாசுரங்களிற் சில மணிகள் உதகரிக்கப்பட்டிருப்பதும் போற்றத்தக்கதாம். ஒவ் வொரு நாயனார் சரித்திரத்திலும் இன்றியமையாத குறிப் புக்கள் மேற்கோளுடன் காணப்படுகின்றன. இவை நாவலர் சூசனத்தை ஒருவாறு பின்பற்றியதென்று கூற லாம். இதன்கண் மாணிக்கவாசகர் சரித்திரச் சுருக்கமும் அனுபந்தமாகச் சேர்க்கப்பட்டிருப்பது விரும்பத்தக்கதே யாம். இந்நூல் எனது நண்பரும், பழைய வைதிக சைவ நன்னெறியிற் சிறிதும் தவறுதவருமாகிய திருமயிலை சே. வெ ஜம்புலிங்கம் பிள்ளையவர்களின் பார்வையில் வெளியானதை அறிந்து மகிழ்கின்றேன். இப்பதிப்பு அச்சாகியதும் திருத் தில்லையின் மெய்ஞ்ஞானமேயான திருச்சிற்றம்பலத்தில் ஆடுவான் சந்நிதியில் வைத்து வழிபாடு செய்யப்பெற்றது. இந்நூலைச் சைவர்கள் ஆதரிப்பார்களாக.

இந்நூலை அரிய விஷயங்களுடன் எழுதி சைவ உல குக்கு உதவிய சிவநேயர் ச. பொன்னம்பலம் அவர்கட்கு ஸ்ரீநடராசப்பெருமான் கிருபைமென்மேலும் உண்டாகுக.

"பழைய வைதிக சைவம் பரக்கவே"

திருச்சிற்றம்பலம்

வேலூர் தேவஸ்தானம்,
விகிர்தி, சித்திரை, ௫.

பெரியபுராண விருத்தியுரை ஆசிரியரும், கோவை
வழக்கறிஞருமாகிய சிவக்கவிமணி
ஸ்ரீமத். கோ. க. சுப்பிரமணிய முதலியாரவர்கள், B. A.
எழுதிய

## மதிப்புரை

திருத்தொண்டர் புராணச் சுருக்கம் என்னும் இந்நூல் மலேயா நாட்டில் ஜோஹோர் வளமண்டலத்தில் மூவார் என்னும் நகரில் வாழ்கின்ற சைவப் பேரன்பர் திரு. ச. பொன்னம்பலம் என்னும் சமாதான நீதிபதியால் எழுதப்பெற்றுள்ளது. அவரைப் பலகாலமாகக் கடித மூலம் யானறிவேன். இரண்டாண்டுகளின் முன் திருத்தில்லையில் அடியேனது பெரியபுராண உரை நிறைவு விழாவின்போது இறைவரருளால் சந்தித்து அளவளாவப் பெற்றேன். "காண்டலைகமையின்றியும் முன்கலந்த பெருங் கேண்மையினார்" என்ற தன்மைகள் என் நினைவுக்கு வந்தன. அப்போது ஒருவகையானறிந்து அவர் பெயரையும், ஊரையும் சொல்லிக் கேட்டபோது அவர் மிகவும் வியப்படைந்து மிக்க அன்புடன் அளவளாவினர். இடையில் நேர்ந்த ஜப்பானிய யுத்தத்தினால் அவர் நாட்டிற்கும் நம் நாட்டுக்கும் சில ஆண்டுகள் கடிதமும் செல்லா நிலைமையாயினமையின், கடிதத்தாலும் காணுது நின்ற நாங்கள் இறையருள் கூட்ட அங்குக் கூடிக் கண்டு கொண்டபோது எங்களிருவருக்கும் இடையே விளைந்த மகிழ்ச்சிக்கு அளவேயில்லை. அதுபோழ்து அவர் எழுதி வெளியிட்டிருந்த இந்நூலை என்னிடம் தந்தார். நான் படித்துப் பெரிதும் மகிழ்ந்தேன். தென்றமிழ் நன்னாட்டினின்றும் பன்னெடுந் தூரம் கடலிடையிட்டு நிற்கும் அந்த மலேயா நாட்டில்தமிழும் சைவமும் அருகியே நிகழ்கின்றமையால் அந்நாட்டினர் தகுதிகளுக்கேற்பப் பெரிய புராண சரிதங்களையும், வரலாறுகளையும் அங்கங்கும் குறிப்பிட்ட சிற்சில

தேவாரப் பகுதிகளையும் எளிய இனிய தமிழ் நடையில் கற்றாரும், மற்றாரும் அறியும் வண்ணம் பல மேற்கோள்களுடன் இந்நூல் எழுதப்பட்டுள்ளது. ஆசிரியரின் கருணையையும், சைவம் பரப்பும் சீரிய பேரன்பினையும் விளக்குகின்றது. இதன் இரண்டாம் பதிப்பு இப்போது வெளியிடப் பெறுகின்றது. இஃது ஆசிரியர் மேற்கொண்ட குறிக்கோளை இனிது நிறைவேற்றி மக்களுக்குச் சைவ ஞானமும், சைவ மேன்மையும் தெரியத்தந்து ஓங்குவதாக! "மன்றுளாரடியாரவர் வான்புகழ், நின்றதெங்கு நிலவி யுலகெலாம்" என்று வாழ்த்துகின்றேன். இதனாசிரியர் இத்தகைய சைவ நற்பணிகளைச் செய்து நீடு வாழ்க என்று ஸ்ரீ பொன்னம்பலவாணரது இணையடிகளை இறைஞ்சுகின்றேன்.

சேக்கிழார் நிலையம்,
கோவை.
24-4-1950

C. K. சுப்பிரமணிய முதலியார்.

யாழ்ப்பாணத்துப் புலோலி வைதிக சைவசிகாமணியும்
பேராசிரியருமாகிய
ஸ்ரீமத். சு. சிவபாதசுந்தரம் பிள்ளையவர்கள் B. A.

*எழுதிய*

## மதிப்புரை

*இந்நூலின் ஆசிரியர் சிறுவயதிலேயே சிவபத்தியும், சைவப்பற்றும், விடாமுயற்சியுமுடையவராய் இருந்தவர். பின்பு இவைகள் வளர்ந்து ஒன்றாகச் சேர்ந்து இந்நூலாகப் பரிணமித்தன. இந்நூல் எவர்களும் விளங்கத்தக்க நடையிலே எழுதப்பட்டது; சுருக்கமென்று பெயருடையதாயினும் வேண்டிய அளவு அகலமுடையது. பெரியபுராணம் தேவாரம் திருவாசகமாகிய இவற்றிலுள்ள திருப்பாடல்கள் இதனிலே செறிந்து இதன் சிறப்பையும் பெருமையையும் ஏற்றுகின்றன. மணிவாசகப் பெருமானுடைய திருச்சரிதை இதிலே சேர்ந்து திருத்தொண்டர் புராணத்தை நிறைவாக்குகின்றது. இதை இயற்றுதற்கெழுந்த ஆர்வமும் நிறைவேற்றிய ஆற்றலும் பாராட்டத்தக்கவை.*

கந்தவனம்,<br>
விகுருதி, ஆடி, ௩.

சிவகுகமயம்

பிக்ஷாண்டார்கோயில் பெருநிலக்கிழாரும், திருச்சி ஜில்லா விவசாயகழகத்தின் தலைவரும், "தென்னிந்திய வேளாண்மை" என்னும் விவசாய பாடநூலின் ஆசிரியருள் ஒருவரும், திருவாரூர்ப் பிறந்தாரும், சைவநன்னெறிப் பரம்பரையில் வந்தவரும், வழிவழிச் சிவதொண்டே பொழுதுபோக்காக வுடையவருமாகிய

இராயபகதூர் கோ. இராஜகோபால் பிள்ளையவர்கள் F. R. H. S.

எழுதிய

## புனைந்துரை

அவன் அவள் அதுவாக விளங்கும் உலகின்கணுள்ள பல்வகைச் சராசரங்களும் தாமேயாகிய தயாபரன், உயிர்களாகிய நாம் வேண்டத்தக்கதறிந்தும், வேண்டிய முழுதும் தருபவனாக நின்றும், பொன்னம்பலத்திலிருந்து படைத்தலாதி பஞ்சகிருத்தியங்களையும் லீலையாக நடத்தி யருளுகின்றானென்பது நம்மனோர் சுருதி யுக்தி அனுபவவாயிலாகக் கண்டறிந்த உண்மை. இதுவே செந்நெறியாகிய சைவ நன்னெறியாகும். சிந்தையும் சொல்லும் செல்லாத இடத்து உறையும் இறைவனைத் தம் மனக்கோயிலில் பிடித்துவைத்துப் போற்றிப் பயனுறுவர் நல்லோர்; இவரே திருத்தொண்டர். இத் தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியமே சிவபுண்ணியம். இத்தொண்டர்தம் பெருமையைச் சொல்லவும் அரிதே பெரிதே என்று கூறுவர் தமிழ் மூதாட்டியார்.

தாம் பெற்ற இன்பத்தை இவ்வையகமும் பெற்றுய்க வென்னும் எண்ணமுடைய சன்மார்க்க சீலர்களான சைவாசாரியர்கள், திருவருள் துணையாகும் இறைவனது சத்தியவாக்கைப் பெற்றுச், சாத்திர தோத்திரங்களை அமிழ்தம்போலுந் தமிழிற் பாமாலையாக இயற்றியருளினர்.

எல்லையில் தொல்லைப் பர்வங்களையும் இல்லையாகச் செய்யும் தில்லையம்பதி மேவிவாழந்தணர் முதலான அடியவர்க ளாகிய பெருமக்களது திவ்விய சரிதங்களையும் உலகெலா முணர்ந்து ஓதுவதற்கு உரிமையாக்கி நம் பொருட்டுச் சாசனம் செய்திருக்கின்றனர் மேலோர். தேனினுமினிக் கும் தமிழ்த் திருவாசகத்தின் சொல்லும் பொருளும் சிவமேயென மன்றுளாடும் சிவபரஞ்சுடரே சாதித்தருளின ரன்றோ?

நம்மனோரது சாதி மதச் சண்டை பூசல்களுக்கெல் லாம் அருமருந்தான அன்புநெறிகளை அளிக்கவல்லது "மேன்மைகொள் சைவநீதி" ஒன்றேயாம் என்னும் உண்மை அவ்வப்போது வெளிப்படுத்துவது பரமகருணா நிதியான மாதொருபாகனது அருள், அறம், ஆஞ்ஞை, இயல்பு என்று கூறலாம். சைவசமயாசாரியர் நால்வருக் குப்பின் தாயுமானவரும் நாவலர் பெருமானும் மற்றும் பிறரும் அவ்வப்போது தோன்றி அரன்பணி செய்து ஆனந்தமூட்டினர். உண்மையான தமிழ்க்கல்வி உண்மை யான மங்களப் பொருளாகும் சிவத்தையே சுட்டுகின்றது தருகின்றதல்லவா? பிறந்து இறந்து உழலும் மாக்கள்போ லல்லாது நாம் மக்களாயினோம். "நானேயோ தவஞ் செய்தேன் சிவாயநமவெனப் பெற்றேன்" என்னும் ஞானக்கண்ணைக்கொடுத்து இம்மை அம்மைப் பயன்களை ஒருங்கே உதவவல்ல சிவஞானமே சிவத்தொண்டே மேன்மையானதென்னும் முடிவை யாவரும் உணரவேண் டும்; உணரச்செய்யவேண்டுமென்னும் நன்னோக்கத்துடன் தான் தமிழ்க்கல்வி மரபில் இந்தப் பழைய பெரியபுராண மும் புதிய **திருத்தொண்டர் புராணச் சுருக்கம்** என்னுந் தலைப்பில் எழுதி புதவப்படுகிறதென்று நாம் கொள்ள வேண்டும்.

பொன்னம்பலத்தானது பெயரையும் அருளையும் படைத்த நமது பேரறிஞரும் உண்மைச் சமாதான நீதி பதியுமான மூவார் ஸ்ரீ பொன்னம்பலமவர்கள் முன்னோர் மொழிபொருளேயன்றி அவர் மொழியும் பொன்னே போல் போற்றித் தமது பொன்மொழிகளுடன் கூட்டிக் கலந்து திருவருளின் இனிமை சொட்டச் சொட்டக் கேட்போரும் படிப்போரும் இன்புறும் வண்ணம் எளிய நடையில் செய்மையிலுள்ள தமிழரும் படித்துப் பயனுறும்படி பெரியபுராணம் எழுதி வெளியிட்டதைப் போற்றி மகிழ்கின்றேன். சைவநீதியும் சைவவாழ்க்கையும் என்றும் எங்கும் நின்று நிலவுவதாக. இதை எழுதி வெளியிட்ட உண்மைச் சைவரும், நீதிபதியுமான திரு. பொன்னம்பலம் அவர்கட்குப் பசுபதீசுவரர் அருளால் எல்லா நன்மையும் உண்டாவதாக இறைஞ்சுகின்ற அன்பன்,

ஆனந்த விலாசம்,<br>
பிக்ஷாண்டார் கோயில்,<br>
2—8—50.

**கோ. இராஜகோபால் பிள்ளை.**

செந்திலாண்டவன் துணை

திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடத் தலைவரும், பல அறநிலைக்களை
காசிமுதல் கன்னியாகுமரிவரையில் தாபித்துச் சைவப் பயிரையும்
தமிழ்ப்பயிரையும் வளர்ப்பவருமாகிய
ஸ்ரீலஸ்ரீ காசிவாசி - அருணந்தித்தம்பிரான் சுவாமிகள்

எழுதிய

## ஆசியுரை

சே. வெ. ஜம்புலிங்கம்பிள்ளை யவர்கட்குச் செந்திலாண்டவன் திருவருள் முன்னிற்க. தாங்கள் அனுப்புவித்த திருத்தொண்டர் புராணம் உரைநடைச் சுருக்கம் பார்வையிடப்பெற்றது. நூல்களை அறிவுநூல்களென்றும் உலகநூல்களென்றும் இரண்டாகப் பிரிக்கலாம். அறிவு நூல்கள் இம்மைக்கும் மறுமைக்கும் உறுதி பயப்பன; முக்காலத்தும் ஓராங்கு இயல்வன; அழியாதன. அத்தகைய அறிவுநூல்களுள் தலைசிறந்தவை பன்னிருதிருமுறைகளாம். அவற்றுள், 12 - வது திருமுறையாகிய பெரியபுராணம் அளவிலாத பெருமையராகிய அளவிலா அடியார் புகழ் கூறுவது. அந்நூலிற்போந்த வரலாறுகளை எளிதிற் கற்றுப் பயனடையப் பாட்டிடையிட்ட உரைநடைநூலாக இந்நூல் அமைந்தது. மரபுநிலைதிரியாது பெரியபுராணத் திருப்பாடல்கள் இடையிடையே அமையப்பெற்றுத் தேவாரத் திருப்பாடல்களும் பிற பாடல்களும் வரலாறுகளுக்கு அகச்சான்றாகக்கொண்டு எளிய அரிய செந்தமிழ் நடையில் இந்நூல் திகழ்கின்றது. இந்நூலைப் படித்துத் தமிழுலகம் பயன் எய்துமாக.

சிவன் நாமமே ஓங்குக !

ஸ்ரீ காசிமடம்,<br>திருப்பனந்தாள்,<br>15—8—50

செந்திலாண்டவன் துணை.

ஸ்ரீலஸ்ரீ சபாபதி நாவலரின் மருகரும் இந்நூலாசிரியரின்
மாணவருமாகிய யாழ்ப்பாணம் வடகோவை

திரு. அ. சிவகுருநாதன்

எழுதிய

## வியப்புரை

பெரியபுராணம் என்பது பெருமையை எடுத்து விரித்துக் கூறும் புராணம் என்று பொருள்படும். அப் பெருமை அடியார் பெருமை என்பது சொல்லாமலே அமையும். "அளவிலாத பெருமையராகிய—அளவிலா வடியார் புகழ் கூறுகேன்" என்றார் பெரியபுராண நூலாசிரியரும்.

இப் பெரியபுராணங் கேட்ட அனபாயசோழ மன்னவன் இதனை ஏனைத் திருமுறைகளோடொப்பவைத்துப் போற்றிப் பன்னிரண்டாம் திருமுறையாக வகுத்து இதன் மகிமையை உலகில் நிலையிட்டருளினான். இதனால் பெரியபுராணம் புராண இலக்கியங்களுள் முதன்மைபெற்று ஞானபானுவாய் விளங்கும் மாட்சியுடைய உத்தம காப்பியம் என்பது ஆன்றோர் வழக்கு.

"ஒழுக்கமன் பருளா சார முபசார முறவு சீலம்
வழுக்கிலாத் தவந்தா னங்கள் வந்தித்தல் வணங்கல் வாய்மை
யழுக்கிலாத் துறவு டக்க மறிவோடர்ச் சித்த லாதி
யிழுக்கிலா வறங்க ளானு விரங்குவான் பணிய றங்கள்."

என்றவாறு இறைவன் விதித்த நியமங்களை மேற்கொண்டு,

"வாழ்வெனு மையல் விட்டு வறுமையாஞ் சிறுமை தப்பித்
தாழ்வெனுந் தன்மை யோடுஞ் சைவமாஞ் சமயஞ் சாரு
மூழ்பெற லரிது சால உயர்சிவ ஞானத் தாலே
போழிள மதியி னானைப் போற்றுவா ரருள்பெற் றாரே."

என்னும் இலக்கணங்களமையப்பெற்று அரியனசெய்து நல்ல மாதவமும் திருவருளும் கைவரப்பெற்ற பெரும் பேற்றினால் வைதிக சைவநீதி எங்கும் தழைத்தோங்கவும், அதனால் உலகம் உய்யவும் நம் சமயத் தலைவராய்—விண்

*

ணும் மண்ணும் போற்ற—உதாரணமாய் விளங்கிய நாயன் மார்களின் பெருமை அளவிடத்தக்கதன்று.

"தொண்டர்தம் பெருமை சொல்லவும் பெரிதே" எனினும், திருத்தொண்டத்தொகை முன்பாடி அடியார்க் கடியராம் முறைமை பேணிய பரமாசாரியரான நம்பியாரூரர்பெருமான் "பத்திமையு மடிமையையுங் கைவிடுவான் பாவியேன்" என வோதுதலின், பெரியோரான அடியார் திவ்விய கதை கூறுவதும் கேட்பதும் மேலான தொண்டெனக்கொண்டு "நவரச புஞ்சம்" என அறிஞர் விதந்து போற்றும் பெரியபுராணத்தைப் பாராயணஞ் செய்வதில் சிரத்தையுடைய உபாத்தியாயர் திரு. ச. பொன்னம்பலம், J.P., (M.S.C.) அவர்கள் அதனை எளிதாய் வாசித்தறியத் தக்க இனிய தமிழ் நடையில் எழுதி யுதவியது வியக்கத் தக்கது.

அண்டரு நான்முகத் தயனும் யாவருங்
கண்டிட வரியதோர் காட்சிக் கண்ணவாய்
எண்டரு சிவனடி யெய்தி வாழ்திருத்
தொண்டர்தம் பதமலர் தொழுது போற்றுவாம்.

இவ்வளவு பெருமை வாய்ந்த அந்நாயன்மார்களின் சரிதங்களைப் பலரும் படித்துப் பயனடையும் வண்ணம் வெளியிடப்படும் இவ்வசனப் புத்தகம் தமிழ் மக்களால் அபிமானித் தாதரிக்கப்படும் விசேடமுடைத்தாம். பெரிய புராணம் பாடிய சேக்கிழாரின் பெருமையைச் சிதம்பரம் சபாநாத புராண ஆசிரியராகிய ஸ்ரீலஸ்ரீ சபாபதி நாவலர் பின்வருமாறு போற்றுவது இங்கே குறிப்பிடத்தக்கது.

ஞாலமலை கடறன்னிற் பெரியதெது வெனவெடுத்து
ஞால மாள்செங்
கோலரச னனபாயன் வினவியமுத் திறக்குறிப்பைக்
குறிப்பி னோர்ந்து
சாலவுயர் திருக்குறண்மூன் றிறையாக வெழுதியவ
னரசு தாங்கி
வாலறிவாற் றிருத்தொண்டர் புகழ்விரித்த சேக்கிழார்
மலர்த்தாள் போற்றி.

யாழ்ப்பாணம்
23—8—50.



சேக்கிழார் யானைமீது பெரியபுராணத்தோடு உலா வருதல்

# சேக்கிழார் நாயனுர்

அண்ட வாணர்தொழு தில்லை யம்பலவர்
அடியெ டுத்துலகெ லாமெனத்
தொண்டர் சீர்பரவு சேக்கி ழான்வரிசை
துன்று குன்றைநக ராதிபன்
தண்ட காதிபதி திருநெ றித்தலைமை
தங்கு செங்கைமுகில் பைங்கழற்
புண்ட ரீகமலர் தெண்ட னிட்டுவினை
போக்கு வார்பிறவி நீக்குவார்

நிலவளம் நீர்வளம் மிக்க தொண்டை மண்டலத்திற் குன்றைவள நாட்டிலே குன்றத்தூரிலே வேளாளர் மரபிலே சேக்கிழார் என்ற குடியிலே, அருண்மொழித்தேவர் என்னுந் தெய்வச் சேக்கிழார் தமிழுலகும் சைவ உலகும் உய்ய அவதரித்தார். பல கலைகளையும் கற்று வல்லவராயினர். நற்குணம், நற்செய்கை, நல்லொழுக்கங்களில் மேம்பட்டு விளங்கினர். அனபாய சோழச் சக்கரவர்த்தி இவரது மேம்பாட்டைக் கேள்விப்பட்டு இவரை வருவித்துத் தனது முதன்மந்திரி பதவியை யளித்து "உத்தம சோழப் பல்லவன்" என்னும் உயர்தரப் பட்டமும் வழங்கினர்.

சேக்கிழார் சோழநாட்டின்கண் திருநாகேச்சுரத்திலுள்ள கடவுளிடத்தில் அதிகப் பக்தி உடையவர். அதன் ஞாபகார்த்தமாகத் தமது குன்றத்தூரிலே ஒரு திருக்கோயிலை ஸ்தாபித்து அதற்குத் "திருநாகேச்சுரம்" எனப் பெயரிட்டார்.

அக்காலத்தில் சமணரது சீவகசிந்தாமணி என்னும் சிற்றின்ப காவியத்தைத் தமிழ்நாட்டு மக்கள் படித்துப் பாராட்டினர். அனபாய சோழ அரசரும் அதனைப் பயின்று வருவாராயினர். அதைக் கண்ட சேக்கிழார் அரசரை நோக்கி 'இச்சிந்தாமணி நூல் சமணர் கட்டிய பொய்க்கதையாகும். இக்கதை இம்மைக்கும் மறுமைக்கும் ஆகாது. இம்மை மறுமை இரண்டிற்கும் பயனைத் தரும் சிவகதைகளே உண்மைக் கதைகள். அவைகளைக் கேட்

டல் நன்று. சிந்தாமணியை மெய்ந்நூலென்று கற்றல் கரும்பிருக்க இரும்பைக் கடித்தலும், விளக்கிருக்க மின் மினித் தீக்காய்தலும் போன்றன' என்று வற்புறுத்திக் கூறினார்.

> சேக்கிழார் சிந்தாமணிப் பயிற்சி தீதெனவே
> தூக்கியுப தேசித்தார் சோமேசா—நோக்கிற்
> பயனில் சொற் பாராட்டுவானை மகனெனல்
> மக்கட் பதடி யெனல்
>
> —முதுமொழி வெண்பா.

அப்போது அரசர் 'இது பயனற்ற கதையாயின் அந் தச் சிவகதை யாது? அதைக் கற்றவர் யார்? சீவகசிந்தா மணிபோல் இடையில் வந்த நவகதையோ? அல்லது புரா தனமான கதையோ? அதற்கு முன்னூலுண்டோ? அக் கதையை இவ்வுலகிற் சொன்னவர் யார்? அதனைக் கேட்ட வர் யாவர்?' என்று வினவினார். சேக்கிழார்பெருமான் 'அக்கதைகள் சிவனடியார்களின் வரலாறாகும். திருவாரூர் வன்மீகத் தியாகராசமூர்த்தி அடியெடுத்துக் கொடுக்கச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருத்தொண்டர் பெருமையைப் பதினொரு திருப்பாசுரத்தில் விளக்கினார். திருநாரையூர்ப் பொல்லாப்பிள்ளையாரின் திருவருளைப் பெற்ற நம்பியாண் டார் நம்பி அத்திருத்தொண்டர் வரலாற்றைச் சுருதி மொழி கலித்துறைத் திருவந்தாதியாகப் பாடினார்' என்று தில்லைவாழந்தணர் முதல் அத்திருத்தொண்டர் கதைகளை யெல்லாம் எடுத்துச் சொன்னார்.

அரசர் அக்கதைகளைக் கேட்டு நினைந்துருகிச் சேக் கிழார் பெருமானை நோக்கி 'உத்தமரே! திருத்தொண்டர் அவதரித்த ஊர், திருமரபு, திருப்பேர், அவர்கள் செய்த சிவசமயத் திருத்தொண்டின் வகை முதலியவற்றையும், உயர்ந்த பரமுத்தி பெற்றோர், அடியார்களைச் சேர்ந்து அருள் பெற்றோர், இல்லறத்திலிருந்து முத்தி பெற்றோர், துறவறத்தினின்று முத்தி பெற்றோர், குருவருளால் திரு வடியடைந்தோர் முதலிய திருத்தொண்டர்களின் வர லாற்றையும் எல்லோரும் அறியும்வண்ணம் ஓர் பெருங் காவியமாக விரித்துச் செய்து தந்தருளவேண்டும்' என்று

வேண்டினர். அருண்மொழித்தேவர் அதற்கு உடன்பட்டு அரசரிடம் விடை பெற்றுத் திருத்தில்லையை அடைந்தார். அரசர் அவருக்கு வேண்டிய வசதிகளையெல்லாம் செய்து வைத்தார். சேக்கிழார்பெருமான் நடராசமூர்த்தியின் முன் சென்று இரு கரங்களும் சிரசில் குவியப் பேரின்ப வெள்ளத்தில் திளைத்து நடராசப்பெருமானை நோக்கி, 'தேவரீர் உமது அடியார்களின் பெருமையை ஓர் பெருங் காவியமாகப் பாட அடியெடுத்துக் கொடுத்தருள வேண்டும்' என்று வணங்கினர்.

அப்போது "உலகெலாம்" என்ற மறை மொழி தில்லைவாழந்தணர்கள், மடாதிபதிகள், அடியார்கள், மற்றெல்லோரும் கேட்க ஆகாயத்திலே எழுந்தது. அதைக் கேட்ட எல்லோரும் கைகுவித்து வணங்கி உள்ளம் உருகினர். சேக்கிழார்பெருமான் சிவ சின்னங்களைத் தரித்து ஆயிரக்கால் மண்டபத்தில் எழுந்தருளியிருந்து கூத்தப்பெருமான் அடியெடுத்துக் கொடுத்த 'உலகெலாம்' என்னும் நிறை மொழியை முதலாகக்கொண்டு திருத்தொண்டர் புராண நூலைச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளிச்செய்த "தில்லைவாழந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்" என்னும் திருத்தொண்டத் தொகைப் பதிகத்தை முதல் நூலாகவும், நம்பியாண்டார் நம்பிகள் அருளிச்செய்த திருத்தொண்டர் கலித்துறைத் திருவந்தாதியை வகைநூலாகவும் கடைப்பிடித்துத் திருத்தொண்டர் புராணத்தை இயற்றி வருவாராயினர். அரசர் இது எப்பொழுது முடியுமென்று அறியக் காலத்துக்குக் காலம் ஒற்றரை அனுப்பி உசாவினர். புராண நூல் முடிந்ததென்று அறிந்ததும் அரசர் மனமகிழ்ந்து சேக்கிழாரையும் திருத்தொண்டர் புராணத்தையும் வணங்குவதற்கு நால்வகைச் சேனைகளுடன் திருத்தில்லையம்பதிக்கு வந்தனர். அரசர் வருவதையறிந்த சேக்கிழார் பெருமானும் தில்லைமறையோரும் மற்றும் யாவரும் அரசரை எதிர்கொண்டனர். சேக்கிழார்பெருமானின் சிவவேடத்தைக் கண்டதும், அரசர் தன்னையறியாது இரு கைகளையும் சிரசிற் குவித்து இறைஞ்

சினார். பின்னர், அரசர் அருண்மொழித்தேவர் தில்லைவாழ் அந்தணர் முதலியோருடன் நடராசப்பெருமானை வணங்கிப் பேரன்பினாற் கண்மழை பொழிந்து, புளகாங்கிதங் கொண்டு, பேரின்ப வெள்ளத்திற் றிளைத்து விழுந்து எழுந்தார்.

அப்போது "அரசனே! நம் வாக்கினால் 'உலகெலாம்' என அடியெடுத்துக் கொடுக்கச் சேக்கிழான் திருத்தொண்டர் புராணத்தைச் செய்து முடித்தனன். நீ அதனைக் கடிதிற் கேட்பாயாக" என்னும் அசரீரி வாக்குத் திருச்சிலம்பு ஒலியுடன் எழுந்தது. அரசர் அகமிக மகிழ்ந்து திருத்தொண்டர் புராணத்தைக் கேட்க வரும்படி எங்கும் ஓலை எழுதி அனுப்பினார். சிவனடியார்கள் சிற்றரசர்கள் மற்றையோர்கள் திருத்தில்லையில் வந்து கூடினர். சிவாகமங்கள் கற்றோரும் ஞான நூல் கற்றோரும் மறைநூல் கற்றோரும் கவிவாணரும் சேக்கிழார் பெருமானை வணங்கி 'நீரே வாசித்துப் பொருள் அருளிச் செய்வீர்' என்று வேண்டினர். ஓர் சித்திரை மாதத் திருவாதிரை நாளில் தொடங்கி அடுத்த சித்திரை மாதத் திருவாதிரையில் முடிப்பதாகத் திருத்தொண்டர் புராணத்தை ஆரம்பித்தனர். அனைவரும் அன்புடன் இருந்து கேட்டனர்.

சம்பந்தர், அப்பர், சுந்தரர் ஆகிய மூவர் தேவாரமும், திருமூலர் திருமந்திரமும், கழறிற்றறிவார் நாயனார், காரைக்காலம்மையார், ஐயடிகள் காடவர்கோன் ஆகிய இவர்கள் அருளிச் செய்த பிரபந்தங்கள் முதலியன உறுப்பாகவும், பெரியபுராணத் திருவிருத்தம் உடலாகவும், இவைகளின் பொருட்கோள் உயிராகவும் இப்பெருங் கதையை நடத்தி வந்தனர். அங்குவந்து தங்கின சிவனடியார்களுக்கும் மற்றும் அனைவருக்கும் திருமடங்கள் தோறும் உடை போர்வை அறுசுவை பதார்த்தங்களுடன் சம்பா அரிசி உணவு, சர்க்கரை, பால், தயிர், நெய், வெற்றிலை, பாக்கு முதலியனவும் அரசர் கட்டளைப்படி அமைச்சர்கள் குறைவற அளித்து வந்தனர். நடராசமூர்த்திக்கு நாடோறும் விசேஷ பூசைகள் நடைபெற்று வந்தன. புராண கதை நிறைவேறினதும்

தில்லைவாழந்தணர்கள் திருத்தொண்டர் புராணத் திரு ஏட்டை அருச்சித்துப் பூசித்து வணங்கினர். அரசர் அதனைப் பசும் பட்டினுற் சுற்றிப் பொற்றட்டில் வைத்து யானையின்மீது எழுந்தருளப்பண்ணி, சேக்கிழார் பெருமானையும் ஏற்றித் தான் பின்னுக இருந்துகொண்டு, இரு கைகளினுலும் சாமரை வீசினுர். 'இதுவன்றே நான் செய்த தவப் பயன்!' என்று சொல்லிப் பின்னும் அரசர் மகிழ்ந்தார். திருவீதி வலம் வரும்போது வீதிகள்தோறும் வாழைமரங்கள் நாட்டிப் பூரணகும்பம் அமைத்தார்கள். பொரியைத்தூவிப் பொன்னரி மாலையையும் பூமாலையையும் தோரணங்களையும் தூக்கி அலங்கரித்தனர். நிறைகுடம் தூபம் தீபம் வைத்து வணங்கிப் போற்றினுர்கள். திருத் தொண்டர் புராண கதையைக் கேட்டவர்கள் எல்லோரும் இக்குன்றை முனிவருக்கு "இராமாயணமியற்றிய வான்மீக முனிவரும் ஒப்பல்லர்; பாரத கதை செய்த வேதவியாச ரும் ஒப்பல்லர்" என்று மெச்சினர்.

திருவீதி வலம் வந்த பின்னர் யானையினின்றும் இறங்கி எல்லோரும் ஸ்ரீ பொன்னம்பலத்தின் நடராசப் பெருமானை வணங்கி, சேக்கிழார் பெருமானுக்குத் "**தொண்டர்சீர் பரவுவார்**" என்னும் திருப்பெயர் சூட்டி னர். அரசர் அவருக்கு ஞானமுடி சூட்டினர். பின்னர், தில்லைவாழந்தணரும் அரசரும் முன்னரே நம்பியாண்டார் நம்பிகள்வகுத்த பதினொரு திருமுறைகளுடன் இத்திருத் தொண்டர் புராணத்தைப் பன்னிரண்டாந் திருமுறையாகச் சேர்த்துச் செப்பேடு செய்து நடராசர் சந்நிதியிலேற்றி வைத்தார்கள். அதன் பின்னர், சேக்கிழார்பெருமான் திருத்தில்லைப் பதியிலிருந்து திருத்தொண்டர் புராணத்தி லுள்ள அடியார்கள் பெருமையைச் சிந்தித்துணர்ந்து தவம் செய்து அம்பலவாணர் திருவடி நிழலையடைந்தார்.

திருச்சிற்றம்பலம்.

சேக்கிழாரின் சரித்திர வரலாறு கொற்றவன் குடி உமாபதி சிவாசாரியரால் தமிழ் உலகுக்குத் தரப்பட்டது. அவர் தில்லைவா ழந்தணர்களில் ஒருவர். சைவ சமய சந்தான குரவர்களிலும் ஒருவர்.

சைவ சித்தாந்த சாஸ்திரங்கள் பதினன்கில் எட்டு நூலை இயற்றி யுள்ளவரும் இவரேயாவர். மறைஞான சம்பந்தரிடம் ஞான தீக்ஷை பெற்றவர். பெற்ருன் சாம்பானுக்கு *முத்தி கொடுத்தவர். அதை ரூபிக்கச் சோழ அரசர் முன்னிலையில் உமாபதி சிவனர் முள்ளிச் செடிக்கு முத்தி கொடுத்தார் என்றும் ஒரு சரிதையுண்டு. இவ்வளவு பெருமை வாய்ந்த உமாபதிசிவம் சேக்கிழார்பேரில் ஓர் புராணம் பாடுவாராகில் அப்பெருமானின் பெருமை எத்தகைத்து? அவர் இயற்றியருளிய திருத்தொண்டர் புராணம் எவ்வளவு மகிமை யுடைத்து? நடராசப்பெருமான் சேக்கிழார் நாயனருக்கு 'உல கெலாம்' என அடியெடுத்துக் கொடுத்ததை உமாபதி சிவம்,

" அடிக ளேயுன தடியர் சீரடி யேனு ரைத்திட வடியெடுத்
திடர்கெ டத்தரு வாயெனத்திரு வருளை யெண்ணி யிறைஞ்சினர்"

(சேக்கிழார் புராணம் - 30)

எனச் சொல்லுவதுமல்லாமல், சேக்கிழாரே தமது பெரியபுராணப் பாயிரத்தில்

" அருளி னீர்மைத் திருத்தொண் டறிவருந்
தெருளி னீரிது செப்புதற் காமெனின்
வெருளின் மெய்ம்மொழி வானிழல் கூறிய
பொருளி னகு மெனப்புகல் வாமன்றே "

என்றும் சொல்லி வைத்தனர். இதை உண்மையென்றெடுப்பது முறையே. அனபாய சோழ அரசர் காலத்தில் சேக்கிழார் பெரிய புராணத்தைப் பாடினர் என்பது பாயிரத்திற் கூறப்பட்டுளது :—

"மேய விவ்வுரை கொண்டு விரும்புமாஞ்
சேய வன்றிருப் பேரம்பலஞ் செய்ய
தூய பொன்னணி சோழனீ டூழிபா
ராய சீரந பாய னரசவை "

மேலும், நாட்டுச் சிறப்பிலே

" நற்றமிழ் வரைப்பி னிங்கு நாம்புகழ் திருநா டென்றும்
பொற்றடந் தோளால் வையம் பொதுக்கடிந் தினிது காக்குங்
கொற்றவ னநபா யன்போற் குடைநிழற் குளிர்வ தென்ருன்
மற்றதன் பெருமை நம்மால் வரம்புற விளம்ப லாமோ "

என்று நிகழ் காலத்தில் சொல்லுவதினுலும் புராணத்தில் அநபாயரைப் பற்றிச் சில இடங்களில் பேசப்பட்டிருப்பதனுலும் அநபாயர் காலத்தில் சேக்கிழார் பெரியபுராணத்தைப் பாடியருளினரென்பது தேற்றம். சேக்கிழார் பெருமான் தமது பெரிய புராணத்தில் போதிய அகச்சான்று புறச் சான்றுடையனவாய் உண்மையென்று

கண்டவைகளையே வைத்துப் பாடினர். தேவாரத் திருமுறைகள், திருக்குறள் ஆகிய இவைகளின் சொற்றொடரையும், பொருளையும் எடுத்தாண்டிருக்கின்றனர்.

"களவி லாதமொழி கொடுபு ராணகதை செய்த கங்கைகுல திலகரும்"

என்றார் உமாபதி சிவம். மேலும் திருக்குறள் என்னும் இலக்கணத்திற்குப் பெரியபுராணம் ஓர் பெருந் "திருவருட் காவியம்" எனற் பாலது. திருத்தொண்டர் புராணம் என்னும் பெயர் சேக்கிழார் பெருமானாலேயே கொடுக்கப்பட்டது.

"மாக்கள் சிந்தையுட் சார்ந்து நின்ற
பொங்கிய விருளை யேனைப் புறவிருள் போக்கு கின்ற
செங்கதி ரவன்போ னீக்குந் திருந்தொண்டர் புராண மென்பாம்"

அடியார் பெருமையைக் குறிக்கோளாகக் கொண்டமையால் அன்றுதொட்டுப் "பெரியபுராணம்" என வழங்கப்பட்டு வருகிறது. பாயிரத்தில் கணபதி துதியில் "எடுக்குமாக்கதையின்றமிழ்ச் செய்யுளாய்" என்று சொல்லப்பட்டுளது.

மாகதை=பெருங்கதை — பெரிய புராணம்.

தமிழ்ப்பெருங் காவியங்களில் பெரியபுராணம் முதன்மையுடையது. இனிய சொற்களால் இயற்றப்பட்டது. விழுமிய பொருளுடையது. பாமாலைத் திருப்பாசுரங்களை அதிகமாகவுடையது. படிப்போரின் பக்தியையும், அன்பினையும், அறிவையும் வளரச் செய்வதில் இணையற்றது.

"பக்திச்சுவை நனி சொட்டச் சொட்டப் பாடிய கவிவலவ"

என்று மகா வித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை போற்றுகின்றார் சேக்கிழார் பெருமானை. ஆறுமுக நாவலரும் சேக்கிழாரிடத்திற் பேரன்புடையவர். அவ்வன்பிற்கு அடையாளமாகத் திகழ்வதே சிதம்பரத்தில் ஞானப்பிரகாசக் குளத்தருகேயுள்ள சேக்கிழார் கோயிலாகும்.

பெரியபுராணத்தை முதலில் வசன நடையில் எழுதினவரும் அதற்கு ஓர் அருமையான சூசனம் எழுதியவரும் நாவலரேயாம்.

தில்லைவா ழந்தணரே முதலாகச் சீர்படைத்த
தொல்லையதாந் திருத்தொண்டத் தொகையடியார் பதம்போற்றி
ஒல்லையவர் புராணகதை உலகறிய விரித்துரைத்த
செல்வமலி குன்றத்தூர்ச் சேக்கிழார் அடிபோற்றி.

சேக்கிழார் பெருமான் திருவடி வாழ்க.

---

பின் சேர்க்கை

திருக்குறள் என்னும் இலக்கணத்திற்குப் பெரிய புராணம் ஓர் பெரும் "திருவருட்காவியம்" என்று கூறிய தற்கியையச் சேக்கிழார் சிறுவயதிலேயே திருக்குறளைக் கற்று அதில் திளைத்திருந்தனர் என்பதற்கு ஓர் கதை உண்டு.

ஒரு நாள் அரசன் தன் அரண்மனையில் உத்தியோக மாய் அமர்ந்திருந்த எல்லோரையும் அழைத்து மலையிற் பெரிது, பூமியிற் பெரிது, கடலிற் பெரிது, எதெது என மூன்று கேள்விகளைக் கேட்டு மறுநாள் விடை கொடுக்கும் படி அனுப்பினான்.

சேக்கிழாரின் தந்தையார் அரச சபையிலுள்ளவர் களில் ஒருவர். அவர் வீட்டுக்கு வந்து அரசன் கேட்ட மூன்று கேள்விகளைக் குறித்து யோசித்துக்கொண்டிருக் கும்போது அதையறிந்த இளம் சேக்கிழார் திருக்குறள் மூன்றால் விடை எழுதித் தந்தையாருக்குக் கொடுத்து அவரை மகிழ்வித்தனர்.

அம்மூன்று திருக்குறளாவன :—

(1) நிலையிற் றிரியா தடங்கியான் தோற்றம்
மலையினு மாணப் பெரிது.

(2) காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது.

(3) பயன்தூக்கார் செய்த உதவி நயன்தூக்கின்
நன்மை கடலிற் பெரிது.

கவியரசர் கம்பர் தாம் பாடிய 'திருக்கை வழக்' கத்தில்,

.................................................

"மண்ணிற் கடலின் மலையிற் பெரியதென
எண்ணி எழுதிக்கொடுத்த எற்றக்கை... ....."

என்று சேக்கிழாரை வியந்து பாராட்டுகின்றார். பெரிய புராணத்திலுள்ள சிற்சில சொற்றொடரையும் பொருளையும் எடுத்துத் தமது இராமாயணத்தில் அமைத்திருப்பது, சேக்கிழார் அருளிய பெரியபுராணத்தைக் கம்பர் பாராட்டு வதே யாகும்.

# பொருளடக்கம்

பக்கம்

## வம்பறுவரிவண்டுச் சருக்கம்



## வார்கொண்ட வனமுலையாள் சருக்கம்



## பொய்யடிமை யில்லாத சருக்கம்



## கறைக்கண்டன் சருக்கம்

பக்கம்

கடல்சூழ்ந்த சருக்கம்



பத்தராய்ப் பணிவார் சருக்கம்



மன்னியசீர்ச் சருக்கம்



அனுபந்தம்

## பிழை திருத்தம்

பக்கம் 103-ல் 28-வது வரியிலுள்ள "என்பது தனபாலன் என்னும்........குறிப்பது" என்னும் வாக்கியத்தை அதே பக்கத்தில் 4-ம் வரியிலுள்ள "வழிவிடுங் துணைபின்........யுள்ளார்" என்பதன் கீழே மாற்றிப் படிக்க.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# திருத்தொண்டர் புராணச் சுருக்கம்

## புராண வரலாறு

உலகெ லாமுணர்ந் தோதற் கரியவ
னிலவு லாவிய நீர்மலி வேணிய
னலகில் சோதிய னம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்.

**கா**விரி நதிவளம் பெருகுதலினாலே சிறப்புற்றோங்கிய சோழமண்டலத்தை அரசாண்ட அநபாய சோழ மகாராசன் சிந்தாமணி முதலிய புறச்சமய நூல்களைப் பாராட்டிக் கேட்டுப் பொழுது கழிப்பானாயினான். அது கண்ட அவருடைய மந்திரியாராகிய சேக்கிழார் பெருமான் அரசனை நோக்கி, "அரசனே! இக்கதைகள் இம்மைக்கும் மறுமைக்கும் ஆகா. இம்மை மறுமை இரண்டிற்கும் விழுமிய பயன்தரும் தொண்டர் கதைகளைக் கேட்டல் நன்று" என உறுதி கூறினர்.

"சேக்கிழார் சிந்தா மணிப்பயிற்சி தீதெனவே
தாக்கி யுபதேசித்தார் சோமேசா—நோக்கிற்
பயனில்சொற் பாராட்டு வானை மகனெனல்
மக்கட் பதடி யெனல்"

என மாதவச் சிவஞான யோகிகள் முதுமொழி வெண்பாவிற் பாடியதுங் காண்க.

அநபாய சோழமன்னன் அக்கதைகளை அவர் எடுத்துக் கூறக் கேட்டு மகிழ்ச்சியடைந்து அவரை நோக்கிப் "பெரியோய்! திருத்தொண்டர் கதைகள் செவிக்கு இனிய ஞான உணவாகின்றன. உயிருக்கு மலப்பிணி நீக்குஞ் சஞ்சீவியுமா யிருக்கின்றன. இக்கதைகளை விரித்துப் புராணமாகச் செய்து தருதல் வேண்டும்" என்று குறையிரந்தான். சேக்கிழார் பெருமான் திருவுளத்து உடன்பாடுடையராய் அரசனிடம் விடைபெற்றுக் காண முத்தி தருந் தலமாகிய தில்லையை அடைந்து நடராசப் பெருமானை வணங்கி எல்லையிலா அன்புடையராய் அருணிலையில் ஈடுபட்டு நின்று கடவுளை நோக்கி, "எம்பெருமானே! தேவரீருடைய திருவடியார்களின் அற்புதக் கதையைப் புராணமாகச் செய்ய அடியெடுத்துத் தரல் வேண்டும்" என்று வேண்டினார்.

உலகெலாமாகி வேறாய் உடனுமாய் நிற்கின்ற இறைவன் திருவுள்ளமிரங்கி, தமது அருமறை முழுத்தெழுந்த அமுத வாக்கால் "உலகெலாம்" என அடியெடுத்துக் கொடுத்தருளினார். அவ்வடியை முதலாகக் கொண்டு அருள்வள்ளலாகிய சேக்கிழார் பெருமான் புராணத்தைப் பாடி முடித்தருளினார்.

சிவபெருமான் எடுத்துக் கொடுத்தருளிய அத்திரு வாக்கை முதலாகக்கொண்டு பாடப்பட்ட "உலகெலாம்" என்னும் திருச்செய்யுள் இறைவனுடைய நல்லிலக்கணங்களையும் அவனை வழிபடும் நல்லுயிர்கள் அடையும் பெரும் பேறுகளையும் விளக்கி நிற்கின்றது. அதில் "உலகெலாம்" என்பதனால் அறிவுடையதும் அறிவில்லாததுமாகிய இருவகைப் பிரபஞ்சங்களுக்கு மேலானவர் கடவுள் என்பது அறியப்படும்.

"உணர்ந்து ஓதற்கரியவன்" என்பதனால் பசுபாச ஞானங்களால் இன்ன தன்மையினர் என்று உணரப்படாதவரென்பதும், பதி ஞானத்தால் அன்போடு உணரப்பட்டு, அதனால் ஓதவும் படுவரென்பதும் பெறப்படும்.

"அவனருளாலே அவன்றாள் வணங்கி" என்றார் மாணிக்க வாசக சுவாமிகளும்.

"நிலவுலாவிய நீர்மலிவேணியன்" என்பதனால் தன்னை மெய்யுணர்வினாலே யறிந்து வழிபடும் ஆற்றலில்லாத உயிர்களுக்கு அவைகள் கண்டு வழிபடத் தகுந்த அருளுருவத் திருமேனியுடையர் என்பது தெளியப்படும். "அலகில் சோதியன்" என்பதனால் இவ்வருளுருவேயன்றி உலகெலாம் பரந்து மூடிப் பிரிவற நிற்கின்ற பெருஞ்சோதி வடிவமுடையார் என்பதும் விளங்கும். "அம்பலத்தாடுவான்" என்பதனால் உயிர்கள் மேற்கொண்ட பெருங் கருணையினாலே அவர்கள் தம்மை எளிதாக வழிபட்டு உய்யுமாறு திருவம்பலத்தின்கண்ணே ஐந்தொழிற் பெருங் கூத்து ஆடுபவர் என்பது போதரும். "மலர்சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்" என்பதனால் எங்கும் நிறைந்த திருவருளே அவருடைய திருவடிகள் என்பதும், அவைகளை மனமொழி மெய்களால் நினைந்து வாழ்த்தி வணங்குதல் உயிர்களின் கடன் என்பதும், அங்ஙனம் வணங்குதலினால் மலம் நீங்கப்பெற்று வீடுபேறு உண்டாகும் என்பதும் தெரியக் கிடக்கின்றன.

சந்திரனைச் சடையில் வைத்தருளினமையால், தம்மை வந்தடைந்த மெய்யடியாரைத் தப்பாது ஏற்றுக்கொண்டு அருள்புரியும் பெருங் கருணையாளர் என்பதும், கங்கையை யணிந்தருளினமையால் உயிர்களுக்கு வரும் தீமைகளை யடக்கி அருள்செய்ய வல்ல முதல்வர் என்பதும் குறிக்கப் படும்.

# மனுநீதி கண்ட சோழன்

முன்னொரு காலத்திலே காவற் கடவுளாகிய விஷ்ணு உமாதேவியாரால் தமக்கு வந்த சாபத்தை நீக்கிக்கொள்ளும்படி சிவபெருமானையும் உமாதேவியாரையும் குமாரக் கடவுளையும் பூசித்து வந்தார். அவர்கள் வெளிவந்து திருவருள் செய்யச் சாபவிடுதலை பெற்ற பின்பு அம்மூர்த்திகளை மார்பில் வைத்துக்கொண்டு திருப்பாற்கடலில் பள்ளி கொண்டார். பின்பு அம்மூர்த்திகளை இந்திரன் அவரிடம் இருந்து பெற்றுப் பூசித்துவந்தான். அதன்பின் முசுகுந்தன் என்னும் மன்னன் இந்திரனிடமிருந்து அவைகளைப் பெற்றுக் கடவுள் கட்டளைப்படியே திருவாரூருக்குக் கொண்டுவந்து அங்கே அவைகளை வைத்துத் திருக்கோயில் அமைத்து வழிபட்டுவந்தான். அதனால் திருவாரூர் அருள் நலம் மிகுந்த திருப்பதியாய் விளங்குகின்றது.

அத்திருவாரூரிலே மண்ணில் வாழ்கின்ற மன்னுயிர்கட்கெல்லாம் கண்ணும் உயிரும் போன்றவனும், சூரிய மரபில் பிறந்தவனும் அநபாய சோழ மகாராசனுக்கு வழி முதல்வனுமாகிய ஓர் மன்னன் அரசுசெய்து வந்தான். அவன் நீதிமுறை வழுவாது அரசியலை நடத்தினமையினால் மனுநீதிகண்ட சோழன் என்னும் பெயர் பெற்றான். அறமும் பொருளும் இன்பமும் தழைக்க அரசாண்டு வந்த அம்மன்னனுக்கு அவன் தேவியின் மணி வயிற்றில் அவர்கள் செய்த நல்ல தவப்பயனாய் ஓர் மைந்தன் பிறந்தான். சோழ மகாராசன் தன் மகனுக்கு ஐந்தாம் வயதில் வித்தியாரம்பம் செய்வித்தான். அப்புதல்வன் பல கலைகளையுங் கற்று வல்லவனாயினான். மேலும் சிவபெருமானை வழிபட்டுய்தற்குக் கருவியாகிய உண்மை நூல்களையுங் கற்றுணர்ந்து விளங்கினான். இங்ஙனம் பாலசூரியன் போல் வாழ்ந்துவரும் நாளில் ஒரு நாள் அரசிளங்குமரன் தன்னை மந்திரி முதலானோர் சூழ்ந்துவர ஓர் மணி நெடுந்தேரில் ஏறி அரச வீதியில் உலாவப் போவானாயினான். அப்பொழுது முரசங்கள் முழங்கின; சங்குகளார்த்தன; சூதர்

மாகதர் ஏத்தினர். இவ்வாறு அரச வைபவங்களோடு போகின்ற அம்மைந்தன் தேர்க்காலிலே ஓர் பசுக்கன்று துள்ளிவந்து விழுந்திறந்தது. அதனைக் கண்ட தாய்ப் பசு அலமந்து வெம்பிச் சோர்ந்தது. அரசிளங்குமரன் தேரிலிருந்து இழிந்து நிகழ்ந்ததைக் கண்டு அறிவு சோர்ந்து நிலத்தில் விழுந்தான். பின்பு தெளிந்தெழுந்து பசுவைப் பார்த்து இரங்கினன். கன்றைப் பார்த்தழுதான். மலர் தலையுலகம் காக்கும் மன்னவனுக்கு இப் பெரும்பழி வந்தெய்த யான் பிறந்தவாறு நன்றாயிருக்கிறதென்று இரங்கி நொந்தான்.

இது இங்ஙனமாக, கன்றை யிழந்து வருந்திய தாய்ப் பசுவானது மன்னவன் கோயில் வாசலிற் சென்று அங்கே கட்டப்பட்டிருந்த ஆராய்ச்சி மணியைத் தன் கொம்பினால் அடித்தது. அதனைக் கேட்ட அரசன் அரியணையிலிருந்து இறங்கிப்போய் வாசலையடைந்தான். அப்பொழுது வாயிற் காவற்காரன் வந்து அவனை வணங்கி, "அரசனே! உமது ஆராய்ச்சி மணியை ஒரு பசு வந்து தன் கொம்பினால் அடித்தது" என்றான். அரசன் மந்திரிமாரை நோக்கினன். மந்திரிமார் நிகழ்ந்தவற்றைத் தெரிவித்தனர். அதனைக் கேட்ட அரசன் விடம் தலைக்கொண்டவன்போல மயங்கி அளவில்லாத துயரமுடையவனானன். அது கண்ட மந்திரிமார் அரசனைத் தேற்றிக் கோவதைக்கு விதித்த பிராயச்சித்தத்தைச் செய்வதே நலமென்று கூறினார்கள். அரசன் அதற்கு மனமிசையாதவனாய் "என் மகன் செய்த குற்றத்திற்குப் பிராயச்சித்தம் செய்துகொண்டு இன்னொருவன் செய்த குற்றத்திற்கு அவனைக் கொலை செய்வேனானால் எனது செங்கோன்மை எவ்வாறாகும்? அன்றியும், திருவாரூரிற் பிறந்த ஓர் உயிரைக் கொன்றால் கொலைசெய்தவனைக் கொல்லுதலே முறையாகும்." ஆதலால், தன் மகனைக் கொல்லுவதே நீதியென மந்திரிக்குக் கட்டளை யிட்டான். மந்திரி சென்று தன்னுயிரை விட்டான்.

"வேந்து மகற்றேர்க்கால் விடலஞ்சி மந்திரிதான்
சோர்ந்துதன தாவிவிட்டான் சோமேசா—ஆய்ந்துணர்ந்தோர்
தன்னுயிர் நீப்பினுஞ் செய்யற்க தான்பிறி
தின்னுயிர் நீக்கும் வினை"

என்பதனுல் கொலை செய்தல் விலக்கப்படுதல் வேண்டுமென்பது தருமம்.

அதனை யறிந்த வேந்தன் தன் மகனைக்கொல்ல ஒருவரும் உடன்படார். ஆதலினுல், தானே கொல்லுதல் வேண்டும் என்று துணிந்து மகனை யழைத்துத் தேரில் ஏற்றிக்கொண்டு திருவாரூரின் திருவீதியிற் சென்ருன். சென்று பசுக்கன்று இருந்த இடத்தை யணுகி மகனைத் தேர்க்காலின் கீழே கிடக்கும்படி செய்து, அவன் மேலே தன் தேரை யூர்ந்தான். அரசனுடைய நீதியைக் கண்டு வானவர் பூமழை பொழிந்தனர். முனிவர்கள் ஆசிகூறி வாழ்த்தினர்கள்.

தண்ணளிவெண் குடைவேந்தன் செயல்கண்டு தரியாது
மண்ணவர்கண் மழைபொழிந்தார் வானவர்பூ மழைபொழிந்தா
ரண்ணலவன் கண்ணெதிரே யணிவீதி மழவிடைமேல்
விண்ணவர்க டொழநின்ருன் வீதிவிடங் கப்பெருமான்.

சடைமருங்கி லிளம்பிறையும் தனிவிழிக்குந் திருநுதலு
மிடமருங்கி லுமையாளு மெம்மருங்கும் பூதகணம்
புடைநெருங்கும் பெருமையுமுன் கண்டரசன் போற்றிசைப்ப
விடைமருவும் பெருமானும் விறல்வேந்தற் கருள்கொடுத்தான்.

—பெரிய புராணம்

அப்பொழுது இறந்த பசுவின் கன்று உயிர் பெற்று எழுந்தது. அரச குமாரனும் மந்திரியும் உயிர்பெற்று எழுந்தார்கள். அடியார்கள் "அரகர" என்ற ஒலி முழக்கத்தோடு வீதிவிடங்கப் பெருமானைக் கண்டு தரிசிக்கும் பெரு வாழ்வு பெற்றனர். தன்னுயிர்போல மன்னுயிர்க்கும் நீதி செய்த செயற்கருஞ் செயலினுல் வீதிவிடங்கப் பெருமான் மனுநீதிகண்ட சோழ மகாராசனுக்கு நீங்காத பேரருள் கொடுத்தருளினுர்.

"முறைசெய்து காப்பாற்று மன்னவன் மக்கட்
கிறையென்று வைக்கப் படும்"

என்னும் நீதிவாக்கியத்துக்கு மனுநீதி கண்ட சோழன் அரசியல் முறை சிறந்த எடுத்துக் காட்டாதல் காண்க.

---

# சுந்தரமூர்த்தி நாயனர்

தண்கயிலை யதுநீங்கி நாவ லூர்வாழ்
சைவனுர் சடையனுர் தனய ஞராய்
மண்புகழ வருட்டுறையா ஞேலை காட்டி
மணம்விலக்க வன்ரெண்டா யதிகை சேர்ந்து
நண்பினுட னருள்புரிய வாரூர் மேவி
நலங்கிளரும் பரவைதோ ணயந்து வைகித்
திண்குலவும் விறன்மிண்டர் திறல்கண் டேத்துந்
திருத்தொண்டத் தொகையருளாற் செப்பி ஞரே.

செப்பலருங் குண்டையூர் நெல்ல ழைத்துத்
திருப்புகலூர்ச் செங்கல்செழும் பொன்னுச் செய்து
தப்பின்முது குன்றர்தரும் பொருளாற் றிட்டுத்
தடத்தெடுத்துச் சங்கிலிதோள் சார்ந்து நாத
ஞெப்பிறனித் தூதுவந் தாறூடு கீறி
யுறுமுதலை சிறுமதலை யுமிழ நல்கி
மெய்ப்பெரிய களிறேறி யருளாற் சேர
வேந்தருடன் வடகயிலை மேவி ஞரே.

சுந்தரமூர்த்தி நாயனர், திருமுனைப்பாடி நாட்டில் மெய்ந்நெறியில் வாழும் மறையவர் மிகுந்த திருநாவலூரில் உலகம் தீமையினின்றும் நீங்கி உய்யும்வண்ணம் திருவவதாரம் செய்தார். அவர் தந்தையார் பரம்பரையாய்த் திருத்தொண்டு செய்யும் மறையவர் குலத்தில் பிறந்த சடையனர். அவர் தாயார் கற்பின் மிக்க மனை வாழ்க்கையை நடத்தும் இசைஞானியார்.

மாதொரு பாக ஞர்க்கு வழிவழி யடிமை செய்யும்
வேதியர் குலத்துட் டோன்றி மேம்படு சடைய ஞருக்
கேதமில் கற்பின் வாழ்க்கை மனையிசை ஞானி யார்பாற்
றீதகன் றுலக முய்யத் திருவவ தாரஞ் செய்தார்.

—பெரியபுராணம்

பெற்றோர் அவருக்கு நம்பியாரூரர் என்னும் பெயர் வைத்தனர். ஐம்படை, சதங்கை, பொன்அரைஞாண், மணிச்சுட்டி முதலியன அணிந்து சிறுதேர் உருட்டி விளையாடும் நாளிலே அந்நாட்டை அரசுபுரியும் நரசிங்க முனையர் அக்குழந்தையைப் பார்த்தார். அரசர் அக் குழந்தைபால் அளவிறந்த காதல்கொண்டு அவ

பெற்றோர்களிடம் அதனைப் பெற்றுத் தமது அரண்மனைக்குக் கொண்டுவந்தார். அரசர் அக்குழந்தையை அரசிளங் குமரனுக்கேற்ப வளர்த்துவந்தார். மறையோர் வழக்கப் படி உரிய காலத்தில் நம்பியாரூரர் பூணூல் அணிந்து சகல பண்டைக் கலைகளையும் கற்றுத் தேர்ந்து திருமணப் பருவமடைந்தார். அப்போது சடையனார் தங்கள் மரபுக் கேற்ப, புத்தூரில் சிவமறையோர் குலத்தில் சடங்கவியாருடைய மகளைத் தமது மகன் நம்பியாரூரருக்கு மணம் பேசுதற்குச் சில முதியோரை அனுப்பினார். சடங்கவியாரும் குலம், குணம் முதலியன விசாரித்து அறிந்தபின், தனது புதல்வியை நம்பியாரூரருக்கு விவாகம் செய்து கொடுக்க அன்புடன் இசைந்தனர். இசைந்த செய்தியை மணம் பேசிவந்த முதியோர் வாயிலாகக் கேட்ட நம்பியாரூரரின் பெற்றோர், அரசர் செல்வத்துக்கேற்பத் திருமண ஓலையைப் பெண் வீட்டாருக்கு அனுப்பினார்கள். மணமகள் உறவினரும் அதைப் பணிந்து ஏற்றுக்கொண்டனர். விவாகத்திற்குச் செய்யவேண்டிய மங்கல காரியங்களையெல்லாம் விளங்கச்செய்தனர். பூமாலைகளினாலே பந்தர் அலங்கரிக்கப்பட்டது. முளைதரிக்குஞ் சடங்குகள் செய்யப்பட்டன. திருமண நாளுக்கு முன்னாளிலே மணவாளருக்கு விதிப்படி பொன் நாணினால் காப்புக் கட்டுவித்தார்கள். நம்பியாரூரர் திருமணநாளன்று காலைக்கடன்கள் முடிந்தபின் வாசனை நீரில் மூழ்கி மணக்கோலங்கொண்டார்.

தமது இராச செல்வத்துக்கும் வைதிக செல்வத்துக்கும் ஏற்ப, மங்கலகரமான ஆடம்பரத்துடன் யோகப்புரவி மேற் புத்தூருக்குச் சென்றார். புத்தூரிலுள்ள மறையவரும் பெண்களும் நிறைகுடம், தூபம், விளக்கு, முளைப் பாலிகை முதலியவைகளை ஏந்திக்கொண்டு மணவாளனை எதிர்கொண்டேற்றனர். நம்பியாரூரருடைய அழகினைக் கண்ட பெண்கள் பாடி ஆடினார்கள்.

கண்களெண் ணிலாத வேண்டுங் காளையைக் காண வென்பார்
பெண்களி லுயர நோற்றாள் சடங்கவி பேதை யென்பார்
மண்களி கூர வந்த மணங்கண்டு வாழ்ந்தோ மென்பார்
பண்களி னிறைந்த கீதம் பாடுவா ராடு வார்கள்.

ஆண்டகை யருளி னேக்கின் வெள்ளத்து ளலேந்தோ மென்பார்
தாண்டிய மாவு நம்பாற் றகுதியி னடைந்த தென்பார்
பூண்டயங் கிவனே காணும் புண்ணிய மூர்த்தி யென்பார்
ஈண்டிய மடவார் கூட்ட மின்னன விசைப்பச் சென்றார்.

—பெரியபுராணம்

மணமகனைப் பார்த்து வியந்து சொல்லுதல் கற்பிற்கு இழுக்கன்று என்பது.

நம்பியாரூரர் யோகப்புரவியி னின்றும் இறங்கித் திருமணப் பந்தலில் சங்கு முதலிய வாத்தியம் முழங்க எழுந்தருளியிருந்தார். முன்னரே வழுவிச்செல்லும் வழியிலிருந்து தடுத்தாட்கொள்ளுவோமென்று கயிலையில் அருளிய இறைவர் நரைமயிரும், நெற்றியில் தூய திருநீறு விளங்கவும், காதிலே உருத்திராக்கக் குழைகள் தாங்கவும், மார்பிலே பூணூலும், தோளிலே உத்தரியமும், கையில் குடையும், இடையில் கோவண உடையும், மற்றொரு கையில் தண்டும் தாங்கிக்கொண்டு தள்ளாடும் நடையுடன் ஓர் வனப்புமிக்க வயோதிக மறைக் கிழவராய் அக் கலியாணச் சபையில் வந்து, சபையாரை நோக்கி "யான் சொல்லும் வார்த்தைகளைக் கேளுங்கள்" என்றார்.

கண்ட கறைமிடற்றுக் கண்ணுதலோன் சுந்தரனை
விண்டு முதலோர் வியப்பவே வெண்ணெயிலாட்
கொண்ட தொருபனவக் கோலந் தனைத்தரித்துத்
தண்டு மொருகை தனிலூன்றி வந்தனனே.

என்னுங் கந்தபுராணத் திருவிருத்தமும் இங்கே நோக்கத் தக்கது.

சபையி லுள்ள அந்தணர்களும், நம்பியாரூரரும் "உமது வரவு நல்வரவாகுக; அதுவும் எங்கள் தவப்பயனே; நீர் சொல்ல வேண்டியதைச் சொல்லும்" என்றார்கள். அப்போது கிழவர் நம்பியாரூரரை நோக்கி, "உனக்கும் எனக்கும் ஓர் வழக்குளது. அதைத் தீர்த்தபின் உன் விவாகத்தை நடத்துக" என்றார்.

பிஞ்ஞகனு நாவலர் பெருந்தகையை நோக்கி
என்னிடையு நின்னிடையு நின்றவிசை வால்யான்
முன்னுடைய தோர்பெரு வழக்கினை முடித்தே
நின்னுடைய வேள்வியினை நீமுயறி யென்றான்.

—பெரியபுராணம்

நம்பியாரூரர் அது கேட்டு "நமக்கும் உமக்கும் வழக்குள தாயின் அதை முடித்தன்றி நான் விவாகஞ்செய்யமாட்டேன். அவ்வழக்கினை இன்னதென்று சொல்லும்" என்றார். அப்போது மறைக்கிழவர் சபையோரை நோக்கி "இந்த நம்பியாரூரன் எனக்கு அடிமை" என்றார். அதைக்கேட்ட சபையோரிற் சிலர் நகைத்தனர்; சிலர் வெகுண்டனர்; சிலர் இவ்வந்தணன் என்ன காரியத்தை நினைத்து இங்கு வந்தான் என்றனர். நம்பியாரூரர் இம் மறையோன் வார்த்தை நன்றாயிருக்கின்றதென் றிகழ்ந்து சிரித்தார். இறைவர் அவரை நோக்கி, "உன் தந்தைதன் தந்தை எனக்கு எழுதிக்கொடுத்த அடிமை யோலை இதோ இருக்கின்றது! நீ இதைக் குறித்துப் பரிகாசஞ்செய்து சிரித்ததென்னே" என்றார்.

நம்பியாரூரர் கிழவேதியரை நோக்கி, மனவுருக்கத்தினால் சிரிப்பு நீங்கி, "ஆதிசைவ அந்தணர் தங்கள் மரபினருக்கு அடிமையா யிருத்தலே இல்லை. வேறோர் அந்தணருக்கு எப்படி அடிமையா யிருக்கலாம்? அந்தணன் அந்தணனுக்கு அடிமையென்பது இன்றுதான் நீ சொல்லக் கேட்டோம்! நீ பித்தனோ?" என்றார்.

* மாசிலா மரபில் வந்த வள்ளல்வே தியனை நோக்கி
  நேசமுன் கிடந்த சிந்தை நெகிழ்ச்சியாற் சிரிப்பு நீங்கி
  ஆசிலந் தணர்கள் வேறோ ரந்தணர்க் கடிமை யாதல்
  பேசவின் றுன்னைக் கேட்டோம் பித்தனோ மறையோ னென்றார்.

—பெரியபுராணம்

சுந்தரமூர்த்தி நாயனார் காலத்தில் அந்தணன் அடிமையாக இருக்கும் வழக்கம் இருந்ததில்லை என்பது சிவபெருமானாகிய மறையவரைப் பார்த்து சபையோர் சிரித்ததனால் தெரிகிறது.

அப்பொழுது மறைக்கிழவர் "யான் பித்தனாயினும் ஆகுக; பேயனாயினும் ஆகுக. நீ எத்தனைத் தீயமொழிகளைச் சொன்னாலும் நான் நாணேன். அவ்வளவுக்கு நீ என்னை அறிந்திலை. இப்படிப் பரிகாசமொழி பேசவேண்டாம். பணி செய்யவேண்டும்" என்றார். நம்பியாரூரர் மறைக்

கிழவர் வேடத்தில் வசீகரப்பட்டு அவரை நோக்கி, "நீர் அடிமை ஓலை வைத்திருப்பதாகக் கூறினீர். அதை யான் பார்க்கக் காட்டுக" என்றார். கிழவர் அவரை நோக்கி "நீ அவ்வோலை பார்த்து நிச்சயிக்கத் தகுதியற்றவன். சபையோர்முன் நான் அதைக்காட்ட அவர்கள் நிச்சயித்த பின் நீ பணி செய்யத் தக்கவன்" என்றார். அதனைக் கேட்ட நம்பியாரூரர் வெகுண்டு ஒருவராலும் எட்டியறியக் கூடாத இறைவரைப் பின்தொடர்ந்து, அவர் கையிலிருந்த ஓலையைப் பறித்து, "அந்தணன் அந்தணனுக்கு அடிமையாதல் என்ன முறை" என்று கூறி அதைக் கிழித்தெறிந்தார். எல்லாவற்றையுங் கடந்து நிற்கும் இறைவன் நம்பியாரூரரைப் பிடித்துக்கொண்டு "இது முறையோ" என்று சத்தமிட்டார். அங்கிருந்தவர்கள் விரைவில் வந்து இருவரையும் விலக்கி "உலகில் ஒருபோதும் இல்லாத ஓர் புது வழக்குப் பேசும் முனிவரே! நீர் எங்குள்ளவர்?" என்றார்கள். ஐயர் "நான் இருக்குமிடம் இந்தத் திருவெண்ணெய்நல்லூரே. அது நிற்க; மனுநீதிக்கு மாருக என்னிடமிருந்து அடிமை ஓலையை வலாற்காரமாய்ப் பறித்துக் கிழித்தெறிந்ததனுல் இவன் எனக்கு அடிமை என்பதை உறுதிப்படுத்திவிட்டான்" என்றார். அப்போது நம்பியாரூரர் இவன் பழைய மன்றாடிபோலும் என்று கோபத்துடன் "நீர் திருவெண்ணெய் நல்லூரில் இருப்பதானல், இந்தத் தப்பு வழக்கை அவ்விடத்தில் தானே போய்ப் பேசுவோம்" என்றார். முனிவர் அதனைக் கேட்டு "நீ வெண்ணெய்நல்லூருக்கு வந்தாலும் நல்லது. அவ்விடத்தில் என்னிடம் உள்ள மூல ஓலையைக்காட்டி என் வழக்கை நிலைநிறுத்துகிறேன்" என்று சொல்லித் தண்டை ஊன்றிக்கொண்டு முன்னே நடந்தார். நம்பியாரூரர் இரும்பைக் காந்தம் இழுப்பதுபோல் சிவபெருமானுடைய திருவருளில் வசப்பட்டுத் தம் வசமின்றிப் பின் சென்றார். நம்பியாரூரர் சுற்றத்தாரும் இது எப்படியாகும் என்ற ஐயத்துடன் பின்தொடர்ந்தார்கள். ஐயர் திருவெண்ணெய்நல்லூரில் கூடியிருக்கும் அந்தணர் சபையிற் போய், "நம்பியாரூரன் எனது காதல் அடிமை"

"வேதியனு ளாமோவென் றெள்ளாது வெண்ணெய்நல்லூர்ச்
சோதிவழக்கே புகழ்ந்தார் சோமேசா—ஓதிற்
சமன்செய்து சீர்தூக்குங் கோல்போ லமைந்தொருபாற்
கோடாமை சான்றோர்க் கணி."

என்பதனுல் இவ்வந்தணர் நடுவுநிலைமை காணப்படும்.

இக்காலத்தில் பத்திரம் எழுதிக்கொடுத்தவர் கையெழுத்தையும், அப்பத்திரத்துக்குச் சாட்சியாகவுள்ளவர்களின் கையெழுத்தையும் அவர்களது வேறு எழுத்தோடு ஒத்துப்பார்த்து நியாயத்தலங்களில் தீர்ப்புச் செய்வதுபோல அக்காலத்திலும் ஓர்முறை இருந்த தென்று தெரிகிறது.

சபையோர் மறைக்கிழவரை நோக்கி, "உமது ஊர் இதுவாகில் உமது வீடு முதலியவைகளைக் காட்டும்" என்றார்கள். முனிவர் "காட்டுகிறேன் வாருங்கள்" என்று கூறி, அந்தணர்களும் நம்பியாரூரரும் பின்தொடரத் திரு வருட்டுறை என்னும் திருக்கோயிலுட் சென்றார். பின் அவரைக் காணுது எல்லோரும் திகைத்து நின்றனர். அப் போது நம்பியாரூரர் மிகுந்த காதலோடு அவரைப் பின் தொடர்ந்து அழைத்தார். சிவபெருமான் உமையம்மையார் ரோடு விடைமேல் தோன்றி அவருக்கு உணர்த்தலுற்றார்: "முன்னே நீ நமக்குத் தொண்டனுய் இருந்தாய். பிறர் மேல் வைத்த ஆசையினுல் நமது கட்டளைப்படி இப்பூமி யிற் பிறந்தாய். துன்பத்தைத் தரும் உலகவாழ்க்கை உன்னைத் தொடராவண்ணம் பெரிய அந்தணர் சபையில் தடுத்தாட் கொண்டனம்" என்றருளினுர்.

முன்புநீ நமக்குத் தொண்டன் முன்னிய வேட்கை கூரப்
பின்புநம் மேவ லாலே பிறந்தனை மண்ணின் மீது
துன்புறு வாழ்க்கை நின்னைத் தொடர்வறத் தொடர்ந்து வந்து
நன்புல மறையோர் முன்னர் நாந்தடுத் தாண்டோ மென்றார்.

—பெரியபுராணம்.

இத்தருணத்தில் சுந்தரமூர்த்தி நாயனுருக்குப் பூர்வீக உணர்ச்சி உண்டாயினதென்பதை அந்தணர் வேடங்கொண்டு வந்த சிவ பெருமான் திருக்கோயிலுட்சென்று மறைந்தபோது அவரை நாயனுர் அன்போடு கதறி அழைத்ததனுல் அறிக.

இந்த வார்த்தையைக் கேட்ட நம்பியாரூரர் ஈன்ற பசுவின் குரலைக்கேட்ட கன்றுபோலக் கதறினர். உடம்பு முழுவதும் புளகம் கொண்டார். இரண்டு கைகளும் சிரசில் குவியக் கனகசபையின்கண் ஐந்தொழில் செய்யுங் கூத்தன் செயலோ தன்னை வலியவந்து ஆட்கொண்டதென்று வணங்கினர். தேவர்கள் புட்பமாரி பொழிந்தனர்; மண்ணவர் மகிழ்ந்தனர். சிவபெருமான் நம்பியாரூரரை நோக்கி, "நீ எம்மோடு வன்மையான வார்த்தைகளைப் பேசினபடியால் "வன்றொண்டன்" என்னும் நாமம் பெற்றனை. அன்போடு பாடும் பாடலே நமக்கு மேலான அருச்சனை யாகையால் மண்மேல் நம்மைத் தமிழ்ப் பாடல்களாற் பாடுவாய்" என்றருளிச் செய்தார்.

மற்றுநீ வன்மை பேசி வன்றொண்ட னென்னு நாமம்
பெற்றனை நமக்கு மன்பிற் பெருகிய சிறப்பின் மிக்க
வற்சனை பாட்டே யாகு மாதலான் மண்மே னம்மைச்
சொற்றமிழ் பாடு கென்றார் தூமறை பாடும் வாயார்.

—பெரியபுராணம்.

நம்பியாரூரர் சிவபெருமானை நோக்கி "வேதியனாகி வந்து வழக்கினால் வென்று என்னை அடிமை கொண்டீர். அத்திருவருளை அறியாத எனக்குப் பூர்வீக உணர்வைக் கொடுத்து உய்யக்கொண்டீர். குற்றமில்லாத அமிர்தம் போன்ற கடவுளே! ஒன்றும் அறியாத நாயேன் என்ன சொல்லிப் பாடுவேன்?" என்று வணங்கினர்.

வேதிய னாகி யென்னை வழக்கினால் வெல்ல வந்த
வூதிய மறியா தேனுக் குணர்வுதந் துய்யக் கொண்ட
கோதிலா வமுதே யின்றுன் குணப்பெருங் கடலை நாயேன்
யாதினை யறிந்தென் சொல்லிப் பாடுகே னென்மொ ழிந்தார்.

—பெரியபுராணம்.

மயக்கம் பொருந்திய நிலையில் நம்பியாரூரர் இருந்தபோது இறைவர் மானுட வடிவங்கொண்டுவந்து வழக்குரைத்தார். திருக்கோயிலுட் சென்று மயக்கந் தீர்ந்து அன்புடன் அழைத்தபோது, இடபாரூடராய்த் தோன்றி அருள் செய்தார். இறைவர் அடியார் பொருட்டு மானுட உருவத்துடன் தோன்றி அருள்புரிவதை மாணிக்கவாசக சுவாமிகள் திருவாசகத்திற் சொல்லியருளினர்;

திருமாலும் பன்றியாய்ச் சென்றுணராத் திருவடியை
உருநாம மறியவோ ரந்தணனு யாண்டுகொண்டான்
ஒருநாம மோருருவ மொன்றுமிலார்க் காயிரந்
திருநாமம் பாடிநாந் தெள்ளேணங் கொட்டாமோ.

—திருவாசகம்.

நம்பியாரூரர் மேல்வரும் திருத்தொண்டத்தொகை 11-ம் பாசுரத்தில் (சடையனிசை ஞானிகாதலன் றிருநாவலூர்க்கோன் அன்னவனுமாரூரன்" என்றும், திருக்கலயநல்லூர்த் திருப்பதிகத்தின் 11-ம் பாசுரத்தில், (சடையன் இசைஞானி சிறுவனுவலர் கோனூரன்" என்றும், திருக்கோலக்காத் திருப்பதிகத்தின் 5-ம் பாசுரத்தில் அடிமை ஓலை காட்டி இறைவர் தம்மை ஆட்கொண்டனர் என்றும், திருநாவலூர்த் திருப்பதிகத்தின் முதல் பாசுரத்தில் திருவெண்ணெய் நல்லூரில் இறைவர் தம்மை ஆட்கொண்டனர் என்றும், 2-ம், 5-ம் பாசுரங்களில் ஆவணம் காட்டி அந்தணர் சபைமுன் ஆட்கொண்டனர் என்றும், 2-ம் பாசுரத்தில் "வன்றொண்டன்" என்னும் நாமம் இறைவனுல் கொடுக்கப்பட்டதென்றும், 11-ம் பாசுரத்தில் நரசிங்கமுனையர் தம்மை ஆதரித்தனர் என்றும் வைத்துப் பாடியருளினர். இவைகள் சுந்தரமூர்த்தி நாயனர் சரித்திரத்திற்குப் போதிய அகச்சான்றுகளாகும்.

சிவபெருமான் "நீ முன்னர் என்னைப் 'பித்தன்' என்று அழைத்தனை; ஆதலால் பித்தன் என்றே பாடுக" என்றருளிச் செய்தனர். திருவருள் கருணை வடிவமும் தாயானவள் பிள்ளையிடத்திலுள்ள அன்பினும் பார்க்க, தமது அடியார் இடத்தில் கோடி மடங்கு அதிகம் அன்புள்ள இறைவரை மூவுலகத்தில் உள்ளவர்களும் சிவவாக்கியமாகக் கொண்டு மெய்யன்புடன் ஓதி முத்தியடைய "பித்தா பிறை சூடீ" என்னும் பெரிய தேவாரத் திருப்பதிகத்தை எடுத்து இறைவன் மகிழ இசைபாடினர்.

கொத்தார்மலர்க் குழலாளொரு கூறாயடி யவர்பான்
மெய்த்தாயினு மினியானையவ் வியனுவலர் பெருமான்
பித்தாபிறை சூடியெனப் பெரிதாந்திருப் பதிக
மித்தாரணி முதலாவுல கெல்லாமுய வெடுத்தார்.

—பெரியபுராணம்.

நாயனார் சிவபெருமானை வைது கூறிய "பித்தா" என்னும் நிறை மொழியானது மறை மொழியோ டொக்குந் திருநாமம் என்பதும் அதனை மெய்யன்போடு ஓதும் அன்பர்கள் உய்தி கூடுவர் என்பதும் தோன்றப் "பித்தாபிறை சூடியெனப் பெரிதாந்திருப் பதிகம் - இத்தாரணி முதலாவுல கெல்லாமுய வெடுத்தார்" என்றார் சேக்கிழார் பெருமான்.

[திருவெண்ணெய் நல்லூர் - பண். இந்தளம்]

திருச்சிற்றம்பலம்

பித்தாபிறை சூடிபெரு மானேயரு ளாளா
வைத்தாய்மற வாதேநினைக் கின்றேன்மனத் துன்னை
வைத்தாய்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட் [டுறையுள்
அத்தாவுனக் காளாயினி யல்லேனென லாமே.

காரூர்புன லெய்திக்கரை கல்லித்திரைக் கையால்
பாரூர்புக ழெய்தித்திகழ் பன்மாமணி யுந்திச்
சீரூர்பெண்ணைத் தென்பால் வெண்ணெய் நல்லூரருட் டுறை [யுள்
ஆரூரனெம் பெருமாற்கா ளல்லேனென லாமே.

திருச்சிற்றம்பலம்

இத் திருப்பதிகம் பாடியதும் இறைவர் வன்றொண் டரை நோக்கி, "இன்னும் இவ்வுலகில் நமது புகழை எல் லோரும் உணர்ந்துய்யும் பொருட்டுப் பதிகங்கள் பாடுக" என்றருளிச் செய்தார். புத்தூர் சடங்கவி சிவாசாரியரின் புதல்வியார் சுந்தரமூர்த்தி நாயனாரையே உபாசனாமூர்த்தி யாகத்தியானித்துச் சிவலோகமடைந்தனர்.

சுந்தரமூர்த்தி நாயனார் தம்மையடைத்த ஆன்மாக்களுக்கு வேண்டுவதை யருளவல்ல மூர்த்தி யென்பது சடங்கவி சிவாசாரியா ரது புதல்வி நாயனாரைத் தியானித்து முத்தியடைந்ததனாலும், பெரு மிழலைக் குறும்பநாயனார் சுந்தரமூர்த்தி நாயனாரை உபாசனா மூர்த்தி யாகக் கொண்டு அவரது திருவடிகளையே தியானித்துச் சிவபத மடைந்ததனாலும் நன்கு தெளியப்படும்.

இறைவர் தமது புகழை எடுத்து இன்னும் பாடுவாய் என்று நம்பியாரூரருக்கு அருள்செய்ததனால் மலர்களால் இறைவரை அருச் சித்தலினும் தமிழ் வேதமாகிய தேவாரம் திருவாசகங்களினால் அருச் சித்தல் மக்கள் அன்பினை வளர்க்கும் மாண்புடையது என்றவாறு.

தேவாரத் திருப்பதிகங்களை மெய்யன்போடு ஓதுகிறவர்கள் இம்மையில் சகல செல்வங்களையும் பெற்று வாழ்ந்து மறுமையில் சிவலோகத்தை அடைவர்.

சிவபெருமான் கட்டளைப்படி சுந்தரமூர்த்தி நாயனர் அங்கிருந்து புறப்பட்டுத் திருநாவலூர் சென்று இறைவரைப் பணிந்து பதிகம் பாடினர்.

பின்னர், திருத்துறையூர் முதலிய க்ஷேத்திரங்களை வணங்கித் திருப்பதிகங்கள் பாடினர். திருத்துறையில் இறைவரை மலர்கொண்டு அருச்சித்துத் தம்மை உலக நெறியில் செலுத்தாவண்ணம், தாம் பாடிய திருப்பதிகத்தின் ஒவ்வொரு திருப்பாசுரத்தின் இறுதியிலும் "உனை வேண்டிக்கொள்வேன் தவநெறியே" என்று கூறி வணங்கினர். பின்னர், சிதம்பரம் சென்று ஐந்தொழிற் றிருக்கூத்தனை வணங்க எண்ணினர். செல்லும் வழியில் திருவதிகை வீரட்டானத் தெல்லையில் வந்தார். அத்தலம் திருநாவுக்கரசு சுவாமிகள் விரும்பி உழவாரத் தொண்டுசெய்த பதியென நினைந்து அத்தலத்தை மிதிக்க அஞ்சிப் பக்கத்திலுள்ள ஒருமடத்தில் புகுந்து இறைவரைச் சிந்தித்துக்கொண்டு பரிசனங்கள் துயிலத் தாமும் பள்ளி கொண்டார். அப்போது சிவபெருமான் ஓர் வயோதிக அந்தணனய் எழுந்தருளி நம்பியாரூரரின் சிரசில் தமது திருவடிகளை வைத்துப் பள்ளி கொள்வார்போல் நடித்தார். நம்பியாரூரர் விழித்து, "என் தலைமேல் கால்களை நீட்டிக் கொண்டிருக்கிற நீவிர் யாவர்?" என்று கேட்டார். மறையவர் "வயதின் மூப்பினல் திசை தெரியாது அப்படிச் செய்தனம்" என்றனர். நம்பியாரூரர் அவ்வாறு கூறியதை ஏற்றுக்கொண்டு, தமது தலையை வேறோர் இடத்தில் வைத்து நித்திரைகொண்டார். அவ்விடத்திலும் மறையவர் முன்போலத் திருவடியை நீட்டினர். திருநாவலூரர் எழுந்து, "என்னைப் பலகாலும் மிதிக்கும் நீர் யார்?" என்றார். "நீ என்னை அறிந்திலையோ?" என்று கூறிக் கங்கைவார்சடை யண்ணல் மறைந்தருளினர். தமது தலையின்மேல் திருவடியைச் சூட்டியவர் கடவுளென நம்பியாரூரர் தெளிந்து, "தம்மானை யறியாத சாதியாருளரே" என்னும் தேவாரத் திருப்பதிகம் பாடி, வீரட்டானேசுரரை வணங்கினர்.

[திருவதிகை வீரட்டானம்- பண் கொல்லிக்கௌவாணம்.]

திருச்சிற்றம்பலம்

தம்மானை யறியாத சாதியா ருளரே
சடைமேற்கொள் பிறையானை விடைமேற்கொள் விகிர்தன்
கைம்மாவி னுரியானைக் கரிகாட்டிலாட
லுடையானை விடையானைக் கறைகொண்ட கண்டத்
தெம்மான்ற னடிக்கொண்டென் முடிமேல்வைத் திடுமென்னு
மாசையால் வாழ்கின்ற வறிவிலா நாயேன்
எம்மானை யெறிகெடில வடவீரட்டானத்
துறைவானை யிறைபோது மிகழ்வன்போ லியானே.

என்பினையே கலனாக வணிந்தானை யெங்க
ளெருதேறும் பெருமானை யிசைஞானி சிறுவன்
வன்பனைய வளர்பொழில்சூழ் வயனாவ லூர்க்கோன்
வன்றொண்ட னாரூரன் மதியாது சொன்ன
அன்பனை யாவர்க்கு மறிவரிய வத்தர்
பெருமானை யதிகைமா நகருள் வாழ்பவனை
என்பொன்னை யெறிகெடில வடவீரட்டானத்
துறைவானை யிறைபோது மிகழ்வன்போ லியானே.

திருச்சிற்றம்பலம்

சுந்தரமூர்த்தி நாயனார் திருவதிகையை மிதிக்க அஞ்சினது, அப்பரைத் தாம் வழிபடக்கூடிய தொண்டர் என்பதைக் குறிக்கும். சிவபெருமான் நம்பியாரூரரை வலிந்தாட்கொண்டதுபோலத் தாமே வந்து திருவடி தீட்சை செய்தனர் என்பதற்கு இத்தேவாரத் திருப்பதிகம் அகச்சான்றாகும்.

நாயனார் அங்கிருந்து புறப்பட்டு, மாவலிச்சக்கரவர்த்தியிடம் மூன்றடி மண் வாங்க வாமன் உருவங்கொண்ட விட்டுணுமூர்த்தி பூசித்த திருமாணிக்குழியை வணங்கித் துதித்தார். பின்னர், திருத்தினைநகரை வணங்கிப் பாடி யாழின் ஒலியும் முழவின் ஒலியும் வேத ஒலியும் அரம்பையர் பாடும் கீத வொலியும் ஒருபோதும் நீங்காத திருத்தில்லையின் எல்லையை வந்து சேர்ந்தார். அங்கே வாவிகளிலுள்ள கயல் மச்சங்கள் நம்பியாரூரருக்கு எதிரே பாய்ந்தன. அதனால் தடாகத்திலுள்ள தாமரைப்பூக்கள் அசைந்தன. அவ்வசைவினால் வண்டுகளும் பறவைகளும் சத்தித்துப் பறந்தன.

வாமனம்—குறள். மாணி—பிரமசாரி.

அதனால் வாவிகளில் அலைகள் பெருகின. அலைப்பெருக்கி னால் சங்குகளும் மலங்கு மீன்களும் வாவியின் பக்கலி லுள்ள வயலிற் பறந்தன. ஆன்மாக்களைப் பற்றியுள்ள மும்மலங்களையும் நீக்கும் திருத்தில்லையின் எல்லையை நம்பியாரூரர் வணங்கினார். பின்னர், வயல்களைக் கடந்து நாவல், மா, மகிழ், தென்னை, நாரத்தை, கமுகு, குங்குமம், இலுப்பை, வாழை, வஞ்சி முதலிய மரங்கள் நெருங்கி வளர்ந்து முகிற் கூட்டங்கள் படியும் சோலைகளில் குயில்கூவத் தேவ உலகத்திலும் மேம்பட்டு விளங்கும் தில்லையின் புறம்பணை கடந்து சென்றார். வன்னி, கொன்றை, சுரபுன்னை, சண்பகம், சந்தனம், முருக்கு, செருந்தி, மந்தாரம், கோங்கு, குரவு, புன்னை, பாதிரி, வில்வம் முதலிய பூ மரங்களும், மல்லிகை, முல்லை முதலிய கொடிகளும், நந்தியாவர்த்தம், அலரி, முதலிய செடிகளும் நிறைந்த தூய நந்தனவனங்களைப் பணிந்து சென்றார். சிவகாமி யம்மையார் காணவும் எல்லா உலகங்களிலுள்ள உயிர்களும் மாயையினின்றும் நீங்கி உய்திபெறவும், மறைச்சிலம்பு ஆர்ப்பத் தூக்கி யாடும் சபாநாதனைத் தினந் தோறும் வணங்கக் கடலானது வந்தாற்போல உயர்ந்த திருமதிற்புறத்திலுள்ள அகழியை நம்பியாரூரர் கண்டு மகிழ்ந்தார். சிற்றம்பலத்திலே ஆடுகின்ற தேனை, வேத மாகிய வண்டுகள் உண்பதுபோல அகழியிலுள்ள தாமரைப் பூவின் தேனையுண்ட வண்டுகள், பாங்கரிலுள்ள தாழை மலரின் மகரந்தப் பொடியில் மூழ்கி வெளிவரும் தோற்ற மானது தூய திருநீறு பூசிய அடியார் தோற்றத்தை யொத் திருத்தலை நம்பியாரூரர் கண்டு, மிகுந்த அன்பினால் திளைத் துச் சென்றார். நான்கு வேதங்களின் ஒலியும் சிறந்த வெண் கொடியோடு கூடிய மணியின் ஒலியும் நான்கு திசைகளி லும் எதிர்முகமாகப் புறப்படுதலால், பிரமதேவரின் பொன்மயமான நான்கு முகங்கள்போல் விளங்கும் நான்கு திருவாயில்களில் வடக்குத் திருவாயிலை அடைந்தார். தம்மை வந்து எதிர்கொண்ட அடியார்களைத் தாம் முதலில் வணங்கினரோ, அல்லது அவ்வடியார்கள் தம்மை முதலில் வணங்கினார்களோ என்று சொல்லக்கூடாதபடி எதிர்

எதிர் வணங்கிய மகிழ்வுடன் ஆனந்தக் கூத்தரைக் கண்டு வணங்கும் பெருவிருப்போடு அழகிய மாளிகைகள் நிறைந்த திருவீதியினுள்ளே புகுந்தார். தேவதேவர் எழுந்தருளும் அத்திருவீதி யெங்கும் வேதங்கள் முழங்க அரம்பையர் ஆடல் செய்ய, ஐந்து தேவதுந்துபிகளும் முழங்க, வாசமாலைகளில் வண்டுகள் விழுந்து பாட, அன்பினல் கண்ணீர் சொரிந்து அடியார்கள் தோத்திரங்களைப் பாடும் ஒலி எங்கும் முழங்க, குபேரன் பட்டினங்களைப்போல அமைந்த மாளிகைகளில் கட்டப்பட்ட கொடிகள் அம் மாளிகையிலுள்ள யோகச் சிந்தையிலிருந்து மறையவர்கள் வளர்க்கும் ஓமப்புகையினுலுண்டாகும் மேகக்கூட்டங்களின் இடையே மின்னல் கொடிகள் போலத் தோன்றி நிலவ, எல்லா நிலங்களிலுள்ள அழகுகளும் ஒருங்கு சேர்ந்தாற்போல விளங்கும் திருத்தில்லையில் தேரோடும் திருவீதியைப் பணிந்து திருக்கோயில் வாயிலைத் தாழ்ந்து இறைஞ்சி இரண்டு கரங்களையும் சிரசின்மேல் குவித்துக் கொண்டு திருக்கோயிலுள் நாயனர் புகுந்தார். இங்கே பேரம்பலமாகிய மேருவை வலம் செய்து வணங்கி வேதத்தின் முதல் கடைஇடைகளிலும் அன்பர்களின் இருதய கமலத்திலும் விளங்கும் திருச்சிற்றம்பலத்தின்முன்னே உள்ள திருவணுக்கன் திருவாயிலிற் புகுந்தனர். உலகினர் உய்ய, மறைச் சிலம்பு ஒலிக்க, மாலயன் தேட, மன்றினுள் வெளியே நின்று ஆடும் ஐந்தொழிற் பெருங்கூத்தனை நம்பியாரூரர் கண்டார். கண்டவுடன் அன்பினல் தூண்டப்பட்டு அவர் கைகள் குவிந்தன. கண்கள் மகிழ்ச்சியினல் திளைத்தன. அந்தக்கரணங்கள் ஒருவழிச் சென்றன. திருக்களிற்றுப்படியின் பக்கத்தில் தாழ்ந்து எழுந்தார். எழுந்தபோது மெய் வாய் கண் மூக்குச் செவி ஆகிய பொறிகள் ஒடுங்கிக் கண்களிலே நின்றன. அந்தக்கரணங்களாகிய மனம், புத்தி, சித்தம், அகங்காரம் நான்கும் சித்தத்தில் பொருந்திநின்றன. இராசதம், தாமதம், சாத்துவிதம் என்னும் மூன்று குணங்களும் சாத்துவித குணத்தில் ஒடுங்கிநின்றன. ஒப்பற்ற பெருங்கூத்தினல் உண்டாகும் பேரின்ப வெள்ளத்தில் திளைத்துப் பெரு மகிழ்ச்சியினல்

பூரித்தார் நம்பியாரூரர். ஆனந்தக்கண்ணீர் சொரிய இரண்டு கைகளையும் தலைமேற் கூப்பிக்கொண்டு, "இறைவனே ! உன்னுடைய திருநடனங்கண்டு வணங்கி எனக்குக் கிடைத்த இம்மானுடப் பிறப்பே மேலான இன்பம்" என்று அறிதற்கரிய தேவாரத் திருப்பதிகம்பாடிப் பரவிப் பணிந்தார்.

பெருமதில் சிறந்த செம்பொன்மா ளிகைமின்
  பிறங்குபே ரம்பல மேரு
வருமுறை வலங்கொண் டிறைஞ்சிய பின்னர்
  வணங்கிய மகிழ்வொடும் புகுந்தா
ரருமறை முதலி னடுவினிற் சிரத்தி
  லன்பர்தஞ் சிந்தையி லலர்ந்த
திருவளர் ரொளிசூழ் திருச்சிற்றம் பலமுன்
  றிருவணுக் கன்றிரு வாயில்.

வையகம் பொலிய மறைச்சிலம் பார்ப்ப
  மன்றுளே மாலயன் தேட
வையர்தாம் வெளியே யாடுகின் றுரை
  யஞ்சலி மலர்த்திமுன் போற்றுங்
கைகளோ திளைத்த கண்களோ வந்தக்
  கரணமோ கலந்தவன் புந்தச்
செய்தவம் பெரியோன் சென்றுதாழ்ந் தெழுந்தான்
  றிருக்களிற் றுப்படி மருங்கு.

ஐந்துபே ரறிவுங்கண்களே கொள்ள
  வளப்பருங் கரணங்க ளொன்குஞ்
சிந்தையே யாகக் குணமொரு மூன்றுந்
  திருந்துசாத் துவிகமே யாக
விந்துவாழ் சடையா னாடு மானந்த
  வெல்லையி றனிப்பெருங் கூத்தின்
வந்தபே ரின்ப வெள்ளத்துட் டிளைத்து
  மாறிலா மகிழ்ச்சியின் மலர்ந்தார்.

தெண்ணிலா மலர்ந்த வேணியா யுன்றன்
  றிருநடங் கும்பிடப் பெற்று
மண்ணிலே வந்த பிறவியே யெனக்கு
  வாலிதா மின்பமா மென்று
கண்ணிலா னந்த வருவிநீர் சொரியக்
  கைம்மல ருச்சிமேற் குவித்துப்
பண்ணினா னீடி யறிவரும் பதிகம்
  பாடினர் பரவினர் பணிந்தார்.

—பெரிய புராணம்.

திருவம்பலம் தூய செம்பொன்னினல் வேய்ந்துள்ளது. உச்சியில் பொற்குடங்கள் வைக்கப்பட்டுள்ளன. அதனுள் இறைவன் திருநடனம் செய்யும் இடமே சிற்றம்பலம். அன்பர் இருதய கமலமும் இறைவன் எழுந்தருளும் சிதம்பரத்தோடொக்கும் என்பது.

"மலர்மிசை யேகினன் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்"

என்ருர் திருவள்ளுவ நாயனர். சிற்றம்பலம் பிரணவ வடிவுடையது வேதம் ஓதும்போது பிரணவத்தை முதல் இடை கடையில் வைத்து ஓதுவது மரபு. சேக்கிழார் பெருமானும் "அருமறை முதலில் நடுவினிற் சிரத்தில் அன்பர்தஞ் சிந்தையில் அலர்ந்த—திருவளர் ஒளிசூழ் திருச்சிற்றம்பலம்" என்ருர். தமிழ்வேதம் ஓதும்போதும் முதலிலும் இறுதியிலும் "திருச்சிற்றம்பலம்" என்று சொல்லி ஓதுதல் மரபாம்.

ஞானிகள் இறைவனை வணங்கும்போது பெறும் பயன் பேரின்ப மாதலின் "ஐந்து பேரறிவும்" என்ருர் ஆசிரியர் சேக்கிழார். ஆன்ம தத்துவமெல்லாம், கண்கள் மூலமாகத் திருக்கூத்தனைப் பற்ற நான்கு புலன்களும் அடங்கிநின்றன. ஈட்டியினல் முதுகில் குத்தினும் உணர்ச்சி தெரியாது; பீரங்கியைப் பொறித்தாலும் அதன் சத்தம் காதில் கேளாது; சுகந்த வாசனையை மூக்கு முகராது; நல்ல அமிர்தத்தின் சுவையை நாக்கு அறியாது. அந்தக்கரணங்கள் நான்கில் மனம் இன்னதென்று ஆராயும் தொழிலுடையது. சித்தம் இன்னதென்று நினைப்பது. அகங்காரம் இன்னதென்று தீர்மானிப்பது. சுந்தரமூர்த்தி நாயனர் திருக்கூத்தனை நினைக்கும் நிலையில் நின்றமையால் "கரணங்கள் நான்கும் சிந்தையேயாக" என்ருர் சேக்கிழார் பெருமான். அறிவை வளர்க்கும் குணம் சாத்துவிகம். ஞானிகள் உலகப் பற்றை விட்டுச் சிவநெறியில் நிற்பவர்கள். அதுபற்றியே "குணமொரு மூன்றும் சாத்துவிகம்" என்று கூறப்பட்டது. திருநடனங் கண்டு பேரின்பத்தைப் பெற்ற பயனுக இப்பிறவியை இன்பம் எனப் பட்டது. "எடுத்த பொற்பாதமுங் காணப்பெற்ருல்—மனித்தப் பிறவியும் வேண்டுவதே இம்மானிலத்தே" என்பது அப்பர் சுவாமிகள் திருவாக்கு. "திருத்தொண்டத் தொகைமுன் பணித்த திருவாளன்—வாசமலர் மென்கழல் வணங்க வந்தபிறப்பை வணங்குவாம்" என்ருர் சேக்கிழார்.

அம்பலக் கூத்தனை வணங்கி நின்றபோது அவருடைய திருவருளினல் "ஆரூரில் வருக நம்பால்" என்னும் அசரீரி வாக்கை நம்பியாரூரர் கேட்டனர். உடனே அம்பலக்கூத்தரின் பணிமேற்கொண்டு திருவம்பலத்தை வலங்கொண்டு வெளிவந்தார். கோபுரத்தை நிலமுற விழுந்து

வணங்கினார். திருவீதியைப் பணிந்து தென்திசை வாயிலைக் கடந்து, தமது பரிசனங்களுடன் கொள்ளிடம் என்னும் நதியைக் கடந்து சென்று சீர்காழியைச் சமீபித்தார். அப்பதி திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் திருவவதாரம் செய்த இடமாதலினால் அதனை மிதிக்கக்கூடாதென்று எண்ணி அவ்வூர் எல்லையை வலம் வந்தார். அப்போது சிவபெருமான் உமையம்மையோடு நம்பியாரூரருக்கு எதிரே காட்சி கொடுக்க, மண்டிய பேரன்போடு இறைஞ்சினார். "கயிலையில் வீற்றிருந்தபடி கண்டு கொண்டேன்" என்று இன்னிசைப்பதிகம் பாடினார்.

திருக்கழுமலம் - பண்-தக்கேசி

திருச்சிற்றம்பலம்

சாதலும் பிறத்தலுந் தவிர்த்தெனை வகுத்துத்
தன்னருடந்தவெந் தலைவனை மலையின்
மாதினை மதித்தங்கொர் பால்கொண்ட மணியை
வருபுனல் சடையிடை வைத்தவெம் மானை
ஏதிலென் மனத்துக்கொரி ரும்புண்ட நீரை
யெண்வகை யொருவனை யெங்கள் பிரானைக்
காதில்வெண் குழையனைக் கடல்கொள மிதந்த
கழுமல வளநகர்க் கண்டுகொண் டேனே.

* செழுமலர்க் கொன்றையுங் கூவிள மலரும்
விரவிய சடைமுடி யடிகளை நினைந்திட்
டழுமலர்க் கண்ணிணை யடியவர்க் கல்லா
லறிவரி தவன்றிரு வடியிணை யிரண்டுங்
கழுமலவளநகர்க் கண்டுகொண் டூரன்
சடையன்றன் காதலன் பாடிய பத்துந்
தொழுமல ரெடுத்தகை யடியவர் தம்மைத்
துன்பமு மிடும்பையுஞ் சூழகி லாவே.

திருச்சிற்றம்பலம்

* இந்தத் திருப்பதிகத்தில் இறைவர் சீர்காழியின் புறத்தில் காட்சி கொடுத்தனர் என்பதற்கும் நம்பியாரூரர் தந்தையார் சடையனார் என்பதற்கும் அகச்சான்றுளது.

அப்பர் சுவாமிகள் உழவாரத் திருத்தொண்டு செய்த திருவதிகை வீரட்டானத்தை மிதிக்க அஞ்சினதுபோலத் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் திருவவதாரஞ் செய்த சீர்காழியையும் மிதிக்க அஞ்சியது சுந்தரமூர்த்தி நாயனாரது அடியார் பக்தியையும்

அவர் தவ நிலையையும் விளக்கும். திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாருக்குத் திருக்கயிலையிலிருக்கும் திருக்கோலத்தை "அம்மே? அப்பா" என்று அவர் அழுதபோது சிவபெருமான் காட்டியருளினார். சுந்தரமூர்த்தி நாயனாருக்கும் அவர் வேண்டுமுன் சிவபெருமான் தம் கோலத்தைக் காட்டியருளினார். அப்பர் சுவாமிகளுக்கும் திருவையாற்றில் கயிலையின் கோலத்தைச் சிவபெருமான் காட்டியருளினார்.

சிவபெருமான் தாம் காட்டிய திருக்கோலத்தை மறைத்தருளவும் வெருக்கொண்டார். நம்பியாரூரர் பின் தெளிந்து அப்பதியை வணங்கித் திருப்பதிகம் பாடினார். அங்கிருந்து புறப்பட்டுத் திருப்புன்கூர், திருநீடூர், திருமயிலாடுதுறை, திருவம்பர் மாகாளம், திருப்புகலூர் முதலிய தலங்களை வணங்கித் திருவாரூர் சென்றடைந்தார். சிவபெருமான் திருவாரூரின்கண்ணே யுள்ள அடியார்கட்குக் கனவில் தோன்றித் தாம் அழைக்க நம்பியாரூரன் தம்மிடம் வருகின்றான் என்றும், அவனை மகிழ்வுடன் எதிர்கொள்வீராக என்றும் அருள்செய்தார். திருவாரூரில் வாழ்பவர்கள் அதிசயித்துத் தங்கள் மாளிகைகளையும் திருவீதிகளையும் கொடிகளினாலும் வாழை, கமுகு, தோரணம் முதலியவைகளினாலும் அலங்கரித்துப் பூரண கும்பங்களை வாயில்கள் தோறும் வைத்தார்கள். பெண்மகளிர் திண்ணைகள் தோறும் நடம்பயில நானாவித வாத்தியங்கள் முழங்கத் திருவாரூரின் மதில் புறத்தில் தேவர் உலகம் பூமியில் வந்தாற்போல அடியார்கள் "நம்பிரானாராவா ரவரன்றே" என்று சென்று நம்பியாரூரரை எதிர்கொண்டு வணங்கினார்கள். தம்மை வணங்கிய அடியார்களைச் சுந்தரமூர்த்தி நாயனார் அஞ்சலி கூப்பி மிகுந்த களிப்புடன் திருவீதியிற் சென்று திருத்தொண்டர்களை நோக்கி "எந்தையிருப்பது மாரூரவரெம்மையு மாள்வாரோ கேளீர்" என்னும் முடிவுடைய சந்தவிசைத் திருப்பதிகம் பாடிக்கொண்டு, திருக்கோயிலின் வாயிலையடைந்து பூமியில் விழுந்து வணங்கினார். பின் தேவாசிரியன் மண்டபத்தையும் வணங்கித் தொழுது உச்சிமேற் குவித்த கைகளோடு உடம்பையும் உயிரையும் உருகச் செய்யும பேரன்போடு புற்றை இடமாகக் கொண்டிருந்து மகா இலட்சுமியின் பூசைக்கருள்புரிந்த அண்ண

லைப் பூமியில் விழுந்திறைஞ்சினர். ஐந்து பேரறிவும் ஒருமிக்கச் சிவானந்தத்தில் மூழ்கித் திருப்பதிகத்தைப் பாடித் துதித்தனர்.

புற்றிடங் கொண்ட புராதனனைப்
பூங்கோயின் மேய பிரானை யார்க்கும்
பற்றிட மாய பரம்பொருளைப்
பார்ப்பதி பாகனைப் பங்க யத்தா
ளர்ச்சனை செய்ய வருள்புரிந்த
வண்ணலை மண்மிசை வீழ்ந் திறைஞ்சி
நற்றமிழ் நாவலர் கோனு டம்பா
னன்மையின் றன்மையை மெய்ம்மை பெற்றார்.

அன்பு பெருக வுருகி யுள்ள
மலையவட் டாங்கபஞ் சாங்க மாக
முன்பு முறைமையி னல்வ ணங்கு
முடிவிலாக் காதன் முதிர வோங்கி
நன்புல னாகிய வைந்து மொன்றி
நாயகன் சேவடி யெய்தப்பெற்ற
வின்ப வெள் ளத்திடை மூழ்கி நின்றே
யின்னிசை வண்டமிழ் மாலை பாட

—பெரியபுராணம்.

அப்போது வன்மீகத் தியாகராச மூர்த்தியின் திருவருளினால் ஆகாயத்தினின்றும் "நாம் உமக்கு நம்மைத் தோழமையாகத் தந்தனம்; நாம் உன்னைத் தடுத்தாண்டு கொண்ட விவாக விழாவில் நீ கொண்ட மணக்கோலத்தை என்றும் கொண்டு, உன் வேட்கைதீர மண்மேல் விளையாடுவாய்" என்னும் அசரீரி வாக்கு நம்பியாரூரருக்குக் கேட்டது. அதுகேட்ட வன்றொண்டர் தன்னையும் ஒரு பொருளாக மதித்து அருள்செய்த கருணையின் திறத்தை வியந்து மாயை நீங்கப்பெற்ற மனக்களிப்பினால் வெற்றி யடைந்த காளைபோல் நடந்து, தியாகராச மூர்த்தியை வணங்கினார். பின்னர், மாளிகையை வலம் வந்து வெளியில் வந்தார். அன்றுமுதல் அடியார்கள் எல்லாரும் நம்பியாரூரரை "தம்பிரான் தோழர்" என்ற பெயரால் அழைத்தார்கள். வன்மீகத் தியாகராசமூர்த்தியின் திருவருளினால் தமிழ் நாவலர் பெருமான் சைவ வேடத்துடன் சந்தனம், முத்துமாலை, பூமாலை முதலியவை

களை அலங்காரமாக அணிந்து தவவேந்தரைப்போல் தினந்தோறும் வன்மீகநாதரைப் போய்ப் பாடித் துதித்து இன்பத்தில் திளைத்திருந்தார்.

வாழிய மாமறைப் புற்றி டங்கொண்
மன்னவ னாரரு ளாலோர் வாக்குத்
தோழமை யாக வுனக்கு நம்மைத்
தந்தன நாமுன்பு தொண்டு கொண்ட
வேள்வியி லன்றுநீ கொண்ட கோல
மென்றும் புனைந்துநின் வேட்கை தீர
வாழிமண் மேல்விளை யாடுவா யென்
றாரூரர் கேட்க வெழுந்த தன்றே.

கேட்க விரும்பிவன் றொண்ட ரென்றுங்
கேடிலா தானை யிறைஞ்சி நின்றே
யாட்கொள வந்த மறையவனே
யாரூ ரமர்ந்த வருமணியே
வாட்கயல் கொண்டகண் மங்கை பங்கா
மற்றுன் பெரிய கருணை யன்றே
நாட்கம லப்பதந் தந்த தின்று
நாயினே னைப்பொரு ளாக வென்றார்.

என்று பலமுறை யால்வ ணங்கி
யெய்திய வுள்ளக் களிப்பி னோடும்
வென்றி யடல்விடை போன டந்து
வீதி விடங்கப் பெருமான் முன்பு
சென்று தொழுது துதித்து வாழ்ந்து
திருமா ளிகைவலஞ் செய்து போந்தா
ரன்று முதலடி யார்க ளெல்லாந்
தம்பிரான் றோழ ரென்றே யறைந்தார்.

மைவளர் கண்ட ரருளி னாலே
வண்டமிழ் நாவலர் தம்பெ ருமான்
சைவ விடங்கி னணிபு னைந்து
சாந்தமு மாலையுந் தாரு மாகி
மெய்வளர் கோல மெல் லாம்பொ லிய
மிக்க விழுத்தவ வேந்த ரென்னத்
தெய்வ மணிப்புற்று ளாரைப் பாடித்
திளைத்து மகிழ்வொடுஞ் செல்லா நின்றார்.

—பெரியபுராணம்

முன்னை வினைப்பயனை அனுபவித்தற்குத் திருவாரூருக்கு வரும்படி இறைவர் நம்பியாரூரரை அழைத்தனர். அது காரணமாக அவரை எதிர்கொண்டு அழைக்கும்படி தம் அடியார்களுக்குக்

கனவில் சொல்லியருளினார். அதனால் திருவாரூரிலுள்ள அடியார்கள் நம்பியாரூரருடைய பெருமையையும் அறிவாராயினர். "நாம் உமக்கு நம்மைத் தோழமையாகத் தந்தனம்" என்று இறைவர் அருளினமையால், நம்பியாரூரரின் செயல்கள் எல்லாம் தோழரின் செயலேயாம். திருவாரூரில் பரவையை விவாகம் செய்ய அழைத்தமையால் சுந்தரமூர்த்தியை எதிர்கொள்ளல் தகுதியே. உடல், பொருள், ஆவி மூன்றையும் கடவுளிடத்து ஒப்படைத்துப் பசுத்துவம் நீங்கப்பெற்றுச் சிவத்துவத்தோடு விளங்கும் சிவ ஞானிகளுக்கு வேண்டியவைகளை இறைவர் தாமே செய்தருளுவர்.

முன் கயிலையில் உமையம்மையாருடைய சேடிமாரில் கமலினி என்பவர், பெருமை நிறைந்த இத் திருவாரூரில் உருத்திரகணிகையர் குலத்தில் கதிர்மணி தோன்றினாற் போல் பிறந்தார். பரவை என்னும் திருநாமத்தோடு மகாலட்சுமியைப்போல் அழகுவாய்ந்தவராய் வளர்ந்தனர். இளம் மான்பிணையோ, விண்ணுலகிலுள்ள கற்பகத்தின் அரும்போ, வாசத்தேனின் இளம்பதமோ, சமுத்திரத்திலுள்ள பவளக்கொடியோ, சந்திரனின் இளங் கலையோ, இளம் பருவத்தில் மன்மதன் வில்வித்தை பயிலும் ஒப்பற்ற கரும்புவில்லோ என்று சொல்லத்தக்க வனப்புடன் நாளொரு வண்ணமும் பொழுதொரு மேனியுமாக வளர்ந்து மங்கைப்பருவத்தை அடைந்தனர்.

> மானிளம் பிணையோ தெய்வ வளரிள முகையோ வாசத்
> தேனிளம் பதமோ வேலைத் திரையிளம் பவள வல்லிக்
> கானிளங் கொடியோ திங்கட் கதிரிளங் கொழுந்தோ காமன்
> றூனிளம் பருவங் கற்குந் தனியிளந் தனுவோ வென்ன.
>
> —பெரியபுராணம்

நாள்தோறும் வன்மீகநாதரைப் பாங்கியரோடு சென்று வணங்கிவந்தார். ஒருநாள் பரவையார் சேடிமாருடன் தியாகராச மூர்த்தியை வணங்கப்போனார். அப்போது சிவபெருமானை வணங்கத் தமது பரிசனங்களோடு சென்ற சுந்தரமூர்த்தி நாயனார் "நற்பெரும் பான்மை கூட்ட"ப் பரவையாரைக் கண்டனர். பரவையாரும் சுந்தரமூர்த்தி நாயனாரைப் "பண்டைவிதிகடை கூட்ட"க் கண்டார். விதிவசத்தால் ஒருவரை யொருவர் விரும்பினர். ஒருவரையொருவர் யாராயிருக்கலா மென்று சந்தேகம்

கொண்டார்கள். சுந்தரமூர்த்தி நாயனர் பரவையாரை "இந்திரன் மகளோ! காமன் மனைவியை ஒத்த ஒரு பெண்ணே! ஓர் தவவடிவமோ! மேகத்தைப்போன்ற கூந்தலையும் வில்லைப்போன்ற புருவத்தையும், குவளைபோன்ற கண்களையும், பவளம்போன்ற உதடுகளையும், சந்திரனைப் போன்ற முகத்தையும், இயற்கையாய் நறுமணம் வீசும் உடம்பையுமுள்ள ஓர் பெண் கொடியோ! சிவபெருமானது திருவருளோ! பிரமதேவன் கையினல் எழுத முடியாது தன் மனத்தினல் படைத்த மணிவிளக்கோ! மூவுலகத் தவரும் மனங்களிப்ப என் முன் நின்றது யாதோ"வென்று அதிசயித்தார்.

பரவையாரும் நம்பியாரூரரைக் கண்டு ஒருபோதும் இல்லாத விருப்பமானது அவரது நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்னும் குணங்களையும் அடக்கி மேல் எழுந்தது. தனக்கு முன்னே தோன்றியவர் "முருகனே! காமனே! தன் மனதினைக் கவரச்செய்த விஞ்சையனே! இறைவன் திருவருளைப் பெற்றவரோ! என் மனதைத் தன் வசப்படுத்திய இவர் யாரோ!" எனப் பலவாறு நினைந்தனர்.

கற்பகத்தின் பூங்கொம்போ காமன்றன் பெருவாழ்வோ
பொற்புடைய புண்ணியத்தின் புண்ணியமோ புயல்சுமந்து
விற்குவளை பவளமலர் மதிபூத்த விரைக்கொடியோ
வற்புதமோ சிவனருளோ வறியேனென் றதிசயித்தார்.

ஓவியநான் முகனெழுத வொண்ணுமை யுள்ளத்தான்
மேவியதன் வருத்தமுற விதித்ததொரு மணிவிளக்கோ
மூவுலகின் பயனாகி முன்னின்ற தெனநினைந்து
நாவலர்கா வலர்நின்றார் நடுநின்றார் படைமதனர்.

முன்னேவந் தெதிர்தோன்று முருகனோ பெருகொளியாற்
றன்னேரின் மாரனோ தார்மார்பின்* விஞ்சையனே
மின்னேர்செஞ் சடையண்ணல் மெய்யருள்பெற் றுடையவனே
வென்னேயென் மனந்திரித்த விவன்யாரோ வெனநினைந்தார்.

—பெரியபுராணம்

விதிவசத்தால் தலைவனும், தலைவியும் சந்தித்து மணத்தலை "நற்பெரும் பான்மை கூட்ட" என்றனர் சேக்கிழார். இவர்கள் திருவருளால், நம்பியாரூரருக்கும், பரவையாருக்கும் மணம் நடக்க

* விஞ்சையன் - மந்திரவாதி.

விருந்தபடியால் இருவரும் ஒருவரையொருவர் திருக்கோயிலில் சந்தித்தனர்.

பரவையார் நம்பிஆரூரர் மேல்வைத்த காதலானது நாணம் முதலான பெண்ணின் குணங்களை மறைத்தபோதிலும் சிவபெருமானை வணங்க வேண்டுமென்னும் அன்பானது வலிந்து செலுத்தத் திருக்கோயிலுட் சென்றனர். அது கண்ட வன்றொண்டர் தம் மனத்தைக் கவர்ந்து சென்ற இப்பெண்கொடி யாரென வினவினர். அங்கு நின்றவர் “இந் நங்கை பரவையார்; தேவர்களாலும் கிட்டுதற்கரியவர்” என்றனர்.

நம்பியாரூரர் அப்பெண்மணியின் பெயர் பரவையென்று சொல்லக்கேட்டலும் பலவாறு நினைந்தார். முன்னை வினைப்பயனால் கட்டுண்டு திருக்கோயிலுட் சென்று பரவையாரைத் தமக்குத் தரும் வண்ணம் தம்மை யாட்கொண்ட இறைவரை வணங்கினர். நம்பியாரூரர் திருக்கோயிலுட் புகு முன்னரே பரவையார் தமது வழிபாட்டை முடித்துக் கொண்டு வேறுபக்கமாய் வெளியே வந்து நம்பியாரூரர் மேல் வைத்த பெருங்காதலுடன் தோழிமார் சூழ்ந்து வரத் தமது மாளிகை சேர்ந்தார்.

தலைவன் தலைவியின் பெயர் கேட்டதும், அதில் ஓர் விருப்பம் உண்டாகும். அதனைக் காட்டும் வண்ணம் சேக்கிழார் பெருமான் ஒரு திருவிருத்தத்தில் எழு பொருள்பட எழுதரம் ‘பரவை’ என்னுஞ் சொல்லை வைத்துப் பாடி யருளினர்.

பேர்பரவை பெண்மையினிற் பெரும்பரவை விரும்பல்கு
லார்பரவை யணிதிகழு மணிமுறுவ லரும்பரவை
சீர்பரவை யாயினா டிருவுருவின் மென்சாய
லேர்பரவை யிடைப்பட்ட வென்னாசை யெழுபரவை

—பெரியபுராணம்

பேர் பரவை - பரவை என்பது இப்பெண்மணியின் நாமம். பெண்மையினில் - பெண் தன்மையினால்; பெரு உம்பர் - பெரிய தேவுக்களுக்கெல்லாம்;* அவை - தாய் போல்பவள்; விரும்பு அல்குல் ஆர்பு அரவுஐ - விரும்புகின்ற அல்குலின் அழகின் நிறைவு சர்ப்பங்களுக்கெல்லாம் இறைவனாகிய ஆதிசேடனது படத்தை யொக்கும்;

* அவ்வை என்பது விகாரப்பட்டு அவையாயது.

அணி திகழுமணிமுறுவல் அரும்பரவை - அழகு பொருந்திய வரிசைப் பற்கள் முல்லையரும்புகளை யொக்கும்; சீர்பரவு ஐயாயினள்—இலக்குமியினாற் புகழப்படத் தக்க அழகி; திருவுருவின் மென்சாயல் ஏர்பரவை யிடைப்பட்ட என் ஆசை எழுபரவை - அந்தப் பரவையின் திவ்விய உருவத்தின் சௌந்தரியமாகிய சமுத்திரத்தில் பொருந்திய என்னுசையானது ஏழு சமுத்திரங்களுக்கு மொப்பானது.

மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் இதைச் சேக்கிழார் சுவாமிகள் பிள்ளைத் தமிழில் "முறையினொரு சிறு தூக்கினெழு பரவையும் புகழுடித்துற நிறுத்தானிவன் மொழி யெங்கள் தம்பிரான் வல்லப முணர்ந்திலைகொல்" என வியந்து கூறினார்.

நம்பியாரூரர் கடவுளை வணங்கி மிகுந்த காதலுடன் தேவாசிரியன் மண்டபம் சேர்ந்து ஒருவரோடும் பேசாதிருந்தார். கதிரவன் மேற்கடலில் புகுந்தான். அணிகின்ற மக்களுக்கு இன்பத்தைக் கொடுக்கும் திருநீற்றொளியைப் போலச் சந்திரன் உதயம் செய்தான். திருக்கோயிலில் இறைவரை வணங்கி, நம்பிஆரூரரைத் தமக்குக் கணவனாகப் பெறுவார் போலத் தோழியருடன் தமது மாளிகைக்குச் சென்ற பரவையார் நம்பிகளில் கொண்ட காதலினால் மயங்கி நிலாமுற்றத்தின் அருகிலுள்ள மலர்கள் நிறைந்த படுக்கையில் வந்து இருந்தார். அப்போது பக்கத்திலிருந்த தோழியைப் பார்த்துத் தாம் திருக்கோயிலுக்குப் போகும் போது திருவீதியில் தமக்கெதிரில் வந்தவர் யாரென வினவினார். "அவர் சிவபெருமானால் ஆட்கொண்டருளியவரும் ஆதிசைவமுதல்வருமான திருத்தொண்டர் தம்பிரான் தோழனார். "ஆளுடைய நம்பி" என்று தோழி சொன்னாள். தம்பிரான் தோழன் என்பதைக் கேட்டவுடனே பரவையார் முன்னினும் அளவிறந்த காதல் நோயினால் தமக்குள்ள நாணம் முதலிய குணங்களையுமிழந்து பஞ்சணைமேல் புரண்டு தம் துன்பத்தை இறைவரல்லது வேறு யார் அறிவரென்று சொல்லி வருந்தினார். அன்றிரவு திருவாரூர்ப் பெருமான் பரவையாருக்கும் சுந்தரமூர்த்திக்கும் விவாகம் செய்து வைக்கும்படி திருவாரூர் அடியார்கட்குக் கட்டளையிட்டார். மறுநாட் காலையில் அடியார்கள் அப்படியே இருவருக்கும் முறைப்படி விவாகம் செய்து வைத்தார்கள்.

இதனால் திருவருள் பெற்ற பெரியோரும் முற்பிறப்பில் செய்த வினையின் பயனை நுகர்ந்து அனுபவிப்பர் என்பது காணலாம்.

நம்பியாரூரர் பரவையாருடன் சிற்றின்பத்தைப் பேரின்பமாக அனுபவித்துக்கொண்டு தம்மை அடிமை கொண்ட சிவபெருமான்மீது தமிழ்த்தொடைமாலை பல சாத்தி இனிதிருந்தார்.

ஒருநாள் இந்திரச் செல்வத்திலும் மேம்பட்ட பட்டாடை வாசனைத் திரவியம் சாந்து, விபூதி, உருத்திராட்சம் முதலியவைகளை அணிந்து, வைதிகச் செல்வமும் இராச செல்வமும் ஒருமித்து விளங்கத் தமது பரிசனங்களோடும், நான்மறை முனிவரோடும் திருக்கோயிலுக்கு வந்தார். அப்போது தேவாசிரியன் மண்டபத்தில் அளவிறந்த அடியார்கள் கூடியிருப்பதைக் கண்டார். அவ்வடியார்கட்குத் தாம் எப்போது அடியவனாவேன் என்று எண்ணித் திருக்கோயிலுட் சென்றார். சிவபெருமான் சுந்தரமூர்த்திக்குக் காட்சி கொடுத்தருளினார்.

சுந்தரமூர்த்தி நாயனார் வணங்க இறைவன் அவர் விரும்பிய அடியார்க்கடியவராகும் வரத்தைக் கொடுத்தார். அடியார்களது பரம்பரையான தொண்டையும் அவர்கள் பெருமையையும் அவருக்குத் திருவருளினால் உணரச் செய்தார். அவர்களைப் பணிந்து "நிறைசொன் மாலை" பாடுக என்றருளிச் செய்தார். அப்போது நம்பியாரூரர் "இன்னவாறின்ன பண்பென்றேத்துகேன்? தேவரீரே அடியெடுத்துக் கொடுத்தருளவேண்டும்" என்று வணங்கினார். சிவபெருமான் உலகத்தவர் உய்யுமாறு "தில்லைவாழந்தணர் தமடியார்க்குமடியேன்" என்று அடியெடுத்துக் கொடுத்து மறைந்தருளினார்.

> தொல்லைமால் வரைபயந்த தூயாடன் றிருப்பாக
> னல்லநீர் துலகுய்ய மறையளித்த திருவாக்காற்
> றில்லைவா ழந்தணர்த மடியார்க்கு மடியேனென்
> றெல்லையில்வண் புகழாரை யெடுத்திசைப்பா மொழியென்றார்.

சிவபெருமான் மறைந்தருள, நம்பியாரூரர் தேவாசிரியன் மண்டபத்தை அடைந்து அடியார் கூட்டத்தைப் பலமுறை வலம்வந்து அழியாவரத்தார் எல்லார்க்கும் வெவ்வேருக 'அடியேன் அடியேன்' என்று வைத்துத் திருத்தொண்டத் தொகையைப் பாடி, அடியார் கூட்டத்தை வணங்கி, அவ்வடியார் மனமகிழ, அவர் கூட்டத்தின் நடுவில்சென்று வீற்றிருந்தார்.

[திருத்தொண்டத்தொகை—பண் - கொல்லிக்கௌவாணம்]

திருச்சிற்றம்பலம்

தில்லைவா ழந்தணர்த மடியார்க்கு மடியேன்
திருநீலகண்டத்துக் குயவனூர்க் கடியேன்
இல்லையே யென்னாத வியற்பகைக்கு மடியேன்
இளையான்றன் குடிமாற னடியார்க்கு மடியேன்
வெல்லுமா மிகவல்ல மெய்ப்பொருளுக் கடியேன்
விரிபொழில்சூழ் குன்றையார் விறன்மிண்டற் கடியேன்
அல்லிமென் முல்லையந்தா ரமர்நீதிக் கடியேன்
ஆரூர னாரூரி லம்மானுக் காளே.

மன்னியசீர் மறைநாவ னின்றவூர்ப் பூசல்
வரிவளையாண் மானிக்கு நேசனுக்கு மடியேன்
தென்னவனா யுலகாண்ட செங்கணார்க் கடியேன்
திருநீல கண்டத்துப் பாணனார்க் கடியேன்
என்னவனா மரனடியே யடைந்திட்ட சடைய
னிசைஞானி காதலன் திருநாவ லூர்க்கோன்
அன்னவனா மாரூர னடிமைகேட்டு வப்பா
ராரூரி லம்மானுக் கன்ப ராவாரே

திருச்சிற்றம்பலம்.

நம்பியாரூரர் திருத்தொண்டத்தொகையைப் பாடித் துதித்துத் திருவாரூரிலே தியாகராச மூர்த்தியை முப்பொழுதும் வணங்கி இன்புற்றிருந்தார்.

திருத்தொண்டத் தொகையருளித் திருநாவ லூராளி
கருத்தொன்று காதலினாற் கனகமதிற் றிருவாரூர்
ஒருத்தர்கழன் முப்பொழுது முருகியவன் போடுபணிந்து
பெருத்தெழுமெய் யன்பினாற் பிரியாதங் குறையுநாள்.

—பெரியபுராணம்.

அந்நாளில், குண்டையூர்க்கிழவர் என்னும் ஓர் வேளாளர் வன்றொண்டர்க்கு அமுதாகச் செந்நெல், பருப்பு, சர்க்கரை முதலிய பதார்த்தங்களைப் பரவையார் மாளிகைக்கு நாள்தோறும் தவறாது படி சமைத்துவந்தார். அக்காலத்திலே மழைபெய்யாமல் நிலவளம் சுருங்கியது. சுந்தரமூர்த்திக்குப் படி அனுப்ப நெல் குறைந்தது. குண்டையூர்க்கிழவர் மனம் வருந்திப் போசனம் செய்யாது ஒரு இரவு நித்திரை செய்தார். அப்போது சிவபெருமான் அவருக்குக் கனவில் தோன்றி "நம்பியாரூரனுக்கு அனுப்ப நெல்லைத் தந்தனம்" என்று கூறிக் குண்டையூரெங்கும் நெல்லை நிரம்பச் செய்தனர். மறு நாட்காலையில் குண்டையூர்க்கிழவர் நெல்மலையைக்கண்டு அதிசயித்து இறைவன் திருவருளைப் போற்றிப் பரவையார் கொழுநரைத் தொழச் சென்றார். அப்போது சுந்தரமூர்த்தி நாயனாரும் சிவபெருமான் ஏவியபடி எதிரே வந்தார். குண்டையூர்க்கிழவர் சுந்தரமூர்த்திகளை விழுந்து வணங்கி எழுந்து நின்று "நெடுநாளாக அடியேன் செய்து வந்த திருத்தொண்டுக்கு முட்டுவந்தபோது சிவபெருமான் நெல் மலையைக்கொடுத்தார். அந்த நெல்மலை மனிதரால் எடுக்கத்தக்க அளவினதன்று. யான் செய்யத்தக்க பணியுமன்று" என்று கூறி வணங்கினார். அதனைக் கேட்ட வன்றொண்டர் "உமக்குச் சிவபெருமான் நெல் தந்தருளியது என்ன வியப்பாயிருக்கிறது!" என்று இனியனமொழிந்து குண்டையூர்க்குச் சென்றார். அந்த இடத்தில் ஆகாயம் வரை உயர்ந்திருக்கும் நெல் மலையைக் கண்டு இறைவனை வணங்கி அதிசயித்தார். அந்நெல் மலையைப் பரவையார் மனைக்கு எடுத்துக்கொண்டு செல்ல ஆட்களையும் சந்திரசேகரரே தந்தருள வேண்டுமென்று அப்பதியிலுள்ள திருக்கோளிலி என்னும் சேத்திரத்திற்குச் சென்று மிக்க அன்போடு வணங்கித் திருப்பதிகம் பாடினார்.

[திருக்கோளிலி—பண் - நட்டராகம்)

திருச்சிற்றம்பலம்

நீள நினைந்தடியே னுமை நித்தலுங் கைதொழுவேன்
வாளன கண்மடவா ளவள் வாடி வருந்தாமே

கோளிலியெம் பெருமான் குண்டையூர்ச் சில நெல்லுப் பெற்றேன்
ஆளிலை யெம்பெருமானவை யட்டித் தரப்பணியே

கொல்லை வளம்புறவிற் றிருக் கோளிலி மேயவனை
நல்லவர் தாம்பரவுந் திரு நாவலவூர னவன்
நெல்லிட வாட்கள் வேண்டிநினைந் தேத்திய பத்தும்வல்லார்
அல்லல் களைந்துலகி னண்டர்வா னுல காள்பவரே.

திருச்சிற்றம்பலம்

அப்போது பெருமான் அருளால் ஆகாயத்தினின்றும் ஓர் அசரீரி வாக்குக் கிளம்பியது: "இன்றிரவு பரவை மனையன்றித் திருவாரூர் நிறைய நமது பூதங்கள் நெல் மலையைக் கொண்டுவந்து சேர்க்கும்" என்பதைக் கேட்டு மகிழ்ந்து நிலத்தில் வீழ்ந்து பரவைகேள்வன் வணங்கினார். பின்னர், பக்கத்திலுள்ள பிற தலங்களையும் வணங்கித் திருவாரூருக்குத் திரும்பிவந்து பூங்கோயிலில் எழுந்தருளியிருக்கும் பழம்பொருளாகிய இறைவரை வணங்கிப் பரவையார் மாளிகையிற் சென்று திங்களூரில் நடந்த அற்புதத்தைப் பரவையாருக்குச் சொல்லி மகிழ்ந்திருந்தார். அன்றிரவு சிவபூதங்கள் குண்டையூரிலிருந்து நெல்லை வாரிக்கொண்டுவந்து பரவையார் மாளிகையிலும் திருவாரூர் எங்கும் நிரப்பின. இச் செயலைக்கண்ட எல்லோரும் அதிசயித்தனர். அன்று விடியற்காலத்தில் திருவாரூரில் வாழ்வோர் "இவ்வளவு நெல் எந்த உலகத்தில் விளைந்தது!" என அதிசயித்தனர். நம்பியாரூரரால் பரவையாருக்குக் கொடுக்கப்பட்டது என்றார்கள். பரவையார் அவ்வூரவர்கள் யாவரும் அவரவர் வீட்டு எல்லைக்குளிருக்கும் நெல்லை எடுத்துக்கொள்ளலாம் என்று வென்றி முரசறைவித்தார். எல்லோரும் தங்கள் வீடுகள் நிறைய நெல்லை எடுத்துச் சேமித்து வைத்து மகிழ்ந்தனர்.

ஐம்பூதங்களினின்றும் ஆறுமாதத்தில் விளையக்கூடிய நெல்லை ஆறு விநாடி நேரத்தில் உண்டாக்கக்கூடிய ஆற்றல் இறைவர்க்குண்டு என்பது நம்பத்தக்கது. குண்டையூர்க் கிழவருடைய பேரன்பைத் தெரிவிக்கும்பொருட்டு இறைவர் அவருக்கு நெல் மலையைக் கொடுத்தார். நம்பியாரூரர் தவவலிமையைத் திருவாரூரிலுள்ளவர்கள்

அறியும் வண்ணம் இறைவர் திருவாரூர் முழுவதும் நெற்குவிய லாக்கினூர். வன்றொண்டர் தவப்பேற்றினுல் திருவாரூரிலுள்ள எல் லோரும் நெல்லைப் பெற்றூர்கள்; "நல்லா ரொருவருளரேல் அவர் பொருட் டெல்லார்க்கும் பெய்யு மழை" என்றபடி.

நம்பியாரூரர் செல்வம் மிகுந்த திருவாரூரிலிருக்கும் போது கோட்புலி நாயனூர் அங்குச் சென்று தமது ஊரா கிய நாட்டியத்தான்குடிக்கு எழுந்தருளும்படி அவரைக் குறையிரந்தார். நம்பியாரூரர் அவர் வேண்டுகோளுக்கு இசைந்து திருவாரூரிலிருந்து புறப்பட்டுப் பல பதிகளையும் வணங்கி நாட்டியத்தான்குடியை வந்தணைந்தார். கோட் புலிநாயனூர் தமது ஊரை அலங்கரித்துச் சுந்தரமூர்த்தி நாயனூரைச் சிறப்புடன் எதிர்கொண்டழைத்துத் தமது மாளிகையில் மணிபொற்றவிசிலில் எழுந்தருளச்செய்து அவரது திருவடிகளை முறைப்படி பூசித்தார். கோட்புலி நாயனூர் நம்பியாரூரரைத் தமது மாளிகையில் திருவமுது செய்வித்துப் போற்றினூர். பின்னர், தமது புதல்விகளாகிய சிங்கடியார், வனப்பகையார் ஆகிய இருவரையும் நம்பி யாரூரர் திருவடிகளை வணங்கச் செய்தார். "யான் பெற் றெடுத்த பெண்களிருவரையும் அடிமைகொண்டு அவர்கள் தேவரீரின் திருவடிகளை வணங்கி உய்யும்படி கருணைபுரிய வேண்டும்" என்று பிரார்த்தித்தார். அவர்கள் இருவரை யும் மக்களாகப் பரவை கொழுநனூர் பாவித்துத் தமது மடியின்மேல் வைத்து உச்சிமீது கண்ணீர் விழ மோந்து அவர்களுக்கு வேண்டியவைகளைக் கொடுத்தார். பின்னர், திருக்கோயிலுக்குச் சென்று வணங்கித் தாம் "பூணு ணுவதொர்" என்று எடுத்த திருப்பதிகத்தில் கோட்புலி நாயனூரைச் சிறப்பித்துப் பாடினூர். திருக்கடைக்காப்பில் சிங்கடியாருக்குத் தம்மைப் பிதாவாகக் கருதியபடியால் தம்மைச் 'சிங்கடியப்பன்' என்று வைத்துப் பாடி முடித் தனர்.

திருநாட்டியத்தான்குடி பண். தக்கராகம்

திருச்சிற்றம்பலம்

பூணு ணுவதொ ரரவங்கண் டஞ்சேன்
புறங்காட் டாடல்கண் டிகழேன்

பேணீ ராகிலும் பெருமையை யுணர்வேன்
பிறவே ளாகிலு மறவேன்
காணீ ராகிலுங் காண்பனென் மனத்தாற்
கருதீராகிலுங் கருதி
நானே லும்மடி பாடுத லொழியே
னட்டியத் தான்குடி நம்பீ.

கூடா மன்னரைக் கூட்டத்து வென்ற
கொடிறன் கோட்புலி சென்னி
நாடார் தொல்புகழ் நாட்டியத் தான்குடி
நம்பியை நாளு மறவாச்
சேடார் பூங்குழற் சிங்கடி யப்பன்
றிருவா ரூர னுரைத்த
பாடீ ராகிலும் பாடுமின் றொண்டீர்
பாடநும் பாவம்பற் றறுமே.

திருச்சிற்றம்பலம்

முன் காலத்தில் அடியார்களுக்குள் சாதி கட்டுப்பாடு இருந்த தில்லை. சுந்தரமூர்த்திநாயனார் ஆதிசைவ மறையவர்; கோட்புலி நாயனாரோ வேளாளர். ஆனால் கோட்புலியார் மாளிகையில் நம்பியா ரூரர் விருந்துண்டார். கோட்புலி நாயனார் அளவிறந்த அடியார் பத்தியுடையவர் என்பது அவர் தமது இரண்டு பெண்களையும் நம்பி யாரூரருக்குக் கொடுக்கக் கருதினமையால் அறியப்படும். நம்பி யாரூரரும் கயிலையில் அனிந்திதை, கமலினி என்னும் பெண்கள் காரணமாய் நேர்ந்த ஊழ்வினையை அனுபவிக்கப் பூமியில் பிறந்தவர். மற்றைப் பெண்களிடத்தில் தண்ணருள் உடையவர் என்பது கோட்புலி நாயனாருடைய புதல்வியரைத் தமது பிள்ளைகளாய் மதித் ததினால் தெளிவுறும். 'சிங்கடியப்பன் வனப்பகையப்பன்' என்று தம்மை வைத்துப் பாடினமையால் அந்தப் பெண்களை விவாகம் செய்யச் சிறிதும் கருதினாரல்லர்.

அங்கிருந்து புறப்பட்டுத் திருவலிவலம் என்னும் சேத்திரத்தைச் சேர்ந்து இறைஞ்சி "சம்பந்தர் நாவுக்கரசர் பாட்டுகந்தீர்" என்று தம் திருப்பதிகத்தில் வைத்துப் பாடித் துதித்துத் திருவாரூர் சென்று பூங்கோயிற் பெரு மான் கழல் வணங்கிப் பரவையார் மாளிகையில் எழுந் தருளியிருந்தார்.

திருவலிவலம்—பண்—தக்கேசி

திருச்சிற்றம்பலம்

ஊனங்கத் துயிர்ப்பா யுலகெல்லா மோங்காரத்
துருவாகி நின்றானை
வானங்கத் தவர்க்கும் மளப்பரிய வள்ளலை
யடியார்க டம்முள்ளத்
தேனங்கத் தமுதாகி யுள்ளூறுந் தேசனைத்
திளைத்தற் கினியானை
மானங்கைத் தலத்தேந்த வல்லானை வலிவலந்
தனில்வந்து கண்டேனே.

நல்லிசைஞான சம்பந்தனு நாவினுக் கரசரும்
பாடிய நற்றமிழ் மாலை
சொல்லியவே சொல்லி யேத்துகப்பானைத்
தொண்டனே னறியாமை யறிந்து
கல்லியன் மனத்தைக் கசிவித்துக் கழலடி
காட்டியென் களைகளை யறுக்கும்
வல்லியல் வானவர் வணங்க நின்றானை
வலிவலந் தனில்வந்து கண்டேனே.

கலிவலங் கெடவாரழலோம் புங்கற்ற நான்
மறை முற்றன லோம்பும்
வலிவலந் தனில்வந்து கண்டடியேன் மன்னு
நாவலா ரூரன்வன் றொண்ட
னொலிகொண் வின்னிசைச் செந்தமிழ் பத்து
முள்ளத்தாலுகந் தேத்தவல் லார்போய்
மெலிவில் வானுலகத் தவரேத்த விரும்பி
விண்ணுல கெய்துவர் தாமே.

திருச்சிற்றம்பலம்

நாயனார் திருவாரூரிலே இருக்கும் நாளில் பங்குனி உத்திரவிழாவுக்கு வருகின்ற அடியார்கட்கு வேண்டியவை களைக் குறைவில்லாமல் பரவையார் கொடுப்பதற்காகப் போதிய பொன்னைக் கொண்டுவருவதற்கு நினைந்து திருப் புகலூர் இறைவரை வணங்கச் சென்றார். திருப்புகலூரில் வந்து சுவாமியை வீழ்ந்திறைஞ்சி எழுந்து பதிக இசை பாடித் துதித்துத் தங்கருத்தை முடிக்கும்படி விண்ணப் பஞ்செய்து புறம்போந்து ஒரு திருமடத்தின் முற்றத்தில் அடியார் கூட்டத்தில் இருந்தார். வன்றொண்டருக்குப்

பெருமான் அருளால் தூக்கம் வருதலும், திருப்பணிக்காக இருந்த சில செங்கற்களை எடுப்பித்துத் தலைக்கு உயரமாக அடுக்கி அவற்றின்மேல் உத்தரீயப்பட்டை விரித்துத் துயின்றார். அவரோடுகூடியிருந்த அடியார்களும் நித்திரை செய்தனர். பரவை கேள்வனார் விழித்தெழுந்தபோது சிவபெருமான் திருவருளால் செங்கற்கள் • நல்ல பசும் பொற் கற்களாயிருக்கக் கண்டார். செந்தாமரை மலர் போலும் இரண்டு கரங்களையும் சிரசிற் குவித்துக்கொண்டு திருக்கோயிலுட்சென்று அடங்காத பேரன்புடன் "தம் மையே புகழ்ந்து" என்றெடுத்து மதுரமொழி மாலைப் பதிகம் பாடினார்.

திருப்புகலூர்—பண் - கொல்லி

திருச்சிற்றம்பலம

தம்மையே புகழ்ந்திச்சை பேசினுஞ்
சார்வினுந் தொண்டர் தருகிலாப்
பொய்ம்மை யாளரைப் பாடாதேயெந்தை
புகலூர் பாடுமின் புலவீர்காள்
இம்மையே தருஞ்சோறுங் கூறையு
மேத்தலா மிடர் கெடலுமாம்
அம்மையே சிவலோக மாள்வதற்
கியாது மையுற வில்லையே.

செறுவினிற் செழுங் கமல மோங்கு
தென்புகலூர் மேவிய செல்வனை
நறவம்பூம் பொழில் நாவலூரன்
வனப்பகை யப்பன் சடையன்றன்
சிறுவன் வன்றொண்ட னூரன் பாடிய
பாடல்பத் திவைவல்லவர்
அறவனா ரடிசென்று சேர்வதற்
கியாது மையுற வில்லையே.

திருச்சிற்றம்பலம்

பின்னர், பொற்குவியல்களை எடுத்துக்கொண்டு திருப் பனையூருக்குச் சென்றார். அங்கே அம்பலக்கூத்தன் காட்சிகொடுக்க வணங்கித் திருப்பதிகம் பாடித் துதித் தனர். பொற்குவியல்களை ஓர் ஆளிடம் பரவையார் மாளி

கைக்கு அனுப்பிவிட்டுத் திருக்கோயில்சென்று வணங்கிப் பரவை மாளிகையில் போயிருந்தார்.

திருப்புகலூரில் ஒரு பொது மடத்தில் போய்ச் செங்கற்களைத் தலையணையாகக்கொண்டு தலைவைத்து நித்திரை செய்தது நம்பியாரூரரது துறவு நிலையைக் காட்டுகின்றது. முன்னரும் திருவதிகையின் பக்கத்திலுள்ள பொது மடமாகிய சித்தவட மடத்தில் தங்கியதும் நோக்கத்தக்கது. சிவபெருமான் நம்பியாரூரருக்குத் தோழனுனபடியால் தோழமையைக் காட்டும் ஓர் திருவிளையாட்டாகச் செங்கற்களைப் பொன்னுக்கினர்போலும். இறைவன் தமது அன்பர்களுக்கு அவரவர் வேண்டுவதை ஈந்தருளுவர் என்பது இதனுல் புலப்படும்.

பின்னர், திருவாரூரிலிருந்து புறப்பட்டுத் திருநன்னிலம் சென்று இறைவரை வணங்கி, "தண்ணியல் வெம்மையினன்" என்னும் பாமாலை பாடினர். அத்திருப்பதிகத்தின் ஒன்பதாம் பாசுரத்தில் அருச்சுனனையும் திருக்கடைக்காப்பில் கோச்செங்கட்சோழ நாயனுரையும் சிறப்பித்துப் பாடினர்

திருநன்னிலத்துப் பெருங்கோயில்—பண் - பஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

தண்ணியல் வெம்மையினன் றலையிற்கடை தோறும்பலி
பண்ணியன் மென்மொழியா ரிடக்கொண்டுழல் பண்டரங்கன்
புண்ணிய நான்மறையோர் முறையாலடி போற்றிசைப்ப
நண்ணிய நன்னிலத்துப் பெருங்கோயி னயந்தவனே.

கமர்பயில் வெஞ்சுரத்துக் கடுங்கேழற்பின் கானவனாய்
அமர்பயில்வெய்தி யருச்சுன னுக்கருள் செய்தபிரான்
தமர்பயி றண்விழவிற் றகுசைவர் தவத்தின்மிக்க
நமர்பயி னன்னிலத்துப் பெருங்கோயி னயந்தானே.

கோடுயர்வெங் களிற்றுத்திகழ் கோச்செங்கணன் செய்கோயில்
நாடிய நன்னிலத்துப் பெருங்கோயி னயந்தவனைச்
சேடியல் சிங்கிதந்தை சடையன் றிருவாரூரன்
பாடிய பத்தும்வல்லார் புகுவார்பர லோகத்துளே.

திருச்சிற்றம்பலம்

அங்கிருந்து திருவீழிமிழலைக்குச் செல்ல, அத்தலத்து அந்தணர் நடைப்பந்தலிட்டு மிகவும் அலங்காரத்துடன் நம்பியாரூரரை எதிர்கொள்ள, அவரும் மனமகிழ்ச்சி

யுடன் "வாசியறிந்து காசளிக்கவல்ல" இறைவரை வணங்கிப் பாமாலை சாத்தித் திருவாஞ்சியம், அரிசிற் கரைப்புத்தூர் முதலிய தலங்களை வணங்கினர். அரிசிற் கரைப் புத்தூரில் புகழ்த்துணை நாயனாருக்குச் சிவபெருமான் திருவருள் புரிந்த திறத்தைச் சிறப்பித்துப் பாடினர்.

அகத்தடிமைசெய்யு மந்தணன்றானரிசிற்புனல்
கொண்டுவந் தாட்டுகின்றான்
மிகத்தளர்வெய்திக்குடத்தையு நும்முடிமேல்
விழுத்திட்டு நடுங்குதலும்
வகுத்தவனுக்கு நித்தற்படியும் வருமென்றொரு
காசினை நின்றநன்றிப்
புகழ்த்துணைகைப் புகச்செய்துகந்தீர்
பொழிலார்திருப்புத்தூர்ப் புனிதனீரே.

பின்னர், திருவாடுதுறையை அடைந்து வணங்கி "மறையவன்" என்றெடுத்துக் கோச்செங்கட்சோழ நாயனாரின் பிறப்பைச் சிறப்பித்துப் பாடித் துதித்தனர்.

திருவாவடுதுறை—பண் - தக்கேசி

திருச்சிற்றம்பலம்

மறையவ னொருமாணி வந்தடையவார
மாயவ னாருயிர் நிறுத்தக்
கறைகொள்வேலுடைக் காலனைக்காலாற்
கடந்தகாரணங் கண்டுகண் டடியேன்
இறைவனெம் பெருமானென் றெப்போது
மேத்தியேத்தி நின்றஞ்சலி செய்துன்
அறைகொள் சேவடிக் கன்பொடு மடைந்தே
னாவடு துறையாதி யெம்மானே.

தெருண்டவாயிடை நூல்கொண்டுசிலந்தி
சித்திரப் பத்தர் சிக்கென வியற்றச்
சுருண்ட செஞ்சடை யாயதுதன்னைச்
சோழனாக்கிய தொடர்ச்சிகண் டடியேன்
புரண்டுவீழ்ந்துநின் பொன்மலர்ப்பாதம்
போற்றி போற்றியென் றன்பொடு புலம்பி
அருண்டென் மேல்வினைக் கஞ்சிவந் தடைந்தே
னாவடுதுறையாதி யெம்மானே.

ஒக்கமுப்புர மோங்கெரிதூவ வுன்னை
யுன்னிய மூவர்நின் சரணம்
புக்கு மற்றவர் பொன்னுலகாளப்
புகழினு லருளீந் தமை யறிந்து
மிக்கநின் கழலே தொழுத ரற்றி
வேதியா வாதிமூர்த்திநின் னரையில்
அக்கணிந்த வெம்மா னுனையடைந்தே
னவடுதுறை யாதி யெம்மானே.

திருச்சிற்றம்பலம்

பொன்னி ஆற்றின் தென்கரையிலுள்ள பல பதிகளை யும் அடியார்களோடு சென்று வணங்கித் திருவிடை மருதூர், திருநாகேச்சரம், சிவபுரம் முதலிய பதிகளை வணங்கிப் பாடித் திருக்கலயநல்லூர் வந்தணைந்தார். அங்கே திருக்கலயநல்லூர்ப் பெருமானைப் பரவித் தொழுது "குரும்பைமுலை மலர்க்குழலி" என்னும் திருப்பதிகத்தில் பல புராணக் கருத்துகளை வைத்துச் சிறப்பித்துப் பாடினர்.

திருக்கலயநல்லூர்—பண் – தக்கராகம்

திருச்சிற்றம்பலம்

குரும்பைமுலை மலர்க்குழலி கொண்டதவங் கண்டு
குறிப்பினொடு சென்றவடன் குணத்தினைநன் கறிந்து
விரும்பும்வரங் கொடுத்தவளை வேட்டருளிச் செய்த
விண்ணவர்கோன் கண்ணுதலோன் மேவியவூர் வினவில்
அரும்பருகே சுரும்பருவ வறுபதம்பண் பாட
வணிமயில்கண டாடுமணிபொழில்சூ ழயலின்
கரும்பருகே கருங்குவளை கண்வளருங் கழனிக்
கமலங்கண் முகமலருங் கலயநல்லூர் காணே.

இண்டைமலர் கொண்டுமண லிலிங்கமது வியற்றி
யினத்தாவின் பாலாட்ட விடறியதா தையைத்தாள்
துண்டமிடு சண்டியடி யண்டர்தொழு தேத்தத்
தொடர்ந்தவனைப் பணிகொண்ட விடங்கனதூர் வினவில்
மண்டபமுங் கோபுரமு மாளிகைசூ ளிகையும்
மறையொலியும் விழவொலியு மறுகுநிறை வெய்திக்
கண்டவர்கண் மனங்கவரும் புண்டரிகப் பொய்கைக்
காரிகையார் குடைந்தாடுங் கலயநல்லூர் காணே.

தண்புனலும் வண்மதியுந் தாங்கியசெஞ் சடையன்
　　றமரையோன் றலைகலனுக் காமரமுன் பாடி
உண்பலிகொண் டுழல்பரம னுறையுமூர் நிறைநீ
　　ரொழுகுபுன லரிசிலின்றென் கலயநல்லூ ரதனை
நண்புடைய நன்சடைய னிசைஞானி சிறுவ
　　னவலர்கோ னாரூ ரனவினயந் துரைசெய்
பண்பயிலும் பத்துமிவை பத்திசெய்து பாட
　　வல்லவர்க ளல்லலொடு பாவமிலர் தாமே.

திருச்சிற்றம்பலம்.

இண்டைமலர் என்னும் பாசுரத்தில் சண்டேசுர நாயனாரைச் சிறப்பித்துப் பாடினது காண்க. அப்ப மூர்த்தி, சம்பந்த மூர்த்திகள் இருவரும் சண்டேசுர நாயனாரைத்தொழுது சிறப்பித்துப் பாடினர். இப்பதிகத்தின் திருக்கடைக்காப்பில் சுந்தரமூர்த்தி நாயனார் தம்மைச் "சடையன் - இசை ஞானி சிறுவன்" என்றும், "நாவலர் கோன்" என்றும், "ஆரூரன்" என்றும் வைத்துப் பாடியதும் அவர் சரித்திரத்துக்கு அகச்சான்றுகளாகும்.

அங்கு நின்று திருக்குடமூக்கு (கும்பகோணம்), திருவலஞ்சுழி, திருநல்லூர், திருச்சோற்றுத்துறை, திருக்கண்டியூர், திருவையாறு, திருப்பூந்துருத்தி முதலிய தலங்களை வணங்கிப் பாமாலை சாத்தித் துதித்து திருவலம்பொழில் என்னும் சேத்திரத்தில் ஒரு இரவு பள்ளிகொண்டார். அப்போது சிவபெருமான் கனவில் தோன்றி "மழபாடிக்குவர மறந்தாயோ" என்று கூறி, இளமைத் திருக்கோலத்தைக் காட்டியருளினார். நம்பியாரூரர் விழித்தெழுந்து பொன்னியாற்றின் வடகரையிலேறித் திருமழபாடிக்குச் சென்று அன்பர்களுடன் திருக்கோயிலுட் புகுந்து இறைவன் திருவருளைத் துதித்து வணங்கி "பொன்னார் மேனியனே" என்னும் திருப்பதிகம் பாடினார். ஒவ்வொரு திருப்பாசுரத்தின் இறுதியிலும் "அன்னே யுன்னையல்லால் யான் ஆரை நினைக்கேனே" என்று பாடினர். சிலநாள் அப்பதியில் வைகினார்.

மழபாடியினில் வருதற்கு நினைக்கமறந்தா யோவென்று
குழகாகியதங் கோலமெதிர் காட்டியருளக் குறித்துணர்ந்து
நிழலார்சோலைக் கரைப்பொன்னி வடபாலேறி நெடுமாட
வழகார்வீதி மழபாடி யணைந்தார்நம்பி யாரூரர்

அணைந்துதிருக்கோ புரமிறைஞ்சி யன்பர்சூழ வுடன்புகுந்து
பணங்கொளரவ மணிந்தார்முன் பணிந்துவீழ்ந்து பரங்கருணைக்
குணங்கொளருளின் றிறம்போற்றிக் கொண்டபுளகத் துடனுருகிப்
புணர்ந்தவிசையாற் றிருப்பதிகம் பொன்னார்மேனி யென்றெடுத்து

அன்னேயுன்னை யல்லாலியா னாரைநினைக்கே னெனவேத்தித்
தன்னேரில்லாப் பதிகமலர் சாத்தித்தொழுது புறம்பணைந்து
மன்னும்பதியிற் சிலநாள்கள் வைகித்தொண்ட ருடன்மகிழ்ந்து
பொன்னிக்கரையி னிருமருங்கும் பணிந்துமேல்பாற் போதுவார்.

—பெரியபுராணம்.

திருமழபாடி—பண் - நட்டராகம்

திருச்சிற்றம்பலம்.

பொன்னார் மேனியனே புலித் தோலை யரைக்கசைத்து
மின்னார்செஞ்சடைமேல் மிளிர் கொன்றையணிந்தவனே
மன்னேமாமணியே மழபாடியுள்மாணிக்கமே
யன்னேயுன்னையல்லா லினியாரைநினைக்கேனே.

ஏரார்முப்புரமு மெரியச்சிலைதொட்டவனை
வாரார்கொங்கையுடன் மழபாடியுள்மேயவனைச்
சீரார்நாவலர்கோ னாரூரனுரைத்ததமிழ்
பாரோரேத்தவல்லார் பரலோகத்திருப்பாரே.

திருச்சிற்றம்பலம்.

பின்னர், பொன்னி யாற்றின் இரண்டு கரையிலு முள்ள தலங்களை வணங்கி மேற்குத்திசையை நோக்கித் திருவானைக்காவுக்குச் சென்றார். அங்கே இறைவர் சந்நிதியில் ஆர்வம் பெருக விழுந்து எழுந்து ஆனந்தவெள்ளம் பொழிய விம்மி வணக்கஞ் செய்தார். உறையூர்ச் சோழனுக்குச் சிவபெருமான் அருளிச்செய்த திறத்தைத் திருப்பதிகத்தில் வைத்துப் பாடியருளினார். ஒவ்வொரு திருப்பாட்டின் இறுதியிலும் "எம்மையும் ஆளுடையாரே" என்று வைத்துப் பாடினர்.

வளவர்பெருமான் றிருவாரஞ் சாத்திக்கொண்டு வரும்பொன்னிக்
கிளருந்திரைநீர் மூழ்குதலும் வழுவிப்போகக் கேதமுற
வளவிறிருமஞ் சனக்குடத்துள துகாட்ட வணிந்தருளித்
தளருமவனுக் கருள்புரிந்த தன்மைசிறக்கச் சாற்றினார்.

—பெரியபுராணம்.

திருவானைக்கா—பண் – காந்தாரம்.

மறைக ளாயின நான்கு மற்றுள பொருள்களு மெல்லாந்
துறையுந் தோத்திரத் திறையுந் தொன்மையு நன்மையுமாய
வறையும் பூம்புன லானைக் காவுடை யாதியை நாளு
மிறைவ னென்றடி சேர்வா ரெம்மையு மாளுடையாரே.

தார மாகிய பொன்னித் தண்டுறை யாடி விழுத்தும்
நீரி னின்றடி போற்றி நின்மலா கொள்ளென வாங்கே
யாரங் கொண்ட வெம்மானைக் காவுடை யாதியைநாளு
மீர முள்ளவர் நாளு மெம்மையு மாளுடை யாரே.

ஆழி யார்க்கரு ளானைக் காவுடை யாதிபொன் னடியி
னீழலே சரணாக நின்றருள் கூர நினைந்து
வாழ வல்லவன் றொண்டன் வண்டமிழ் மாலை வல்லார்போ
யேழுமா பிறப்பற்று வெம்மையு மாளுடை யாரே.

திருச்சிற்றம்பலம்.

உறையூரிலிருந்து அரசாண்ட சோழ அரசர்களில் ஒருவர் தன் தேவியுடன் காவிரிநதியில் நீராடச்சென்றார். அந்த நேரத்தில் மனைவியின் கழுத்திலிருந்த முத்துமாலை மிகவும் பிரகாசமாயிருப்பதைக்கண்டு அதைச் சிவபெருமானுக்குச் சாத்துவோமென்று எண்ணினார். தேவி நதியில் நீராடிக் கரையேறியபோது முத்து மாலை அலைகளினூ லள்ளுண்டு போவதைக் கண்டு மிகவும் வருந்தித் திருக்கோயில் சென்றார். அங்கு நின்று தொழும்போது சுவாமியின் திருமுடியில் அம்மாலையானது கிடந்து பிரகாசிப்பதைக் கண்டு அரசன் வணங்கிச் சென்றான். அரசனும் தேவியும் நீர் ஆடும்போது நதியில் சென்ற முத்துமாலையானது சிவபெருமானுக்குத் திருமஞ்சனமாட்டற்கு நீர் மொண்ட திருக்குடத்துள் சென்று பூசகர்கள் அபிஷேகஞ் செய்யும்போது சிவபெருமான் திருமுடியிற் றங்கியது. இவ்வரலாறு திருவானைக்காப் புராணத்தில் உள்ளது.

நாயனார் அங்கிருந்து புறப்பட்டுப் பல தலங்களையும் வணங்கித் திருப்பாச்சிலாச்சிராமத்தை வந்தடைந்து திருக்கோபுரத்தைக் கும்பிட்டுத் திருக்கோயிலை வலம்வந்து உள்ளணைந்தார். பெருமானை வணங்கிப் பொன் கொடுக்கும்படி வேண்டினார். இறைவர் பொன் கொடுத்தருளாதிருக்க மனம் நொந்து அங்குள்ள திருத்தொண்டருக்கு முறையிடுவதுபோல ஊனும் உயிரும் உருகும் அன்போடு "இவரே யன்றி வேறு பெருமான் இல்லையோ" என்று இறுதியில் வைத்துத் திருப்பதிகம் எடுத்துப் பாடினார்.

மேலும் திருக்கயிலாய மலையில் சிவபெருமானுக்குத் தொண்டு செய்துகொண்டு அவரை நீங்காதிருந்த தாம் அனிந்திதை, கமலினி என்னும் பெண்கள்மேல் காதல் கொண்டதனால் மானுடப்பிறவி எடுக்க நேர்ந்ததை யுணர்ந்து "வைத்தனன் தனக்கே தலையுமென்னாவும்" என்று வைத்துப் பாடி வணங்கினார்.

நித்தமு நீங்கா நிலைமையினீங்கி
  நிலத்திடைப் புலங்கெழு பிறப்பா
லுய்த்தகாரணத்தை யுணர்ந்து சொரந் தடிமை
  யொருமையா மெழுமையு முணர்த்தி
யெத்தனை யருளாதொழியினும் பிரானை
  ரிவரலா தில்லையே யென்பார்
வைத்தனன் றனக்கே தலையுமென்னாவு
  மெனவழுத் தினார்வழித் தொண்டர்.

—பெரியபுராணம்

திருப்பாச்சிலாச்சிராமம்—பண் - தக்கராகம்

வைத்தனன் றனக்கேதலையு மென்னாவும்
  நெஞ்சமும் வஞ்சமொன்றின்றி
யுய்த்தனன் றனக்கே திருவடிக்கடிமையுரைத்தக்
  காலுவமனே யொக்கும்
பைத்தபாம்பார்த்தோர் கோவணத்தோடுபாச்சிலாச்
  சிராமத் தெம்பரமர்
பித்தரேயொத்தோர் நச்சிலராகிலிவரலா
  தில்லையோ பிரானார்.

ஏசினவல்லவிகழ்ந்தன வல்லவெம்பெருமா
  னென்றெப்போதும்
பாயினபுகழான்பாச்சிலாச் சிராமத்தடிகளை
  யடிதொழப்பன்னாள்
வாயினாற்கூறி மனத்தினானினைவான்
  வனவயனாவ லாரூரன்
பேசினபேச்சைப் பொறாத்திலராகி
  லிவரலாதில்லையோ பிரானார்.

திருச்சிற்றம்பலம்

நம்பியாரூரர் தாம் இறைவரிடம் பொன்னைக் கேட்டபோது பெற்றுக்கொள்ளாமையினால் ஏனையர்போல் புழுங்கினாரல்லர். பெருமான் திருவருளைத் தமது தொண்டினால் அடையவில்லையோ

என்று அச்சம் கொண்டனர் என்பது. வேறு பெருமான் இல்லையோ - மூர்த்தி பேதத்தைக் குறிப்பதாம்.

"ஏசினவல்ல" எனத் திருக்கடைக் காப்பில் வைத்துப் பாடியருளச் சிவபெருமான் பொற்குவியல்களைக் கொடுத்தருளினார். பொன்னைப் பெற்றுத் திருநீலகண்டராகிய இறைவர் கருணையைப் போற்றிச் சிலநாள் அங்கு வைகினர்.

இவ்வகைபரவித் திருக்கடைக்காப்பு
மேசினவல்லவென் றிசைப்ப
மெய்வகைவிரும்பு தம்பெருமானார்
விழுநிதிக் குவையளித்தருள
மைவளர்கண்டர் கருணையேபரவி
வணங்கியப் பதியிடை வைகி
யெவ்வகைமருங்கு மிறைவர்தம் பதிக
ளிறைஞ்சியங் கிருந்தனர் சிலநாள்.

—பெரியபுராணம்

பின்னர் மற்றப் பதிகளையும் வணங்கித் திருப்பைஞ்ஞீலியை எய்தினார். அங்கே சிவபெருமான் தாம் பிச்சை புகும் திருக்கோலத்தைக் காட்டக் கண்டு அன்பின் மிகுதியினால் கண்களினின்று மழைபொழிய இரண்டு கைகளையும் சிரசில் குவியவைத்து "காருலாவிய" என்னும் திருப்பதிகம் பாடினார்.

கண்டவர்கண்கள் காதனீர் வெள்ளம்
பொழிதரக் கைகுவித் திறைஞ்சி
வண்டறைகுழலார் மனங்கவர் பலிக்கு
வருந்திரு வடிவுகண் டவர்கள்
கொண்டதோர்மயலால் வினவுகூற் றாகக்
குலவுசொற் காருலா வியவென்
றண்டர் நாயகரைப் பரவியா ரணிய
விடங்கராமருந்தமிழ் புனைந்தார்.

—பெரியபுராணம்

நாயனார் அப்பால் ஈங்கோய்மலை முதலிய திருப்பதிகளை வணங்கிக் கொங்கதேசத்திலுள்ள பாண்டிக் கொடுமுடிக்குச் சென்றார். உலகத்தார் சிவபெருமானை மறப்பினும் அவர் திருநாமத்தை என்றும் சொல்லவேண்டும்

என்பதை யுணர்த்தும் வண்ணம் "மற்றுப்பற்றெனக் கின்றி" என்னும் நமச்சிவாயத் திருப்பதிகம் பாடிப் போற்றினார்.

திருப்பாண்டிக்கொடுமுடி—பண் - பழம்பஞ்சுரம்

திருச்சிற்றம்பலம்

மற்றுப்பற்றெனக் கின்றிநின் திருப் பாதமேமனம் பாவித்தேன்
பெற்றலும்பிறந் தேனினிப்பிற வாததன்மைவந் தெய்தினேன்
கற்றவர்தொழு தேத்துஞ் சீர்க்கறை யூரிற்பாண்டிக் கொடுமுடி
நற்றவாவுனை நான்மறக்கினுஞ் சொல்லுநா நமச்சிவாயவே

கோணியபிறை சூடியைக்கறையூரிற் பாண்டிக்கொடுமுடி
பேணியபெரு மானைப்பிஞ்ஞகப் பித்தனைப் பிறப் பில்லியைப்
பாணுலாவரி வண்டறை கொன்றைத் தாரனைப் படப் பாம்பரை
நாணனைத் தொண்ட னூரன்சொல்லிவை சொல்லுவார்க் கில்லைத்
துன்பமே

திருச்சிற்றம்பலம்

வினைவசத்தால் சிவநெறியில் நின்று மக்கள் தவறின், ஐந் தெழுத்து அவர்களைச் சிவநெறியில் இழுத்து வைக்கும். அதுபற்றியே "உன்னை நான் மறக்கினும் சொல்லுநா நமச்சிவாயவே" என்றார். பட்டினத்துப் பிள்ளையாரும் உயிர் உடம்பை விட்டு நீங்கும் போது "ஐந்தெழுத்தோதவுங் கற்பியுமே" என்றார்.

அங்கிருந்து புறப்பட்டுப் பல திவ்விய தலங்களையும் தரிசித்துக்கொண்டு மேலைச்சிதம்பரமாகிய திருப்பேரூர் சேர்ந்து திருக்கோயிலுட் சென்றார். அங்கே பேரம்பலத்தில் ஆனந்த தாண்டவம் செய்யும் திருக்கோலத்தைப் பெருமான் காட்டக் கண்டு ஆனந்தக் கண்ணீர் சொரிய இன்ப வெள்ளத்துள் திளைத்துத் தில்லையிற் கூத்தனை வணங்கத் திருவுள்ளங்கொண்டு தில்லைக் கெழுந்தருளினார்.

காண்டலுந்தொழுது வீழ்ந்துடனெழுந்து
கரையிலன் பென்பினை யுருக்கப்
பூண்டவைம் புலனிற் புலப்படாவின்பம்
புணர்ந்துமெய் யுணர்வினிற் பொங்கத்
தாண்டவம் புரியுந் தம்பிரானுரைத்
தலைப்படக் கிடைத்தபின் சைவ
வாண்டகையாருக் கடுத்தவந் நிலைமை
விளைவையா ரளவறிந் துரைப்பார்.

—பெரியபுராணம்

அப்பர் சுவாமிகள் தென்கயிலையாகிய திருக்காளத்தியைத் தரிசித்து வடகயிலையைத் தரிசனம்பண்ண விரும்பிச் சென்றார். நம்பியாரூரரும் மேலைச்சிதம்பரத்தில் திருநடனத்தைக் கண்டவுடன் கீழைச்சிதம்பர தரிசனம் செய்யச் சென்றார்.

வன்றொண்டர் காடுகளையும் ஆறுகளையும் கடந்து போய்ப் பலதலங்களை வணங்கிக்கொண்டு வெஞ்சமாக்கூடல், திருக்கற்குடி, திருவாறைமேற்றளி, திருஇன்னம்பர், திருப்புறம்பயம் முதலிய சேத்திரங்களை வணங்கிப் பாடித் திருக்கூடலையாற்றூரைச் சமீபித்தலும் அங்கே போகாது திருமுதுகுன்றை நோக்கிச் சென்றார். அப்பொழுது சிவபெருமான் ஓர் அந்தணராக அவருக்கு முன் செல்ல, அந்த அந்தணரை வன்றொண்டர் நோக்கி "விருத்தாசலத்துக்குச் செல்லும் வழி யாது?" என்று கேட்டார். அவ்வந்தணர் "இது கூடலையாற்றூருக்குச் செல்லும் வழி" என்று சொல்லி, அவருக்கு வழித்துணையாய்ச் சிறிது தூரம் வந்து மறைந்தருளினர். ஆரூரர் "வடிவுடை மழுவேந்தி" என்று தொடங்கி "அடிகளிவ் வழி போந்த வதிசயமறியேனே" என்னும் திருப்பதிகம் பாடித் திருக்கூடலை யாற்றூருக்குச் சென்று சிவபெருமானை வணங்கினர்.

திருக்கூடலையாற்றூர் - பண் - புறநீர்மை
திருச்சிற்றம்பலம்

வடிவுடை மழுவேந்தி மதகரியுரி போர்த்துப்
பொடியணி திருமேனிப் புரிகுழ லுமையோடும்
கொடியணி நெடுமாடக் கூடலை யாற்றூரி
லடிகளிவ் வழிபோந்த வதிசய மறியேனே

கூடலை யாற்றூரிற் கொடியிடை யவளோடும்
ஆட லுகந்தானை யதிசய மிதுவென்று
நாடிய வின்றமிழா லுவலை யூரன்சொல்
பாடல்கள் பத்தும்வல்லார் தம்வினை பற்றறுமே.

திருச்சிற்றம்பலம்

அங்கிருந்து திருமுதுகுன்றத்துக்குப் போய்த் திருப்பதிகம் பாடித் தமக்குப் பொன் கொடுக்கும்படி சிவபெருமானைப் பணிந்தார்.

திருமுதுகுன்றம் - பண் - கொல்லிக்கௌவாணம்
திருச்சிற்றம்பலம்

நஞ்சியிடையின்று நாளையென் றும்மை நச்சுவார்
துஞ்சியிட்டாற் பின்னைச் செய்வதென்னடி கேள்சொலீர்
பஞ்சியிடப் புட்டில் கீறுமோபணி யீரருள்
முஞ்சியிடைச் சங்க மார்க்குஞ்சீர்முது குன்றரே.

முத்தி முத்தாறு வலஞ்செயும்முது குன்றரைப்
பித்தனைப் பானடித் தொண்டனூரன் பிதற்றிவை
தத்துவ ஞானிக ளாயினர்தடு மாற் றிலார்
எத்தவத் தோர்களு மேத்துவர்க்கிட ரில்லையே.

திருச்சிற்றம்பலம்

சிவபெருமான் பன்னீராயிரம் பொன்கொடுத் தருளினர். நம்பியாரூரர் வணங்கி "சுவாமி! திருவாரூரிலுள்ளோர் யாவரும் அதிசயிக்கும்படி பொன் முழுவதும் அங்கு வரச்செய்தருளுக" என்று வேண்டினர். சிவபெருமான் அசரீரி வாக்கால், "இந்தப் பொன்னை மணிமுத்தா நதியில் இட்டுத் திருவாரூர்க் குளத்தில் எடுப்பாயாக" என்றார். வன்றொண்டர் ஆற்றிலிட்டுக் குளத்தில் எடுக்கப்போகிற பொன் மாற்றுச் சரிவர இருக்கின்றதோ என்று அறியுமாறு மச்சம் வெட்டிவைத்துக்கொண்டு மணிமுத்தா நதியில் மிச்சப்பொன் முழுவதையும் இட்டார். "அன்று என்னை வலிந்தாட்கொண்ட பெருமான் அருளின் பெருமையை இதனால் அறிவேன்" என்று கூறிச் சிதம்பரத்துக்குச் சென்றார். செல்லும் வழியிலுள்ள கடம்பூர் முதலிய தலங்களை வணங்கிச் சிதம்பரத்தை யடைந்தார்.

கோபுரத்தையும் திருவீதியையும் விழுந்து வணங்கி உட்புகுந்து அம்பலக்கூத்தனை ஆனந்த வெள்ளக் கண்ணீர் நிறைந்து பாய வணங்கித் தாம் பேரூரிற் கண்ட காட்சியைச் சிறப்பித்து, "மடித்தாடு மடிமைக்கண்" என்னும் பதிகம் பாடி மகிழ்ந்து அருள்பெற்று அந்தணர்கள் போற்ற அப்பதியில் சிலநாள் வைகினர்.

[கோயில்—பண் - குறிஞ்சி.]

திருச்சிற்றம்பலம்

மடித்தாடு மடிமைக்க ணன்றியே மனமேநீ
வாழு நாளுந்
தடுத்தாட்டித் தருமனார் தமர்செக்கி லிடும்போது
தடுத்தாட் கொள்வான்
கடுத்தாடு கரதலத்திற் றமருகமு மெரியகலுங்
கரிய பாம்பும்
பிடித்தாடிப் புலியூர்ச்சிற் றம்பலத்தெம் பெருமானைப்
பெற்றா மன்றே.

பாருரு மரவல்கு லுமைநங்கை யவள்பங்கன் பைங்கணேற்ற
னூரூரன் றருமனார் தமர்செக்கி லிடும்போது தடுத்தாட் கொள்வா
னாரூரன் றம்பிரா னாரூரன் மீகோங்கி லணிகாஞ் சிவாய்ப்
பேரூரர் பெருமானைப் புலியூர்ச்சிற் றம்பலத்தே பெற்றா மன்றே,

திருச்சிற்றம்பலம்

சிதம்பரத்திலிருந்து சென்று திருக்கருப்பறியலூர் வணங்கிச், "சிம்மாந்து" என்னும் தமிழ்மாலை சாத்திச் சிலநாள் அங்குத் தங்கினர். பின்னர், திருமண்ணிப்படிக் கரை சென்று "முன்னவ னெங்கள்பிரான்" என்னும் பதிகம் பாடித் துதித்துத் திருவாழ்கொளிபுத்தூர் முதலிய சேத்திரங்களை வணங்கிப் பாடித் திருக்கானாட்டு முள்ளூரைச் சேர்ந்தார். அங்கே கண்ணுதற்பெருமான் காட்சி கொடுக்கத் தரிசித்து "வாள்வாய" என்னும் பாமாலை சாத்தித் துதித்துப் புறப்பட்டுத் திருஎதிர்கொள்பாடியினை யடைந்து "மத்தயானை" என்னும் சித்ததிலைத் திருப்பதிகம் பாடிப் போற்றினார். அங்கிருந்து நீங்கித் திருவேள்விக்குடி சென்றடைந்து "மூப்பது மில்லை பிறப்பது மில்லை" என்னும் பதிகம் பாடினார். பின்னர், திருத்துருத்தி முதலிய திருப்பதிகளை வணங்கிப் பாடித் திருவாரூர்ச் சென்றடைந்தார். அங்கே பெரும் தொண்டருடன் திருமூலட்டானேசுவரரை வணங்கிப் பரவையார் திருமாளிகையைச் சேர்ந்தார். பரவையார் பாங்கியருடன் நம்பியாரூரருடைய திருவடிகளை வணங்கி "எங்களையும் நினைந்தருளிற் றெனவியம்ப வினிதளித்து" மகிழ்ந்து அவருடன் தங்கினார். அப்போது ஒருநாள் "முதுகுன்றர்

எமக்களித்த பன்னீராயிரம் பொன்னையும் தூய மணிமுத்தா நதியில் இட்டுவந்தேன். இப்போது இத்திருக்கோயிலின் மேற்குத் திசையிலிருக்கும் திருக்குளத்தில் அவர் திருவருளினாலே எடுத்துக்கொள்ளப் பரவையே வருவாய்” என்று அழைத்தார். “இஃதென்ன அதிசயம்!” என்று பரவையார் புன்முறுவலோடு விளம்பினார். நம்பியாரூரர் “பெண்ணே! எமது நாதன் அருளால் குளத்தில் பொன் முழுவதையும் எடுத்து உனக்குத் தருவது திண்ணம்” என்றார். பரவையாருடன் திருக்கோயிலிற் சென்று பெருமானை வணங்கித் திருக்கோயிலை வலம் வந்து மேற்றிசையிலுள்ள குளத்தின் வடகீழ்க்கரைக்குப் போய்ப் பரவையாரைத் திருக்குளத்தின் கரைமேல் விட்டுத் தாம் குளத்தில் இறங்கிக் கற்றைவார் சடையாரை வணங்கிப் பொன்னை எடுத்தற்கு அற்றைநாள் போட்டு எடுப்பார் போலத் தடவினார். நீற்றழகராகிய சிவபெருமான் இவருடைய பாடலை விரும்பி ஓர் திருவிளையாட்டாகப் பொன்னை வருவியாதிருந்தார். பரவையாரும் “ஆற்றினிலிட்டுக் குளத்தில் தேடுவீர் அருள் இதுவோ!” என்றார். அப்போது நாயனார், “முன்செய்த வருள்வழியே முருகலர் பூங் குழற்பரவை தன்செய்ய வாயினகை தாராமே தாருமென” என்று முதுகுன்றப் பெருமானிடத்து, “பொன் செய்த மேனியினீர்” என்னும் பதிகம் பாடினார். முதல் எட்டுத் திருப்பாட்டளவும் சிவபெருமான் பொன்னைக் காட்டாதிருந்தார். அப்போது நாயனார் “ஏத்தா திருந்தறியேன்” என்னும் திருப்பாட்டைப் பாடி அம்பலக் கூத்தனை வணங்கினார். திருவருளினால் பொன் திரண்டு வருதலும் எடுத்துக் கரையேற்றினார். தேவர்கள் புட்ப மாரி பொழிந்தனர். உலகிலுள்ளோர் “இப்படி யார் பெறுவார்” என்று அதிசயித்து வணங்கினர்.

*ஏத்தாதே யிருந்தறியே னெனுந்திருப்பாட் டெவ்வுலகும்*
*காத்தாடு மம்பலத்துக் கண்ணுளனுங் கண்ணுதலைக்*
*கூத்தாதந் தருளாயிக் கோமளத்தின் முன்னென்று*
*நீத்தாருந் தொடர்வரிய நெறிநின்றார் பரவுதலும்.*

கொந்தவிழ்பூங் கொன்றைமுடிக் கூத்தனார் திருவருளால்
வந்தெழுபொன் றிரளெடுத்து வரன்முறையாற் கரையேற்ற
வந்தரத்து மலர்மாரி பொழிந்திழிந்த தவனியுளோ
ரிந்தவதி சயமென்னே யார்பெறுவா ரெனத்தொழுதார்.

—பெரியபுராணம்.

திருமுதுகுன்றம்—பண் - நட்டராகம்
திருச்சிற்றம்பலம்

பொன்செய்த மேனியினீர் புலித்தோலை யரைக்கசைத்தீர்
முன்செய்த மூவெயிலும் மெரித்தீர்முது குன்றமர்ந்தீர்
மின்செய்த நுண்ணிடையாள் பரவையிவ டன்முகப்பே
என்செய்த வாறடிகே ளடியேனிட் டளங்கெடவே.

ஏத்தா திருந்தறியே னிமையோர்தனி நாயகனே
மூத்தா யுலகுக்கெல்லா முதுகுன்ற மமர்ந்தவனே
பூத்தா ருங்குழலாள் பரவையிவ டன்முகப்பே
கூத்தா தந்தருளாய் கொடியேனிட் டளங்கெடவே,

பிறையா ருஞ்சடையெம் பெருமானரு ளாயென்று
முறையால் வந்தமரர் வணங்கும்முது குன்றர்தம்மை
மறையார் தங்குரிசில் வயல்நாவ லாரூரன்சொன்ன
இறையார் பாடல்வல்லார்க் கெளிதாஞ்சிவ லோகமதே.

திருச்சிற்றம்பலம்

வன்றொண்டர் தாம் முன் வெட்டி வைத்திருந்த மச்சத்தோடு ஒப்பிட்டு உரைப்பித்துப் பார்க்கும்போது மாற்றுக் குறைந்திருக்கக் கண்டார். பின்னும் திருப்பதிகம் பாடினார். உரை சரியாயிருக்க அன்பர்க் கன்பராகிய சிவபெருமான் அருள்புரிந்தார். ஒரு மாப்பொன்னுங் குறையாமல் பரவையாரிடங் கொடுத்து அவரை வீட்டுக் கனுப்பித்தாம் கோயிலுக்குச் சென்று சுவாமியை வணங்கிப் பின் பரவையார் மாளிகை சேர்ந்தார். அந்நாளில் "பாறு தாங்கிய" என்னும் திருப்பதிகம் பாடி மகிழ்ந்து இன்புற்றிருந்தார்.

பண் - கொல்லி
திருச்சிற்றம்பலம்

பாறுதாங்கிய காட ரோபடு தலையரோ மலைப் பாவையோர்
கூறுதாங்கிய குழக ரோகுழைக் காதரோ குறுங் கோட்டிள
ஏறுதாங்கிய கொடிய ரோசுடு பொடிய ரோவிலங் கும்பிறை
ஆறுதாங்கிய சடைய ரோநமக் கடிக ளாகிய வடிகளே.

படிசெய் நீர்மையிற் பத்தர்காள்பணிந் தேத்தி னேன்பணி யீரருள்
வடிவி லான்றிரு நாவ லூரன் வனப்பகை யப்பன் வன்றொண்டன்
செடிய னாகிலுந் தீயனாகிலுந் தம்மையே மனஞ் சிந்திக்கும்
அடிய னூரனை யாள்வ ரோநமக் கடிக ளாகிய வடிகளே.

திருச்சிற்றம்பலம்

இறைவந் தம்மை நம்பியாரூரருக்குத் தோழமையாகக் கொடுத்தமையால் அத்தோழமையின்பொருட்டு வன்றொண்டரும் தமக்கு இறைவர் கொடுத்த பொன்னில் மச்சம் வெட்டி வைத்திருந்து பின்னர் ஒப்பிட்டனர் போலும்.

நாயனார் பின் பல சேத்திரங்களையும் வணங்க விரும்பி அங்கிருந்து பரிசனத்துடன் எழுந்தருளித் திருநள்ளாறு, திருக்கடவூர் மயானம், திருவீரட்டானம், திருவலம்புரம், திருச்சாய்க்காடு, திருவெண்காடு, திருநனிபள்ளி, திருச்செம்பொன்பள்ளி முதலியவைகளை வணங்கிப் பாமாலை சாத்தினார்.

திருச்சிற்றம்பலம்

திருக்கடவூர் மயானம்—பண் - பழம்பஞ்சுரம்

திருச்சிற்றம்பலம்

மருவார் கொன்றை மதிசூடி மாணிக் கத்தின் மலைபோல
வருவார் விடைமேன் மாதோடு மகிழ்ந்து பூதப் படைசூழத்
திருமால் பிரம னிந்திரற்குந் தேவர் நாகர் தானவர்க்கும்
பெருமான் கடவூர் மயானத்துப் பெரிய பெருமா னடிகளே.

மாட மல்கு கடவூரின் மறையோ ரேத்து மயானத்துப்
பீடை தீர வடியாருக் கருளும் பெருமா னடிகள்சீர்
நாடி நாவ லாரூர னம்பி சொன்ன நற்றமிழ்கள்
பாடு மடியார் கேட்பார்மேற் பாவ மான பறையுமே.

திருச்சிற்றம்பலம்

திருக்கடவூர் வீரட்டம்—பண் - நட்டராகம்

திருச்சிற்றம்பலம்

பொடியார் மேனியனே புரிநூலொரு பாற்பொருந்த
வடியார் மூவிலைவேல் வளரங்கையின் மங்கையொடும்
கடியார் கொன்றையனே கடவூர்தனுள் வீரட்டத்தெம்
அடிகே ளென்னமுதே யெனக் கார்துணை நீயலதே.

காராரும் பொழில்சூழ் கடவூர்த்திரு வீரட்டத்துள்
ஏராரும் மிறையைத்துணை யாவெழி லவலர்கோன்
ஆரூரன் னடியானடித் தொண்ட னுரைத்ததமிழ்
பாரோ ரேத்தவல்லார் பரலோகத் திருப்பாரே.

திருச்சிற்றம்பலம்

இத் திருப்பதிகத்திலுள்ள ஒவ்வொரு பாசுரத்தின் இறுதியிலும் "எனக்கார் துணை நீயலதே" என்று வைத்துப் பாடியருளினர்.

திருச்செம்பொன்பள்ளியினின்று திருநின்றியூர் சென்றடைந்து திருக்கோயிலுட் புகுந்து அன்புள்ளுருகப் பணிந்து திருப்பதிகம் பாடித் தொழுதனர். தாம் பாடிய திருப்பதிகத்தில் திருநாவுக்கரசு சுவாமிகள் உலகத்தார் துன்பம் நீங்க 4900 திருப்பதிகம் பாடியதைச் சிறப்பித்தனர்.

திருநின்றியூர்—பண் - தக்கேசி
திருச்சிற்றம்பலம்

திருவும்வண்மையுந்திண்டிறலரசுஞ்
சிலந்தியார்செய்தசெய்பணிகண்டு
மருவுகோச்செங்கணான்றனக்களித்த
வார்த்தைகேட்டு நுன்மலரடியடைந்தேன்
பெருகுபொன்னிவந்துந்துபன்மணியைப்
பிள்ளைப்பல்கணம்பண்ணையுணண்ணித்
தெருவுந்தெற்றியுமுற்றமும் பற்றித்
திரட்டுந்தென்றிருநின்றியூரானே.

அணிகொளாடையம்பூணணிமாலை
யமுதுசெய்தமுதம்பெறுசண்டி
இணைகொளேழெழுநூறிரும்பனுவ
லீன்றவன் றிருநாவினுக்கரையன்
கணைகொள்கண்ணப்பனென்றிவர்பெற்ற
காதலின்னருளாதரித்தடைந்தேன்
திணைகொள்செந்தமிழ்பைங்கிளி
தெரியுஞ்செல்வத்தென்றிருநின்றியூரானே.

திருச்சிற்றம்பலம்

பின்னர், திருநீடூர் திருப்புன்கூர் வணங்கிப் பாமாலை சாத்தித் திருக்கோலக்கா அணைந்தபோது கங்கைவார்

சடையண்ணல் எதிர்நின்று காட்சி கொடுத்தருளப் பேரன்போடு தொழுது திருப்பதிகம் பாடிப் போற்றினார்.

[திருக்கோலக்கா—பண் - தக்கேசி]

திருச்சிற்றம்பலம்

புற்றில் வாளர வார்த்த பிரானைப்
பூத நாதனைப் பாதமே தொழுவார்
பற்று வொன்றனை யெனக்கெளி வந்த
பாவ நாசனை மேவரி யானை
முற்ற லார்திரி புரமொரு மூன்றும்
பொன்றவென் றிமால் வரையரி யம்பாக்
கொற்ற வில்லங்கை யேந்திய கோனைக்
கோலக் காவினிற் கண்டு கொண்டேனே.

அன்று வந்தெனை யகலிடத் தவர்மு
னாள தாக வென் றவணங் காட்டி
நின்று வெண்ணெய் நல்லூர்மிசை யொளித்த
நித்திலத் திரட் டொத் தினை முத்திக்
கொன்றி னன்றனை யும்பர் பிரானை
யுயரும் வல்லர ணங்கெடச் சீறுங்
குன்ற வில்லியை மெல்லிய லுடனே
கோலக் காவினிற் கண்டு கொண்டேனே

நாளு மின்னிசை யாற்றமிழ் பரப்பு
ஞான சம்பந் தனுக்துல கவர்முன்
தாள மீந்தவன் பாடலுக் கிரங்குந்
தன்மை யாளனை யென்மனக் கருத்தை
ஆளும் பூதங்கள் பாட நின்றாடு
மங்க ணன்றனை யெண்கண மிறைஞ்சுங்
கோளி லிப்பெருங் கோயிலுள் ளானைக்
கோலக் காவினிற் கண்டு கொண்டேனே.

கோட ரம்பயில் சடையுடைக் கரும்பைக்
கோலக் காவுளெம் மானைமெய்ம் மானப்
பாட ரங்குடி யடியவர் விரும்பப்
பயிலு நாவலா ரூரன்வன் றொண்டன்
நாடி ரங்கிமுன் னறியுமந் நெறியா
னவின்ற பத்திவை விளம்பிய மாந்தர்
காட ரங்கென நடநவின் றான்பாற்
கதியு மெய்துவர் பதியவர்க் கதுவே,

திருச்சிற்றம்பலம்

"அன்றுவந்தெனை" என்னும் திருப்பாட்டில் திருவெண்ணெய் நல்லூர் அந்தணர் சபையில் இறைவர் ஆவணம் காட்டித் தம்மை ஆட்கொண்டதனைக் குறிப்பித்துப் பாடியருளினர். நம்பியாரூரர் சரித்திரத்துக்கு இதுவும் ஓர் அகச்சான்றாகும்.

தாம் பாடிய திருப்பதிகத்தின் ஒவ்வொரு பாசுரத்தினிறுதியிலும் இறைவர் தமக்குக் காட்சிகொடுத்ததை வியந்து "திருக்கோலக்காவினிற் கண்டுகொண்டேனே" என்று போற்றினர். 'நாளு மின்னிசை' என்னுந் திருப்பாட்டில் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளுக்குச் சிவபெருமான் பொற்றாளங் கொடுத்தருளியதைச் சிறப்பித்துப் பாடியருளினார்.

பின்னர், சீர்காழியை வலம்வந்து வணங்கித் திருக்குருகாவூர்க்குச் சென்றார். செல்லும் வழியில் பசியினாலும் தாகத்தினாலும் பரவையார் கொழுனர் வருந்தினார். அதுகண்ட சிவபெருமான் திருவுள்ளமிரங்கி நம்பியாரூரர் வரும் வழியில் ஓர் தடாகத்தையும் தண்ணீர்ப்பந்தலையும் உண்டாக்கி ஓர் அந்தணர் வேடந்தாங்கிப் பொதிசோறு வைத்துக்கொண்டு வன்தொண்டரை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்.

தம்பிரான் தோழர் அடியார் கூட்டத்தோடு தண்ணீர்ப்பந்தலிற் புகுந்து சிவபெருமானாகிய அவ்வேதியரிடத்து அன்புடன் ஐந்தெழுத்தோதி எழுந்தருளினார்.

> குருகாவூ ரமர்ந்தருளுங் குழகர்வழி பார்த்திருப்பத்
> திருவாரூர்த் தம்பிரான் றோழர்திருத் தொண்டருடன்
> வருவாரப் பந்தரிடைப் புகுந்துதிரு மறையவர்பாற்
> பெருகார்வஞ் செலவிருந்தார் சிவாயநம வெனப்பேசி.
>
> —பெரியபுராணம்

அந்தணர் வன்றொண்டரை நோக்கி "நீர் மிகுந்த பசியோடிருக்கின்றீர். இப் பொதிசோற்றை உமக்குக் கொடுக்கிறேன். அமுது செய்து தண்ணீர் குடித்து இளைப்பாறும்" என்றார். சுந்தரமூர்த்தி நாயனார் பொதி சோற்றை ஏற்றுத் தாம் அடியார்களோடு திருவமுது செய்தார். அப் பொதிசோறு அங்குள்ள எல்லோர்க்கும் உணவாகப் பொலிந்தது. சுந்தரமூர்த்திநாயனார் தாகசாந்தி செய்து அவ்வந்தணரைப் புகழ்ந்து ஏத்திச் சிறிதுநேரம்

நித்திரைசெய்தார். மற்ற அடியார்களும் துயின்றார்கள். இறைவர் தண்ணீர்ப்பந்தலோடு மறைந்தருளினார். சித்த நிலை திரியாத திருநாவலூர்மன்னர் நித்திரைவிட்டு எழுந்து தண்ணீர்ப்பந்தரையும் வேதியரையும் காணமல் "இத்தனையாமாற்றை யறிந்திலேன்" என்னும் முதலையுடைய திருப்பதிகம் பாடித் திருக்குருகாவூர் சென்று இறைஞ்சினார்.

சங்கரனார் திருவருள்போற் றண்ணீரின் சுவையார்ந்து
பொங்கிவரு மாதரவா லவர்நாமம் புகழ்ந்தேத்தி
அங்கயர்வாற் பள்ளியமர்ந் தருகணைந்தார் களுந்துயிலக்
கங்கைசடைக் கரந்தார்ப் பந்தரொடுந் தாங்கரந்தார்

—பெரியபுராணம்

வழிப்பயணத்தால் களைத்திருந்த சுந்தரமூர்த்தி நாயனாருக்கும் பரிசனங்களுக்கும் சிவபெருமான் திருவருள் சிவானந்தத்தை விளைவிக்குமாறுபோல அவர் பருகிய தண்ணீரும் மிகக் குளிர்ந்து பேரானந்தத்தை விளைவித்தபடியால், "சங்கரனார் திருவருள்போற் றண்ணீரின் சுவையார்ந்து" என்றார் சேக்கிழார்பெருமான்.

திருக்குருகாவூர்—பண் - நட்டராகம்
திருச்சிற்றம்பலம்

இத்தனை யாமாற்றை யறிந்திலே னெம்பெருமான்
பித்தரை யென்றும்மைப் பேசுவார் பிறரெல்லா
முத்தினை மணிதன்னை மாணிக்க முளைத்தெழுந்த
வித்தனே குருகாவூர் வெள்ளடை நீயன்றே.

வளங்கனி பொழின்மல்கு வயலணிந் தழகாய
விளங்கொளி குருகாவூர் வெள்ளடை யுறைவானை
இளங்கிளை யாரூரன் வனப்பகை யவளப்பன்
உளங்குளிர் தமிழ்மாலை பத்தர்கட் குரையாமே.

திருச்சிற்றம்பலம்

பற்றற்றுத் திருவருள் வழியில் நிற்கும் சிவஞானிகளுக்கு வேண்டியவைகளை அவர்கள் வேண்டாமல் இறைவர் தாமே கொடுப்பர் என்பது தண்ணீரும் பொதிசோறும் பெருமானிடம் நாயனார் பெற்றதனால் அறிக. "பாடுவார் பசிதீர்ப்பாய் பரவுவார் பிணிகளைவாய்" என இத்திருப்பதிகத்தின் மூன்றும் பாசுரத்தில் ஓதப்படுதல் காண்க.

"குடிசெய்வ லென்னு மொருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான்முந் துறும்"

என்றார் திருவள்ளுவ நாயனாரும்.

வன்றொண்டர் திருக்குருகாவூரினின்று புறப்பட்டுப் பல பதிகளையும் வணங்கித் திருக்கழிப்பாலையைத்தொழுது ஏத்தித் திருத்தில்லை வந்து அம்பலக்கூத்தனை வணங்கினார். அங்கிருந்து திருத்தினைநகர் முதலிய பதிகளை வணங்கித் திருநாவலூரை நினைந்து அங்கே சென்றார். அப்பதியிலுள்ளவர்களும், தொண்டர்களும் அலங்காரத்துடன் எதிர் கொள்ளத் திருக்கோயில் புகுந்து "கோவலன் நான்முகன்" என்றெடுத்துப் பாடிப் போற்றினார்.

[திருநாவலூர்—பண் - நட்டராகம்]
திருச்சிற்றம்பலம்

கோவல னான்முகன் வானவர்கோனுங் குற்றேவல்செய்ய
மேலவர் முப்புரந் தீயெழுவித்தவ னோரம்பினால்
ஏவலனார் வெண்ணெய் நல்லூரில்வைத்தெனை யாளுங்கொண்ட
நாவல னார்க்கிட மாவதுநந்திரு நாவலூரே.

தன்மை யினாலடி யேனைத்தா மாட்கொண்ட நாட்சபைமுன்
வன்மைகள் பேசிட வன்றொண்ட னென்பதோர் வாழ்வுதந்தார்
புன்மைகள் பேசவும் பொன்னைத் தந்தென்னைப் போகம்புணர்த்த
நன்மையி னார்க்கிட மாவது நந்திரு நாவலூரே.

உம்பரார் கோனைத்திண் டோண்முரித் தாருரித் தார்களிற்றைச்
செம்பொனார் தீவண்ணர் தூவண்ண நீற்றரோ ராவணத்தால்
எம்பிரா னார்வெண்ணெய் நல்லூரில் வைத்தெனை யாளும்
நம்பிரா னார்க்கிட மாவது நந்திரு நாவலூரே.

வாயாடி மாமறை யோதியோர் வேதியனாகிவந்து
தீயாடி யார்சினக் கேழலின் பின்சென்றோர் வேடுவனாய்
வேயாடி யார்வெண்ணெய் நல்லூரில் வைத்தெனை யாளுங்கொண்ட
நாயாடி யார்க்கிட மாவது நந்திரு நாவலூரே.

நாதனுக் கூர்நமக் கூர்நர சிங்க முனையரையன்
ஆதரித் தீசனுக் காட்செயு மூரணி நாவலூரென்
றோதநற் றக்கவன் றொண்ட னாரூர னுரைத்ததமிழ்
காதலித் துங்கற்றுங் கேட்பவர் தம்வினைக் கட்டறுமே.

திருச்சிற்றம்பலம்

இத்திருப்பதிகத்தில் நம்பியாரூரர் சரிதத்திற்கு அகச்சான்றுகள் பலவுள. திருவெண்ணெய் நல்லூரில் இறைவர் தம்மை ஆட்கொண்டதை முதல் பாசுரத்திலும், ஆவணம் காட்டி அந்தணர்

சபைமுன் ஆட்கொண்டதை இரண்டாம் ஐந்தாம் பாசுரங்களிலும், நரசிங்கமுனையர் தம்மை ஆதரித்தனர் என்பதைப் பதினோராம் பாசுரத்திலும் "வன்றொண்டன்" என்னும் நாமம் இறைவனால் தமக்குக் கொடுக்கப்பட்டதென்பதை இரண்டாம் பாசுரத்திலும் வைத்துப் பாடியுளார்.

அங்கிருந்து தொண்டைநாடு சென்று பல பகுதிகளையும் வணங்கிக் காடுகளையும் மலைகளையும் கடந்து திருக்கழுக்குன்றம் வந்து இறைஞ்சிப் பாடித் திருக்கச்சூருக்கு வந்து சிவபெருமானை வணங்கிப் புறம்போந்தார். அப்போது அமுது சமைத்துக் கொடுக்கும் பரிசனம் வந்து சேராமையால் பசியுடன் திருக்கோயில் மதிற்புறத்திலிருந்தார். அப்போது சிவபெருமான் வன்றொண்டர் பசியைத் தீர்த்தற்கு அங்கு வசிக்கும் ஓர் அந்தணர் வேடத்தோடு ஒருவெற்றோடு ஏந்திக்கொண்டு வந்து தமது அன்பராகிய வன்றொண்டரை நோக்கி "நீர் மிகப் பசியால் வருந்திவருந்திருக்கின்றீர். யான் உமது பசிதீரச் சோறு இரந்து கொண்டு வருகிறேன்; இங்குச் சிறிதுநேரமிரும்" என்று சொல்லி வீடுகள்தோறும் சென்று உணவுபெற்று அவருக்குக் கொண்டுவந்து கொடுத்தருளினார்.

மெய்ப்பசியான் மிகவருந்தி யிளைத்திருந்தீர் வேட்கைவிட
விப்பொழுதே சோறிரந்திங் கியானுமக்குக் கொணர்கின்றே
னப்புறநீ ரகலாதே சிறிதுபொழு தமருமெனச்
செப்பியவர் திருக்கச்சூர் மனைதோறுஞ் சென்றிரப்பார்.

வெண்டிருநீற் றணிதிகழ விளங்குநூ லொளிதுளங்கக்
கண்டவர்கண் மனமுருகக் கடும்பகற்போ திடும்பலிக்குப்
புண்டரிகக் கழல்புவிமேற் பொருந்தமனை தொறும்புக்குக்
கொண்டுதாம் விரும்பியாட் கொண்டவர்முன் கொடுவந்தார்

—பெரியபுராணம்

அந்தணர் கொடுத்த அமுதை நம்பியாரூரர் தொழுது வாங்கி அவர் அன்பைப் போற்றி அங்கு வந்த அடியார்களுடன் உண்டு மகிழ்ந்தார். அந்தணர் வேடம் பூண்டு வந்த கடவுள் மறைந்தருளினார்.

வாங்கியவத் திருவமுது வன்றொண்டர் மருங்கணைந்த
வோங்குதவத் தொண்டருட னுண்டருளி யுவந்திருப்ப
வாங்கருகு நின்றுற்போ லவர்தம்மை யறியாமே
நீங்கின ரெப்பொருளும் நீங்காத நிலைமையினர்.

—பெரியபுரா

"எல்லா வுலகமுமாயும்", "அங்கிங்கெனுதபடி யெங்கும் காசமாயும்", "பாரொடு விண்ணுப் பரந்தும்", விறகிற்றீய பாலிற் படுநெய்போன் மறையநின்று ளன்மாமணிச் சோதி உறவுகோனட்டுணர்வு கயிற்றினன் முறுகவாங்கிக்கடைய நிற்குமே" எனவும் வரும் மறைமொழிகள் இங்கே நோக்கற்பா

சிவயோகியார் மறைந்தருள நம்பியாரூரர் அ இறைவர் என்று கண்டு கடும்பகலில் திருவடிகள் வ வைத்தோமே என்று கண்மழை பொழிய மன "முதுவாயோரி" என்றெடுத்துப் பதிகம் பாடித் து மகிழ்ந்து வணங்கினர்.

[திருக்கச்சூர் ஆலக்கோவில்—பண் - கொல்லிக்கௌவாண

திருச்சிற்றம்பலம்

முதுவாயோரி கதறமுதுகாட் டெறிகொண்டாடன் முயல்வாே
மதுவார்கொன்றைபுதுவீசூடு மலையான்மகடன் மணவாளா
கதுவாய்த்தலையிற்பலிநீகொள்ளக் கண்டாலடியார் கவலாரே
யதுவேயாமறிதுவோகச்சூ ராலக்கோயிலம்மானே

அன்னமன்னும்வயல்சூழ்கச்சூ ராலக்கோயிலம்மானை
யுன்னமுன்னுமனத்தாரூ ரனூரன்போர்முடிவைத்த
மன்னுபுலவன்வயனுவலர்கோன் செஞ்சொனுவன்றொண்டன்
பன்னுதமிழ்நூல்மாலைவல்லா ரவரெந்தலைமேற்பயில்வாரே

திருச்சிற்றம்பலம்

மன்னர் அங்கிருந்து காஞ்சிபுரம் வந்தணை காஞ்சிபுரநகரவாசிகள் சிவபெருமான் மறையவராய் குரைத்து நேரே அவரால் ஆட்கொள்ளப்பட்ட யாரூரர் எழுந்தருளப்பெற்ருேமென மனமகிழ்ந்தனர். நகரை மணித்தோரணம், தீபம் நிறைகுடங்கள் முதலி களால் அலங்கரித்துத் தொண்டர்கள் அப்பதியின் போய் எதிர்கொண்டு வணங்க, நம்பியாரூரரும் அவ வணங்கித் திருவேகாம்பரம் சென்று காமாட்சி அம்மையார்

தழுவக் குழைந்த ஏகாம்பரநாதரை விழுந்து போற்றி எழுந்து மகிழ்ந்து பாடி அங்குத் தங்கினார். அந்நாளில் திருக்காமக்கோட்டம், திருமேற்றளி முதலிய திருக் கோயில்களை வணங்கிப் பாடி யருளினார். திருவோண காந்தன்றளி என்னும் கோயிலை வணங்கிப் பொற்காசை யும் பொன்னையும் விரும்பி, "நெய்யும் பாலும்" என்னும் பதிகம்பாடி அளவற்ற திரவியம் பெற்றுச் சிலகாலம் அப் பதியில் வசித்தனர்.

[திருவோணகாந்தன்றளி—பண் - இந்தளம்]
திருச்சிற்றம்பலம்

நெய்யும்பாலும்தயிருங்கொண்டு நித்தம்பூசனைசெய்யலுற்றார்
கையிலொன்றுங்காணமில்லைக் கழலடிதொழுதுய்யினல்லா
லைவர்கொண்டிங்காட்டவாடி யாழ்குழிப்பட்டழுந்துவேனுக்
குய்யுமாறென்றருளிச்செய்யீ ரோணகாந்தன்றளியுளீரே,

ஓவணமேலெருதொன்றேறு மோணகாந்தன்றளியுளார்தா
மாவணஞ்செய்தாளுங்கொண்டு வரைதுகிலொடுபட்டுவீக்கி
கோவணமேற்கொண்டவேடங் கோவையாகவாரூரன்சொன்ன
பாவணத்தமிழ்ப்பத்தும்வல்லார் பறையுந்தாஞ்செய்தபாவந்தானே,

திருச்சிற்றம்பலம்

நாயனார் திருப்பனங்காட்டூரை வணங்கி "விடையின் மேல் வருவானை" என்னும் திருப்பதிகம் பாடித் திருமாற் பேறு, திருவல்லம் முதலிய தலங்களை வணங்கித் திருக் காளத்திமலையை வந்தணைந்தார். அங்கே காளத்தியப் பரையும் கண்ணப்பரையும் பேரன்போடு வணங்கி, "செண் டாடும் விடையாய்" என்னும் பதிகம் பாடி அத்தலத்தில் சிலநாள் தங்கினர். அந்நாளில் வடதேசத்திலுள்ள திருப் பருப்பதம், திருக்கேதாரம் முதலிய தலங்களை மனத்தினால் நினைந்து பாடித் திருவொற்றியூர் சென்றடைந்தார். அந் நகரவாசிகள் அப்பதியைத் தோரணங்கள், நிறைபொற் குடம், தூபம், தீபம் முதலியவைகளால் அலங்கரித்து மங்கள வாத்தியங்கள் முழங்க, பெண்கள் நடனமாட வர வேற்றனர். நம்பியாரூரர் தம்மை எதிர்கொண்ட அடியா ருடன் திருக்கோயிலின் கோபுரத்தை வணங்கி உட்புகுந்து

ஊனும் உயிரும் கரைந்துருகப் பரவசமாய் நின்று "பாட்டும்பாடி" என்னும் பதிகம் பாடி வணங்கி அத்தலத்தில் இனிது இருந்தார்.

திருஞானசம்பந்தமூர்த்தி நாயனரைப் போலச் சுந்தரமூர்த்தி நாயனரும் திருக்காளத்தி மலையிலிருந்து வடதேச யாத்திரை செய்யாது, திரும்பித் திருவொற்றியூர் வந்தனர். அப்பர் சுவாமிகள் திருக்காளத்திக்கு வடக்கேயுள்ள தலங்களுக்கும் யாத்திரை செய்தனர். திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமியைப்போல நம்பியாரூரரும் கண்ணப்பரைப் பத்தியோடு போற்றினர்.

முன்னே திருக்கயிலையில் உமையம்மையின் சேடிமாருள் அநிந்திதை என்பவர் நம்பியாரூரரை மணத்தற்குரிய ஊழினல் ஞாயிறு என்னும் ஊரில் வேளாளர் குலத் திலகராகிய ஞாயிறுகிழவர் என்பவர் செய்த தவத்தின் பயனுக அவருக்குப் புதல்வியாக வந்து அவதரித்தார். சங்கிலியார் என்னும் பெயரோடு உமையம்மைமாட்டு அன்பு மறவாது வளர்ந்தார். சங்கிலியார் மணப்பருவம் அடைதலும் தந்தையார் அவருக்கு மணம் பேசினர். சங்கிலியார் அதுகேட்டுத் தான் சிவபெருமான் திருவருளைப் பெற்ற ஒருவருக்குரியவளாதலால் தாய் தந்தையர் மணம் பேசுவதால் ஏது வருமோ என்று மயங்கி நிலத்தில் விழுந்தார். அப்போது தாய் தந்தையர் மனம் நொந்து ஏங்கி மயக்கந் தெளியப் பனிநீர் தெளித்தார்கள். சங்கிலியார் அறிவு தெளிந்தெழுதலும் அவருக்கு நேர்ந்த கவலை யாதென்று தந்தை தாயர் கேட்டபோது "சிவபெருமானுடைய அன்பர் ஒருவருக்கே யான் உரியேன்; நீங்கள் பேசும் விவாகத்துக்கு இசையேன். இனிமேல் திருவொற்றியூர் சென்று சிவபெருமான் திருவருள் வசப்பட்டு நடப்பேன்" என்றார்.

என்று தம்மை யீன்றெடுத்தார் வினவமறை விட்டியம்புவா
ரின்றென் நிறத்துநீர் மொழிந்தவிது வென்பரிசுக் கிசையாது
வென்றிவிடை யாரருள்செய் தாரொருவர்க் குரியேன்யா னினிமேற்
சென்றுதிரு வொற்றியூ ரணைந்துசிவ னாருளிற் செல்வனென

பெரியபுராணம்

தாய் தந்தையர் இதுகேட்டு அதிசயமுற்று அஞ்சினர். இவர் நிலைமை இப்படியிருக்க, இதனை யறியாத அவர் குலத்திலுள்ள ஒருவன், சங்கிலியாரை விரும்பி அவர் தாய் தந்தையரிடம் விவாகம் பேசச் சிலரை அனுப்பினன். அவர்கள் நிகழ்ந்ததைக் கூறாமல் இனிய மொழி கூறி வந்தவர்களை அனுப்பிவிட்டனர். மணம் பேச வந்தவர்கள் திரும்பிப் போனவுடன் விவாகம் செய்ய விரும்பியவன் பெரும் குற்றம் செய்தவன்போல் அவர்களோடு இறந்தான்.

ஞாயிறு கிழவர் இதனைக் கேட்டு மயக்கமுற்றார். இச் செய்தியை மற்றவர்களுக்குச் சொல்லி ஞாயிறு கிழார் சங்கிலியாரைத் திருவொற்றியூருக்குக் கொண்டுபோய் ஒரு கன்னிமாடம் அமைத்து அங்கே சிவதொண்டு செய்திருக்கும்படிவிட்டு, தம்பதிக்குத் திரும்பினார். சங்கிலியார் அவ்விடத்திலே தவம் செய்தார். பல மலர்களை எடுத்து மாலைகட்டிச் சுவாமிக்குச் சாத்தக் கொடுக்கும் திருப்பணி வழிபாடியற்றி வந்தார்.

சங்கிலியார் இவ்வாறு தொண்டுபுரிந்து வரும் நாளில் நம்பியாரூரர் சுவாமியை வழிபடத் திருக்கோயிலுக்கு வந்தார். சிவபெருமான் கயிலையில் கட்டளையிட்ட விதியின்படி அவர் திருவருளால் மலர் தொடுக்கும் மண்டபத்தில் "சங்கிலியாரை விதியாற் கண்ணுற்றார்." நம்பியாரூரர் அவர் அழகைக் கண்டு சிந்தை நிறையிழந்தார். அவர்மேல் காதல்கொண்டு அங்கு நின்றவர்களை நோக்கி "என் உள்ளத்தைக் கவரும் இப்பெண்மணி யார்?" என்றார். அங்குள்ளார் "ஈசர் பணி செய்யும் தவவிசேடமுடைய சங்கிலியார்" என்றார்கள். அப்போது நம்பியாரூரர் பரவை சங்கிலியாகிய இரண்டு பெண்கள் காரணமாகச் சிவபெருமான் இப்பிறவியைத் தமக்குக் கொடுத்தாரெனக்கொண்டு சங்கிலியார்மேல் ஆசை கொண்டார்.

கோவாமுத்துஞ் சுரும்பேறுக் கொழுமென்முகையு மனையாரைச்
சேவார்கொடியார் திருத்தொண்டர் கண்டபோது சிந்தைநிறை
காவாதவர்பாற் போய்வீழத் தம்பாற்காம னார்துரந்த
பூவாளிகள்வந் துறவீழத் தரியார்புறமே போந்துரைப்பார்.

இன்னபரிசென் றறிவரிதா லீங்கோர்மருங்கு திரைக்குள்ளாற்
பொன்னுமணியு மலர்ந்தவொளி யமுதிலளாவிப் புதியமதி
தன்னுணீர்மை யாற்குழைத்துச் சமைத்தமின்னுக் கொடிபோல்வா
ளென்னையுள்ளந் திரிவித்தாள் யார்கொலென்றங் கியம்புதலும்,

அருகுநின்றார் விளம்புவா ரவர்தாநங்கை சங்கிலியார்
பெருகுதவத்தா லீசர்பணி பேணுங்கன்னி யாரென்ன
விருவராலிப் பிறவியையெம் பெருமானருளா லெய்துவித்தார்
மருவும்பரவை யொருத்தியிவண் மற்றையவளா மெனமருண்டார்;

—பெரியபுராணம்

"இறைவர்க்கு ஆளாகி அடிமைசெய்யும் வழியில் நிற்கும் என்னை வருத்தித் திருவருளைப் பெறுவண்ணம் தடுத்து என் உயிரையும் மலரையும் கூடப் பிணைக்கும் இவளை இறைவன் திருவருளால் பெறுவேன்" என்றுகூறி கோயிலுட் சென்றார். திருவொற்றியூர்ப்பெருமான் முன்னின்று, "தேவரீர்! உமது வாமபாகத்தில் ஓர் பெண்ணை மகிழ்ந்து கொண்டதுமன்றித் திருமுடியில் கங்கையாகிய பெண்ணையும் காதலுடன் கொண்டீரே! உமக்குத் திருமாலை தொடுப்பதோடு என் உள்ளத்தொடை அவிழ்த்த மதிமுகச் சங்கிலியை அடியேனுக்குக் கொடுத்தருளும்" என்று வணங்கித் திருக்கோயிலின்புறத்து வந்திருந்தார். சூரியன் மேற்றிசையில் மறைந்தான். மாலைக்காலத்தில் காதலினால் வருந்தும் வன்றொண்டர்பால் பெருமான் வந்து "தவத்தினால் சிறந்த சங்கிலியைத் தருகின்றோம்; கவலை ஒழிக" என்றருளிச் செய்தார். நம்பியாரூரர் சுவாமி திருவடிகளை வணங்கி மகிழ்ந்தார். சிவபெருமான் அப்போது சங்கிலியாருக்குச் சொப்பனத்தில் தோன்றி "தவத்தில் மேம்பட்டவனும், நம்பால் நீங்காத அன்புடையவனும், திருவெண்ணெய் நல்லூரில் யாவருங் காண நம்மால் தடுத்தாட்கொள்ளப் பட்டவனுமாகிய நம்பியாரூரன் உன்னை விவாகம் செய்து தரும்படி வேண்டுகின்றான். நீ அவனை மணந்து இன்பத்தோடு வாழ்க" என்று பணித்தருளினார்.

சாருந்தவத்துச் சங்கிலிகேள் சாலவென்பா லன்புடையான்
மேருவரையின் மேம்பட்ட தவத்தான் வெண்ணெய்நல்லூரி

வியாருமறிய யானுள வுரியானுன்னை யெனையிரந்தான்
வார்கொண் முலையாய் நீயவனை மணத்தாலணைவாய் மகிழ்ந்தென்றார்

—பெரியபுராணம்

அப்பொழுது குன்று விளக்கனைய சங்கிலியார் நடுக்கத்துடன் வணங்கி, "நமது தாயாகும் பார்வதி தேவியாரை என்றும் இடப்பாகத்தில் வைத்திருக்கின்ற கடவுளே! நம்பியாரூரர் திருவாரூரில் பரவையாரை மணந்து வாழ்கின்றவர். என்னை விவாகஞ் செய்தபின் என்னைவிட்டு அவர் திருவாரூருக்குச் சென்றால் யான் யாது செய்வேன்" என்றார். சுவாமி அதுகேட்டு "அந்த நம்பியாரூரன் உன்னைவிட்டுப் பிரியமாட்டேனென்று சபதம் செய்து கொடுப்பான்" என்றார். அப்பால் தமது எண்ணம் கைகூடும் என்று மகிழ்ந்திருந்த நம்பியாரூரரிடம் சுவாமி சென்று "நீ விரும்பியபடி அவளை மணஞ் செய்தற்குத் தடையொன்றுளதாக அவள் கூறுகின்றாள். அவள் கேட்டபடி நீ செய்தால் உனக்கும் அவளுக்கும் மணம் நிறைவேறும்" என்றார்.

வேயனைய தோளியார் பானின்று மீண்டருளித்
தூயமன மகிழ்ந்திருந்த தோழனார் பாலணைந்து
நீயவளை மணம்புணருநிலை யுரைத்தோ மதற்கவள்பா
லாயதொரு குறையுன்னா லமைப்பதுள தென்றருளி.

—பெரியபுராணம்

நம்பியாரூரர் சுவாமியை வணங்கி அவள் குறை யாதென்று கேட்டார். "நீ சங்கிலியை மணம் செய்தபின் அவளைவிட்டுப் பிரியாதிருக்கச் சத்தியம் செய்துகொடுக்க வேண்டும்" என்றார். நம்பியாரூரர் தாம் திருக்கோயில்கள் தோறும் சென்று இறைவனை வழிபடுதற்கு இது தடையாகும் என்று நினைந்து, சத்தியம் செய்து கொடுக்கச் சங்கிலியாரோடு தான் வரும்போது திருக்கோயிலைவிட்டு மகிழமரத்தின்கீழ் எழுந்தருளியிருக்கும் வண்ணம் சுவாமியை வேண்டினார். கேட்டபடி சுவாமி இசைந்தது கண்டு தம்பிரான் தோழர் மகிழ்ந்தார். சிவபெருமான் உடனே சங்கிலியாரிடம் போய்ச் "சுந்தரன் சத்தியம்

செய்ய வரும்போது திருக்கோயிலில் செய்ய இசையாது மகிழமரத்தின்கீழ்ச் செய்விப்பாய்'' என்று கூறி மறைந் தார். சங்கிலியார் சுவாமியைப் போற்றித் தோழியரை எழுப்பித் தமக்குச் சுவாமி கனவில் அருளிச்செய்ததைச் சொன்னார். தோழிமார் அச்சத்தோடு அதிசயங்கொண்டு சங்கிலியைப் பணிந்து மகிழ்ந்தார்கள். திருப்பள்ளி யெழுச்சிக்காலம் வருதலும் சங்கிலியார் மலர் தொடுக்கும் பணிசெய்யப் பாங்கியருடன் திருக்கோயிலுக்குச்சென்றார். அச்சமயம் சங்கிலியார் வரவை எதிர்பார்த்திருந்த நம்பி யாரூரர் சிவபெருமான் கட்டளையை அவருக்குத் தெரி வித்துக் கோயிலில் சத்தியம் செய்து கொடுக்க வருமாறு அழைத்தனர். தோழியர் திருக்கோயிலின் முன் சத்தியம் செய்தல் தகாதென்று கூறி மகிழமரத்தின்கீழ்ச் செய்வித் தனர். நம்பியாரூரர் சத்தியம் செய்யும்போது சங்கிலி யார் மனம் கலங்கினார். நம்பியாரூரர் கோயிலுட்சென்று முதல்வனை வணங்கி "என்றும் அருள்தரவிருந்தீர் செய்த வாறு அழகிது'' என்று தோழனோடு பேசுமாபோல் கூறிச் சென்றார். சங்கிலியாரும் திருக்கோயிலில் தம் பணிசெய்து கன்னிமாடஞ் சென்றார். சுவாமி கட்டளைப் படி திருவொற்றியூர் அடியார்கள் நம்பியாரூரர் சங்கிலியா ராகிய இருவருக்கும் கலியாணம் செய்து வைத்தனர். நம்பியாரூரர் சங்கிலியாருடன் பலநாள் மகிழ்ந்திருந்தார்.

நம்பியாரூரர் முற்பிறவியில் ஆலாலசுந்தரராய் இருந்து இறை வர்க்குத் திருத்தொண்டு செய்யும்போது அனிந்திதையைப் பூந்தோட் டத்தில் கண்டு விரும்பினார். அவ்வினைப்பயன் காரணமாக இவர் இப்பிறவியில் சங்கிலியாரைப் பூத்தொடுக்கும் மண்டபத்தில் கண்டு காதல்கூர நேர்ந்தது. அவ்விதியினால் சங்கிலியாரும் திருவொற்றி யூரில் கன்னிமாடத்தில் வந்திருக்க நேர்ந்தது. சங்கிலியார்மேல் கொண்ட காதலினால் சத்தியம் செய்தேனும் அவரை மணம் செய்யத் தூண்டியதும் அவர் ஊழ்வினையே. நம்பியாரூரர் சுவாமியை மகிழின் கீழிருக்கும்படி வேண்டியபோது சுவாமி அவரைத் தடுக்காது அவர் ஊழ்வினைப்பயனை ஊட்டும்பொருட்டுச் சங்கிலியாருக்கு விவாகஞ் செய்துவைத்தனர் என்பதும், பெரியார் சிறியார் என்ற வேறுபா டின்றி எல்லார்க்கும் கடவுள் நடுநின்று அருள் புரிவரென்பதும் இதனால் அறிக.

நம்பியாரூரர் திருவொற்றியூரிலிருக்கும்போது ஒரு நாள் தென்றற்காற்று வீசுதலும், திருவாரூர்ப்பெருமானை 'எத்தனைநாள் பிரிந்திருப்பேன்' என்று திருப்பதிகம்பாடி மனங் கசிந்தார்.

திருவாரூர்—பண் - பழம்பஞ்சுரம்
திருச்சிற்றம்பலம்

பத்திமையு மடிமையையுங் கைவிடுவான் பாவியேன்
பொத்தினநோ யதுவிதனைப் பொருளறிந்தேன் போய்த்தொழுவேன்
முத்தினைமா மணிதன்னை வயிரத்தை மூர்க்கனேன்
எத்தனைநாள் பிரிந்திருக்கே னென்னாரூ ரிறைவனையே.

பேரூரு மதகரியி னுரியானைப் பெரியவர்தஞ்
சீரூருந் திருவாரூர்ச் சிவனடியே திறம்விரும்பி
யாரூர னடித்தொண்ட னடியன்சொல் லகலிடத்தில்
ஊரூர னிவைவல்லா ருலகவர்க்கு மேலாரே.

திருச்சிற்றம்பலம்

இத்திருப்பதிகத்தினால் திருவாரூர்த் தியாகராச மூர்த்தியைப் பிரிந்திருக்கமாட்டாது வருந்தினாரன்றிப் பரவையைப் பிரிந்திருந்தமையாலன்றி என்பது பெறப்படும்.

இன்னொருநாள் வீதிவிடங்கப்பெருமானை மிகவும் நினைந்து திருவாரூருக்குப்போகக் கருதித் திருவொற்றியூர் இறைவரை வணங்கி அப்பதியின் எல்லையைக் கடந்தார். உடனே அவர் செய்த சத்தியம் தவறினமையால் கண்கள் மறைந்தன. நம்பியாரூரர் மூர்ச்சித்தார். என்ன செய்வதென்று அறியாது திகைத்தார். சங்கிலியார் பால் செய்த சத்தியம் தவறினமையால் இவ்வினை வந்தெய்தியதென்று நினைந்தார். அதனால் வந்த துயரம் நீங்கப் பாடுவேனென்று "அழுக்கு மெய்கொடுன் திருவடியடைந்தேன்" என்னும் திருப்பதிகம்பாடிப் போற்றினார். இறைவன் கண் கொடாதிருந்தும், அவர் திருவருள் வழிநின்று திருவாரூருக்குப் போகவேண்டும் என்னும் பெருவிருப்பால் அடியார்கள் வழிகாட்டத் திருமுல்லைவாயிலுக்குச் சென்று "சங்கிலியாருக்காக என் கண்களை மறைத்தீர்" என்று பாடி "தொண்டைமானுக் கன்றருள்

கொடுத்தருளுந் தொல்லை வண்புகழ் முல்லைநாயகரை" வணங்கினார்.

பண் - தக்கேசி

திருச்சிற்றம்பலம்

திருவுமெய்ப் பொருளுஞ் செல்வமு மெனக்குன்
சீருடைக் கழல்களென் றெண்ணி
ஒருவரை மதியா துறுமைகள் செய்து
மூடியு முறைப்பனாய்த் திரிவேன்
முருகமர் சோலை சூழ்திருமுல்லை
வாயிலாய் வாயினா லுன்னைப்
பரவிடு மடியேன் படுதுயர் களையாய்
பாசுபதா பரஞ் சுடரே.

விண்பணிந் தேத்தும் வேதியா மாதர்
வெருவிட வேழமன் றுரித்தாய்
செண்பகச் சோலை சூழ்திரு முல்லை
வாயிலாய் தேவர்தம் மரசே
தண்பொழி லொற்றி மாநக ருடையாய்
சங்கிலிக் காவென்கண் கொண்ட
பண்பநின் னடியேன் படுதுயர் களையாய்
பாசுபதா பரஞ் சுடரே.

விரைதரு மலர்மே லயனொடு மாலும்
வெருவிட நீண்டவெம் மானைத்
திரைதரு புனல்சூழ் திருமுல்லை வாயிற்
செல்வனை நாவலா ரூரன்
உரைதரு மாலையோ ரஞ்சினோ டஞ்சு
முள்குளிர்ந் தேத்தவல் லார்கள்
நரைதிரை மூப்பு நடலையு மின்றி
நண்ணுவர்விண்ணவர்க் கரசே.

திருச்சிற்றம்பலம்

வாணன், ஓணன் என்னும் குறும்பரசர்களுக்கு உதவியாக வயிரவமூர்த்தி ஓர் பூதத்தைக் கொடுத்தார். அந்தப் பூதத்துக்குப் பயந்து தொண்டைமான் சக்கரவர்த்தி புறங்காட்டி ஓடினார். ஓடும் போது தான் ஏறிச்சென்ற யானையின் கால்களைத் தடுத்த முல்லைக் கொடிகளை வெட்டினார். கொடிகளுள் மறைந்து கிடந்த சிவலிங்கப் பெருமான் திருமேனியிலும் வெட்டுப் பட்டது. அதனால் இரத்தம் ஆறாகப் பெருகிற்று. சோதித்துப் பார்த்தபோது சிவலிங்கப் பெருமான் காயப்பட்டிருப்பதைக் கண்டார். அப்பொழுது பெரும்

பாதகம் வந்ததென்று அரசர்பெருமான் தன் கழுத்தை அறுக்க முயன்றபோது சிவபெருமான் உமாதேவியாரோடு தோன்றி, அரசர் தன்னை மாய்த்துக் கொள்ளாவண்ணம் தடுத்து அப்பூதத்தை வென்று கொள்ள நந்திதேவரையும் உதவியாகக் கொடுத்தருளினர். அதனுல் அத்தலம் திருமுல்லைவாயில் என்றழைக்கப் படுகின்றது.

பிறகு, திருவெண்பாக்கத்தை யடைந்து "நீர் கோயிலில் இருக்கின்றீரோ?" என்று வினவ, சுவாமி "நாம் இங்குள்ளோம் நீர் போம்" என்று ஏதிலார் போலக் கூறியதைக்கேட்டு, "பிழையுளன பொறுத்திடுவர்" என்னும் திருப்பதிகம் பாடி வணங்கச் சிவபெருமான் வன்றொண்டர்க்கு ஓர் ஊன்றுகோல் கொடுத்தருளினர்.

[திருவெண்பாக்கம்—பண்-சீகாமரம்]

திருச்சிற்றம்பலம்

பிழையுளன பொறுத்திடுவ ரென்றடியேன் பிழைத்தக்காற்
பழியதனைப் பாராதே படலமென்கண் மறைப்பித்தாய்
குழைவிரவு வடிகாதா கோயிலுளா யேயென்ன
உழையுடையா னுள்ளிருந்து ளோம்போகீ ரென்றானே

மான்றிகழுஞ் சங்கிலியைத் தந்துவரு பயன்களெல்லாந்
தோன்றவருள் செய்தளித்தா யென்றுரைக்க வுலகமெலா
மீன்றவனே வெண்கோயி லிங்கிருந்தா யோவென்ன
ஊன்றுவதோர் கோலருளி யுளோம்போகீ ரென்றானே.

ஏராரும் பொழினிலவு வெண்பாக்க மிடங்கொண்ட
காராரு மிடற்றானை காதலித்திட் டன்பிறேடுஞ்
சீராருந் திருவாரூர்ச் சிவன்பேர்சென் னியில்வைத்த
ஆரூரன் றமிழ்வல்லார்க் கடையாவல் வினைதானே

திருச்சிற்றம்பலம்

சத்தியம் தவறியதனுல் நம்பியாரூரருக்குக் கண்கள் மறைந்தன. இது சிவபெருமானுக்கோர் திருவிளையாட்டாய் இருந்தபோதிலும் சத்தியம் தவறினல் எவரும் தண்டனை பெறுவது திண்ணமென்பது இதனுல் உணர்த்தப்பட்டது. நம்பியாரூரர் தோழராகும் பெரும் பேறு பெற்றும் தண்டனை அடைந்தார். இதனுல் இறைவர் நடுநிலைமை காட்டியவாறும். திருவொற்றியூரில் கண்மறைந்தும், அப்பதியில் நில்லாது திருவாரூருக்குச் சென்றது ஊழ்வினைப் பயனை அனுப வித்துச் சிவபெருமான் அருள்கொண்டு கண்ணைப் பெறலாம் என்ற பத்தியைக் கொண்டென அறிக. கண்ணைக் கொடுக்கும்படி கேட்ட

போது பெற்றுக்கொள்ளாதபடியால் தாம் இறைவர் திருவருட் பேற்றிற் காளாகவில்லை என்று மனம் நொந்தார்.

"கண்ணைக்கெடுத்த தெய்வம் கோலைக் கொடுத்தபடி ஊன்றுகோலைக் கொடுத்து என்னைப் புறக்கணித்து விட்டீர். எம்பெருமானுக்கும் எனக்கும் உள்ள தோழமை இதுதானோ" என்று கூறி, அங்கிருந்து காரைக்காலம்மையார் தலையாலே வலம் செய்த திருவாலங்காட்டின் பக்கத்தில் போனார். அங்கு முதல்வரை "மூத்தா முத்திதரவல்ல" என்னும் திருப்பதிகத்தால் துதித்தார். பின்னர்த் திருவூறல் வந்து வணங்கி, காஞ்சிபுரத்துக்குச் சென்று "பொய்யனாகிய யான் தேவரீருடைய சந்நிதியில் என்ன சொல்வேன்? தேவர்கள் நன்மையைக் கருதி அவர்கள் பொருட்டு விடத்தையுண்டு அவர்களுக்கு அமுதத்தைக் கொடுத்தருளினீர். அதுபோலச் சிறியேன் எண்ணாமல் செய்த பிழை பொறுத்துத் தேவரீரைக் கண்ணினால் கண்டு கும்பிடும்பொருட்டுக் கண்ணைத் தந்தருளும்" என்று வணங்கினார்.

விண்ணாள்வா ரமுதுண்ண மிக்கபெரு விடமுண்ட
கண்ணாளா கச்சியே கம்பனே கடையானே
னெண்ணாத பிழைபொறுத்தின் றியான்காண வெழிற்பவள
வண்ணாகண் ணளித்தருளா யெனவீழ்ந்து வணங்கினார்.

—பெரியபுராணம்

காமாட்சியம்மையார் சிவலிங்கப்பெருமானுக்கு வெள்ளப்பிரவாகத்தால் மோசம் வராதபடி கட்டித் தழுவக் குழைந்த ஏகாம்பரநாதர் திருக்கோலத்தைத் தரிசிக்கும் பொருட்டு தம்மைத் துதித்து வணங்கிய நம்பியாரூரருக்கு இடக்கண்ணை மட்டுங் கொடுத்தருளினார். அப்போது பரவசமாய் ஆடித் திருப்பதிகம் பாடியருளினார்.

பங்கயச்செங் கைத்தளிராற் பனிமலர்கொண் டருச்சித்துச்
செங்கயற்கண் மலைவல்லி பணிந்தசே வடிநினைந்து
பொங்கியவன் பொடுபரவிப் போற்றியவா ரூரருக்கு
மங்கைதழு வக்குழைந்தார் மறைந்தவிடக் கண்கொடுத்தார்.

ஞாலந்தா னிடந்தவனு நளிர்விசும்பு கடந்தவனு
மூலந்தா னறிவரியார் கண்ணளித்து முலைச்சுவட்டுக்
கோலந்தான் காட்டுதலுங் குறுகிவிழுந்தெழுந்து களித்
தாலந்தா னுகந்தவனென் றெடுத்தாடிப் பாடினார்.

—பெரியபுராணம்

[திருவேகம்பம்—பண்-தக்கேசி]

திருச்சிற்றம்பலம்

ஆலந்தானுகந் தமுதுசெய்தானை
யாதியை யமரர்தொழுதேத்துஞ்
சீலந்தான்பெரி தும்முடையானைச்
சிந்திப்பாரவர்சிந்தையுளானை
யேலவார்குழ லாளுமைநங்கை
யென்றுமேத்தி வழிபடப்பெற்ற
காலகாலனைக் கம்பனெம்மானைக்
காணக்கண்ணடியேன் பெற்றவாறே.

பெற்றமேறுகந் தேறவல்லானைப்
பெரியவெம்பெரு மானென்றெப்போதுங்
கற்றவர்பரவப் படுவானைக்
காணக்கண்ணடியேன் பெற்றதென்று
கொற்றவன்கம்பன் கூத்தனெம்மானைக்
குளிர் பொழிற்றிரு நாவலாரூரன்
நற்றமிழிவை யீரைந்தும்வல்லார்
நன்னெறியுல கெய்துவர்தாமே.

திருச்சிற்றம்பலம்

சிவபெருமானுடைய இடப்பாகம் திருவருட்சத்தி. நம்பியாரூரர் தமது இடக்கண்ணைக் காமாட்சியம்மையார் அருளினால் பெற்றார். காஞ்சீபுரம் சத்தி பீடத்தி லொன்று.

நம்பியாரூரர் திருவேகம்பத்தில் சிலநாள் வைகினார். பின்னர் அங்கிருந்து புறப்பட்டுச் செல்லும்போது "எந்தை பிரான் திருவாரூ ரென்றுகொ லெய்துவது" என்று சந்த இசைபாடி திருவாமாத்தூர், திருவரத்துறை முதலிய தலங்களை வணங்கித் திருவாவடுதுறையைச் சேர்ந்தார். அங்கே திருக்கோயிலை வலம் வந்து ஒரு கண் இல்லாமையைக் குறித்து வருந்தி "கங்கைவார் சடையாய்" என்னும் பதிகம் பாடி வணங்கினார்.

[திருவாவடுதுறை—பண் - தக்கேசி]

• திருச்சிற்றம்பலம்

கங்கைவார் சடையாய் கணநாதா
காலகாலனே காமனுக் கனலே
பொங்குமா கடல்விட மிடற்றானே
பூதநாதனே புண்ணியா புனிதா
செங்கண்மால் விடையாய் தெளிதேனே
தீர்த்தனே திருவா வடுதுறையுள்
அங்கணாவெனை யஞ்சலென் றருளா
யாரெனக்குற வமரர்க ளேறே.

மண்ணின்மேன் மயங்கிக் கிடப்பேனை
வலியவந் தெனையாண்டு கொண்டானே
கண்ணிலே னுடம்பில் லடுநோயாற்
கருத்தருந் துனக்கே பொறையானேன்
தெண்ணிலா வெறிக்குஞ் சடையானே
தேவனே திருவா வடுதுறையுள்
அண்ணலே யெனையஞ்சலென் றருளா
யாரெனக்குற வமரர்க ளேறே.

வெண்டலைப்பிறை கொன்றையு மரவும்
வேரிமத்தமும் விரவிமுன் முடித்த
இண்டைமா மலர்ச்செஞ் சடையானை
யீசனைத் திருவா வடுதுறையுள்
அண்டவாணனைச் சிங்கடி யப்ப
னணுக்கவன்றொண்ட னூர்வத்தா னுரைத்த
தண்டமிழ்மலர் பத்தும் வல்லார்கள்
சாதலும் பிறப்பும் மறுப்பாரே.

திருச்சிற்றம்பலம்

இரண்டாம் திருப்பாட்டில் "கண்ணிலேன் உடம்பில்லடு நோயால்" என்று ஒரு கண்ணில்லாமையையும் உடம்பில் நோய் உற்றதையும் குறித்துப் பாடினர். சபதம் தவறினமையால் இவருக்கு நோயும் வந்ததென்பது அறியத்தக்கது.

பின்னர் வன்றொண்டர் திருத்துருத்திக்கு எழுந் தருளினார். அங்கே தமது உடம்பில் உள்ள நோயை நீக்கி யருளல் வேண்டுமென்று போற்றினார். சிவபெருமான் திருக்கோயிலின் வடபாலுள்ள திருக்குளத்தில் முழுகும் படி அருள்செய்தார். அப்படி முழுகினவுடனே உடம்பி

விருந்த நோய் நீங்கப்பெற்று ஒளி பொருந்திய திருமேனி யோடு விளங்கினர். கண்டவர்களெல்லாம் அதிசயித்தனர். திருக்கோயிலுட்சென்று "மின்னுமா மேகம்" என்னும் திருப்பதிகம் பாடி வணங்கினர். இத்திருப்பதிகத்தில் "என் னுடம்படும் பிணியிடர் கெடுத்தானை" என்று பாடினர். பின்னர் மற்றைய பதிகளையும் வணங்கித் திருவாரூரை யடைந்து மாலையில் சந்நிதானத்தில் நிலமிசை விழுந்து வணங்கி மற்றக் கண்ணையும் தரும்படி வேண்டி "தூவாயா" என்னும் திருப்பதிகம் பாடிக் கண்ணைப் பெறாது புறத்தே போயிருந்தார். பின்னர் திருவத்தயாமத்தில் அடியார் களோடு திருமூலட்டானேசுரரை வணங்க வந்தணைந்தார். வரும்போது "ஆதிதிருவன்பரெதிரணைய அவர் முக நோக்கி" கைக்கிளையினாலே "குருகுபாய" என்னும் திருப்பதிகம் பாடித் தேவாசிரியன் மண்டபத்தையும் திருக்கோபுரத்தையும் முறையே வணங்கி உட்புகுந்து இறைவர் திருமுன்பு விழுந்தெழுந்து விம்மி நின்று "தேவர்கள் துன்பம் நீங்க ஆலகாலவிடம் உண்ட பெரு மானே! சங்கிலியாருக்குக் கூறிய சத்தியம் தவறினபடி யால் கண்கள் மறைந்து பெருந் துன்புறுகின்றேன். எனது துயரைத் தீர்த்தருள வேண்டும். மெய்யடியார்களுக்கு வருந் துன்பத்தைப் பொறுக்கமாட்டாத எம்பெருமானே! தேவரீரைக் கண்டு வழிபட ஒருகண் போதாமையால் வலக்கண்ணையும் தந்தருளவேண்டும்" என்று போற்றி, "மீளாவடிமை யுமக்கே" என்னும் திருப்பதிகம் பாடினர்.

திருநாவ லூர்மன்னர் திருவாரூர் வீற்றிருந்த
பெருமானைத் திருமூலட் டானஞ்சேர் பிஞ்ஞகனைப்
பருகாவின் னமுதத்தைக் கண்களாற் பருகுதற்கு
மருவார்வத் துடன்மற்றைக் கண்டாரீ ரெனவணங்கி.

மீளாவடிமை யெனவெடுத்து மிக்கதேவர் குலமெல்லா
மாளாமே நஞ்சுண்டருளி மன்னியிருந்த பெருமானைத்
தாளாதரிக்கு மெய்யடியார் தமக்காமிடர் நீர்தரியீரென்
றுளாந்திருத் தோழமைத்திறத்தா லஞ்சொற் பதிகம் பாடினர்.

—பெரியபுராணம்

சுவாமி தம்மைப் பேரன்போடு வணங்கிய நம்பி யாரூரருக்குக் கிருபா நோக்கஞ்செய்து வலக்கண்ணைக் கொடுத்தருளினார். நம்பியாரூரர் முகமலர்ந்து பரவசமாய்ப் பலமுறை விழுந்து வணங்கிச் சிவக்கொழுந்தின் அருளைப் பருகித் திளைத்துப் புறம்போந்து தேவாசிரியன் மண்டபம் சார்ந்தார்.

திருவாரூர்—பண் - செந்துருத்தி
திருச்சிற்றம்பலம்

மீளா வடிமை யுமக்கே யாளாய்ப் பிறரை வேண்டாதே
மூளாத் தீப்போ லுள்ளே கனன்று முகத்தான் மிகவாடி
யாளா யிருக்கு மடியார்தங்க ளல்லல் சொன்னக் கால்
வாளாங் கிருப்பீர் திருவாரூர் வாழ்ந்து போதீரே.

காரூர் கண்டத் தெண்டோண் முக்கண் கலைகள் பலவாக
யாரூர்த் திருமூ லட்டா னத்தே யடிப்பே ராரூரன்
பாரூ ரறிய என்கண் கொண்டீர் நீரே பழிப்பட் டீர்
வாரூர் முலையாள் பாகங்கொண்டீர் வாழ்ந்து போதீரே.

திருச்சிற்றம்பலம்

நம்பியாரூரர் திருவாரூரரை விட்டுப் போன நாள் முதல் பரவையார் மனந்தளர்ந்திருந்தார். சிலநாள் செல்ல நம்பியாரூரர் திருவொற்றியூரில் சங்கிலியாரை விவாகஞ்செய்திருக்கின்றார் என்பதைக் கேட்டுக் கோபமூளத் துக்கத்தோடிருந்தார். அதனால் திருநாவலூரருடைய பரிசனங்கள் பரவையார் வீட்டுப் புறத்தும் போக அஞ்சினர். இச் செய்தியைச் சிலர் நம்பியாரூரருக்குத் தெரிவித்தனர். அவர் சில முதியோரைப் பரவையிடம் தூதனுப்பினார். அவர்கள் சென்று பரவை புலவி தீர்க்க முடியாமல் திரும்பினார்கள். நம்பியாரூரர் தமது துன்பத்தைத் தீர்த்தருளவேண்டுமென்று வருந்திச் சிவபெருமானைச் சிந்தித்தார். சுவாமி தம் தோழருக்கு அருள் புரிய அவர் முன் தோன்றினார். வன்றொண்டர் புளகங்கொண்டு சுவாமி திருவடிகளில் விழுந்து வணங்கிப் பரவை கொண்ட புலவியைத் தீர்த்தருளவேண்டுமென்றார். அதுகேட்ட சுவாமி "இப்போது யான் பரவையிடம்

போகிறேன் ; நீ கவலைப்படவேண்டாம்'' என்றருள் செய்தார். திருநாவலூரர் மனமகிழ்ந்திருந்தார். கோயில் அருச்சகர் வேடம் பூண்டு சுவாமி பரவையார் வீட்டுக்குச் சென்று கதவைத் தட்டினார். பரவையார் நித்திரைவிட்டெழுந்து அருச்சகரை வணங்கி "சுவாமி இந்த நடுயாமத்தில் இங்கே வந்த காரணம் என்ன'' என்று கேட்டார். "பெண்ணே! யான் சொல்வதை நீ மறுது செய்வதென்றால் சொல்வேன்'' என்றார். "நான் செய்யக் கூடிய தொன்றை நீர் சொன்னால் அதற்கு இசைவேன்'' என்றார் பரவையார். அருச்சகர் "நம்பியார் இங்கு வரவேண்டும்'' என்றார். "பங்குனித் திருநாளுக்கு வருவேனென்று சொல்லிப்போய்த் திருவொற்றியூரில் சங்கிலியை மணந்துகொண்டவருக்கு இங்கே தொடர் புண்டோ? இந்த இரவில் நீர் வந்து சொல்வது அழகாய் இருக்கின்றது!'' என்றார். சுவாமி பரவையை நோக்கி "திருநாவலூரர் செய்த குற்றங்களைப் பொறுத்துக் கொண்டு அவரை வரவேற்கும்படி உன்னிடம் வேண்டிக் கொள்ள நான் வந்தேன்'' என்றார். பரவையார் அதற்கு உடன்படாது மறுத்தனர். சுவாமி தம்முள் நகைத்துக் கொண்டு ஆரூரரிடம் மீண்டும் சென்றார். தூதுபோன சுவாமியை எதிர்பார்த்திருந்த நம்பியாரூரர் அவரைக் கண்டதும் தம்பிரான் பரவையை உடன்படச் செய்து வந்தாரென்று மகிழ்ந்து "அன்று என்னை ஆட்கொண்ட வாறு அதற்கேற்ப இன்று இவ்வாறு அனுக்கிரகம் செய் தீர்'' என்று போற்றினார். சுவாமி "நீ வேண்டியபடி நான் பரவை வீட்டுக்குச் சென்று உன்பொருட்டுப் பல வாறு பேசியும் அவள் இசையாது மறுத்தனள்'' என்றார். அது கேட்ட நம்பியாரூரர் நடுக்கமுற்று "உமது கட்டளையை அடியவளான பரவையா மறுப்பாள்! தேவர் களைக் காக்க நஞ்சுண்டீர்! முப்புரங்களைத் தகனஞ் செய் தீர்! மார்க்கண்டற்காக யமனை உதைத்தீர்! உமது அடிய வனுகும் எனக்கு அருள் செய்யாத நீர், அன்று என்னை ஏன் ஆட்கொண்டீர்? இன்று என் துன்பம் தீர்த்துப் பரவை யிடம் போகச் செய்யவேண்டும்; அல்லது என் உயிர்

நீங்கிவிடும்" என்று கீழே வீழ்ந்தார். அப்போது சுவாமி நம்பியாரூரர்மேல் இரங்கி அவரை அருளால் நோக்கி "நாம் இன்னும் ஒருமுறைபோய் அவளுக்கும் உனக்கும் ஒற்றுமை உண்டாகச் செய்வோம். நீ வருந்தற்க" என்று கூறிப் பரவையாரிடம் சென்றார். நம்பியாரூரர் அதுகேட்டு இறைவர் கருணையைப் போற்றி மகிழ்ந்தார். முன்னமே அருச்சகராய் வந்துபோனவர் சுவாமி என்றும், தம் தோழர்பொருட்டு அருச்சகர் வேடம் கொண்டு வந்தாரென்றும், அவர் சொற் கேளாது மறுத்ததை நினைந்து அச்சத்தோடும் துக்கத்தோடும் பரவையார் நித்திரையின்றியிருந்தார். அப்போது சுவாமி தம்மை அறியக்கூடிய திருக்கோலத்தோடு பரவை மாளிகைக்கு மறுபடியும் சென்றார். அதுகண்ட பரவையார் அச்சத்தோடும் மகிழ்ச்சியோடும் இறைவர் திருவடிகளில் விழுந்து வணங்கினார். சிவபெருமான் பரவையை நோக்கி, "உரிமையால் ஆரூரன் ஏவியபடி மீளவும் உன்பால் வந்தோம்! முன்போல மறாமல் உடன்படுக" என்றார். பரவையாரும் மிகுந்த அச்சத்தோடு கண்ணீர் சொரியத் தொழுது நின்று "அன்பர்க்காக இராப் பொழுதில் அங்குமிங்கும் உழல்வீராகில் இசையாது யான் என்செய்வது?" என்றார். சுவாமி திரும்பி நம்பியாரூரரிடம் சென்று "பரவையின் கோபம் தீர்த்து வந்தோம். இனிமேல் அவளிடம் நீ செல்லலாம்" என்றார். நம்பியாரூரர் சுவாமி திருவடிகளில் விழுந்து வணங்கவும், சிவபெருமான் மறைந்தருளினார். நம்பியாரூரர் பரவைபால் சென்றனர். பரவையார் அச்சத்தோடும் நாணத்தோடும அவரை விழுந்து வணங்கினார். இருவரும் சிவபெருமான் திருவருளை வியந்து போற்றி மகிழ்ந்தனர்.

பேரின்பத்தையே மேலாகக்கொண்டு நுகரும் நாவலர்கோன் பரவையின் மனக்கவலைக்குத் தாமே காரணராயிருந்தமையினால் அவர் வருத்தத்தைத் தீர்க்கும்பொருட்டுத் தம் பெருமானை வேண்டினர். சுவாமி தம் தோழர் நம்பியாரூரரோடு விளையாடும்பொருட்டு இரண்டுமுறை பரவையிடம் தூது சென்றார். அது சுந்தரர்மேல் பரவையார் வைத்த கோபத்தைத் தணிக்க ஏதுவாயதுபோலும்.

இறைவன் அடியவர்க் கெளியராய் வந்து அவரவர் விரும்பியதைச் செய்தருளுவர் என்பதைச் சிதம்பர மும்மணிக்கோவையில்

> " ஒருபெரும் புலவனே டேறீரப்
> பரவை வாய்தலிற் பாயிரு ணடுநாள்
> ஏதமென் றுன்னு திருகாலொருகாற்
> றூதிற் சென்றநின் றுணையடிக் கமலத்
> தீதொன் றியம்புவல் கேண்மதி பெரும!"

என்று குமரகுருபர சுவாமிகள் கூறுவதால் அறியலாம்.

பரவையார் கொண்ட ஊடலை நீக்கும்பொருட்டு நம்பியாரூரர் சிவபெருமானை இரண்டுமுறை தூது அனுப்பியதைக் கேட்ட ஏயர்கோன் கலிக்காமநாயனார் அதிசயித்து வருந்தினர். "இறைவனை ஒரு பெண்ணிடம் தூதனுப்பியது எவ்வளவு பாவம்! இதனைக் கேட்டும் உயிர் நீங்காதிருக்கின்றேனே!" என்று கவலையுற்றார். இப்படித் தூதனுப்பிய சுந்தரனை நான் காணுநாள் எந்நாளோ! சுந்தரனைக் கண்டால் என்ன நடக்குமோ என்று கூறி மிகுந்த கோபங்கொண்டிருந்தார். ஏயர்கோன் கோபங் கொண்டிருக்கிறாரென நாவலர்கோன் அறிந்து, தமது பிழையை முதல்வராகிய இறைவனிடம் முறையிட்டு வணக்கஞ்செய்தார். இறைவன் இருவரையும் ஒற்றுமைப் படுத்தத் திருவுளங்கொண்டு ஏயர்கோனுக்குச் சூலை நோயை ஏவினர். ஏயர்கோன் சூலைநோயைத் தாங்க முடியாது சிவபெருமானுக்கு விண்ணப்பஞ்செய்தார். சுவாமி ஏயர்கோனிடம் போய் "இந்நோய் வன்றொண்டனாலன்றித் தீராது" என்றனர். "என் தந்தை முதலிய எனது சந்ததியார் எல்லோரும் தேவரீருக்கு வழிவழி அடிமைசெய்து இனிது வாழ்ந்தனர். இப்போது புதிதாய் ஆட்கொள்ளப்பட்ட சுந்தரனே என் நோயைத் தீர்க்க வேண்டும்" என்று கூறி உடன்படாதிருந்தார். சுவாமி வன்றொண்டரிடம் சென்று "ஏயர்கோனைப்பற்றிய சூலை நோயைத் தீர்ப்பாயாக" என்று கட்டளையிட்டார். நம்பியாரூரரும் மனமகிழ்ந்து தாம் ஏயர்கோனிடம் நோய் தீர்க்க வருவதாகச் சொல்லியனுப்பினர். நம்பியாரூரர்

வருகையை அறிந்த ஏயர்கோன் கலிக்காமநாயனார் தமது இல்லத்துக்கு அவர் வந்து சேர்வதன் முன், "கடவுளைத் தூதாக அனுப்பியவனே எனது நோயைத் தீர்ப்பது?" என்று நினைந்து உடைவாளினால் தம் உயிரையும் சூலை நோயையும் தீர்த்துவிட்டார். கலிக்காமர் தேவியார் தமது கணவரோடு உயிர்விட எண்ணினார். அப்போது சுந்தரமூர்த்திநாயனார் அங்கே வந்தனர் என்பதைக் கேட்டு மற்றவர்களை அழாதிருக்கச்செய்து, தம் கணவர் உயிர் நீத்ததைப் பேசாமல் நம்பியாரூரரை எதிர்கொண்டழைக்க வீட்டில் நிறைகுடம், தூபம், தீபம் வைத்து அலங்கரித்து ஆட்களை அனுப்பினார். நம்பியாரூரரும் மனமகிழ்ச்சியோடு வந்து மலர்த்தவிசின்மேலிருக்க அவர்கள் நாயனாரை அருச்சித்தனர். அவர்கள் செய்த உபசாரங்களை ஏற்றுக்கொண்டு நம்பியாரூரர் "கலிக்காமநாயனார் எங்கே? அவர் சூலைநோயைத் தீர்த்து அவரோடு கொண்டாட விரும்புகிறேன்" என்றார். அப்போது வீட்டு வேலைக்காரர் அவர் உள்ளே பள்ளிகொள்ளுகிறாரென்றும், அவருக்கொரு நோயுமில்லை என்றும் கூறினார். நம்பியாரூரர் "அவருக்குத் தீங்கில்லை யெனினும் என் மனம் தெளியவில்லை. அவரைக் காணவேண்டும்" என்றார். அவர்கள் நம்பியாரூரருக்கு ஏயர்கோனைக் காட்டினார்கள். கலிக்காமநாயனார் உடைவாளினால் இறந்து கிடப்பதைக்கண்டார். சுந்தரர் தாமும் உயிர் விடுதல் நன்றெனநினைந்து உடைவாளை எடுத்தார். இறைவன் திருவருளால் கலிக்காமர் அப்போது உயிர்பெற்றெழுந்து நம்பியாரூரர் கையிலிருந்த வாளைப் பிடித்தார். நம்பியாரூரர் கலிக்காமநாயனாரை விழுந்து வணங்க, கலிக்காமநாயனார் நம்பியாரூரரை வணங்க ஆக இருவரும் ஒருவரையொருவர் தழுவிப் பெரிய நண்பராயினர். இருவரும் திருப்புன்கூர் சென்று சுவாமி தரிசனஞ் செய்தனர். திருநாவலூர் மன்னர் "அந்தணாளன்" என்னும் திருப்பதிகம் பாடினார். பிறகு திருவாரூர் போய்ப் பூங்கோயில் இறைவரை வணங்கியிருந்தனர். பின்னர் ஏயர்கோன் தமது ஊருக்குத் திரும்பினார்.

" எத்திறமு மேயர்கோ னட்பாமா றெண்ணினரே
சுத்தநெறி யாரூரர் சோமேசா—வைத்த
அரியவற்று ளெல்லா மரிதே பெரியாரைப்
பேணித் தமராக் கொளல்"

என்பது முதுமொழி வெண்பா. இதனால் ஒருவன் தீநெறி விலக்கி நன்னெறிச் செலுத்தும் பேரறிவுடையாரை என்றும் தனக்குத் துணையாகக் கொள்ளல்வேண்டும் என்பது விளங்கும்.

நம்பியாரூரர் திருவாரூரினின்றும் புறப்பட்டுத் திருநாகைக்காரோணம் சென்று திருப்பதிகம்பாடி நவரத்தினங்கள், பொன், விலைமிக்க ஆடை, குதிரை, உடைவாள் முதலியன பெற்றுத் திருவாரூருக்கு மீண்டும் வந்து அங்கே தங்கினார்.

திருநாகைக்காரோணம்—பண் - கொல்லிக்கௌவாணம்

திருச்சிற்றம்பலம்

பத்தூர்புக் கிரந்துண்டு பலபதிகம் பாடிப்
பாவையரைக் கிறிபேசிப் படிறாடித் திரிவீர்
செத்தார்த மெலும்பணிந்து சேவேறித் திரிவீர்
செல்வத்தை மறைத்துவைத்தீ ரெனக்கொருநா ளிரங்கீர்
முத்தார மிலங்கிமிளிர் மணிவயிரக் கோவை
யவைபூணத் தந்தருளி மெய்க்கினிதா நாறுங்
கத்தூரி கமழ்சாந்தும் பணித்தருள வேண்டுங்
கடனாகைக் காரோண மேவியிருந் தீரே.

பண்மயத்த மொழிப்பரவை சங்கிலிக்கு மெனக்கும்
பற்றாய பெருமானே மற்றாரை யுடையேன்
உண்மையத்த வுமக்கடியேன் குறைதீர்க்க வேண்டு
மொளிமுத்தம் பூணா ரொண்பட்டும் பூவுங்
கண்மயத்த கத்தூரி கமழ்சாந்தும் வேண்டுங்
கடனாகைக் காரோண மேவியிருந் தீரென்
றண்மயத்தா லணிநாவ லாரூரன் சொன்ன
வருந்தமிழ்க ளிவைவல்லா ரமருலகாள் பவரே.

திருச்சிற்றம்பலம்

அந்நாளில் சேரதேச அரசராய சேரமான் பெருமாள் நாயனார் சுந்தரமூர்த்தி நாயனார் பெருமையை அம்பலக் கூத்தர் திருவருளால் அறிந்து நம்பியாரூரரைக் காணும் ஆசையினால், தமது பரிவாரங்களுடன் சேரநாட்டைவிட்டுச்

சோழ தேசத்தையடைந்து சிதம்பரம் முதலியன வணங்கித் திருவாரூரைச் சேர்ந்தார். நாவலர்கோன் சேரமன்னன் வருகையை அறிந்து அவரைச் சிறப்பாக வரவேற்ருர். சேரமன்னன் நாவலூர் மன்னரைத் தாழ்ந்து வணங்க, அவரும் அரசர்பெருமானை வணங்கி ஒருவரையொருவர் தழுவி இன்புற்றனர்.

முன்பு பணிந்த பெருமானைத் தாமும் பணிந்து முகந்தெடுத்தே
யன்பு பெருகத் தழுவவிரைந் தவரு மார்வத் தொடுதழுவ
வின்ப வெள்ளத் திடைநின்று மேற மாட்டா தலைவார்போ
லென்பு முருக வுயிரொன்றி யுடம்பு மொன்ற மெணவிசைந்தார்.
—பெரியபுராணம்

அதனல் சுந்தரமூர்த்தி நாயனருக்குச் சேரமான் தோழர் என்னும் பெயர் வழங்கலாயிற்று. நம்பியாரூரர் அரசர்பெருமானைப் பூங்கோயிலுக்கு அழைத்துச் சென்று வீதிவிடங்கப்பெருமானை வணங்கினர். பின்னர் நம்பி யாரூரர் சேரர் பெருமானைப் பரவையார் மாளிகைக்கு அழைத்துச் சென்றனர். பரவையார் முறைப்படி நாயன் மார் இருவரையும் பூசித்து வணங்கி அங்கு வந்த எல்லோ ருக்கும் "அரசர்க்கமைத்த சிறப்பினுமே லடியார்க் கேற்கும்படியாக" என்றபடி விருந்து அளித்தனர். நம்பியாரூரர் விரும்பியபடி சேரர்பெருமான் அவருட னிருந்து திருவமுது செய்தார். பரவையார் நறுமணங் கமழும் பூமாலை, சந்தனம், தாம்பூலம் முதலியன எடுத்துக் கொடுத்து உபசரித்தார். பரவையார் செய்த பூசனை களைச் சேரர்பெருமான் ஏற்றுக்கொண்டு தூய திருநீறு அணிந்து இனிதிருந்தார். அங்கே தங்கியிருக்கும்போது வன்மீகத் தியாகராசமூர்த்தியை வணங்கி அவர் பவனி கண்டு நாயன்மார் இருவரும் ஒருவரோடொருவர் அளவளாவி மகிழ்ந்திருந்தனர். பின்னர் மதுரை முதலிய சேத்திரங்களை வழிபடத் திருவாரூர்ப் பெருமானை போற் றிப் பரிசனங்களோடு வாகனங்களில் புறப்பட்டுத் திருக் கீழ்வேளூர் வணங்கித் திருநாகைக் காரோணத்துக்குச் சென்றபோது நம்பியாரூரர் திருப்பதிகம் பாடியருளினர்.

திருநாகைக் காரோணத்திலிருந்து பிற பதிகளையும் வணங்கி, வேதாரணியத்துக்கு எழுந்தருளித் திருக்கதவு திறக்கவும் அடைக்கவும் பாடிய திருநாவுக்கரசு நாயனாரையும், திருஞானசம்பந்த மூர்த்திகளையும் நினைந்து இறைஞ்சினார்கள். நம்பியாரூரர் "யாழைப் பழித்த" திருப்பதிகம் பாடி மறைக்காட்டப்பரை வணங்கி அப்பதியில் சிலநாள் வைகினர் - அங்கிருந்து திரு அகத்தியான்பள்ளியை வணங்கிக் குழகர் கோயில் வந்தணைந்து பக்கங்களில் குடிகளில்லாமை கண்டு, "தேவரீர் தனிமையாய்க் கடற்கரையில் கோயில் கொண்டிருக்கின்றீரே" என்று கண்ணீர்சொரிய, "கடிதாய்க் கடற் காற்று" என்னும் பதிகம்பாடி வணங்கினர்.

திருக்கோடிக் குழகர்—பண் - கொல்லி

கடிதாய்க் கடற்காற்று வந்தெற்றக் கரைமேற்
குடிதா னயலே யிருந்தாற் குற்றமாமோ
கொடியேன் கண்கள் கண்டன கோடிக்குழகீ
ரடி கேளுமக்கார் துணையாக விருந்தீரே.

பின்னர், சோழநாட்டைக் கடந்து, பாண்டிநாட்டில் திருப்புத்தூரை வணங்கி மதுரையை அடைந்தனர். அப்போது பாண்டிநாட்டரசன் தன் நகரை மிக அலங்கரித்து இருவரையும் வரவேற்றனன் அச்சமயம் பாண்டியன் மகளை விவாகம் செய்த சோழதேசத்தரசனும் அங்கேயிருந்தான். சேர, சோழ, பாண்டியமன்னர் மூவரும் தமிழ் வேந்தரோடு திருவாலவாய்ப் பெருமானை வணங்கினர். பாண்டியன் தன் அரண்மனையில் எல்லோருக்கும் விருந்தளித்து உபசரித்தான்.

நம்பியாரூரர் மூவேந்தர்களோடு மதுரைக்குச் சமீபத்திலுள்ள திருப்பூவணஞ் சென்று, "திருவுடையார்" என்றெடுத்துப் பாமாலை சாத்தினார். அங்கிருந்து திருஆப்பனூர், திருவேடகம் சென்று பணிந்து அரசர்களோடு திருப்பரங்குன்றம் வந்து சேர்ந்து, "கோத்திட்டை" என எடுத்து உமது திருவடிக்கீழ் அடிமை செய்யும் அருமையை நினைந்து, "அஞ்சுதே" என்று பதிகத்தின்

ஒவ்வொரு பாசுரத்தின் இறுதியிலும் வைத்துப் பாடினர். மூவேந்தர்களும் அதுகேட்டஞ்சி வன்றொண்டரைப் பணிந்தார்கள்.

திருப்பரங்குன்று—பண் - இந்தளம்
திருச்சிற்றம்பலம்

கோத்திட்டையுங் கோவலுங் கோயில்கொண் டுருமைக்
 கொண்டுழல் கின்றதோர் கொல்லைச் சில்லைச்
சேத்திட்டுக் குத்தித் தெருவே திரியுஞ்
 சில்பூதமு நீருந் திசை திசையன
சோத்திட்டு விண்ணோர் பலருந் தொழநும்
 மரைக்கோ வணத்தோ டொருதோல் புடைசூழ்ந்
தார்த்திட்ட தும்பாம்பு கைக்கொண் டதும்பாம்
 படிகே ளுமக்காட்சி செய வஞ்சுதுமே.

அடிகே ளுமக்காட் செயவஞ் சுதுமென்
 றமரர் பெருமானே யாரூர னஞ்சி
முடியா லுலகாண்ட மூவேந்தர் முன்னே
 மொழிந்தாறு மோர்நான்கு மோரொன் றினையும்
படியா வினவகற்று வல்ல வடியார்
 பரங்குன்ற மேய பரம னடிக்கே
குடியாகி வானோர்க்கு மோர்கோவு மாகிக்
 குலவேந் தராய்விண் முழுதாள் பவரே.

பின்னர், பாண்டிநாட்டிலுள்ள மற்றைய தலங்களையும் கண்டு தொழ விரும்பி, நம்பியாரூரர் சேரர்பெருமானோடு எழுந்தருள, பாண்டியன் அவர்கள் செல்லும் தலங்களுக்கெல்லாம் வேண்டுவன செய்தற்கு ஏற்பாடு பண்ணிச் சோழமன்னனோடு மதுரைக்குத் திரும்பினன். சுந்தரமூர்த்திநாயனரும், சேரர்பெருமானும் திருக்குற்றாலம், திருநெல்வேலி முதலிய க்ஷேத்திரங்களை வணங்கிப் பாமாலைகள் சாத்தித் துதித்தனர். அங்குநின்று மாதோட்டத்துத் திருக்கேதீச்சரத்தின்மேல் திருப்பதிகம் பாடி வணங்கினர்.

திருக்கேதீச்சரம்—பண் - நட்டபாடை
திருச்சிற்றம்பலம்

நத்தார் புடைஞானன் பசுவேறிந் னைகவிழ்வாய்
மத்தம் மதயானை யுரிபோர்த்த மழுவாளன்
பத்தாகிய தொண்டர் தொழுபாலா வியின்கரைமேல்
செத்தா ரெலும்பணிவான் றிருக்கேதீச் சரத்தானே.

கறையார் கடல்சூழ்ந்த கழிமாதோட்ட நன்னகருள்
சிறையார் பொழில்வண்டி யாழ்செயுங்கேதீச் சரத்தானை
மிறையார் புகழூரன் னடித்தொண்டன் னுரைசெய்த
குறையாத் தமிழ்பத்துஞ் சொலக்கூடா கொடுவினையே.

திருச்சிற்றம்பலம்

அதன்பின் திருச்சுழியலுக்கு வந்து சிவபெருமானை வணங்கி, "ஊனுயுயிர்" என்னும் பதிகம் பாடினர். அப்பதியில் நம்பியாரூரருக்குச் சுவாமி கனவில் தோன்றி, தாம் இருப்பது திருக்கானப்பேர் என்றனர். சுந்தரமூர்த்திநாயனர் உடனே எழுந்து சேரமான்பெருமானுக்குத் தாம் கண்ட கனவைச்சொல்லி அவரோடு * திருக்கானப்பேருக்குப் போகும்போது, "தொண்டரடித் தொழலும்" என்னும் திருப்பதிகம் பாடித் திருக்கோயிலையடைந்து வணங்கிச் சிலநாள் அங்கே தங்கினர்.

பின்னர்த் திருப்புனவாயிலை அடைந்து, "சித்த நீநினை என்னொடு" என்னும் திருப்பதிகம்பாடித் துதித்துப் பொன்னிநாடணைந்து திருப்பாதாளீச்சரம் இறைஞ்சி நாயன்மார் இருவரும் அடியார்கள் எதிர்கொள்ளத் திருவாரூருக்குச் சென்று தியாகராசப்பெருமானை நெடும்பொழுது தொழுது பாடிப் பரவையார் மாளிகையில் தங்கினர். சுந்தரமூர்த்திநாயனர் சேரர்பெருமான் வேண்டியபடி மலைநாட்டுக்குச் செல்ல இசைந்தனர். பரவையாரும் அவர்கள் யாத்திரை போவதற்குச் சம்மதித்தார். சேரர்பெருமான் அடியார்களைச் சேவித்தபின், நண்பர் இருவரும் திருவாரூர்ப் பெருமானைக் கும்பிட்டு விடைபெற்றுக்கொண்டு அடியார்களோடு திருவாரூரைக் கடந்து காவேரியின் தென்கரை சென்று பல தலங்களையும் வணங்கித் திருக்கண்டியூரை யடைந்தார்கள். அப்போது காவேரியின் வட கரையில் திருவையாறு தோன்ற, அங்கே சென்று சுவாமி தரிசனம் செய்யவேண்டுமென்று சேரர் பெருமான் கூறினர். காவிரியாறு பெருக்கெடுத்து ஓடியதனல் ஓடங்கள் செல்லாமை கண்டு நம்பியாரூரர் "பரவும்

* காளையார் கோயில்.

பரி சொன்று" எனத் தொடங்கி "ஐயாறுடைய வடிகளோ" என்று இறுதியில் வைத்து இறைவனை அழைத்துப் பதிகம் பாடினர். அப்போது பெருமான் கன்றின் குரலைக் கேட்ட தாய்ப்பசுவைப்போல "ஓலம்" என்று கூறி ஆறு பிரிந்து வழிகாட்டும்படி அருள்செய்தார். ஓடும் வெள்ளமானது தடைபட்டுப் பளிங்குமலைபோல் நிற்க, கீழ்த்திசையில் வெள்ளம் வடிந்தது. மணற்பரப்பைக் கண்டார்கள். அடியார்கள் அதிசயித்து ஆனந்தக் கண்ணீர் சொரிய வணங்கினார்கள். நம்பியாரூரரும் சேரர் பெருமானை வணங்கி "உம்பர்நாதருமக் களித்ததன்றோ" என்றார். இரண்டு மன்னரும் அடியார்களோடு ஆற்றைக் கடந்து திருக்கோயில் புகுந்து செம்பொற் சோதியை வணங்கி முன்போல ஆற்றைக்கடந்து திரும்பினர். பளிங்குமலைபோல நின்ற நீரானது முன் போலத் தொடர்ந்து பெருக்கெடுத்தது.

திருவையாறு—பண் - காந்தாரபஞ்சமம்
திருச்சிற்றம்பலம்

பரவும் பரிசொன் றறியேனான் பண்டே யும்மைப் பயிலாதேன்
இரவும் பகலு நினைந்தாலு மெய்த நினைய மாட்டேனான்
கரவி லருவி கமுகுண்ணத் தெங்கங் குலைக்கீழ்க் கருப்பாலை
அரவந் திரைக்கா விரிக்கோட்டத் தையா றுடைய வடிகளோ.

கூடி யடியா ரிருந்தாலுங் குணமொன் றில்லீர் குறிப்பில்லீர்
ஊடி யிருந்து முணர்கிலே னும்மைத் தொண்ட னூரனேன்
தேடி யெங்குங் காண்கிலேன் றிருவா ரூரே சிந்திப்பன்
ஆடுந் திரைக்கா விரிக்கோட்டத் தையா றுடைய வடிகளோ.

திருச்சிற்றம்பலம்

அடியவர்பொருட்டு ஐம்பூதங்களும் அவர் விரும்பியபடி நிற்கும் என்பதை நாம் உணரவேண்டும். நம்பியாரூரர் சேரர் பெருமானைப் பார்த்து, சுவாமி உமக்காக ஆறு வழி விடும்படி செய்தனர் என்று கூறினார். அதனால் அவர் சேரர் பெருமானைப் பெரிதும் மதித்தனர் என்பது போதரும்.

அங்கிருந்து இருவரும் புறப்பட்டுப் பல தலங்களையும் வணங்கிக் கொங்கநாடு கடந்து மலைநாட்டெல்லை சேர்ந்தனர். அந்நாட்டுச் சனங்கள் தங்கள் ஊரை அழகாய் அலங்கரித்து

நால்வகைச் சேனைகளோடு எதிர்கொள்ளக் கொடுங் கோளூர் வந்தனர். சேரர்பெருமான் சுந்தரமூர்த்திகளைப் திருவஞ்சைக்களத்துக்கு அழைத்துச் சென்றார். அப் பதியில் "முடிப்பது கங்கை" என்றெடுத்து திருப்பதிகம் பாடி, விழுந்து, பெருமானுடன் வணங்கினார். பின்னர், சேரர் பெருமான் நம்பியாரூரரை யானைமேல் ஏற்றித் தாமும் ஏறியிருந்து மணிச்சாமரை வீசினார். இதனைக்கண்ட நகர வாசிகள் தம்மரசர் பெருமானுக்கு நல்ல தோழர் நம்பியா ரூரர் என்பார்கள். தமது நாட்டுக்கு இதிலும் என்ன செல் வம் வேண்டும் என்பார்கள். இவரைத்தொழ எல்லையில்லாத் தவம் செய்தோம் என்பார்கள். பெருமான் செயலைக்கண்டு தொழுவார்கள். பூவும் பொரியும் பொற்றுகளும் தூவி இவர் தோன்றிய நாடானது பூமிக்குத் திலகம் என வியந்து போற்றுவார்கள். சேரர்பெருமான் யானையிலிருந்து இறங்கித் தமது நண்பரை அரசமாளிகையுள் அழைத்துச் சென்று சிங்காதனத்தில் இருத்தி, அவர் திருவடிகளுக்கு அர்ச்சனை செய்து திருவமுது செய்வித்தார். அங்குத் தங்கியிருக்கும் நாளில் சேரர்பெருமான் பலவிதமான ஆடல், பாடல், யானைப்போர், மற்போர், செண்டு விளை யாட்டு, சோற்றுவிழா முதலிய விநோதங்களை நம்பியாரூரர் கண்டு மகிழ நடாத்தினர். ஒரு நாள் நம்பியாரூரர் வன் மீகத் தியாகராச மூர்த்தியை நினைந்து "பொன்னும் மெய்ப் பொருளும்" என்னும் பதிகம் பாடினார்.

திருவாரூர்—பண் - தக்கேசி

திருச்சிற்றம்பலம்

பொன்னு மெய்ப்பொருளுந் தருவானைப்
போகமுந் திருவும் புணர்ப்பானைப்
பின்னையென் பிழையைப் பொறுப்பானைப்
பிழையெலாந் தவிரப் பணிப்பானை
இன்னதன் மையனென் றறியொண்ணு
வெம்மானை யெளிவந்த பிரானை
அன்னம் வைகும் வயற்பழனத்
தணியாரூரானை மறக்கலுமாமே.

ஊருரென் றுலகங்களுக் கெல்லா
 முரைக்கெலாம் பொருளா யுடன்கூடிக்
காருருங் கமழ்கொன்றை நன்மாலை
 முடியன் காரிகை காரணமாக
ஆருரைம் மறந்தற் கரியானை
 யம்மான்றன் றிருப்பேர் கொண்டதொண்டன்
ஆருரன்னடி நாயுரை வல்லா
 ரமரலோகத் திருப்பவர் தாமே.

பின்னர், வன்றொண்டர் திருவாரூருக்கு அடியார்களோடு புறப்பட்டார். சேரர்பெருமான் அவரைப் பிரிய மாட்டாதவராய் அவர்பின் சென்றார். நாவலர்கோன் சேரர்பெருமானுக்கு ஆறுதல் கூறி அந்நாட்டில் அரசியல் செய்து கொண்டிருக்கும்படி பணித்தார்.

திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளோடு பாண்டியனும், பாண்டிமாதேவியும் சோழநாட்டுக்கு வரப் புறப்பட்டதுபோல சுந்தரமூர்த்தி நாயனாரோடு சேர மன்னர் திருவாரூருக்குப் புறப்பட்டார். ஞானசம்பந்தர் பாண்டியனுக்குக் கூறியவாறு சுந்தரமூர்த்திகளும் சேரமான் தமது நாட்டிலிருந்து செங்கோல் நடத்தும்படி சொல்லியருளினர்.

சேரமான் தமது பண்டாரத்திலுள்ள பொன், நவமணி, பூந்துகில் முதலானவைகளைச் சுமை ஆட்கள் மேல் ஏற்றி நம்பியாரூரருக்கு முன் செல்லும்படி செய்து நாயனாரைப் பணிந்து உபசரித்தார். நம்பியாரூரர் தமது தோழராகிய சேரமானைக் கட்டித் தழுவி விடைபெற்றுக் கொண்டு திருவாரூருக்குப் புறப்பட்டுக் காடு, மலை, கற்சுரம், ஆறு முதலியவைகளைக் கடந்து திருமுருகன்பூண்டி வழி சென்றார். திருமுருகன்பூண்டிவழிச் செல்லும் போது சிவபெருமான் தம்பால் நம்பியாரூரர் பொன் பெறுதலன்றி இன்னொருவரிடம் அவர் பொன்பெறக் கூடாதென்றோ, அல்லது ஓர் திருவிளையாட்டாகவோ, பூதங்களை விட, அவைகள் வேடராய்ச் சென்று வழிமறித்துச் சுமையாட்களைப் பயமுறுத்தித் திரவியம் முழுவதையும் பறித்துக்கொண்டன. சுமையாட்கள் நம்பியாரூரரிடம் சென்று நடந்ததை முறையிட்டனர். வேடர் சுந்தரமூர்த்தி சுவாமிகளிடம் செல்லாது விட, அவர் திருமுருகன்

பூண்டியில் திருக்கோயிலுட்சென்று சுவாமியை அன்போடு வணங்கி, "கொடுகு வெஞ்சிலை வடுக வேடுவர்" என்றெடுத்து, ஒவ்வொரு திருப்பாட்டினிறுதியிலும் "எத்துக்கிங்கிருந்தீர் எம்பிரானீரே" என்று பாடினார்.

திருமுருகன் பூண்டி—பண் - பழம்பஞ்சுரம்
திருச்சிற்றம்பலம்

கொடுகுவெஞ்சிலை வடுகவேடுவா விரவலாமை சொல்லித்
திடுகுமொட்டெனக் குத்திக்கூறை கொண்டா றலைக்குமிடம்
முடுகுநாறிய வடுகர்வாழ் முருகன்பூண்டி மாநகர்வாய்
இடுகுநுண்ணிடை மங்கைதன்னொடு மெத்துக்கிங்கிருந்தீ ரெம்பிரானீரே.

முந்திவானவர் தாந்தொழு முருகன்பூண்டி மாநகர்வாய்ப்
பந்தணைவிரற் பாவைதன்னை யொர்பாகம் வைத்தவனைச்
சிந்தையிற்சிவ தொண்ட னூரனுரைத்தன பத்துங்கொண்
டெந்தம்மடிகளை யேத்துவா ரிடரொன்றுந் தாமிலரே.

திருச்சிற்றம்பலம்

தம்பிரான் தோழர் என்ற உரிமையினால் "எத்துக்கிங்கிருந்தீர்" என்று பாடினர்போலும்.

வேடர்கள் தாங்கள் பறித்த திரவியங்களை யெல்லாம் திருக்கோயில் வாசலில் கொண்டுவந்து குவித்தார்கள். அவைகளைச் சுமை ஆட்கள்மேல் ஏற்றிக்கொண்டு திருவாரூர் வந்து சேர்ந்தார்.

நம்பியாரூரர் மலைநாட்டிலிருந்து திருவாரூர் வந்தபோது இருவினைப்பயன்கள் நீங்கப்பெற்றுச் சிவபோகம் நுகரும் முதிர்ச்சியடைந்திருந்தார்.

படியினீடும் பத்திமுத லன்புநீரிற் பணைத்தோங்கி
வடிவுநம்பி யாரூரர் செம்பொன்மேனி வனப்பாகக்
கடியவெய்ய விருவினையின் களைகட்டெழுந்து கதிர்பரப்பி
முடிவிலாத சிவபோக முதிர்ந்துமுறுகி விளைந்ததால்.

—பெரியபுராணம்

நம்பியாரூரர் இல்லறம் நடத்தப் பரவையார், சங்கிலியார் என்னும் இருவர் பொருட்டாக இப்பிறவி எடுத்தார் என்பது பெரிய புராணத்தில் கூறப்பட்டது. வினைப்போகம் முடிந்ததும், சிவபோகம் எய்தும் பக்குவம் முறுகி விளைந்ததென்பது இச்செய்யுளால் பெறப்படும்.

வன்றொண்டர் திருவாரூரில் இருக்கும் நாளில் ஒரு நாள் சேரர்பெருமானை நினைந்து அவரைக் காணவிரும்பி வன்மீகத் தியாகராசமூர்த்தியை வணங்கி மலைநாட்டுக்குச் சென்றார். செல்லும் வழியில் பொன்னி நாட்டிலுள்ள தலங்களை வணங்கிக்கொண்டு கொங்கதேசத்திலுள்ள திருப்புக்கொளியூர் சென்றடைந்தார். அப்பதியில் மறையவர் வாழும் வீதிவழிச் சென்றபோது ஒன்றுக்கொன்று எதிரேயுள்ள இரண்டு மனைகளில் ஒன்றில் மங்கல ஒலியும், மற்றொன்றில் அழுகைச்சத்தமும் கேட்டன. அங்குள்ள மறையோரை நோக்கி, இப்படி இரண்டும் ஒரே சமயத்தில் நிகழுங் காரணம் என்ன என்று வினவினார். மறையோர் வணங்கி நின்று "இந்த இரண்டு வீட்டுப் புதல்வர் இருவரும் குளத்தில் நீராடியபோது ஒருவனை முதலை விழுங்கியது. பிழைத்த மற்றப் பிள்ளை வளர்ந்து இச்சமயம் பூணூற் சடங்கு நடைபெறுகின்றது. மற்ற வீட்டிலுள்ளோர் முதலைவாய்ப்பட்டிறந்த தங்கள் பிள்ளை இருந்தால் உபநயனச்சடங்கு நடக்குமே என்று நினைந்து அழுகின்ற சத்தம்" என்றார்கள். அதுகேட்டு நாயனார் இரக்கங்கொண்டு நின்றபோது பிள்ளையை இழந்த பெற்றோர் தங்கள் துக்கத்தை மறைத்து முகமலர்ச்சியோடு வன்றொண்டர் திருவடிகளில் வந்து விழுந்து வணங்கினார்கள். தம்மை வணங்கிய இருவரையும் நோக்கி, "புதல்வனை இழந்தது நீங்களோ?" என்று கேட்டார். பெற்றோர் நம்பியாரூரரை வணங்கி "அது முன்னே நிகழ்ந்தது; தேவரீரை வழிபடுதற்கு நெடுங்காலமாய் யாம் எண்ணியபடி சுவாமி எழுந்தருளப்பெற்றோம்" என்று போற்றினர் அப்போது தம்மை அடைந்தவர்கள் துன்பங்களை நீங்கச்செய்யும் நாயனார் "புதல்வனை இழந்த துயரத்தை மறந்து தம்மை அன்போடு வழிபாடு செய்யும் இவர்கள் பிள்ளையை அந்த முதலைவாய்நின்றும் அழைத்துக் கொடுத்த பின்னர் அவிநாசிப்பெருமான் கழல் பணிவேன்" என்று திருவுள்ளம் கொண்டார். முதலை சிறுவனை விழுங்கிய பொய்கைக்குச்சென்று அப்புதல்வன் மீண்டு வருமாறு "உரைப்பா ருரையுகந் துள்கவல்லார்" என்றெடுத்துப்

பதிகம் பாடினர். நான்காம் திருப்பாசுரம் முடியு முன் சென்ற ஆண்டுகளுக்குத்தக்க வளர்ச்சியோடு அப்புதல்வனை இயமன் முதலைவாயில் விட, அப்பிள்ளையை முதலை கரையில் கொண்டுவந்து உமிழ்ந்தது. அப்போது தாயானவளோடிச்சென்று பிள்ளையை எடுத்துக்கொண்டு வந்து உயிர்கொடுத்த திருவாளன் திருவடியில் சிவமறையோனோடு விழுந்து வணங்கினாள். தேவர்கள் பூமழை பொழிந்தனர். மூவுலகவாசிகள் எல்லோரும் அதிசயித்தனர். இந்த அற்புதச் செயலைக்கண்ட மறையோர்கள் எல்லோரும் உத்தரியங்களை ஆகாயத்தில் வீசி ஆர்த்தார்கள். நம்பியாரூரர் அப்பிள்ளையை அழைத்துக்கொண்டு திருக்கோயிலுக்குப்போய்ப் பணிந்து திருப்பதிகம் பாடினார். நாயனார் அப்பிள்ளைக்குப் பூணூல் தரித்துப் பெற்றோர் மகிழ்வெய்தச் செய்தார்.

திருப்புக்கொளியூரவிநாசி—பண் - குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்

எற்றான் மறக்கே னெழுமைக்கு மெம்பெரு மானையே
உற்றாயென் றுன்னையே யுள்குகின் றேனுணர்ந் துள்ளத்தால்
புற்றா டரவா புக்கொளி யூரவி நாசியே
பற்றாக வாழ்வேன் பசுபதி யேபர மேட்டியே.

உரைப்பா ருரையுகந் துள்கவல் லார்தங்க ளுச்சியாய்
அரைக்காடரவா வாதியு மந்தமு மாயினாய்
புரைக்காடு சோலைப் புக்கொளி யூரவி நாசியே
கரைக்கான் முதலையைப் பிள்ளை தரச்சொல்லு காலனையே.

நீரேற வேறு நிமிர்புன் சடைநின் மலமூர்த்தியைப்
போரேற தேறியைப் புக்கொளி யூரவி நாசியைக்
காரேறு கண்டனைத் தொண்ட னாரூரன் கருதிய
சீரேறு பாடல்கள் செப்பவல் லார்க்கில்லை துன்பமே.

திருச்சிற்றம்பலம்

வன்றொண்டர் பின்னர்ப் பல தலங்களையும் வணங்கிக் கொங்குநாட்டைக் கடந்து மலைநாட்டை யடைந்தார். அவர் வரவையறிந்த சேரர்பெருமான் என்னசெய்வதென்று அறியாது சிந்தை மகிழ்ந்து "என் ஐயன் அணைந்தார்! நம்மை அடிமைகொள்ளும் அண்ணலார் எழுந்தருளி வருகின்றார்! ஆரூர்ச்சைவன் வருகின்றார்! உலகம் உய்யும்.

வண்ணம் திருஅவதாரஞ்செய்த பரமாசாரியர் வருகின்றார்!" என்று முரசறைவித்தார்.

செய்வதொன்று மறியாது சிந்தைமகிழ்ந்து களிகூர்ந்தெ
ளையனணைந்தா னெனையாளு மண்ணலணைந்தா னூரிற்
சைவனணைந்தா னென்றணையாந் தலைவனணைந்தான் றாணியெலா
முய்யவணைந்தா னணைந்தானென் றேகைமுரசஞ் சாற்றுவித்தார்.

—பெரியபுராணம்

சேரர்பெருமான் பட்டினம் முழுவதையும் அலங்கரிக்கச்செய்து பட்டத்து யானையின்மீது மந்திரிமார் சேனைகள் சூழப் புறப்பட்டு வன்றொண்டரை எதிர்கொண்டார். தூரத்தில் அவரைக் கண்டதும் யானையினின்று இறங்கி நம்பியாரூரரைப் பணிய, நாயனாரும் சேரர்பெருமானைப் பணிந்து ஒருவரோடொருவர் கலந்து மகிழ்ந்தனர். சேரர்பெருமான் திருவாரூர்ச் சிறப்பினைக் கேட்டின்புற்றார். அதுகண்ட மாந்தர் எல்லோரும் பெருமகிழ்ச்சியினால் ஆரவாரித்தார்கள். சேரர்பெருமான் நாயனாரை யானைமேல் ஏற்றித் தாம் வெண்கொற்றக்குடை பிடித்துக்கொண்டு, சேனைகள், அமைச்சர், அடியார்கள் புடைசூழ, இராசமாளிகை வாயில் வந்தார். சேரர்கோமான் நாவலர்கோனை அழைத்துக்கொண்டு சென்று, தமது சிம்மாசனத்தில் இருத்திப் பூசனைகள் செய்து பரிசனங்களுக்கு மிகுந்த நிதி கொடுத்தனர். நண்பர் இருவரும் மலைநாட்டிலுள்ள பல பதிகளையும் வணங்கியிருக்கும் நாளில் ஒருநாள் சேரமான்பெருமாணாயனார் நீராடும் போது அவர் துணைவராகிய சுந்தரமூர்த்திநாயனார் தாம் திருக்கயிலைக்குப்போகும் நன்னெறி வந்து கூடத் திருவஞ்சைக்களத்துத திருக்கோயிலை வலம் வந்து சுவாமி திருவடிகளை மனங்கசிந்துருகப் போற்றி "தலைக்குத் தலைமாலை" என்னும் திருப்பதிகம் பாடினார்.

திருவஞ்சைக்களம்—பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

தலைக்குத் தலைமாலை யணிந்த தென்னே
சடைமேற் கங்கைவெள்ளந் தரித்த தென்னே
அலைக்கும் புலித்தோல்கொண் டசைத்த தென்னே
யதன்மேற் கதநாகங் கச்சார்த்த தென்னே

மலைக்குந் நிகரொப் பனவன் றிரைகள்
வலித்தெற்றி முழங்கி வலம் புரிகொண்
டலைக்கும் கடலங் கரைமேன் மகோதை
யணியார் பொழிலஞ்சைக் களத் தப்பனே.

அப்பதிகத்தில் உலகவாழ்க்கையை நீக்கிச் சிவன் திருவடிநிழலைச் சேரவேண்டிக் குறையிரந்தார். அப்போது சிவபெருமான் பிரமா, விட்டுணு முதலிய தேவர்களை நோக்கி, "நம் ஆரூரனை உம்பர் வெள்ளானைமேலேற்றி இங்கே கொண்டு வருக" என்று பணித்தனர். அவர்கள் திருவஞ்சைக்களத்துக்குச் சென்று திருக்கோயிலில் நின்ற நம்பியாரூரருக்குச் சிவபெருமான் கூறிய கட்டளையை அறிவித்தனர். நம்பியாரூரர் அதுகேட்டுக் கயிலைக்குப் புறப்பட இசைந்தார். விண்ணவர்கள் அவரை வணங்கி வெள்ளானையின்மேல் ஏற்றி ஐவகை வாத்தியங்கள் ஒலிக்க, வானவர் பூமாரி பொழிய அழைத்துச் சென்றார்கள். அப்போது நம்பியாரூரர் தமது பெருந்துணைவராகிய சேரமான்பெருமானுயனாரைச் சிந்தையில் எண்ணிக்கொண்டு சென்றார். சேரர்பெருமான் தம்பிரான் தோழர் கயிலைக்குப் போவதை யறிந்து பக்கத்தில் நின்ற குதிரைமேலேறித் திருவஞ்சைக்களம் சென்றார். அப்போது சுந்தரமூர்த்திகள் வெள்ளையானைமேல் ஆகாயத்தில் செல்வதைக் கண்டார். தாம் ஏறிய குதிரையின் காதில் ஸ்ரீபஞ்சாட்சரத்தை விதிமுறையோடு ஓதினார். உடனே குதிரை ஆகாயத்தில் பாய்ந்து சென்று சுந்தரமூர்த்திகள் ஏறிச் செல்லும் வெள்ளையானையை வலம் வந்து யானைக்கு முன்னாகத் திருக்கயிலையை நோக்கிச் சென்றது. சேரர்பெருமானுடன் சென்ற படைவீரர் தங்கள் அரசன் ஆகாயத்தில் சென்று மறைதலைக் கண்டு பிரியா அன்பின் மிகுதியினால் உடைவாளினால் தங்கள் உடலை வீழ்த்தி, வீரயாக்கை மேற்கொண்டு சேரர்பெருமான்முன் சேவித்துச் சென்றனர். தேவர்கள் சூழ யானைமீது சென்ற சுந்தரமூர்த்திகள், "தானெனை முன்படைத்தான்" என்னும் திருப்பதிகம் பாடிக்கொண்டு சேரமான்பெருமானோடு திருக்கயிலை வாயிலை அடைந்தனர்.

ஸ்ரீ கயிலாயம்—பண் - பஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

தானெனை முன்படைத்தா னதறிந்துதன் பொன்னடிக்கே
நானென பாடலந்தோ நாயினேனைப் பொருட்படுத்து
வானெனை வந்தெதிர்கொள்ள மத்தயானை யருள்புரிந்து
ஊனுயிர் வேறுசெய்தா னொடித்தான்மலை யுத்தமனே.

ஊழிதொ றூழிமுற்று முயர்பொன்னொடித் தான்மலையைச்
சூழிசை யின்கரும்பின் சுவைநாவல வூரன்சொன்ன
ஏழிசை யின்றமிழா லிசைந்தேத்திய பத்தினையும்
ஆழி கடலரையா வஞ்சையப்பர்க் கறிவிப்பதே.

திருச்சிற்றம்பலம்

சேரர்பெருமான் தடைபட்டு நின்றார். சுந்தரமூர்த்தி நாயனார் யானையினின்றும் இறங்கி உட்சென்று சுவாமியை வணங்கச் சிவபெருமான் "ஆரூரனே! வந்தனை என்றனருலகுய்ய" அதுகேட்ட சுந்தரமூர்த்தி நாயனார் "அடியேன் செய்தபிழையைப் பொறுத்துப் பந்தம் நீக்கி யடிமை கொண்ட பெருமானே!" என்று போற்றிப் பேரின்ப வெள்ளத்தில் மலர்ந்து, சேரமான்பெருமாணாயனார் தேவரீருடைய திருவடிகளைச் சாரத் தடைபட்டு திருவாயிலில் நிற்கின்றார்" என்றார். சிவபெருமான் நந்திதேவர் மூலமாகச் சேரர்பெருமானை உள்ளே அழைக்கப் பணித்தனர். சேரமான் உள்ளே சென்று சிவபெருமானைப் போற்றி நின்றார். சிவபெருமான் புன்முறுவல் செய்து "நாம் அழையாமல் நீ இங்கே வந்தது எவ்வாறு?" என்றனர். சேரர்பெருமான் அஞ்சலிகூப்பி நின்று "நம்பியாரூரர் கழல் போற்றி அவர் யானையின்முன் சேவித்து வந்தனன். அதனால் இப்போது எம்பெருமானுடைய இன்னருள் பழுத்த சந்நிதி சேர்ந்தனன்" என்றும், "திருவுலா ஒன்று பாடினேன்; அதனைக் கேட்டருள வேண்டும்" என்றும் விண்ணப்பஞ் செய்தார். சிவபெருமான் சேரமான் பாடிய பிரபந்தத்தைச் செவிசாய்த்து அவரை நம்பியாரூரருடன் கணநாதராய் இருக்கும்படி அருள் செய்தனர். நாயன்மார் இருவரும் சிவபெருமானைப் பணிந்து போற்றினர். நம்பியாரூரர் ஆலால சுந்தரராயிருந்து தாம் செய்துவந்த

திருத்தொண்டை முன்போல் ஆற்றிவந்தார். சேரமான் பெருமாணுயனுர் கணநாதராகித் தமது திருத்தொண்டு செய்வாராயினர்.

அன்ன தன்மையி லிருவரும் பணிந்தெழுந் தருடலை மேற்கொண்டு
மன்னும் வன்றொண்ட ராலால சுந்தர ராகித்தாம் வழுவாத
முன்னை நல்வினைத் தொழிற்றலை நின்றனர் முதற்சேரர் பெருமானு
நன்மை சேர்கண நாதரா யவர்செயு நயப்புறு தொழில்பூண்டார்
—பெரியபுராணம்

பரவையாரும், சங்கிலியாரும் மீண்டும் கயிலையைச் சேர்ந்து கமலினியாகவும், அனிந்திதையாராகவுமிருந்து தேவியாருக்கு முன்போல் தொண்டுசெய்து வந்தார்கள். சுந்தரமூர்த்தி சுவாமிகள் வழியில் பாடிய திருப்பதிக மானது சமுத்திரராசனல் திருவஞ்சைக்களத்திற் சேர்க்கப் பட்டது. சேரர்பெருமான் அருளிச்செய்த "திரு உலா" வெள்ளியங்கயிலையின் மாசாத்தனுரால் திருப்பிடவூர் வேதியருக்களிக்கப்பட்டு அவர்கள் வாயிலாக உலகத் துக்கு வழங்கப்பட்டது.

"தேனுங் குழலும் பிழைத்த திருமொழியாள் தீர்க்கமதி
தானும் பணியும் பகைதீர்க்குஞ் சடையார் தூது தருந்திருநாட்
கூனுங் குருடுந் தீர்த்தேவல் கொள்வார் குலவு மலர்ப்பாதம்
யானும் பரவித் தீர்க்கின்றேனேழு பிறப்பின் முடங்குகூன்"

என்னுந் திருவிருத்தம் வார்கொண்ட வனமுலையாள் சருக்கத்தின் ஈற்றிலுள்ள சுந்தரமூர்த்திகளின் துதியாகும். இவ்வரும் பாடலில் சுந்தரர் சரித்திரத்தில் வாராத ஓர் நிகழ்ச்சியைச் சேக்கிழார் குறிப்பித்துள்ளார். அதாவது பரவையார் மாளிகையில் சுந்தரமூர்த்தி களுக்குத் தொண்டு புரிந்துவந்த ஓர் கூனனும் ஓர் குருடனும் சிவபெருமான் தூதுசென்ற ஞான்று கூன் நீக்கமும், கண் பார்வை யும் முறையே பெற்றுர்களென்பதாம். ஞானவான்களை உள்ளபடி மெய்யன்போடு பூசிப்பவர்களுக்கு எல்லா நன்மைகளும் உண்டாகு மென்பது இதனுற் பெறப்பட்டது.

மேற்குறித்த அற்புதத்தை நம்பியாண்டார் நம்பிகளும் தமது திருத்தொண்டர் திருவந்தாதியிற் கூறியுள்ளார்-

கூற்றுக் கெவனே புகல்திரு வாரூரன் பொன்முடிமேல்
ஏற்றுத் தொடையலு மின்னடைக் காயு மிடுதருமக்
கோற்றொத்துக் கூனனுங் கூன்போய்க் குருடனுங் கண்பெற்றமை
சாற்றித் திரியும் பழமொழி யாமித் தரணியிலே.

---

# தில்லைவாழந்தணர்கள்

நல்லவா னவர்போற்றுந் தில்லை மன்று
ளுடகஞ்செய் பெருமானுக் கணியார் நற்பொற்
றொல்லைவான் பணியெடுத்தற் குரியார் வீடுந்
துறந்தநெறி யார்தொண்டத் தொகைமுன் பாடத்
தில்லைவா ழந்தணரென் றெடுத்து நாதன்
செப்புமரு ளுடையார்முத் தீயார் பத்திக்
கெல்லைகாண் பரியாரொப் புலகிற் றாமே
யேய்ந்துளா ரெமையாள வாய்ந்து ளாரே.

உடம்பினுள்ளே இருதயமாகிய கமலத்தில் "மலர் மிசை யேகினன்" என்றவாறு சிவபெருமான் எழுந்தருளி யிருப்பர். அதுபோல உலகத்துக்கு இருதயமாக எண்ணப் படுகின்ற தில்லையம்பலத்திலே சிவபெருமான் எப்பொழு தும் எழுந்தருளியிருந்து படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்தொழில்களையும் செய்வீர்.

உடம்பினுள்ளே இருதய கமலம் சிறந்ததுபோல, உலகத்திலே தில்லையம்பலம் சிறந்தது. அதனாலே அது தரிசிக்க முத்திதரும் தலமென்று பாராட்டப்படுகின்றது. சிவபெருமான் தமது அருட்சத்தியாகிய உமாதேவியார் காணத் தில்லையில் திருநடனஞ் செய்யாநிற்பர்.

தண்டளிர்ச் சோலைத் தில்லைத் தபனிய மன்றி லென்றுந்
தொண்டையங் கனிவாய் மாது தொழச்சுராட் புருட னுள்ளத்
தண்டரு மதிக்க லாற்று வற்புதத் தனிக்கூத் தாடல்
கண்டனன் கசிவா னுள்ளங் களிப்புற வணங்கிப் போனன்.

—கந்தபுராணம்

இத் திருக்கூத்தினால் உயிர்கள் உறுதிப் பயன்களை அடையாநிற்கும். தில்லையம்பலத்தின்கண்ணே எழுந் தருளி நின்று அருட் கூத்தாடும் சிவபெருமானைப் பூசிக் கின்ற அந்தணர்கள் "தில்லைவாழந்தணர்" என்னும் பெயர்

பெறுவர். இவர்கள் வேதங்கள் ஆகமங்களாகிய உண்மை நூல்களை ஐயமும் மாறுபாடுமறக் கற்றுத் தெளிந்த மெய் யுணர்ச்சி யுடையவர்கள். சிவபெருமானே முழுமுதற் கடவுளென்று துணிந்து அவரையே கைந் நொடிப் பொழுதும் மறவாது வணங்கும் பெரும் பேறுடைய வர்கள். அவருடைய திருவடிகளை வணங்குதலினால் வரும் பேரின்பத்தில் திளைக்கின்ற பெரியோர். மலம் ஆசைகளை நீக்குகின்ற அருள் வடிவமாகிய திருநீற்றையும் கண்மணி யையும் பேணி அணியும் பெருவாழ்வுடையவர். அறு வகைத் தொழிலையும் விரும்பிச் செய்து முத்தீ* ஓம்பி அற நெறியை வழுவற ஆற்றுதலினாலே உலகில் வறுமை பிணி முதலாய கலியை ஓட்டுபவர்கள்.

> கற்றாங் கெரியோம்பிக் கலியை வாராமே
> செற்றார் வாழ்தில்லைச் சிற்றம் பலமேய
> முற்றா வெண்டிங்கள் முதல்வன் றன்பாதம்
> பற்றா நின்றாரைப் பற்றா பாவமே.

என்னும் தேவாரத்தாலு மறிக.

திருத்தொண்டத்தொகை பாட நம்பியாரூரருக்கு முதலடி யெடுத்துக் கொடுத்த தியாகேசரால் "தில்லைவா ழந்தணர்தம் அடியார்க்கு மடியேன்" என்று போற்றப் பட்ட பெருமையை யுடையவர்கள். அதுவேயுமன்றி மூவாயிரவரி லொருவர் குறைந்த பொழுது "நாம் இவரில் ஒருவர்" என்று அப்பெருமான் திருவாக்கினால் எடுத்துக் கூறத் தகுந்த பெருமையும் வாய்ந்தவர்கள்.

> ஞாலமுய்ய நாமுய்ய நம்பிசைவ நன்னெறியின்
> சீலமுய்யத் திருத்தொண்டத் தொகைமுன்பாடச் செழுமறைகள்
> ஓலமிடவு முணர்வரியா ரடியாருட னுமுளதென்றால்
> ஆலமமுது செய்தபிரா னடியார்பெருமை யறிந்தாரார்.

—பெரியபுராணம்.

---

* மூன்று வகையான அக்கினி.

செம்மையா ரழலொருகை துடியொருகை தரித்துமன்றிற்
றிருக்கூத் தாடும்
எம்மையாளுடையபிரான் யாமவரி லொருவரென்
றிசைக்கப் பெற்ற
மும்மையா யிரமுனிவர் பொற்பொதுவிற் றிருப்பணிகள்
மூன்று செய்வோர்
தம்மையா யிரமுறைகை தொழுதனையோர் தாட்டுணைக
டலைமேற் கொள்வாம்.

எனச் சிவராத்திரி புராணமும்,

எல்லைகாண் டற்கரிய தியாகேசப் பிரான்சுருதி யியம்பும் வாயாற்
றில்லைவா ழந்தணர்த மடியார்க்கு மடியேனென் றெடுத்த சீரார்
நல்லவே தாகமங்கள் கரைகண்டோர் நாமிவரி லொருவ ரென்று
சொல்லமா நடராசற் பெறுமூவா யிரமுனிவர் தொழுது வாழ்வாம்

எனச் சிதம்பர சபாநாத புராணமும் கூறுபவை நோக்கத் தக்கவை.

செம்மையாற் றணிந்த சிந்தைத் தெய்வவே தியர்க ளானோர்
மும்மையா யிரவர் தாங்கள் போற்றிட முதல்வ னாரை
யிம்மையே பெற்று வாழ்வா ரினிப்பெறும் பேறொன் றில்லார்
தம்மையே தமக்கொப் பான நிலைமையாற் றலைமை சார்ந்தார்

என்பது பெரிய புராண வசனம்.

"அந்தண ரென்போ ரறவோர்மற் றெவ்வுயிர்க்குஞ்
செந்தண்மை பூண்டொழுக லான்"

என்றபடி எல்லாவுயிர்கள் மேலும் காருண்ணிய முடையராய் அந்தணர் என்னும் பெயருக் குரியராகிய இவர்களின் பெருமையை அளவிடுதல் எவ்வாறு? மேலும் பாயிரத்தில்,

அளவி லாத பெருமைய ராகிய
அளவி லாவடி யார்புகழ் கூறுகேன்
அளவு கூட வுரைப்பரி தாயினு
மளவி லாசை துரப்ப வறைகுவேன்

எனத் தெய்வச் சேக்கிழார் கூறிப் போந்தார். எனவே, அடியார் பெருமை அளவிடுதற் கரிதென்பது. "தொண்டர்தம் பெருமை சொல்லவும் பெரிதே" என்றார் ஔவையாரும்.

கற்பனை கடந்த சோதி கருணையே யுருவ மாகி
யற்புதக் கோல நீடி யருமறைச் சிரத்தின் மேலாஞ்
சிற்பர வியோம மாகுந் திருச்சிற்றம் பலத்து ணின்று
பொற்புட னடஞ்செய் கின்ற பூங்கழல் போற்றி போற்றி.

—பெரிய புராணம்.

# திருநீலகண்ட நாயனார்



"தில்லைநகர் வேட்கோவர் தூர்த்த ராகித்
    தீண்டிலெமைத் திருநீல கண்ட மென்று
சொல்லுமனை யாட்டியையே யன்றி மற்றுந்
    துடியிடையா ரிடையின்பந் துறந்து மூத்துச்
செல்லலிலோ டிறைவைத்து மாற்றி நாங்க
    ளெடுத்திலமென் றியம்புமென விழிந்து பொய்கை
மெல்லியலா ளுடன்மூழ்கி யிளமை யெய்தி
    விளங்குபுலீச் சரத்தரனை மேவி னாரே."

இவர் சிதம்பரத்தில் வேட்கோவர் (குயவர்) குலத்தில் திருவவதாரஞ் செய்தார். சைவசித்தாந்த சமயமே மெய்ச் சமயமென் றுணர்ந்து அதன்படி யொழுகிவந்தார். தமது குலத்துக்கேற்ப மட்பாத்திரங்களைச் செய்து சீவனஞ் செய்வதோடு அடியவர்களுக்குத் திருவோடுகளை நியம மாகக் கொடுத்தும் வந்தார். இவர் சிற்றின்பத் துறையில் இச்சையுள்ளவராய் வேசி கமனஞ் செய்துவந்தார். இவர் அடியார் பத்தியில் சிறந்தவராயினும், இன்பத்துறையில் கரை தெரியாது மயங்கித் திரிவதை இவர் மனைவியார் அறிந்தார். ஒருநாள் அவர் வேசியிடஞ் சென்று வீட்டுக்குத் திரும்பிவந்தார். அவர் மனைவியார் தம் கணவனுக்குச் செய்யவேண்டிய தொண்டுகளைச் செய்து புணர்ச்சிக்கு மாத்திரம் இசையாதிருந்தார். நாயனார் மனைவியாருக்கு வேண்டியவைகளைச் சொல்லி அவரைத் தீண்டப்போனார். அப்போது மனைவியார் எம்மைத் தீண்டுவீராயின் "திரு நீலகண்டம்" எனச் சூள்மொழி சொல்லக் கேட்டு "என்னை" என்னாது "எம்மை" எனப் பன்மையில் சொன்னமையால் மனைவியை மாத்திரமன்றி மற்றெந்த மாதரையும் மனதினாலும் நினையேனென்று உறுதிப் பாட்டோடிருந்தனர். அருந்ததிக்கொப்பாகிய அவர் மனைவி யும் தமது நாயகனுக்குச் செய்யவேண்டிய கடமைகளை யெல்லாம் குறைவின்றிச் செய்தும் அவர் திருமேனியைத் தீண்டாதிருந்தார். இருவரும் வீட்டில் வேறு வேறாக

வசித்து வந்தார்கள். தொடர்பு இன்மையைப் பிறரறியா வண்ணம் இளம் பருவத்தைக் கடந்து மூப்புப்பருவ மெய்தினூர்கள்.

காமம் தலைப்படுமாயின், அது எத்துணைப் பெரியோர் அறிவையும் மயக்கும். தாம் செல்லத்தக்க இடம் இது, தாம் செல்லத்தகாத இடம் இது என்பதை யறியவிடாது.

> "நெஞ்சினு நினைப்பரோ நினைந்துளார்தமை
> எஞ்சிய துபரிடை யீண்டை யுய்த்துமேல்
> விஞ்சிய பவக்கடல் வீழ்த்து மாதலால்
> நஞ்சினுந் தீயது நலமில் காமமே."

—கந்த புராணம்.

இந்திரன் கௌதம முனிவர் மனைவியாகிய அகலிகையோடு சேர்ந்து அம்முனிவர் சாபத்தால் உடம்பு முழுவதும் ஆயிரம் யோனிகளையுடையவனுனன். சந்திரன் தன் குருவாகிய வியாழனுடைய மனைவியைப் புணர்ந்து கயரோகம் பெற்றுன். பிரமா தன்னுல் சிருஷ்டிக்கப்பட்ட திலோத்தமையின் அழகில் மயங்கி அவள் பின் சென்றுன்.* எவராலும் நீக்குதற்கரிய காமத்தை இருவருமொழித்து உலகத்திலுள்ளவர்கள் சாட்சி யென்பதைக் கிஞ்சித்தேனுங் கவனியாது தங்கள் முதல்வராகிய சிவபெருமானது திருவடிகளையே சாட்சியென்று கொண்ட திருநீலகண்ட நாயனுர் "திருநீலகண்டம்" என்ற திருநாமத்தில் பேரன்புடையவராய் இருந்தார்.

திருநீலகண்ட நாயனுரும் அவர் மனைவியாரும் இப்படிப் பேரன்போடு ஒருவரையொருவர் தீண்டாது வாழ்ந்துவரும் நாளில் சிவபெருமான் நாயனுருடைய அன்பின் வலிமையை உலகத்தாருக்குத் தெரிவிக்கும் பொருட்டு ஓர் சிவயோகியின் வடிவமெடுத்து அவர் வீட்டுக்குச் சென்று ஓர் திருவோட்டை அவரிடங் கொடுத்து அதனை வைத்திருந்து தாம் வந்து கேட்கும் போது தரும்படி பணித்துச் சென்றூர். அவ்வோடு கொடுத்துப் பலநாள் கழிந்த பின்னர், நடராசமூர்த்தியானவர் தான் வைக்கும்படி கொடுத்திருந்த ஓட்டை அப்புறப்படுத்தி நாயனுரிடம் வழக்குத் தொடுத்து மனைவியுடைய கரம் பற்றித் தடாகத்தில் மூழ்கிச் சத்தியம் பண்ணிக்கொடுக்கும்படி கேட்டார்.

* இவை புராண கதைகள்.

"இல்லாளைப் பற்றிமூழ் கென்றிடவு மன்புகுன்றா
தொல்லைநெறி நீலகண்டர் சோமேசா—வொல்லா
தழிவந்த செய்யினு மன்பரு ரன்பின்
வழிவந்த கேண்மை யவர்"

என்றபடி திருநீலகண்ட நாயனார் தம் மனைவியின் கைப் பிடித்தல் சத்தியத்துக்கு மாறென்றுணர்ந்து ஓர் மூங்கில் தண்டை இருவருமாய்ப் பிடித்து மூழ்கி எழுந்தபோது இளமைப் பருவத்தை அடைந்து, சிவபெருமான் இடப வாகனத்தில் எழுந்தருளிக் காட்சி கொடுக்கத் தரிசித்துச் சிவலோகமடைந்தனர்.

"மாது சொன்ன சூளால் இளமை துறக்கவல்லேனல்லன்" என்றார் பட்டினத்துப் பிள்ளையார்.

---

# இயற்பகை நாயனார்

எழிலாரும் காவிரிப்பூம் பட்டி னத்து
வியல்வணிக ரியற்பகையா ரிருவர் தேட
வழலாய பிரான்றூர்த்த மறையோ னாகி
யாயிழையைத் தரவேண்டி யணைய வையன்
கழலாரப் பணிந்துமனைக் கற்பின் மேன்மைக்
காதலியைக் கொடுத்தமர்செய் கருத்தால் வந்த
பிழையாருஞ் சுற்றமெலாந் துணித்து மீளப்
பிஞ்ஞகனு ரழைத்தருளப் பெற்று ளாரே.

இயற்பகை நாயனார் சோழ நாட்டிலே காவிரிப்பூம் பட்டணத்திலே வைசியர் குலத்தில் திருவவதாரஞ் செய்தார். இவர் சிவபெருமானிடத்திலே மிகுந்த அன்புள்ளவர். அடியார்கள் எவரேனும் வேண்டுவனவற்றை இல்லையென்னாது அவர்கள் திருப்தியாகும்படி கொடுக்கும் இயல்புடையவர். இவர் மனைவியோடுகூடி இல்லற தருமம் வழுவாது நடத்திவந்தார். இவர்கள் அன்பின் உறுதிப் பாட்டை உலகத்தார் அறிந்துய்யும்பொருட்டுச் சிவ பெருமான் பிராமண வேடமெடுத்து நாயனாரிடம் வந்தார்.

நாயனர் இவரை எதிர்கொண்டு அழைத்துவந்து விதிப்படி அர்ச்சித்து, 'சுவாமி! இங்கெழுந்தருளப் பெற்றது யான் செய்த தவப்பயனே' என்று இன்னுரை கூறினர். சுவாமி திருவுளம் விரும்பியதை இன்னதென்று சொல்லி யருளு மெனக் கேட்டார். அடியார் 'தமது மனைவியை எனக்குத் தரவேண்டும்!' என்றார். நாயனரும் மகிழ்ந்து மனைவியைக் கொடுத்தார்.

ஒரு பரஸ்திரியிடம் மயங்கியிருக்கிறவன் தன் பொருட்களைத் தான் அனுபவிப்பதிலும் அவள் அனுபவித்தலை இன்பமாகக் கொள்வான். அவ்வண்ணமே பிறவிகள்தோறும் பிரயோசனங் கருதாது தவஞ்செய்து அளவிறந்த சிவ புண்ணியங்களையும், சிவனைப்போலச் சிவனடியார்களிடத்திலும் அதிதீவிர பக்தியும் உள்ள இயற்பகை நாயனர் தமக்குரிய எப்பொருள்களையும் தாம் அனுபவித்தலிலும் சிவனடியார்கள் அனுபவித்தலையே இன்பமாகக் கொண்டார்.

அடியார் அப்பெண்ணை அழைத்துக்கொண்டு செல்லும்பொருட்டு இயற்பகை நாயனரை வழித்துணையாக வரும்படி கேட்டார். தனபாலன் என்னும் செட்டியாருக்கு வழித்துணையாகச் சென்ற சிவபெருமானுக்கு இயற்பகை நாயனர் வழித்துணையாகச் சென்றார்.

> வழிவிடுந் துணைபின் போத வழித்துணை யாகி யுள்ளார்
> கழிபெருங் காதல் காட்டிக் காரிகை யுடன்போம் போதில்
> அழிதகன் போகே லீண்ட வருங்குலக் கொடியை விட்டுப்
> பழிவிட நீபோவென்று பகர்ந்தெதிர் மிரைந்து வந்தார்.
>
> —பெரிய புராணம்.

இயற்பகை நாயனர் ஆயுதபாணியாய்ச் சென்ற போது சுற்றத்தார் வழிமடக்கிச் சண்டையிட்டனர். அடியார் வேடம் பூண்ட சிவபெருமான் பயந்தவர்போல் நாயனர் மனைவியை நோக்க, அம்மாது 'இறைவரே! அஞ்சற்க: இயற்பகையார் போர்செய்து வெல்லுவா' ரென்றார். 'மதிகெட்டவனே! பெண்ணைக் கொடுத்தோ புண்ணியம் தேடுவது? நாங்கள் மடிந்தாலும் பெண்ணை விடோம்' என்று ஆயுதங்கள் கொண்டு சுற்றத்தவர்கள் எதிர்த்தனர். இவர்களை யெல்லாம் கரம் வேறு, கால் வேறு, தரம் வேருகச்

சிவன்கழல் பேணிய வீரராகிய இயற்பகை நாயனர் துணித்துக் கொன்றனர். வேதியர் இயற்பகை நாயனரை நோக்கி 'இனி நீ போகலாம்' எனப் பணித்தருள, மனைவியைத் திரும்பிப் பாராது நடந்தனர்.

" மீளென் றுரைப்பளவு மிக்குவகை பெற்றிலர்வன்
றோள ரியற்பகையார் சோமேசா—நீளுலகில்
இன்னு திரக்கப் படுத விரந்தவ
ரின்முகங் காணு மளவு"

என்னும் முதுமொழி வெண்பாவினுலும் இந் நாயனரது ஈகையின் பெருமை புகழ்ந்துரைக்கப்படுதல் காண்க.

இயற்பகை நாயனர் தாம் எண்ணியதை நிறைவேற்றிக் களிப்புடன் போகும்போது செயற்கரிய காரியம் செய்த இயற்பகையாரை அடியார் மீளவும் கூவி அழைத்தார்.

"செயற்கரிய செய்வார் பெரியர்" என்பது திருக்குறள் வாக்கியம்.

" இயற்பகை முனிவா வோலம் மீண்டுநீ வருவா யோல
மயர்ப்பிலா தானே யோல மன்பனே யோல மோலஞ்
செயற கருஞ் செய்கை செய்த தீரனே யோல மென்றான்
மயக்கறு மறையோ விட்டு மாலயன் றேட நின்றான்"

—பெரிய புராணம்.

எனச் சேக்கிழார் இதனை வியந்தனர்.

இந்த ஒலத்தைக் கேட்டு இயற்பகை நாயனர் ஓடிவர வேதியர் மறைந்தனர். இயற்பகையாரும் மனைவியும் அடியாரைக் காணுது திகைத்து நின்றனர். அப்போது சிவபெருமான் விடைமேல் பார்வதி சமேதராய் ஆகாயத்தில் தோன்றிக் காட்சி கொடுத்தார். இயற்பகை நாயனர் ஆனந்த பரவசராகி,

" சொல்லுவ தறியேன் வாழி தோற்றிய தோற்றம் போற்றி
வல்லவந் தருளி யென்னை வழித்தொண்டு கொண்டாய் போற்றி
யெல்லையி லின்ப வெள்ள மெனக்கருள் செய்தாய் போற்றி
தில்லையம் பலத்து ளாடும் சேவடி போற்றி யென்ன"

—பெரிய புராணம்.

என்று துதித்து வணங்கினார். சிவபெருமான் இயற்பகை நாயனார், அவர் மனைவியார், யுததத்தில் மாண்டோர் யாவர்க்கும் முத்தி கொடுத்தருளி மறைந்தார்.

" வழிவிடுந் துணையின் போத வழித்துணையாகி யுள்ளார்

---

# இளையான்குடிமாற நாயனார்

மன்னிய வேளாண் டொன்மை யிளசைமாறர்
வறுமையா லுணவுமிக மறந்து வைகி
யுன்னருநள் ளிருண்மழையி லுண்டி வேண்டி
யும்பர்பிரா னணைய வய லுழுது வித்துஞ்
செந்நெல்முளை யமுதுமனை யலக்கா லாக்கிச்
சிறு பயிரின் கறியமுது திருந்தச் செய்து
பன்னலரு முணவருந்தற் கெழுந்த சோதிப்
பரலோக முழுதாண்ட பான்மை யாரே.

இளையான் குடிமாற நாயனார் வேளாளர் குலத்தில் திருவவதாரஞ் செய்தார். நடராச மூர்த்தியின்து திருவடிகளை என்றும் தியானிக்கின்ற பேரன்பையுடையவர். சர்வ சங்கார காலத்தில் பிரமா விஷ்ணுக்களை யழித்து அவர்களின் எலும்புகளை மாலையாகக் கோர்த்துத் தரித்த சிவபெருமானுடைய அடியவர்கள் எக்குலத்தாராயினும் மிகுந்த அன்போடு எதிர்கொண்டு வணங்கி அவர்களுக்கு இனிய வார்த்தைகளைக் கூறி யுபசாரஞ் செய்பவர்.

" ஆர மென்பு புனைந்த வையர்த மன்ப ரென்பதொர் தன்மையா
னேர வந்தவர் யாவ ராயினு நித்த மாகிய பத்திமுன்
கூர வந்தெதிர் கொண்டு கைகள் குவித்து நின்று செவிப்புலத்
தீர மென்மது ரப்ப தம்பரி வெய்த முன்னுரை செய்தபின் "

—பெரிய புராணம்.

என்பது தனபாலன் என்னும் வர்த்தகருக்கு வழித்துணையாகப் போனதைக் குறிப்பது.

சிவபெருமான் எலும்பு மாலையை அடையாளமாக அணிந்திருப்பதன் காரணம்:

"நங்கா யிதென்னதவம் நரம்போ டெலும்பணிந்து
கங்காளந் தோள்மேலே காதலித்தான் காணேடி
கங்காளம் ஆமாகேள் காலாந் தரத்திருவர்
தங்காலஞ் செய்யத் தரித்தனன்காண் சாழலோ"

என்னும் திருவாசகத்தில் உணர்த்தப்பட்டது.

அடியாரை அழைத்து வந்து அவர்களின் திருவடிகளை நீரினல் அலம்பி அன்போடு ஆசனத்திருத்தி அறுவகைச் சுவையோடுகூடிய நால்வகை உணவுகளால் திருவமுது கொடுத்துவந்தார்.

"கொண்டு வந்து மனைப் புகுந்து குலாவு பாதம் விளக்கியே
மண்டு காதலி ளுத னத்திடை வைத்த ருச்சனை செய்தபின்
உண்டி நாலு விதத்தி லாறு சுவைத்தி றத்தினி லொப்பிலா
அண்டர் நாயகர் தொண்ட ரிச்சையி னமுது செய்ய வளித்துளார்."

—பெரியபுராணம்.

இல்லறத்திலிருந்து கணவனும் மனைவியும் ஒரு மனதோடு செய்யும் சிவ புண்ணியங்களுள் அடியார் பூசை மிகச் சிறந்தது. விபூதி உருத்திராட்சம் முதலிய சிவ சின்னங்கள் உடையவர்களைக் கண்டமாத்திரத்தில் மிகுந்த அன்புடன் எதிர்கொண்டு அவர்களைச் சிவமாகப் பாவித்து இனிய வசனங்களைக் கூறி வீட்டுக் கழைத்து வந்து அவர்கள் திருவடிகளை நீரினல் கழுவி உள்ளம் பூரித்து ஆசனத்திருத்தி பத்திரபுஷ்பம், தூபதீபம், விபூதிமடல் முதலியவைகளால் விதிப்படி செய்யவேண்டிய பூசைகளைச் செய்து நமஸ்கரித்து உண்ணப்படும் சோறு முதலியனவும், தின்னப்படும் கறி முதலியனவும், நக்கப்படும் குழம்பு, தேன், பச்சடி முதலியனவும், பருகப்படும் பாயசம் நீர் முதலியனவுமாகிய நால்வகை உணவுகளைக் கைப்பு - புளிப்பு - இனிப்பு - துவர்ப்பு - கார்ப்பு - உவர்ப்பு ஆகிய அறுவகைச் சுவைகளோடு அடியார்கள் மனமகிழ்ந் துவக்கும்படி திருவமுது செய்வித்து அவர்களை வழிவிட்டு அனுப்ப வேண்டியது.

"உருப் பொலாதவ ரிழிகுலத் தவர்நல் லொழுக்க
மில்லவ ரென்றுநம் மளவில்
விருப்பி லாதவ ரெனினு மெய்ந்நீறு
மிக்க சாதன வேடமுங் கண்டாற்
றரிப்பி லாதுசென் றெதிருற வணங்கித்
தக்கபோனக மளித்தவர்க் கெளிதா
விருப்பர் தாமவர்க் கடியவர்க் கடியா
ரென்பர் யாளென தெனுஞ்செருக் கறுப்பார்"

என்னும் திருவாதவூரடிகள் புராணத்தாலும்,

> "ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனுங்
> கங்கைவார் சடைக்கரந்தார்க் கன்பராகி
> லவர்கண்டீர் நாம் வணங்கும் கடவுளாரே"

என்னும் தேவாரத்தாலும்,

> "தேசிகர் தம்மைச் சிவநேசர் தம்மையு
> மீசனென வேயுளத்து ளெண்"

என்னும் சைவ சமய நெறியாலும்,

> "அகர.மாயிர மந்தணர்க் கீயிலென்
> சிகர மாயிரஞ் செய்து முடிக்கிலென்
> பகரு ஞானி பகலூண் பலத்துக்கு
> நிகரி ல்லை யென்பது நிச்சயந் தானே."

> "ஆறிடு வேள்வி யருமறை நூலவர்
> கூறிடு மந்தணர் கோடிபே ருண்பதி
> னீறிடுந் தொண்டர் நினைவின் பயனிலே
> பேறெனி லோர்பிடி பேறது வாகுமே"

என்னும் திருமந்திரத்தாலும் அறிக.

நாயனார் இவ் வடியார் பூசையைத் தினந்தோறும் செய்துவந்த புண்ணியத்தினால் செல்வம் மேலிட்டுக் குபேரனைப்போல வாழ்ந்திருந்தார். இவ்வடியார் தாம் செய்து வந்த தொண்டைச் செல்வமுள்ளபோது விதிமுறை தவறாது நடத்தியதுபோல வறுமை வந்தபோதுஞ் செய்து வந்தார். இங்ஙனம் செய்து வரும்போது நாயனாருடைய செல்வமெல்லாம் நாளுக்கு நாள் குறைந்து வறுமை மேலிட்டது. இப்படிச் செல்வக் குறைவால் இடுக்கண் எய்தவும் தொண்டளவில் யாதோர் குறையுமின்றி நடத்தி வந்தார். சிலநாட்கள் சென்றபின் உணவுக்கும் வழியில்லாதிருந்தார். அவர் சுற்றத்தார் சிநேகர் அயலவர்கள் உதவியுங் கிடைக்கப் பெறாதவரானார். பசியினால் நித்திரையின்றி இருந்த ஓர் மழைநாளிரவில் நடராசமூர்த்தி இவர்களது அடியார் பத்தியை உலகத்தாருக்குக் காண்பிக்கும்பொருட்டு அடியார் வடிவந்தாங்கி இளையான் குடிமாற நாயனாருடைய இல்லத்துக்குச் சென்று அவர்

கதவைத் தட்டினார். இராக்காலத்தில் வந்த சிவபெருமானாகிய விருந்தினரை மிகுந்த ஆசையோடு இளையான்குடிமாற நாயனார் எதிர்கொண்டழைத்தார்.

> "மாரிக் காலத் திரவினில் வைகியோர்
> தாரிப் பின்றிப் பசிதலைக் கொள்வது
> பாரித் தில்ல மடைந்தபின் பண்புற
> வேரித் தாரான் விருந்தெதிர் கொண்டனன்."
>
> —பெரியபுராணம்.

இளையான் குடிமாற நாயனாரைப்போல அவர் மனைவியாரும் அடியார் பூசையில் பெரிதும் அன்பு உடையவர். உலகத்துள்ள ஆன்மாக்கள் புண்ணியஞ் செய்யும்போது பயனைக் கருதிச் செய்யக் கூடாதென்றும், துன்பம் வறுமை வரும்போது தாங்கள் புண்ணியஞ் செய்திருக்கக் கடவுள் இப்படித் துன்பத்தைக் கொடுத்தாரே என்று வருத்தப்படக் கூடாதென்றும் உணர்ந்திருந்தனர்.

அடியார் வேடங்கொண்டு எழுந்தருளிய சிவபெருமான் திருமேனியை நாயனார் வஸ்திரத்தினால் துடைத்து, அவரை உட்காரும்படி செய்து அவருக்குத் திருவமுது கொடுக்கவேண்டுமென்ற ஆசை மேலீட்டினால் தம் மனைவியைப் பார்த்து, "நாம் உண்பதற்கு உணவில்லாதிருந்தபோதிலும் இவ்வடியவருக்கு அன்னம் கொடுக்க வேண்டுமே, என்ன செய்வோம்" என்றார். அம்மையார் அதுகேட்டு, "பிராணநாயகரே! பாகம் பண்ணுவதற்கேற்ற பொருள்களோ இல்லை. அயலாரும் உதவிசெய்ய மாட்டார்கள். யாதொரு குறைவின்றி நடந்துவந்த பூசைக்கு இன்றையதினம் முட்டுப்பாடு வந்ததே" என்று வருந்தினார். பின் நாயனாரைப் பார்த்து, "இன்று பகல் விதைத்த நென் முளைகளைக் கொண்டுவந்தால் அமுது ஆக்கலாம்" என்றார்.

> "மாது கூறுவண் மற்றொன்றுங் காண்கிலே
> னேதி லாரு மினித்தரு வாரில்லை
> போதும் வைகிற்றுப் போமிடம் வேறிலை
> தீது செய்வினை யேற்கென் செயலென்று."

> "செல்ல னீங்கப் பகல்வித்திய செந்நென்
> மல்ல னீர்முளை வாரிக் கொடுவந்தால்

வல்ல வாறமு தாக்கலு மாகுமற்
றல்ல தொன்றறி யேனென் றயர்வுற.''

—பெரியபுராணம்.

மனைவியார் சொல்லைக் கேட்ட, நாயனார் மனமகிழ்ந்து ஒரு கூடையுங் கொண்டு அந்த நடு இராத்திரியில் வழி தடவிக்கொண்டு குறிப்பினால் வயலில் சென்று நெல் முளைகளை வாரிக் கூடையில் நிறைத்து வீட்டுக்கு வந்தார். எதிர் பார்த்திருந்த மனைவியார் அக்கூடையை மிகுந்த விருப்பத் தோடு வாங்கி, ஒட்டியிருந்த சேற்றை நீரினால் கழுவி ஓட்டில் வறுத்து உமிபோக்கி அரிசியாக்கி, அடிசில் செய்வ தற்கு விறகு இல்லை என்று கூறினார். நாயனார் வீட்டு மரங்களிற் சிலவற்றைக் கொண்டுவந்து கொடுத்தார். மனைவியார் அமுது பாகம் பண்ணி முடிந்தபின் கறியில்லை யென்று கவலையோடு சொன்னார்.

நாயனார் கொல்லையிலிருந்த இலை வகைகளைப் பறித்துக் கொண்டுவந்து கொடுத்தார். அம்மையார் அவைகளை வாங்கிப் பாகம் பண்ணினார்.

"பண்டைவினை வெண்ணிநொந்தார் பாகஞ்செய் மாறனாராந்
தொண்டர் மனைவியார் சோமேசா—கண்டோ
நயனுடையா னல்கூர்ந்தா னாதல் செயுநீர
செய்யா தமைகலா வாறு''

என்றபடி செல்வம் பெருகிய முன்னாளில் அடியார்களை உபசரித்த ஞாபகத்தால் இப்போதைக் குறையை எண்ணி வருந்தினார். அம்மையார் நாயனாரை நோக்கி "என் உயிர்த் துணைவரே! அமுது கறிகள் எல்லாம் சமையல் செய்யப்பட்டு முடிந்தன'' என்றார். உடனே நாயனார் அடியவரை யணுகி, "தேவரீர் திருவமுது செய்ய எழுந் தருளவேண்டும்'' என்று பிரார்த்திக்க, அவ்வடியவர் மறைந்து சோதி மயமாகத் தோன்றினர். இருவரும் மெய்ம்மறந்து நின்றனர். சிவபெருமான் உமாதேவியா ரோடு இடபவாகனத் தமர்ந்து அவர்களுக்குக் காட்சி கொடுத்தருள இருவரும் முத்தியின்பம் பெற்றனர்.

"மாலயற் கரிய நாதன் வடிவொரு சோதி யாகச்
சாலவே மயக்கு வார்க்குச் சங்கரன் றன்ம கிழ்ந்தே
யேலவார் குழலா டன்னோ டிடபவா கனனாய்த் தோன்றிச்
சீலமார் பூசை செய்த திருத்தொண்டர் தம்மை நோக்கி"

"அன்பனே யன்பர் பூசை யளித்தநீ யணங்கி னோடு
மென்பெரு முலக மெய்தி இருநிதிக் கிழவன் றனே
முன்பெரு நிதிய மேந்தி மொழிவழி யேவல் கேட்ப
வின்பமார்ந் திருக்க வென்றே யருள்செய்தா னெவர்க்கு மிக்கான்"

—பெரிய புராணம்.

---

# மெய்ப்பொருளனார்

சேதிபர்நற் கோவலூர் மலாட மன்னர்
திருவேட மெய்ப் பொருளாத் தெளிந்த சிந்தை
நீதியினா ருடன்பொருது தோற்ற மாற்ற
னெடுஞ்சினமுங் கொடும்படையு நிகழா வண்ண
மாதவர்போ லொருமுறைகொண் டணுகி வாளால்
வன்மைபுரிந் திடமருண்டு வந்த தத்தன்
காதலுற நமர்தத்தா வென்று நோக்கிக்
கடிதகல்வித் திறைவனடி கைக்கொண் டாரே.

மெய்ப்பொருளனார் சேதிநாட்டைச் சேர்ந்த திருக்கோவலூரில் அரசுசெய்து வந்தார். இவர் அடியார்களது திருவேடமே மெய்ப்பொருளெனத் தெளிந்து அவ வரவர்கள் குறிப்பறிந்து அவரவர்க்கேற்ற தொண்டு செய்து வந்தார்.

"தேடிய மாடு நீடு செல்வமுந் தில்லை மன்று
ளாடிய பெருமா னன்பர்க் காவன வாகுமென்று
நாடிய மனத்தி னோடு நாயன்மா ரணைந்த போது
கூடிய மகிழ்ச்சி பொங்கக் குறைவறக் கொடுத்து வந்தார்"

—பெரியபுராணம்.

நாயனாரது பகைவனாகிய முத்திநாதன் இவருடன் சண்டைசெய்து வெல்லவேண்டுமென்னும் ஆசையால் பல தரம் நால்வகைச் சேனைகளையும் இழந்து அவமானப்பட்டுப் போயினன். மெய்ப்பொருளனாரை யுத்தத்தில் வெல்ல முடியாத முத்திநாதன், அவரது அடியார் பத்தியை

அறிந்து விபூதி தரிக்கும் அடியார் வேடம் பூண்டுவந்து அரண்மனையை அடைந்தான். பல வாயில்களையுங் கடந்து கடைசி வாயிலைச் சேர்ந்தபோது, அவ்வாயிற் காப்போனாகிய தத்தன், 'சமயம் பார்த்துப் போகவேண்டும். அரசர் தூங்குகிறு' ரென்றான். அதற்கு முத்திநாதன், 'தான் அரசருக்கு உபதேசஞ் செய்ய வந்திருப்பதால் தடுக்கலாகாதென்று கூறிப் புகுந்தான். அரசர் கட்டிலிலே உறங்கவும், மாதேவி பக்கத்தே இருப்பவும் கண்டும் நெருங்கினான். மாதேவி அரசனை எழுப்ப, அரசர் சிவனடியாரை எதிர்கொண்டு வணங்கினர். 'வந்த காரியம் யா'தென வினவினர். எங்கும் இல்லாத ஆகமம் ஒன்றைக் கொண்டுவந்ததாகக் கூறினன். அரசன் அதன் பொருளைச் சொல்லும்படி கேட்க, தனியாக இருக்கவேண்டுமென்று முத்திநாதன் சொன்னன். அப்படியே அரசன் இருப்பவும், புத்தகக் கவளியை அவிழ்ப்பவன்போல் மறைத்து வைத்திருந்த உடைவாளால் அவரைக் கொன்றான். இதனைக் கண்ட மெய்க்காப்பாளனாகிய தத்தன் அவனைக் கொல்ல எத்தனித்தபோது, அவனைக் கொல்லாது தடுத்ததுமன்றிச் சிவதொண்டனாகவும் மதித்து வழியில் அவனுக்கு ஒரு இடையூறும் வாராது காத்து அனுப்பும்படி அரசன் தத்தனுக்குக் கட்டளையிட்டார்.

> "ஒட்டலன்செய் தீமைக் கொரூதுநம ரென்றுரைத்தார்
> சுட்டியசீர் மெய்ப்பொருளார் சோமேசா—முட்ட
> ஒறுத்தார்க் கொருநாளை யின்பம் பொறுத்தார்க்குப்
> பொன்றுந் துணையும் புகழ்"
>
> —முதுமொழி வெண்பா.

தமக்குப்பின் பட்டத்துக்குரிய தன் புதல்வனுக்கும் மந்திரிக்கும் சைவாகம விதிப்படி விபூதிமேல் வைத்த அன்பைப் பாதுகாக்கும்படி போதித்துச் சபாநாதரைத் தியானித்து அவர் திருவடிகளை யடைந்தார்.

முளைக்கு வித்து காரணமாயிருப்பதுபோலப் பிறவிக்கு இச்சை காரணமாகும். வித்தில்லாதவிடத்து முளையுமில்லை. இச்சையில்லாவிடத்துப் பிறவியுமில்லை.

" அவாவென்ப வெல்லா வுயிர்க்கு மெஞ்ஞான்றுந்
தவாஅப் பிறப்பீனும் வித்து "

என்றார் திருவள்ளுவநாயனார்.

" ஆசை யறுமின்க ளாசை யறுமின்க
ளீசனோ டாயினு மாசை யறுமின்க
ளாசை படப்பட வாய்வருந் துன்பங்க
ளாசை விடவிட வானந் தமாமே "

என்பது திருமந்திரம்.

ஒருவன் எவ்விடயங்களை விரும்புகிறானோ அவைகளையெல்லாம் ஒவ்வொரு காலத்தில் அனுபவித்துத் தொலைப்பான். பயனைக் கருதிச் செய்யும் புண்ணியங்கள் ஒருவனுக்கு மேலான பிறவியைக் கொடுக்குமல்லாமல் மோட்சத்தைக் கொடுக்கமாட்டா. இச்சை வழியில் நிற்கின்ற ஆன்மாவைக் கடவுள் அவ்விச்சை வழியே செல்லும்படி விடுவர். பஞ்சேந்திரியங்கள் ஒருமைப்பட்டுச் சங்கற்ப விகற்பமற்றுச் சிவத்தோடு ஆன்மா சகசப்பட்டு நிற்கும்.

" விரதமெலா மாண்ட மனத்தார் மனத்தான்
கண்டாய் "

என்பது திருநாவுக்கரசு சுவாமிகள் திருவாக்கு. சிவத்தை எப்போதும் தியானிக்கவேண்டும்.

" நின்றாலு மிருந்தாலுங் கிடந்தாலு நடந்தாலு
மென்றாலுந் துயின்றாலும் விழித்தாலு மிமைத்தாலு
மன்றாடு மலர்ப்பாத மொருகாலு மறவாமை
குன்றாத வுணர்வுடையார் தொண்டராங் குணமிக்கார் "

என்பது பத்தராய்ப்பணிவார் புராணம். இவ்விதமாகத் தியானிக்கின்றவர், ஆன்மா உடம்பைவிட்டு நீங்கும்போதும் சிவத்தையே தியானிப்பார்கள். அப்படித் தியானிக்கில் வினைகள் ஆன்மாவைச் சாராமல் நீங்கிவிடுமென்பதும், ஆன்மா சிவத்தைச் சேருமென்பதும் சித்தாந்தத் துணிபாம்.

" ஐயுந் தொடர்ந்து விழியுஞ் சொருகி யறிவழிந்து
மெய்யும் பொய்யாகி விடுகின்ற போதொன்று வேண்டுவன்யான்
செய்யுந் திருவொற்றி யூருடையீர் திருநீறு மிட்டுக்
கையுந் தொழப்பண்ணி யைந்தெழுத் தோதவுங் கற்பியுமே "

என்பது பட்டினத்துப் பிள்ளையார் திருவாக்கு.

மெய்ப்பொருணாயனார் இவ்வாறு தியானித்து வந்தமையால், உயிர் நீங்கும்போதும் சபாநாதரைத் தியானம் பண்ணினார். அவர் அருளினால் சிவப்பேறு பெற்றனர்.

இக்காரணம்பற்றியே எல்லா மந்திரங்களுக்கும் மேலாகிய "சிவ" என்பதை என்றும் பெரியோர் செப்பர்.

"சிவசிவ வென்கிலர் தீவினை யாளர்
சிவசிவ வென்றிடத் தீவினை மாளுஞ்
சிவசிவ வென்றிடத் தேவரு மாவார்
சிவசிவ வென்னச் சிவகதி தானே"

என்பது திருமந்திரம்.

---

# விறன்மிண்ட நாயனுர்

விளங்குதிருச் செங்குன் ஞூர் வேளாண் டொன்மை
விறன்மிண்டர் திருவாரூர் மேவு நாளில்
வளங்குலவு தொண்டரடி வணங்கா தேகும்
வன்ெறாண்டன் புறகவனை வலிய வாண்ட
துளங்குசடை முடியோனும் புறகென் றன்பாற்
சொல்லுதலு மவர்தொண்டத் தொகைமுன் பாட
வுளங்குளிர வுளதென்று ரதனு லண்ணை
லுவகைதர வுயர்கணத்து ளோங்கி ஞரே.

மலையாளத்தைச் சேர்ந்த செங்குன்றூரில் வேளாளர் குலத்தில் பிறந்து 'யான்' 'எனது' என்னும் இருவகைப் பற்றுக்களையும் நீக்கிச் சிவபெருமானிடத்திலும் அடியாரிடத்திலுமுள்ள பத்தியின் வலிமையினுல் விறன்மிண்டர் என்னுங் காரணப்பெயரை யுடைய ஒருவர் இருந்தார். இவர் சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் தலங்களுக்குப் போய் அடியார் திருக்கூட்டத்தை முதல் வணங்கிப் பின் சிவபெருமானை வழிபடுந் தன்மை உடையவர். தமது நாட்டைவிட்டுப் பல தலங்களையும் வணங்கித் திருவாரூரை யடைந்து அடியார்களை வணங்கிச் சிவபெருமானைத் தரிசித்து அவ்வடியார்களுடனிருந்தார். ஒருநாள் சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாசிரிய மண்டபத்தில் எழுந்தருளியிருந்த அடியார்களை வணங்காது வன்மீகத் தியாகராச மூர்த்தியை வணங்கச் சென்றூர். அதுகண்ட விறன்மிண்ட நாயனுர் சுந்தரமூர்த்தி சுவாமிகளையும் அவரை அடிமை கொண்ட கடவுளையும் அடியார் கூட்டத்துக்குப்

புறகென்று சொன்னார். சுந்தரமூர்த்தி சுவாமிகள் அவ் விறன்மிண்ட நாயனாரது அடியார் பத்தியின் வலிமையைக் கண்டு "தில்லைவாழந்தணர் தம்மடியார்க்கு மடியேன்" எனத் தொடங்கித் திருத்தொண்டத் தொகையைப் பாடியருளினார். அப்பொழுது விறன்மிண்ட நாயனார் சுந்தரர் அடியார் கூட்டத்துள் சேர அருகரென்று சொல்லி மனமகிழ்ந்தார். சைவ சித்தாந்த சமயம் தழைத்தோங்குதற்குக் காரணமாகிய திருத்தொண்டத்தொகை பாடுதற்கு இவ் விறன்மிண்ட நாயனாரே முதற்காரணமாக இருந்தனர் என்றால் இவரது அடியார் பத்தியை யார் சொல்ல வல்லார் ?

"ஞால முய்ய நாமுய்ய நம்பி சைவ நன்னெறியின்
சீல முய்யத் திருத்தொண்டத் தொகைமுன் பாடச் செழுமறைகள்
ஓல மிடவு முணர்வரியா ரடியா ருடனாமுள தென்றால்
ஆல மமுது செய்தபிரா னடியார்பெருமை யறிந்தாரார்.

—பெரியபுராணம்.

---

## அமர்நீதி நாயனார்

பழையாறை வணிகரமர் நீதியார் பாற்
பரஞ்சிறுமுனி வடிவாய்ப்பயிலு நல்லூர்க்
குழைகாதர் வந்தொரு கோவணத்தை வைத்துக்
கொடுத்ததனை யெடுத்தொழித்துக் குளித்து வந்து
தொழிலொரு மதுவேண்டி வெகுண்டு நீரித்
துலையிலிடுங் கோவணை நேர்தூக்கு மென்ன
வெழிலாரும் பொன்மனைவி யிளஞ்சே யேற்றி
யேறினர் வானுலகு தொழ வே றினரே.

பழையாறைப் பதியில் வணிகர் குலத்தில் அவதாரஞ் செய்து "சிந்தை செய்வது சிவன் கழலல்ல தொன்றில்லார்" என்னுந் தன்மையையுடைய அமர்நீதி நாயனார் என்பவரொருவர் இருந்தார். இவர் தம்மிடம் வரும் அடியார்களுக்கு வேண்டிய அமுது, வஸ்திரம், கௌபீனம் முதலியவைகளை மிகுந்த அன்போடு கொடுத்துவந்தார். இவர் திருநல்லூர் என்னும் பதியில் சிவனடியார்கள் திரு

வமுது செய்வதற்காக ஒரு திருமடம் கட்டுவித்து, அத் திருமடத்தில் சிவனடியார்களைத் திருவமுது செய்வித்துக் கொண்டு இருந்தார். ஒருநாள் இவரது அடியார் பத்தியின் மகிமையை உலகத்தாருக்குக் காட்டும்பொருட்டுச் சிவபெருமான் சிவயோகியார் வடிவங்கொண்டு இரண்டு கௌபீனங்களை ஒரு தண்டில் தொடுத்து நாயனரது மடத்திற்கு எழுந்தருளினர். அடியார் வேடம் பூண்டு வந்த சிவபெருமானை நாயனர் வணங்கி, "தேவரீர் இத்திரு மடத்தில் திருவமுது செய்து போகவேண்டும்" என்று பிரார்த்தித்தார். அதுகேட்ட சிவயோகியார் தாம் கோலில் மாட்டியிருந்த இரண்டு கௌபீனத்தில் ஒன்றை நாயனரிடம் கொடுத்து "இதன் பெருமையை நான் உமக்குச் சொல்லவேண்டுவதில்லை" என்று சொல்லி, ஸ்நானம் பண்ணி வருவதற்குக் காவேரிக்குச் சென்றார். இறைவர் நாயனர் வைத்த இடத்தில் இருந்து அந்தக் கௌபீனத்தை மறையச் செய்தனர். ஸ்நானம் முடித்துத திருமடத்திற்கு வரும்பொழுது மழையில் நனைந்தவராய் வந்து, தான் கொடுத்துப்போன கௌபீனத்தைக் கொடுக்கும்படி நாயனரைக் கேட்டார். கௌபீனத்தை வைத்த இடத்தில் காணாமையாலஞ்சி வந்து அடியாரை நோக்கி, "கௌபீனம் வைத்த இடத்திலிருந்து தவறிவிட்டது. அதற்குப் பதிலாக நெய்த கௌபீனம் தருகின்றேன்" என்று வணக்கத்தோடு கூறினர். இதைக்கேட்ட அடியவர் முதலில் கோபங்கொண்டவராய், பிறகு சிறிது சினந் தணியப் பெற்றுத் தன் கையில் வைத்திருக்கும் கௌபீனத்தின் நிறைக்குத் தக்கதாகக் கொடுத்தால் ஏற்றுக்கொள்ளச் சம்மதமென்றனர். உடனே துலையை நாட்டி ஒரு தட்டில் அடியார் வைத்திருந்த கௌபீனத்தையிட்டு மற்றத் தட்டில் நாயனரிடம் நெய்யப்பட்டுள்ள கௌபீனங்களையும் அடியார்களுக்குக் கொடுக்கும்படி வைத்திருந்த பொன் வெள்ளிகளையும், பட்டுப் பீதாம்பரங்கள் எல்லாவற்றையும் வைத்தும் அவை நிறைக்குப் போதாமல் இருந்தன. அமர்நீதி நாயனர் பிரமசாரி வேடங்கொண்டு வந்த சிவபெருமானுக்கு முன்னே நின்று, தேவரீருடைய

கௌபீனத்துக்கு எடையாக நம்மிடத்திலுள்ள திரவியங்கள் எல்லாவற்றையும் தட்டிலிட்டு விட்டனன். இனி, அடியேனும் எனது மனைவியும் புதல்வனும் மாத்திரம் மிச்சமாய் நிற்கின்றோம். நாங்களும் இத்தட்டிலேறி நின்று நிறையை ஒத்திருக்கச்செய்ய அனுமதி தந்தருளும் என்றார். பிரமசாரியார் அதற்கு உடன்பட்ட மாத்திரத்தில் களிப்புடன் துலாக்கோலை மனைவியோடும் புதல்வனோடும் வலஞ்செய்து தாம் இதுவரையில் செய்த அடிமைத் திறத்தில் தவறாதிருந்தோமென்பது உண்மையானால் இத்துலை சரியொத்து நிற்கவேண்டுமென்று சிவபெருமானை வணங்கி அத்தட்டிலேறினார். உடனே தட்டுகளிரண்டும் சமமாய் நின்றன. தேவர்கள் புட்பமாரி பொழிந்தனர். சிவபெருமான் உமையம்மையாரோடு நாயனாருக்கும் மனைவியாருக்கும் மைந்தருக்கும் காட்சிகொடுத்துச் சிவலோகத்திலிருக்கும் பேரின்ப வாழ்வைக் கொடுத்தனர்.

இதனால் இந்நாயனாரது அடியார் பக்தியும், சிவபெருமானிடம் வைத்த பேரன்பும் எத்துணை யென்பது விளங்கும். சிவனடியாரைச் சிவம் எனப் பாவித்து அவர்களுக்குத் திருவமுது கௌபீனம் முதலியவைகளை அன்போடு கொடுப்பது சிறந்த புண்ணியமாம். இதனை,

"நாற்ற மாமலரோ னெழினு ரணன்
போற்று சங்கர னன்பற்குப் பொங்கிழை
யாற்று கோவண மீந்தவ ராயிரந்
தேற்று கோடி யுகஞ்சிவ லோகரே"

என்னும் சிவ புண்ணியத் தெளிவால் அறிக.

# எறிபத்த நாயனார்

திருமருவு கருவூரா னிலையார் சாத்துஞ்
சிவகாமி யார்மலரைச் சிந்த யானை
யரனெறியோ ரெறிபத்தர் பாக ரோடு
மறவெறிய வென்னுயிரு மகற்றீ ரென்று
புரவலனார் கொடுத்தபடை யன்பால் வாங்கிப்
புரிந்தரிவான் புகவெழுந்த புனித வாக்காற்
கரியினுடன் விழுந்தாரு மெழுந்தார் தாமுங்
கணநாத ரதுகாவல் கைக்கொண் டாரே.

எறிபத்தநாயனார் கருவூர்ப் பசுபதீசுரப் பெருமானிடத்தில் அன்புள்ளவராயிருந்தார். அடியார்களுக்கு வரும் துன்பத்தை நீக்குவதில் கண்ணுங் கருத்துமாயிருந்தார். ஒருநாள் சிவகாமியாண்டார் என்னும் அடியவர் சிவபெருமானுக்குச் சாத்தும்படி கொண்டுவந்த பூங்கூடையினைச் சோழராசனுடைய பட்டவர்த்தன யானை பறித்துச் சிந்திவிட்டது. சிவகாமியாண்டார் மனம் வருந்திச் சிவபெருமானை நோக்கி, "கயாசுரன் என்னும் யானையைக் கொன்று அதன் தோலைப் போர்வையாகத் தரித்தீர். மகா மேருமலையை வில்லாக்கி முப்புரங்களையும் எரித்தீர். மார்க்கண்டேயருக்காக யமனை உதைத்தீர். இந்த யானையைக் கொல்லுதலா உமக்கரிது! சிவதா !! சிவதா !!!" என்று ஓலமிட்டார்.

களியா னையினீ ருரியாய் சிவதா
வெளியார் வலியா மிறைவா சிவதா
வளியா ரடியா ரறிவே சிவதா
தெளிவா ரமுதே சிவதா சிவதா

ஆறும் மதியு மணியுஞ் சடைமேல்
ஏறும் மலரைக் கரிசிந் துவதே
வேறுண் ணினைவார் புரம்வெந் தவியச்
சீறுஞ் சிலையாய் சிவதா சிவதா

தஞ்சே சரணம் புகுதுந் தமியோர்
நெஞ்சேய் துயரங் கெடநேர் தொடரு
மஞ்சே யெனவீழ் மறலிக் கிறைநீள்
செஞ்சே வடியாய் சிவதா சிவதா

நெடியோ னறியா நெறியா ரறியும்
படியா லடிமைப் பணிசெய் தொழுகு
மடியார் களில்யா ரைரா வணைவாய்
முடியா முதலா யெனவே மொழிய.

—பெரியபுராணம்.

இப்படி ஓலமிடுவதைக் கேட்ட எறிபத்த நாயனார் அரசனது பட்டத்து யானையென்றும் எண்ணாமல் யானையையும் பாகர்களையும் வெட்டிக்கொன்றார். இதனை அறிந்த புகழ்ச் சோழர் வந்து பார்த்து, இவர் சிவனடியாராகையால் பிழை கண்டல்லது இவ்வாறு செய்யமாட்டார் என்றுணர்ந்து எறிபத்த நாயனாருக்கருகில் வந்து தம்மையும் வெட்டும்படி தனது உடைவாளையுருவி நாயனாரிடங் கொடுத்தார். அரசனது பத்தியைக் கண்ட எறிபத்த நாயனார் அவ்வாளை வாங்கித் தம் கழுத்தையறுக்கத் தொடங்கினார். உடனே யானை எழுந்தது. பாகரும் உயிர்பெற்றெழுந்தனர். சிவகாமியாண்டாருக்கு நேர்ந்த துன்பத்தை நீக்கியது போலவே அடியார்களுக்குத் துன்பம் வந்தபோது அவைகளை நீக்கி அடியார்கள் இன்புறச் செய்தவராதலால் சிவகணங்களுக்குத் தலைவராயிருக்கும் முதன்மையை எறிபத்த நாயனார் பெற்றார்.

சிவனடியார்களுக்கு இடையூறு செய்கிறவர்களைக் கொல்லுதல் பாவமாகுமோ? ஆகமாட்டாது. சிவனடியவர்களுக்கு இடையூறு விளைவிப்போர், மெய்ப்பொருள் நாயனாருக்கு வஞ்சகத் தொழிலைச் செய்த முத்திநாதனையும், ஏனாதி நாயனாரிடம் கொடிய தொழிலைச் செய்த அதிசூரனையும் போல நரகத்தில் வீழ்ந்து வருந்துவர். சிவதா என்பது இரக்கக் குறிப்பைக் காட்டும் ஓர் சொல்.

வெங்கரியைப் பாகரைமுன் வீட்டினரே காராய்த்
துங்க வெறிபத்தர் சோமேசா—வங்கம்
பரியது கூர்ங்கோட்ட தாயினும் யானை
வெரூஉம் புலிதாக் குறின்.

என்பது நாயனாரைப் போற்றும் முதுமொழி வெண்பா—இதனால் யானை பெரிய உடம்பையும் கொம்புகளையுமுடையதாயினும் புலி தாக்குவதற்கு அஞ்சும் என்பது பெறப்பட்டது.

# ஏனாதிநாத நாயனார்

ஈழக்குலச்சான்றா ரெயின னூர்வா ழேனாதி
 நாதனா ரிறைவ னீற்றைத்
தாழத் தொழுமரபார் படைக ளாற்றுந் தன்மைபெறா
 வதிசூரன் சமரிற் றோற்று
வாழத் திருநீறு சாத்தக் கண்டு மருண்டார்தெ ருண்டார்
 கைவாள் வி டார்நேர்
வீழக் களிப்பார் போ னின்றே யாக்கை விடுவித்துச்
 சிவனருளே மேவினாரே.

இவர் சோழநாட்டில் எயினனூரில் ஈழக்குலச் சான்றார் மரபில் தோன்றிச் சிவநேசராய் விபூதியில் அன்பு வைத்து அரசர்களுக்கு வாள்வித்தை பயிற்றுவதில் மேன்மை பெற்றவர்.

ஏனாதிநாத நாயனார் அரசர்களுக்கு வாள்வித்தை கற்றுக்கொடுப்பதில் வரும் பொருளையெல்லாம் சிவனடியார்களுக்கு ஈந்து வந்தார். அவரது தாயாதியாகிய அதிசூரனுக்கு வாள்வித்தை பயிற்றுவதில் வந்த ஆதாயம் நாளுக்கு நாள் குறைந்தது. ஏனாதிநாத நாயனாருக்கு ஆதாயம் பெருகுவதைக் கண்ட அதிசூரன் பொறாமையினால் அவரோடு நேரில் யுத்தம் புரிந்து வெல்லல் அரிதென்று கண்டு உபாயத்தால் அவரைக் கொல்லத் தீர்மானித்தான். இந்நாயனார் சிவ சின்னமாகிய விபூதி, உருத்திராட்சம் தரித்தவர்களுக்கு யாதொரு துன்பமும் செய்ய மாட்டாரென்று அறிந்த அதிசூரன் வஞ்சக வேடங் கொண்டு விபூதி தரித்து யுத்தத்துக்கு வந்தான். அவனைக் கொல்லத்தக்க வல்லமை ஏனாதி நாயனாருக்கிருந்தும் விபூதி தரித்திருப்பதைக் கண்ட மாத்திரத்தில் அவனைச் சிவனடியானென்று மதித்து, ஆயுதமில்லாதவரைக் கொல்வதால் வருங் குற்றம் அவனைச் சேராதிருக்கும் வண்ணம் ஆயுதங்களை எறியாது சிவத்தியானத்திலிருக்க, அவ்வஞ்சக நெஞ்சினனாகிய அதிசூரன் தன் எண்ணத்தை நிறைவேற்றினான். ஏனாதிநாத நாயனார் இறுதி வரையில் மெய்யன்

புடையவராய் ஆன்மா உடலைவிட்டு நீங்குங்காலத்தில் சிவத் தியானஞ்செய்து மோட்ச மடைந்தார்.

திருநீறானது பத்தியோடு தரிப்பவர்களுக்குச் செல்வத்தைக் கொடுக்கின்ற காரணத்தால் விபூதி என்றும், பாவங்களை நீறாக்கலால் நீறென்றும், ஆணவம் கன்மம் மாயை என்னும் மும்மலங்களினால் வரும் அஞ்ஞானமாகிய அழுக்கைச் சுத்தி செய்வதால் சாரமென்றும், ஞானத்தை விளங்கச் செய்தலால் பசிதமென்றுஞ் சொல்லப்படும்.

விபூதியானது கற்பம், அநுகற்பம், உபகற்பம் என மூன்று வகைப்படும். மலட்டுப் பசு, மலந்தின்னும் பசு, கன்று ஈனாத கிடாரி, வியாதியுள்ள பசு, கன்றிழந்த பசு, கிழப் பசு, கன்றீன்று பத்துத் தினத்துக்குட்பட்ட பசு ஆகியவைகளை நீக்கி, சிறந்த நல்ல பசுக்களின் சாணத்தைப் பூரணை, அமாவாசை, சதுர்த்தசி, அஷ்டமி முதலிய திதிகளில் சத்தியோசாத மந்திரத்தை ஓதித் தாமரை இலையில் எடுத்து அழுக்கை நீக்கி, வாம மந்திரஞ் சொல்லிப் பஞ்சகவ்வியம்விட்டு, அகோர மந்திரங்கூறிப் பிசைந்து தற்புருட மந்திரத்தால் உண்டைசெய்து ஓமாக்கினியில் சுட்டு எடுத்த விபூதி கற்பமெனப் படும். சித்திரை மாசத்தில் காட்டிலுலர்ந்திருக்கும் பசுவின் சாணத்தைக் கொண்டுவந்து தட்டிப் பொடியாக்கி, கோசலம் விட்டு முந்தின முறைப்படி உண்டைசெய்து, ஓமாக்கினியில் சுட்டெடுத்த விபூதி அநுகற்பம் எனப்படும். காட்டில் எரிந்த சாம்பலை எடுத்துப் பஞ்சகவ்வியம்விட்டு, முன்னே சொன்ன மந்திர முறைமைப்படி சிவாக்கினியில் சுட்டெடுத்த விபூதி உபகற்பமெனப்படும். இந்த மூன்று வகையான விபூதிகளின் தன்மை சைவசமயநெறியில் விபரமாகக் கூறப்படும்.

விபூதியைப் பரிபாலனம் செய்து அதனிடத்துப் பக்தி பெரிதுடையராய் விளங்குகின்றவர்கள், விபூதி தரித்த அடியார்களைக் கண்ட மாத்திரத்தில் அவர்களைச் சிவமாகப் பாவித்து வழிபடுவர்.

"கங்காளன் பூசுங் கவசத்திரு நீற்றை
மங்காமற் பூசி மகிழ்வீரே யாமாகிற்
றங்கா வினைகளுஞ் சாருஞ் சிவநெறி
சிங்கார மான சிவனடி சேர்வீரே"

என்பது திருமந்திரம். உடலைவிட்டு உயிர் நீங்கும்போது சிவகதியும் பெறுவர். "வெண்ணீறணிகிலாதவரைக் கண்டாலம்ம நாமஞ்சுமாறே" என்னும் மணிவாசகப்பெருமான் திருவாசகத்தாலும், திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் பாடியருளிய தேவாரத் திருநீற்றுப் பதிகத்தாலும் விபூதியின் மகிமையினை விளங்கிக் கொள்க.

---

# கண்ணப்ப நாயனர்

வேடரதி பதியுடுப்பூர் வேந்த ஞகன்
விளங்கியசேய் திண்ணனர் கன்னி வேட்டைக்
காடதில்வாய் மஞ்சனமுங் குஞ்சிதரு மலருங்
காய்ச்சினமென் றிடுதசையுங் காளத்தி யார்க்குத்
தேடருமன் பினிலாறு தினத்தளவு மளிப்பச்
சீறுசிவ கோசரியுந் தெளியவிழிப் புண்ணீ
ரோடவொரு கண்ணப்பி யொருகண் ணப்ப
வொழிகவெனு மருள்கொடரு குறங்கின் றூரே.

கண்ணப்ப நாயனர் பொத்தப்பி நாட்டில் உடுப்பூரிலே நாகன் என்னும் வேடராசனுக்குப் புதல்வராய் அவன் மனைவி தத்தையார் வயிற்றில் பிறந்தார். பிறந்தவுடன் நாகன் மனமகிழ்ந்து பிள்ளையைத் தூக்கியபோது கனமாகவிருந்தமையால் அக்குழந்தைக்குத் "திண்ணன்" என நாமகரணஞ் செய்தனன்.

"அண்ணலைக் கையி லேந்தற் கருமையா லுரிமைப் பேரும்
திண்ணனென் றியம்பு மென்னத் திண்சிலை வேட ரார்த்தார்
புண்ணியப் பொருளா யுள்ள பொருவில்சீ ருருவி னனைக்
கண்ணினுக் கணியாத் தங்கள் கலன்பல வணிந்தா ரன்றே"

—பெரிய புராணம்.

திண்ணனர் வளர்ந்து வில்வித்தை கற்று அதில் மிக்க திறமை பெற்றனர். நாகன் வயோதிகனனபடியால், தன்னுடைய அரசுரிமையைத் திண்ணனருக்குக் கொடுத்துக் காட்டில் வேட்டையாடும்படி விட்டான். திண்ணனர் மற்றைய வேடர்களோடு காட்டுக்குச் சென்று வேட்டையாடும்போது ஒரு பன்றியானது வேடர்கள் விட்ட பாணத்துக்குத் தப்பி மலைச்சாரல் வழியே ஓடினது. திண்ணனர் அதைப் பின்தொடர்ந்து சென்றார். நாணன் காடன் என்னுமிருவரும் அவரைப் பின்தொடர்ந்து சென்றார்கள். அப்பன்றி இளைத்து ஒரு மரநிழலில் நிற்க, திண்ணனர் ஓடி அதைத் தன்னுடைய வாளினல் வெட்டிக் கீழே தள்ளினர். அதைக்கண்ட நாணன் காடன் இருவரும் திண்ணனரை வணங்கினர்கள். நாணனும் காடனும்

திண்ணனாரைப் பார்த்துப் பசிமிக உண்டாயிருக்கிறது. இப்பன்றியை நெருப்பில் காய்ச்சிப் புசித்துத் தண்ணீர் உட்கொண்டபின் வேட்டையாடிய காட்டுக்குப் போவோம் என்றார்கள். அதுகேட்ட திண்ணனார் தண்ணீர் எங்கே இருக்கிறதென்றார். அதோ காளத்திமலையின் சாரலில் பொன்முகலியாறு பாய்கிறதென்று கூறினார்கள். திண்ணனார் திருக்காளத்திமலையைக் கண்டு நாணனை நோக்கி நாம் அங்குப் போய்வருவோமென்று சொல்ல, நாணன் இந்த மலையில் குடுமித்தேவர் இருக்கிறார். நாம் போனால் கும்பிடலாம் என்றான்.

> "சேணுயர் திருக்கா ளத்தி மலைமிசை யெழுந்து செவ்வே
> கோணமில் குடுமித் தேவ ரிருப்பர் கும் பிடலா மென்றான்"

இப்படி நாணன் சொல்லக் கேட்டபோது அம்மலையை அணுகவணுக ஒருவனது சுமையானது சிறிது சிறிதாகக் குறைய அவன் வருத்தம் நீங்கி யாதொரு தடையுமின்றி எப்படி நடக்கின்றானோ, அதுபோலவே திண்ணனார் கரணங்களினால் உண்டான விருத்திகளெல்லாம் ஒவ்வொன்றாக நீங்கி உடம்பின் பற்றற்றவரானார்.

> "ஆவதெ னிதனைக் கண்டிங் கணைதோறு மென்மேற் பாரம்
> போவதொன் றுளது போலும்"

—பெரியபுராணம்.

கற்புடை மகள் தன் கணவன் பெயர் கேட்டவுடன் வசமழிதல் தலையன்பாம். அவனைக் கண்ட மட்டில் வசமழிதல் இடையன்பாம். அவனைக் கூடியபோது வசமழிதல் கடையன்பாம். அதுபோலவே திண்ணனார் குடுமித்தேவர் என்னும் பெயரைக் கேட்டவுடனே தலையன்பினால் தன் வசமிழந்தார்.

திண்ணனார் மலைமீது ஏறும்போது அவர் திருச்செவியிலே தேவதுந்துபியின் ஒலி கேட்க, அது யாதென்று நாணனைக் கேட்டார். அவ்வொலியைக் கேட்காத நாணன் அது தேனீயின் ஒலிபோலும் எனச் சந்தேகத்துடன் சொன்னான்.

கதிரவ னுச்சி நண்ணக் கடவுண்மால் வரையி னுச்சி
அதிர்தரு மோசை யைந்து மார்கலி முழக்கங் காட்ட
இதுவென்கொ னென்றூர்க் கிம்மலைப் பொருந்தேன் சூழ்ந்து
மதுமல ரீக்கண் மொய்த்து மருங்கெழு மொலிகொ லென்றான்.

—பெரிய புராணம்.

திண்ணனார் சிவபிரானைத் தரிசிக்கும்பொருட்டு மலையில் ஏறினபோது ஆன்ம தத்துவம் இருபத்துநான்கும், வித்தியா தத்துவம் ஏழும், சிவ தத்துவம் ஐந்துமாகிய முப்பத்தாறு தத்துவங்களையும் ஒவ்வொன்றாகக் களைந்து தத்துவாதீதனாகிய சிவத்தை யடையுந்தன்மை யுடையவரானார்.

நாயனார் திருக்காளத்தி மலையிலேறிச் சிவபெருமான் சந்நிதியை நோக்கிச் செல்லும்போது சிவபெருமானது அருள் நோக்கத்தால் முற்பிறவிகளி லுண்டாகிய கன்ம பந்தங்கள் நீங்கப்பெற்று அன்புருவமானார்.

திங்கள்சேர் சடையார்தம்மைச் சென்றவர் காணா முன்னே
அங்கணர் கருணை கூர்ந்த வருட்டிரு நோக்க மெய்தத்
தங்கிய பவத்தின்முன்னைச் சார்புவிட் டகல நீங்கிப்
பொங்கிய வொளியி னீழற் பொருவிலன் புருவ மானார்.

—பெரியபுராணம்.

மாந்திரிகன் பாம்பினால் கடிக்கப்பட்டவனைக் கருட பாவனையால் பார்த்து விஷத்தைத் தீர்ப்பதுபோல ஆசாரியன் சீடனைச் சிவபாவனையால் நோக்கிப் பாவவிமோசனஞ் செய்வன்.

"கருட னுருவங் கருது மளவிற்
பருவிடந் தீர்ந்து பயங்கெடு மாபோல்
குருவி னுருவங் குறித்த வப்போதே
திரிமலந் தீர்ந்து சிவனவ னாமே"

—திருமந்திரம்.

இவ்வண்ணம் அன்புருவமான நாயனார் சுவாமியைக் கண்டபோது இடையன்பினால் தன் வசமிழந்து வணங்க வேண்டுமென்னும் முறைமை தெரியாது உச்சிமோந்து கட்டித் தழுவினார்.

பாவம் இன்னது, புண்ணியம் இன்னது என்பதை யொருகாலும் கேட்டறியாதவராகிய திண்ணனார் முற்

பிறப்பில் செய்த புண்ணியங்களின் மிகுதியினால் சிவபெருமான்மேல் முறுகித் தடித்து வளர்ந்த அன்பினால் பசுகரணங்க ளெல்லாம் நீங்கிச் சிவகரணம் பெற்று விளங்கினார். கடல்மடை திறந்தாற்போல அன்பின் பெருக்கினால் "காளத்தீசுவரர் காட்டில் தனிமையாகப் பசியுடனிருக்கின்றாரே. அவருக்கு இறைச்சி கொடுப்பார் ஒருவருமில்லையே!" என்று அவரைவிட்டுப் பிரிய மனமில்லாமலும், பிரிந்தால் துஷ்டமிருகங்கள் தீங்குவிளைவிக்குமே என்றும் வருந்தினார். சிவபெருமான் முடியில் நீர் வார்த்துப் பச்சிலையும் பூவும் சூட்டப்பட்டிருப்பதைக் கண்டு "இப்படிச் செய்தவர் யார்?" என நாணனைக் கேட்டனர். நாணன் அவரை நோக்கி "முன்னொரு நாள் யான் இவ்விடம் வந்தபோது ஒரு பிராமணன் இவர் முடியிலே நீரை வார்த்து இலையையும் பூவையுஞ் சூட்டி, உணவுகளை வைத்துச் சில வார்த்தைகளைப் பேசியதைக் கண்டிருக்கிறேன்" என்றான். சிவபெருமானுக்கு இனியனவே செய்யும் உறுதிப்பாட்டோடு தமக்கு மாமிசம் உவப்பாயிருத்தலால் சுவாமிக்கும் மாமிசம் உவப்பாகும் என்றெண்ணி, அத்திருக்காளத்தி மலையினின்று இறங்கிச் சோலையிற்போய்த் தாம் வேட்டையாடிய பன்றியை அம்பினால் கூறுசெய்து பதமாகச் சாய்ச்சித் தமது நாவில் வைத்துச் சுவை பார்த்து, வெந்த இறைச்சியைத் தேக்கிலையில் வைத்துச் சுவையில்லாதவைகளைப் புறத்தே யுமிழ்ந்தார். சுவாமிக்குப் படைப்பதற்கு இறைச்சியும், அபிடேகத்துக்குப் பொன்முகலியாற்றில் வாயினால் கொண்ட நீரும், சாத்துவதற்கு ஆய்ந்து தலையிலே சொருகப்பட்ட பூக்களுங்கொண்டு ஓடியும் நடந்தும் வந்து சிவபெருமான் சந்நிதானத்தை அடைந்தார். சிவபெருமானைக் கண்டபோது திருமுடியில் நீர் வார்த்து மலரிட்டிருந்தமையால், முன் சாத்தப்பட்டிருந்த பூக்களைத் தமது காற்செருப்பினால் மாற்றி, வாயில் கொண்டுவந்த நீரால் அபிடேகம் செய்து, குடுமியில் சொருகிய பூக்களைச் சாத்தி, மாமிசத்தை அவருக்கு முன் படைத்துத் திருவமுது செய்வித்தார். காளத்திநாதருக்கு ஏதும் தீங்கு நேருமே என்று அன்று முழுதும் பக்கத்தில்

காத்துக்கொண்டு நின்றார். விலக்குவிதியறியாத திண்ணனார் தமது குல ஒழுக்கத்துக்கேற்ப இங்ஙனமாக செய்வ வழிபாடு செய்தார்.

> " அரனடிக் கன்பர் செய்யும் பாவமு மறம தாகும்
> பரனடிக் கன்பி லாதார் புண்ணியம் பாவ மாகும் "

என்பது சிவஞான சித்தியார்.

செருப்பிட்ட காலினால் சூட்டியிருந்த மலர்களை விலக்கியதும் சிவபெருமான் முடிவிலாற்றலுடையவ ரென்பதை யறியாது அவருக்குத் துணையாக இராமுழுவதுங் காத்திருந்ததும், அன்பின் மிகுதியினால் தன்னை மறந்து செய்யப்பட்டனவாம். இதனை,

> " பொருட்பற்றிச் செய்கின்ற பூசனைகள் போல்விளங்கச்
> செருப்புற்ற சீரடி வாய்க்கலச மூனமுதம்
> விருப்புற்று வேடனார் சேடறிய மெய்குளிர்ந்தங்
> கருட்பெற்று நின்றவா தோணோக்க மாடாமோ "

என்னும் திருவாசகத்தில் காணலாம்.

ஆகம விதிப்படி பூசித்துவந்த சிவகோசரியார் வழக்கம்போல பூசை செய்யும்பொருட்டு வந்தபொழுது அங்கே பல அநுசிதங்களைக் கண்டு ஏக்கங்கொண்டு ஒருவாறு சுத்தமாக்கிப் பூசைசெய்து தம் இல்லம் சேர்ந்தார். பின் இப்படி அநுசிதம் எவ்வாறு நேர்ந்ததென்று மனத்துயரத்தோடு நித்திரை செய்தார். அன்றிரவு சிவபெருமான் அவருக்குக் கனவிலே தோன்றி இவைகளைக் கூறுகின்றார்:-

> " அவனுடைய வடிவெல்லா நம்பக்க லன்பென்று
> மவனுடைய வறிவெல்லா நமையறியு மறிவென்று
> மவனுடைய செயலெல்லா நமக்கினிய வாமென்று
> மவனுடைய நிலையிவ்வா றறிநீயென் றருள்செய்வார். "

"நாளையதினம் நீ ஒளித்திருந்தால் அவன் நம்மிடத்தில் பூண்டுள்ள அன்பின் பெருக்கத்தினாலே செய்யும் செயல்களைக் காண்பாய்!" எனச் சொல்லி யருளினார். சிவபெருமான் பணித்தவாறு சிவகோசரியார் மறுநாட் பிராதக் காலத்திலே விதிப்படி ஸ்நானஞ்செய்து திருக்காளத்தியப்பர் மலைக்குச் சென்று பூசை முடித்துச் சிவ

லிங்கத்துக்குப் பின்பக்கமாக ஒளித்திருந்தார். சுவாமிக்கு இறைச்சி கொண்டுவரும்படி காட்டுக்குச் சென்ற திண்ணனார் பூசைக்கு வேண்டிய திரவியங்களையுங் கொண்டுவந்தார். அப்போது சிவபெருமான் திண்ணனாரது அன்பைச் சிவகோசரியாருக்குக் காட்டும்பொருட்டுத் தமது வலக் கண்ணினின்றும் இரத்தஞ் சொரியச் செய்தார். இரத்தம் சொரிதலைக் கண்ட திண்ணனார், பூசைக்குக் கொண்டுவந்த மாமிசத் திருவமுதும் திருமஞ்சன நீரும் தம்மையறியாது கீழே விழத் தாமும் அறிவு சோர்ந்து மயங்கி நிலத்தில் விழுந்தார். இஃது எவரால் நேர்ந்ததோவென்று எங்கணுந் தேடிப் பார்த்தார். பின் ஒரே நிலையாக நின்றார்; புலம்பினார்; சிவலிங்கப் பெருமானைக் கட்டித் தழுவிக் கொண்டு கண்களினின்று நீர் சொரியக் கதறினார். கண்ணில் நோய் வந்தால் சில பச்சிலைகளின் சாற்றையிட மாறும் என்ற நினைவு உதித்தவுடனே மலைப்பக்கஞ் சென்று சில பச்சை இலைகளைப் பறித்துக் கொண்டுவந்து கண்ணிலே அப்பினார். அப்போதும் இரத்தம் தடைப்படாமை கண்டு, "ஊனுக்கு ஊன் இடல்வேண்டு" மென்னும் பழமொழியின்படி தம்முடைய கண்ணைப்பிடுங்கி அப்பினார்.

"ஊனுக் கூனென்னு முறைகண் டுவந்தனரே
தூநற்சீர்க் கண்ணப்பர் சோமேசா—வானதனாற்
கற்றில னாயினுங் கேட்க வஃதொருவற்
கொற்கத்தி னூற்றாந் துணை"

என்பது முதுமொழி வெண்பா.

உடனே இரத்தம் தடைப்பட்டது. அது கண்டு திண்ணனார் ஆனந்த மேலீட்டினால் நிலத்தில் ஏறப் பாய்ந்தார்; தோள்களைக் கொட்டினார்; கூத்தாடினார். தான் செய்த செயல் மிகவும் நன்றென்று சந்தோஷ மிகுதியினால் சிரித்தார். சிறிது நேரத்தில் மற்றக் கண்ணினின்றும் இரத்தம் ஒழுகக்கண்ட திண்ணனார் மருந்து கண்டுகொண்டேன். இனி அஞ்சமாட்டேன் என்று மனோ தைரியத்தோடு தம்முடைய மற்றக் கண்ணையு மிடந்து அப்பும் பொருட்டுத் தொடங்கினார்.

அது கண்டு தரியாதவராகிய காளத்திநாதர் சிவ லிங்கத் திருமேனியினின்று திருக்கரத்தை நீட்டிக் "கண்ணப்பனே! நிற்க!" என்று கூறித் திண்ணனுர் கையைப் பிடிக்கும்போது, சிவகோசரியார் கண்ணப்ப நாயனுர் அன்பின் முதிர்ச்சியினுல் செய்த செயற்கருஞ் செயலைக் கண்டு வியப்புற்ருர். வேதங்கள் முழங்கப் பிரமன் முதலான தேவர்கள் பூமாரி பொழிந்தனர். நாயனுர் சிவபிரானது வலப்பக்கத்தில் நிற்கும் பேரானந்த நிலையைப் பெற்ருர்.

பேறினி யிதன்மே லுண்டோ பிரான்றிருக் கண்ணில் வந்த
ஆறுகண் டஞ்சித் தங்க ணிடந்தப்ப வுதவுங் கையை
யேறுயர்த் தவர்தங் கையாற் பிடித்துக்கொண் டென்வ லத்தின்
மாறிலாய் நிற்க வென்று மன்னுபே ரருள்பு ரிந்தார்.

—பெரிய புராணம்.

குழந்தையானது பிறந்தது முதல் தன் தாயிடத்திலும் பின் தந்தை சகோதரர்களிடத்திலும் அன்பு வைக்கிறது. பிள்ளை வளர வளர அவ்வன்பானது படிப்படியாக மாமன் மாமி சிறிய தந்தை சிற்றன்னை முதலிய தன் குடும்பத்தாரிடத்தும் தன் அயலவரிடத்தும் தேசத்தாரிடத்தும் பரவிச் செல்கின்றது.

"அன்பிற்கு முண்டோ வடைக்குந்தா ழார்வலர்
புன்கணீர் பூசல் தரும்"

என்பது திருக்குறள். அன்பு ஒருவரால் காணக்கூடியதன்று. அன்பு காரணமாக நிகழும் செயல்களால் ஒருவரிடத்தில் அன்பு உண்டென அனுமானித்து அறியக்கூடும். தாயானவள் பிள்ளையை முகர்தலுங் கட்டித்தழுவுதலும் பிள்ளையுடைய செயல்களைப் பார்த்துச் சந்தோஷப்படுதலும் பிள்ளைக்கு விருப்பமானவைகளைச் செய்தலும் பிள்ளையிற் கொண்ட அன்பு பற்றியேயாம்.

அவ்வண்ணமே சிவபெருமானிடத்தில் வைக்கும் அன்பானது பிறவிகள் தோறும் செய்யும் புண்ணியங்களினுல் வளர்ந்து முதிர்ந்து பேரின்பமாகின்றது. இவ்வன்பினுல் சிவனது புகழைக் கேட்டல் சிந்தித்தல் புளகங்கொள்ளலாகிய பக்திச்செயல்கள் நிகழும்.

"சிரிப்பார் களிப்பார் தேனிப்பார் திரண்டு திரண்டுன் திருவார்த்தை
விரிப்பார்கேட்பார் மெச்சுவார் வெவ்வேறிருந்துன் திருநாமந்
தரிப்பார் பொன்னம் பலத்தாடுந் தலைவா வென்பா ரவர்முன்னே
நரிப்பாய் நாயே னிருப்பேனே நம்பி யினித்தா னல்காயே"

என்பது திருவாசகம்.

முற்பிறவிகளில் யாதொரு பயனையுங் கருதாது செய்த புண்ணியங்களினால் உண்டாகும் அன்பாகிய ஒளியில் சிவம் விளங்கும். இதனை,

அன்புஞ் சிவமு மிரண்டென்ப ரறிவிலா
ரன்பே சிவமாவ தாரு மறிகில
ரன்பே சிவமாவ தாரு மறிந்தபி
னன்பே சிவமா யமர்ந் திருப்பாரே

என்னும் திருமந்திரத்தாலும்,

"பத்திவலையிற் படுவோன் காண்க"

அம்மையே யப்பா ஒப்பிலா மணியே
யன்பினில் விளைந்த வாரமுதே
பொய்ம்மையே பெருக்கிப் பொழுதினைச் சுருக்கும்
புழுத்தலைப் புலையனேன் றனக்குச்
செம்மையே யாய சிவபத மளித்த
செல்வமே சிவபெரு மானே
யிம்மையே யுன்னைச் சிக்கெனப் பிடித்தே
னெங்கெழுந் தருளுவ தினியே.

என்னும் திருவாசகப் பாக்களாலும் அறியலாம்.

திருமால் சிவபெருமானைப் பூசிக்கும்போது ஆயிரங் கமலங்களில் ஒன்று குறைந்தது; அதனால் தமது கண்களில் ஒன்றைப் பெயர்த்து வைத்துப் பூசித்த காரணத்தினால் கண்ணபிரான் என்னுந் திருநாமம் பெற்றார். விஷ்ணுமூர்த்தி தேவர்களுக்குள் அன்பினால் முதன்மை பெற்றனர். கண்ணப்ப நாயனார் அடியார்களுக்குள் அன்பினால் முதன்மை பெற்றனர்.

"கண்ணப்ப னொப்பதோ ரன்பின்மை கண்டபின்....."

எனப் புகழ்ந்தார் மணிவாசகப் பெருமான்.

திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் கண்ணப்ப நாயனாரை அன்புருவமாக அனுபவத்திற் கண்டு வணங்கினார். கண்ணப்ப நாயனாரைத் தாம் பாடியருளிய தேவாரத் திருப்பதிகத்தில் வைத்துத் துதித்துப் பாடினர். (இந்நூலில் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் சரித்திரம் பார்க்கவும்.) சுந்தரமூர்த்தி நாயனாரும் கண்ணப்பரை அன்போடு வணங்கித் தேவாரத்தில் அவரைத் துதித்துப் போற்றினார். (சுந்தரமூர்த்தி நாயனார் சரித்திரம் பார்க்கவும்.) திருநாவுக்கரசு நாயனார் கண்ணப்பரை வணங்கித் திருத்தாண்டகத்தில் அவரைத் துதித்தனர். சைவ சமயாசாரியர் நால்வரும் கண்ணப்பரைத் தமிழ் வேதத்தால் துதித்து வணங்கினர். திருத்தொண்டத்தொகையில்

சுந்தரமூர்த்தி நாயனர் "கலைமலிந்த சீர்நம்பி கண்ணப்பற் கடியேன்" என்றதும் கவனிக்கத் தக்கதே.

"கண்ணப்பர்க் கருள்செய்த காளை கண்டாய்"

"கண்ணப்ப விண்ணப்புக் கொடுத்தான் கண்டாய்"

முதலிய அப்பர் தேவார அடிகள் நோக்கற்பாலன. பதினோராந் திருமுறையிலுள்ள நக்கீரர், கல்லாடர் திருமற அகவற்பாக்களும் கண்ணப்பரின் பேரன்பை நனி விளக்குவன.

சீ = சிலந்தி ; காளம் = பாம்பு ; அத்தி = யானை.

சிலந்தி பாம்பு யானையாகிய மூன்றினுலும் பூசிக்கப்பட்ட ஸ்தலமாதலால் சீகாளத்தி எனப்படும். இதனை,

" பாயலை நெடுநீர் வேணிப் பண்ணவன் கயிலா யக்குச்
சீயொடு காள மத்தி யெனும்பெயர்ச் சிலந்தி பாம்பு
மாயிருங் களிறிம் மூன்றும் பரகதி பெற்ற வாற்ரு
லாயது சீகா ளத்தி யெனும்பெய ரன்று தொட்டே "

என வரும் சீகாளத்திப் புராணத்தால் தெளிக.

## கண்ணப்ப நாயனர் முற்பிறப்பில் அருச்சுனர் என்பது

முற்காலத்திலே பாண்டு மைந்தனாகிய அருச்சுனன் துரியோதனன் முதலானவரை வெல்லும்பொருட்டு இந்திரநீல பர்வதத்தை அடைந்து சிவபெருமானை நோக்கித் தவஞ்செய்தான். அப்போது அருச்சுனனைக் கொல்லும்படி துரியோதனனுல் ஏவப்பட்ட முகாசுரன் என்பவன் பன்றி வடிவங்கொண்டு வந்தனன். அப் பன்றியினுல் அருச்சுனனுக்கு ஒரு தீங்கும் வாராமல் காக்கும் வண்ணம் சிவபெருமான் திருவுளங்கொண்டு ஒரு திருவிளையாட்டாக வேடனுக வந்து அப் பன்றியின்மீது ஒரு சிறு கணையை விடுத்தனர். அப்பன்றி அருச்சுனனுக்குச் சமீபமாகப் போனபோது அவன் ஒரு பாணத்தை விட்டுப் பன்றியைக் கீழே தள்ளினுன். பன்றியைக் கொன்றதனுல் சிவபெருமானுகிய வேடனுக்கும் அருச்சுனனுக்கும் சண்டை உண்டானது. அருச்சுனன் சிவபெருமானை வேடனென இகழ்ந்தான். இருவரும் விற்போர் செய்யும்போது சிவபெருமான் தமது விசுவரூபத்தைக் காட்டினுர். உடனே அருச்சுனன் தனக்கு முத்தி கொடுக்கும்படி வேண்டினன். அப்போது சிவபெருமான் "நீ பாசுபதாஸ்திரம் வேண்டித் தவஞ் செய்தாய். இப்போது பாசுபதத்தைப்பெற்றுப் பகைவரை வென்று பாரதப்போரை நீ முடிக்க வேண்டும். மறுபிறப்பில் என்னை வேடனென இகழ்ந்தமையால் வேட ராசனுய்ப் பிறந்து தென்கயிலாயமாகிய திருக்காளத்தியையடைந்து நம்மை அருச்சித்து மாமிசத்தை நிவேதனஞ் செய்வாய்.

அப்போது உனக்கு முத்தி கொடுப்போம்” என்று திருவாய் மலர்ந் தருளினார். அப்படியே அருச்சுனன் வேடர் குலத்தில் பிறந்தான்.

முன்னிய பகழிநீ கோடி முன்னெனத்
தன்னிகர் சங்கரன் றுன ளித்தெமை
யின்னல்செய் வேடனென் றிகழ்ந்து கூறினை
யன்னதால் வேட்டுவ வரச னுகியே.

கோலமே முதலிய விலங்கு கொன்றுநீ
சாலவே தசையமு தருந்திச் சாருநாள்
ஏலவே முத்தியுமீ தும் போவெனு
நீலமார் களத்திறை நீங்கி னனரோ.

அன்னதன் மையினருச் சுனனும் வேடனாய்
முன்னவன் பூசனை முயன்று செய்துபின்
கன்னிபங்குடையகா ளத்தி நாதனார்
தன்னரு ளாலுயர்முத்தி சார்ந்தனன்.

எனவரும் சீகாளத்திப் புராண வசனங்களால் இவ்வுண்மையை அறியலாம்.

காப்பதோர் வில்லு மம்புங் கையதோ ரிறைச்சிப் பாரம்
தோற்பெருஞ் செருப்புத் தொட்டுத் தூயவாய்க் கலச மாட்டித்
தீப்பெருங் கண்கள் செய்ய குருதிநீ ரொழுகத் தன்கண்
கோப்பதும் பற்றிக் கொண்டார் குறுக்கைவீ ரட்ட னுரே.

(தேவாரம்)

தொண்டுசெய்து நாளாறிற் கண்ணிடந்தப்ப வல்லேனல்லன்.

(பட்டினத்தார்)

# குங்குலியக்கலய நாயனர்

சீலமலி திருக்கடவூர்க் கலய னாராந் திகழ்மறையோர்
பணிவறுமை சிதையா முன்னே
தாலியைநெற் கொளவென்று வாங்கிக் கொண்டு
சங்கையில்குங் குலியத்தாற் சார்ந்த செல்வர்
ஞாலநிகழ் திருப்பனந்தாளுதர் நேரே நரபதியுந்
தொழக்கச்சா னயந்து போதப்
பாலமுத முண்டாரு மரசு மெய்திப் பரிந்தமுது
செயவருள்சேர் பான்மை யாரே.

குங்குலியக்கலய நாயனர் சோழ நாட்டிலே திருக்கடவூரிலே அந்தணர் குலத்தில் தோன்றினர். இவர் சிவபத்தியிற் சிறந்தவர். திருக்கடவூரில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானுக்குக் குங்குலிய தூபமிட்டு வந்தார். அவர் செல்வமுள்ள போதன்றி வறுமை வந்த காலத்தும் தாம் செய்யும் திருத்தொண்டில் வழுவாதவர் என்பதை உலகம் அறியும்பொருட்டுச் சிவபெருமான் இவருக்கு வறுமை எய்தச் செய்தனர். தம்மிடத்திலுள்ள எல்லாப் பொருள்களையும் விற்றுச் செலவு செய்தார். இரண்டு நாட்களாய் மனைவி மக்கள் முதலானவர் உணவின்றி வருந்தினர்கள். அப்போது மனைவியார் தன் மங்கிலியத்தைக் கழற்றி நாயனரிடம் கொடுத்து அதனை விற்று நெல் வாங்கி வரும்படி யனுப்பினர். நாயனர் மங்கிலியத்தைக் கொண்டு நெல் வாங்கக் கடைவீதிக்குச் சென்றபோது வணிகன் ஒருவன் குங்குலியப் பொதியோடு எதிர்வந்தான். நாயனர் குங்குலியத்தைக் கண்டவுடன் பெண்சாதி பிள்ளைகள் இரண்டு நாட்களாய்ப் பசியால் வருந்துகின்றார்கள் என்பதையும் மறந்து தாலியைக் கொடுத்துக் குங்குலியத்தை வாங்கித் திருக்கோயிலுக்குக் கொண்டுபோய்த் தூபமிட்டுச் சுவாமியை அன்போடு துதித்துக்கொண்டு அங்கே இருந்தனர். அவர் மனைவியாரும் பிள்ளைகளும் பசியினாலே வாடி அன்றிரவு இளைப்புற்று நித்திரை செய்தனர். அப்போது சிவபெருமான் கனவில் தோன்றி அவர்களுக்குச் சகல செல்வங்களும் வீட்டில் நிறைந்திருப்பதைச் சொல்லியருளினர்

அவ்வம்மையார் விழித்தெழுந்து சிவபெருமானது திருவருளைத் துதித்துத் தமது நாயகருக்குத் திருவமுது பாகம் செய்யத் தொடங்கினர். சிவபெருமான் மெய்யன்பினையுடைய குங்குலியக்கலய நாயனர் முன் தோன்றி, "நீ பெரிதும் பசியோடிருக்கின்றாய்; உனது மாளிகைக்குச் சென்று இனிய பால் சோறுண்டு உன் பசியை நீக்குவாய்" என்று சொல்லி யருளினர்.

காலனைக் காய்ந்தசெய்ய காலனர் கலய னாராம்
ஆலுமன் புடையசிந்தை யடியவ ரறியு மாற்றாற்
சாலநீ பசித்தா யுன்றன் றடநெடு மனையி னண்ணிப்
பாலினின் னடிசி லுண்டு பருவர லொழிக வென்றார்.

—பெரியபுராணம்.

சிவபெருமானுடைய கட்டளைப்படி கலயனர் தமது மாளிகைக்குச் சென்றபோது அங்குள்ள செல்வத்தைக் கண்டு மனைவியாரை நோக்கி, "இவைகள் எவ்வாறு கிடைத்தன" வென்று வினவினர். மனைவியார் "இவைகளெல்லாம் சிவபெருமான் திருவருளே" என்றார். கலயனர் ஈசன் திருவருளை நினைந்து இரண்டு கைகளையும் சிரமேற்கூப்பித் துதித்து அமுது செய்தார். நாயனர் குங்குலிய தீபமிடும் தொண்டினை ஒருபோதும் தவறாது செய்து தாம் பெற்ற செல்வத்தைக்கொண்டு அடியார்களுக்கு எப்போதும் திருவமுது கொடுத்துவந்தார். அந்நாளில் திருப்பனந்தாள் என்னும் சேத்திரத்திலுள்ள சிவலிங்கப்பெருமான் சாய்ந்திருப்பதை நிமிரச்செய்து வழிபடும்பொருட்டுச் சோழராசன் தன் யானைகளைப் பூட்டி இழுப்பித்தான். நிமிராமை கண்டு அரசன் கவலைப்பட்டான். குங்குலியக்கலய நாயனர் இதைக் கேள்வியுற்று அவ்விடம் சென்று அரசனுடைய சேனைகள் இழுத்து நிமிர்த்த இயலாது பூமியில் விழுந்து இளைத்திருப்பதைக் கண்டார். சிவலிங்கத்தில் கட்டப்பட்டிருந்த வடத்தைத் தம் கழுத்தில் மாட்டி இழுத்தனர். உடனே சிவலிங்கப்பெருமான் கலயனர் கட்டி இழுத்த அன்பு என்னும் கயிறு காரணமாய் நிமிர்ந்தார். அரசனும் தொண்டரும் பெருமகிழ்ச்சி கொண்டாடினர்கள். சிலநாள்

அவ்விடம் தங்கிப் பின் தமது தலமாகிய திருக்கடவூருக்குக் கலயனார் சென்றார். திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளையும், திருநாவுக்கரசு சுவாமிகளையும் தமது மாளிகையில் திருவமுது செய்வித்த பெரும்பேறு உடையவராய்ச் சிவபெருமானுடைய திருவடி நீழலிற் சேர்ந்தார்.

திருக்கோயில் சந்நிதானத்தில் அன்போடு தூபமிடுதல் சிறந்த புண்ணியம் என்பது இந்நாயனார் செய்த தொண்டினால் பெறப்படும்.

---

# மானக்கஞ்சாற நாயனார்

கஞ்சநகர் மானக்கஞ் சாற னார்சீர்க்
காதன்மகள் வதுவைமணங் காண நாதன்
வஞ்சமலி மாவிரதத் தலைவ னாகி
வந்துபுகுந் தவளளக மகிழ்ந்து நோக்கிப்
பஞ்சவடிக் காமென்ன வரிந்து நீட்டும்
பத்தரெதிர் மறைந்திறைவன் பணித்த வாக்கால்
எஞ்சலில்வண் குழல்பெற்ற பேதை மாதை
யேயர்பிராற் குதவியரு ளெய்தி னாரே.

கஞ்சாறூரிலே வேளாளர்குலத்திலே பரம்பரையாய் அரசர்க்குச் சேனாபதித் தொழில் செய்கின்ற குடியில் மானக்கஞ்சாற நாயனார் திருஅவதாரஞ்செய்தார். இவர் பெரிய செல்வந்தர். சிவனடியவர் விரும்பிய பொருள்களையெல்லாம் அவர்கள் கேட்பதற்கு முன் குறிப்பறிந்து கொடுப்பவர். இவர் சிலகாலம் புத்திரப்பேறின்றி வருந்திச் சிவபெருமானை வேண்டி வழிபட்டு வந்தனர். அதனால் இவர் மனைவியார் ஓர் பெண் மகவைப் பெற்றெடுத்தார்.

குழைக்கலையும் வடிகாதிற் கூத்தனா ரருளாலே
மழைக்குதவும் பெருங்கற்பின் மனைக்கிழத்தி யார்தம்பா
லிழைக்கும்வினைப் பயன்சூழ்ந்த விப்பிறவிக் கொடுஞ்சூழற்
பிழைக்குநெறி தமக்குதவப் பெண்கொடியைப் பெற்றெடுத்தார்.

—பெரிய புராணம்.

அருந்தவத்தினால் பிறந்த பெண்மணி வளர்ந்து மணப் பருவம் அடைந்தபோது பெற்றோர் ஏயர்கோன் என்பவருக்கு விவாகஞ்செய்து கொடுக்கத் தீர்மானித்துக் கலியாணத்திற்கு வேண்டிய ஒழுங்குகளை யெல்லாம் செய்தனர். ஏயர்கோன் கலிக்காமனார் மணக்கோலங் கொண்டு தம் பந்துக்களுடன் கஞ்சாறூருக்குப் புறப்பட்டு வந்தார். அவர் வந்து சேர்வதற்குமுன் சிவபெருமான் மாவிரதி வடிவங்கொண்டு மானக்கஞ்சாற நாயனார் மாளிகைக்குச் சென்றார். நாயனார் அவரை எதிர்கொண்டு உபசார வார்த்தைகூறி வணங்கினர். மாவிரதியார் நாயனாரைநோக்கி இங்கே என்ன மங்கலகரமான காரியம் நடக்கப்போகின்றதென்று வினவினார். நாயனார் தன் புதல்வியின் திருமணம் நடக்கப்போகிறதென்றார். மாவிரதியார் நாயனாருக்கு மங்களமுண்டாகக் கடவதென்று ஆசிர்வதித்தார். அப்போது நாயனார் மணக்கோலங் கொண்டிருந்த தன் புதல்வியை அழைத்து வந்து மாவிரதியாரைப் பணிவித்தார். மாவிரதியார் தம்மை வணங்கிய அப்பெண்ணின் கூந்தலை நோக்கி அது தமக்குப் பஞ்சவடிக்காகும் என்றார்.

அதனைக் குறிப்பாலுணர்ந்தார் நாயனார். அதுவே அன்பர்களின் பெருமை; அடியார்கள் செய்யும் தொண்டு. "குறிப்பிற் குறிப் புணராவாயின் உறுப்பினுள், என்ன பயத்தவோ கண்" என்பது திருக்குறள். அதற்கொப்ப கண்ணென்ற உறுப்பைப் பெற்ற மக்கள் செய்ய வேண்டிய கடமையை நாயனார் காட்டத் துணிந்தார்.

சிறிதேனும் மனங்கோணாது தம் செல்வியின் கூந்தலை அரிந்து கொடுத்தார். சிவபெருமான் தாம் கொண்ட வடிவத்தை மறைத்து இடப வாகனத்தில் உமையம்மையோடு தரிசனங் கொடுக்கும் பெருவாழ்வு பெற்றார். ஏயர்கோன் அவ்விடம் வந்தபோது நிகழ்ந்த தெய்வீகமான செயலைக் கேட்டுத் திருவருளைப் போற்றி முண்டிதப் பெண்ணை விவாகம் செய்தல் சாஸ்திர விரோதமென்று மனம் தளர்ந்தார். அப்போது சிவபெருமான் ஏயர்கோனை நோக்கி "நீ மனம் தளரவேண்டாம். இவள் கூந்தலை மறுபடியும் கொடுத்தருள்கின்றோம். மனமகிழ்ந்து கலியாணம் செய்க" என அசரீரிவாக்கு மூலமாக அறிவித்தார்.

> வந்தணைந்த வேயர்குல மன்னவனார் மற்றந்தச்
> சிந்தைநினை வரியசெயல் செறிந்தவர்பாற் கேட்டருளிப்,
> புந்தியினான் மிகவுவந்து புனிதனா ரருள்போற்றிச்
> சிந்தைதளர்ந் தருள்செய்த திருவாக்கின் றிறங்கேட்டு.
>
> —பெரிய புராணம்.

முன்போலக் கூந்தல் வளரப்பெற்ற அக்கன்னிகையை ஏயர்கோன் மணஞ்செய்து மகிழ்ந்து வாழ்ந்தனர்.

> கஞ்சாறர் சோபனப்பெண் கூந்தல் கடிதளிக்கத்
> துஞ்சு மகிழ்ச்சி கொண்டாய் சோமேசா—நெஞ்சில்
> இகழ்ந்தெள்ளா தீவாரைக் காணின் மகிழ்ந்துள்ள
> முள்ளு ளுவப்ப துடைத்து.

என்னும் முதுமொழிவெண்பா இந்நாயனார் சிறப்பைச் சுருங்கக் கூறும். இதனால் பொருள் கொடுப்பவரைக் கண்டால் யாசிப்பவர் மனம் மகிழ்ச்சியடையும் என்பது பெறப்பட்டது.

---

# அரிவாட்டாய நாயனார்

> தரவில்கண மங்கலத்துள் வேளாண் டொன்மைத்
> தாயனார் நாயனார் தமக்கே செந்நெற்
> றூவரிசி யெனவிளைவ தவையே யாகத்
> துறந்துணவு வடுவரிசி துளங்குகீரை
> யாவினினைந் துடன்கொணர் வார் கமரிற்சிந்த
> வழிந்தரிவாள் கொண்டூட்டி யரியா முன்னே
> மாவடுவி னொலியுமரன் கரமுந் தோன்றி
> வாள்விலக்கி யமரர்தொழ வைத்த வன்றே.

காவிரி நாட்டில் கணமங்கலப் பதியில் வேளாளர் குலத்தில் தாயனார் என்பவர் ஒருவர் இருந்தார். இவர் பெரும் செல்வந்தர். இல்லற தருமத்தை முறைப்படி நடத்திவந்தார். சிவபெருமானிடத்திலே பேரன்புடையவர். சிவனுக்குச் செந்நெல்அரிசி, செங்கீரை, மாம்பிஞ்சு முதலிய வைகளைத் தினந்தோறும் திருவமுது செய்யக் கொடுத்த னர். இவ்வரிய தொண்டைச் செல்வம் நீங்கி வறுமை வந்தபோதும் நிலைவழுவாது செய்யக்கூடும் என்பதை உலகத்தார்க்கு உணர்த்தும்பொருட்டுச் சிவபெருமான்

தாயனார்க்குச் செல்வம் நீங்கச் செய்தார். வறுமை வந்தபோதும் கூலிக்கு நெல் அறுக்கும் தொழிலைச் செய்து கூலியாகக் கிடைத்த செந்நெல்லைச் சிவனுக்கு அமுது செய்வித்துக் கார்நெல்லைத் தமக்கு உணவாக்கி வந்தார். சிவபெருமான் வயல்கள் எங்குஞ் செந்நெல்லாகச் செய்தார். தாயனார் மனமகிழ்ந்து இதுவும் அடியேன் செய்த புண்ணியமே என்று சுவாமிக்குத் திருவமுது செய்து வந்தார். அவரது மனைவியார் வேறுணவு கிடையாமையால் இலைகறிகளைப் பறித்துச் சமைத்துக் கொடுக்க உண்டு சிவபிரானுக்குத் தொண்டு செய்துவரும் நாளில் தோட்டத்தில் இலைகறியும் இல்லாமற்போகத் தண்ணீரைப்பருகி தமது பணியை விடாது செய்தார். ஒரு நாள் அரிசி, செங்கீரை, மாம்பிஞ்சு இவைகளைக் கூடையில் எடுத்துக்கொண்டு போகும்போது கால் தவறியதனால் நிலவெடிப்பில் எல்லாம் விழுந்து சிந்தின. சிவபெருமானுக்கு அமுது படைக்கும் பேறு பெற்றிலேனென மனம் வருந்தி அரிவாளினால் உடனே தம் கழுத்தை அரியத்தொடங்கினார். அப்போது நில வெடிப்பிலிருந்து நாயனார் கையைப் பிடிக்கச் சிவபெருமானது கரம் எழுந்ததோடு மாம்பிஞ்சினைக் கடிப்பதினால் உண்டாகும் ஓசையுங்கூட எழுந்தது. அப்பொழுது நாயனார் அரிவாளினால் அரிந்த துன்பமானது நீங்க மனம் மகிழ்ந்து சிவபெருமான் பூமியின் வெடிப்பில் எழுந்தருளி வந்து திருவமுது செய்த அருட்பெருங் கருணையைக் குறித்துத் துதித்தனர்.

> "அடியனே னறிவிலாமை கண்டுமென் னடிமை வேண்டிப்
> படிமிசைக் கமரில் வந்திங் கமுதுசெய் பரனே போற்றி
> துடியிடை பாகமான தூயநற் சோதி போற்றி
> பொடியணி பவள மேனிப் புரிசடைப் புராண போற்றி."
>
> —பெரிய புராணம்.

சிவபெருமான் இடப வாகனராய் வெளி நின்று காட்சி கொடுத்து "அன்பனே! நீ உன் மனைவியுடனே சிவலோகத்தில் வாழ்க!" என்று அவரோடு விடையின்மேல் சென்றார்.

பிரம விஷ்ணுக்களால் காண்டற்கரிய சிவபெருமான் பூமியின் வெடிப்பில் இருந்து தமது திருக்கரத்தை நீட்டி நாயனார் கையைப் பிடித்து அவரது துன்பத்தைத் தீர்க்க மாம்பிஞ்சைத் திருவமுது செய்யும் ஓசையை வருவித்ததால் இந்நாயனார் சிவபெருமானிடத்தில் வைத்த பேரன்பு எத்துணைத்தென்பது தெரியக் கிடக்கின்றது. திருக்கோயிலில் இயன்ற பணிசெய்தல் புண்ணியமாகும் என்பதை நாம் உணர்ந்து அத்தொண்டைச் செய்வோமாக.

---

# ஆனாய நாயனார்

மங்கலமா மழநாட்டு மங்கலமா நகருண்
மருவுபுக ழானயர் வளரா மேய்ப்பார்
கொங்கலர்பூந் திருக்கொன்றை மருங்கு சார்ந்து
குழலிசையி லஞ்செழுத்துங் குழைய வைத்துத்
தங்குசரா சரங்களெல்லா முருகா நிற்பத்
தம்பிரா னணைந்துசெவி தாழ்த்த வாழ்ந்து
பொங்கியவான் கருணைபுரிந் தென்று மூதப்
போதுகவென் றருளவுடன் போயினரே.

மழநாட்டிலே மங்கலவூரில் இடையர் குலத்தில் ஆனாய நாயனார் அவதாரஞ் செய்தார். இவர் சிவ பத்தியிற் சிறந்தவர். மற்றைய இடையர்களுடன் பசுக் கூட்டங்களைக் காட்டுக்குக் கொண்டு போய் மேய்த்து வருபவர். சிவநாமங்களுட் சிறந்த ஐந்தெழுத்தைத் வேய்ங்குழலினால் வாசித்துப் பெரும் பேறு பெற்றவர். ஒரு நாள் பசுக்களை ஏவலாட்கள் ஓட்டிக்கொண்டுவரத் தாம் ஓர் சரக்கொன்றை மரம் மாலைபோல் நீண்ட பூங்கொத்துகளாலும் தொங்குகின்ற காய்களாலும் சடையினையுடைய பரமசிவம் போலத் தோன்ற மனமுருகிச் சிவபெருமானைத் தியானித்துப் பஞ்சாட்சரத்தை வேய்ங்குழலில் வாசித்தார். அவ்வாசனை சராசரங்களை யெல்லாம் இசை மயமாக்கிக் கசிந்துருகச் செய்தது.

இவ்வாறு நிற்பனவுஞ் சரிப்பனவு மிசைமயமாய்
மெய்வாழும் புலன்கரண மேவியவொன் றாயினவான்
மொய்வாச நறுங்கொன்றை முடிச்சடை யாரடித்தொண்டர்
செவ்வாயின் மிசைவைத்த திருக்குழல்வா சனையுருக்க.

—பெரிய புராணம்

சிவபெருமான் மகிழ்ந்து பார்வதிதேவியாரோடு இடபவாகனத்தில் எழுந்தருளித் தமது பக்கத்தில் இருந்து வேய்ங்குழல் வாசிக்குமாறு ஆனாய நாயனாரைத் தம்முடன் கொண்டு எழுந்தருளினார்.

குழல் வாசிக்கின்ற தமக்கும் கேட்கின்ற எல்லோருக்கும் மனங் கசியப்பண்ணிச் சிவபிரானிடத்தில் அன்பை வளரச் செய்கின்றமையால் மற்றைத் தொண்டு செய்பவர்களிலும் பார்க்கக் கீதம் சொன்னார்க்குச் சிவபெருமான் எல்லையில்லாத திருவருளைக் கொடுத்து அருளுவர் என்பது தேற்றம்.

"விளக்கினார் பெற்ற வின்ப மெழுக்கினாற் பதிற்றியாகுந்
துளக்கினன் மலர்தொ டுத்தாற் றூயவிண் ணேற லாகும்
விளக்கிட்டார் பேறு சொல்லின் மெய்ந்நெறி ஞான மாகும்
அளப்பில கீதஞ் சொன்னார்க் கடிகடா மருளு மாறே."

என்னும் தேவாரத்தால் அறிக.

வேதங்களுக்கெல்லாம் மெய்ப்பொருளா யுள்ளதும் மனங்கசிந்து ஆனந்தக் கண்ணீரோடு ஓதுகின்றவர்களைப் பிறவி என்னும் கடலினின்று கரையேற்றக் கூடியதுமான பஞ்சாட்சரத்தை ஏழிசையோடு வாசித்தலின் பெருமையை யார் சொல்ல வல்லார்! திருக்கயிலாய மலையை எடுத்த இராவணனைச் சிவபெருமான் ஊன்றி நெரித்த போது அவன் சாமவேதத்தை இசையோடு பாடியது கேட்டுச் சிவபெருமான் அவனுக்கு அருள் செய்தாரன்றோ?

"இன்னிசை வீணையி லிசைந்தோன் காண்க" என்றும்

"கீதப் பிரியன் வேதபூரணன்" என்றும்

முறையே மணிவாசகப் பெருமானும் ஔவையாரும் ஓதுமாறு காண்க.

"பண் ஒன்ற இசைபாடும் அடியார்கள் குடியாக"

"வேதமொடே ழிசை பாடவுமாடுவர்" என்பவை திருஞானசம்பந்தர் தேவார அடிகள்.

# மூர்த்தி நாயனர்

வழங்குபுகழ் மதுரைநகர் மூர்த்தியா ராம்
வணிகர்திரு வாலவாய் மன்னர் சாத்தத்
தழங்குதிர முழங்கைதரத் தேய்த்த ஆறுந்
தவிர்ந்தமணர் வஞ்சனையுந் தவிர மன்ன
னிழந்தவுயி ரினனுக ஞால நல்க
வெழில்வேணி முடியாக விலங்கு வேட
முழங்குபுக ழணியாக விரைநீ றுக
மும்மையுல காண்டருளின் முன்னி னரே.

மூர்த்தி நாயனர் பாண்டி நாட்டில் சிறப்புற்ற மதுரை மாநகரில் வணிகர் குலத்தில் அவதாரஞ் செய்தார். இவர் மிகுந்த அன்புடன சுந்தரேசப் பெருமானுக்குச் சந்தனக் காப்பு அணியும் பெருந்தொண்டு வழுவாது செய்துவந்தார்.

சிவபிரானுக்குக் கஸ்தூரி, கோரோசனை, குங்குமம் முதலிய வாசனைத் திரவியங்களைச் சேர்த்துச் சாத்துதல் சிறந்த சிவபுண்ணிய மாகும். இதனை,

"சுகந்த கந்தஞ் சுலவியலேபன
முகுந்த லிங்கத் தொரு தினஞ் சாத்தினே
ரிகந்து பாவ மிமையவர் கோடியாண்
டகந்தெளிந்தங் கரன்பதி நண்ணுவார்."

என்னும் சிவபுண்ணியத் தெளிவால் அறிக.

அந்நாளில் வடுகக் கருநாட்டு மன்னன் ஒருவன் பாண்டியனேடு போர்செய்து அவனை வென்று பாண்டி நாட்டை அரசாண்டான். அவன் சமணர்கள் துர்ப் போதனையைக் கேட்டுச் சிவனடியார்களுக்குப் பல கொடு மைகளைச் செய்தான். மேலும், இம் மூர்த்தி நாயனர் செய்துவந்த திருத்தொண்டிற் பொறுமை கொண்டு சந்த னக் கட்டை வாங்கும் இடமெல்லாம் அவருக்குக் கொடாத படி தடைசெய்தான். அதனுல் சந்தனக்கட்டை பெற முடியாமை கண்டு நாயனர் திருக்கோயிலில் வந்து தம் அன்பின் உறுதிப்பாட்டினுல் சந்தனக்கட்டை தேய்க்கும் தமது முழங்கையைச் சந்தனக் கல்லின்மேல் வைத்து இரத்தம் பெருகத் தேய்த்தார். சிவபெருமான் திருவுள

மிரங்கி, "அன்பனே! உனது பத்தி வைராக்கியத்தினால் இப்படிச் செய்யவேண்டாம். உனக்குத் துன்பம் செய்த கொடுங்கோல் அரசனது நாடு முழுவதையும் நீயே கைக் கொண்டு அவனால் உண்டான கொடுமைகளை நீக்கிச் செங் கோல் செலுத்தி நீ செய்துவரும் திருத்தொண்டைச் செய்து நம்பதம் அடைக" எனத் திருவாய் மலர்ந் தருளினார்.

அன்பின்றுணி வாலிது செய்திட லைய வுன்பால்
வன்புன்கண் விளைத்தவன் கொண்டமண் ணெல்லாங் கொண்டு
முன்பின்னல்பு குந்தன முற்றவு நீத்துக் காத்துப்
பின்புன்பணி செய்துநம் பேருலகெய்து கென்ன.

—பெரிய புராணம்.

நாயனாருக்குத் தீமை செய்த வடுகமன்னன் உடனே இறந்து நரகத்தில் வீழ்ந்து வருந்தினான்.

சிவனடியார்களுக்கு இடையூறு செய்பவர் கடவுளால் தப்பாது தண்டிக்கப்படுவர்.

"ஈசன டியாரிதயங் கலங்கிடத்
தேசமு நாடுஞ் சிறப்பு மழிந்திடும்
வாசவன் பீடமு மாமன்னர் பீடமும்
நாசமதாகுமே நம் நந்தியாணையே"

என்பது திருமந்திரம்.

அவ்வடுகக் கருநாட்டு மன்னனுக்கு மகப்பேறின்மை யால் அரசு செய்ய ஒருவரைத் தெரிந்து கொள்ளப் பட் டத்து யானையைக் கண்கட்டி மந்திரிமார் விட்டனர். அம் மதயானையானது திருவாலவாயின் கோபுரத்துக்கு விரைந்து சென்று அங்கு நின்ற நாயனாரை அவர் முன் தாழ்ந்தெடுத்துத் தன் முதுகின்மேல் வைத்தது. அது கண்டு அமைச்சர் முதலாயினோர் அவரைப் பணிந்து அழைத்துச் சென்று முடிசூட்ட ஆரம்பித்தார்கள். அப் போது நாயனார் மந்திரிமாரை நோக்கி, "புறச்சமயங்கள் நீங்கிச் சைவசமயம் சிறப்புற்றோங்குமாயின் இந்நாட்டை அரசாள உடன்படுவேன்" என்றார். அதற்கு யாவரும் உடன்பட்டார்கள். பின்னர் நாயனார் தமக்குத் திருநீறே

அபிடேகத் திரவியமும், உருத்திராட்சமே ஆபரணமும், சடாமுடியே கிரீடமும் ஆகுக என்றார். மந்திரிமாரும் மற்றையோரும் அப்படியே மகுடாபிஷேகம் செய்தார்கள்.

சிவகாருண்யம் எங்கும் நிலவ நாடு காத்துச் சிவ பெருமான் திருவடிகளை அடைந்தார்.

> ஊரெலாமட்டசோறு நம்மதேயுவரி சூழ்ந்த
> பாரெலாம் பாயருன்னற்கோ வணம் பரிக்குமாடை
> சீரெலாஞ்சிறந்த சாந்தந்தெய்வ நீறணிபூண்கண்டி
> நீரெலாஞ் சுமந்தவேணி நிருத்தனுட் கொண்டவன்றே.
>
> —திருவிளையாடற் புராணம்.

இதனால் திருநீறு அபிடேகப் பொருளும், உருத்திராட்சமணி ஆபரணமும் என்றுணர்க.

சமண சமயம் நீங்கப்பெற்றுச் சைவ சமய பரிபாலனம் செய்ய வேண்டும் என்னும் கவலை கொண்டனரன்றி இராச்சியம் வேண்டுமெனச் சிறிதும் விரும்பினரல்லர். சைவ சித்தாந்த சமயம் பரவி நிலைபெறும் வண்ணம் அரசாளும் மன்னரை எப்போது பாண்டி நாடு பெறும் என்ற சிந்தனையோடு இந் நாயனர் விளங்கினர். அதனால் சிவபெருமான் இவரையே அரசராக்கினர்.

> "மூர்த்திபால் வன்கண்மை மூண்ட வடுகரசன்
> சூர்த்திறத்தா னுய்ந்தானே சோமேசா—கூர்த்த
> பொருளற்றார் பூப்ப ரொருகா லருளற்று
> ரற்றார்மற் றூத லரிது"

என்பது முதுமொழி வெண்பா.

# முருக நாயனர்

*மன்னுதிருப் புகலூர்வாழ் முருக னாரா*
*மறையவர்கோ வர்த்தமா னீச்ச ரத்தார்*
*சென்னியினுக் கழகமரு மலர்கள் கொய்து*
*திருமாலை புகழ்மாலை திகழச் சாத்திக்*
*கன்னிமதிற் கழுமலநா டுடைய நாதன்*
*காதன்மிகு மணங்காணுங் களிப்பி னாலே*
*யின்னல்கெட வுடன்சேவித் தருளான் மீளா*
*திலங்குபெரு மணத்தரனை யெய்தி னரே.*

சோழ மண்டலத்திலே திருப்புகலூரிலே மறையோர் குலத்தில் முருக நாயனர் தோன்றினர். இவர் சிவபத்தியில் மிகச் சிறந்தவர். நாள்தோறும் அதிகாலையில் எழுந்து நீராடி மலர்களைக் கொய்து மாலைகள் தொடுத்து அப்பதியிலுள்ள வர்த்தமானீச்சரம் என்னும் தலத்தில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானுக்குச் சாத்தி அருச்சனை செய்து பஞ்சாட்சரத்தைச் செபித்து வருவாராயினர்.

"பெரும்புலர் காலை மூழ்கிப் பித்தற்குப் பத்த ராகி"

என்றபடி, ஸ்நானஞ் செய்து திருநந்தவனத்திற்குச் சென்று சிவத்தியானத்தோடு மௌனமாய் நின்று இலை மலர்களை எடுத்துவந்து புழுக்கடி முதலியவைகளை நீக்கி விதம் விதமான மாலைகளைத் தொடுத்துச் சிவபெருமானுக்குச் சாத்தி அருச்சனை செய்தலும், ஐந்தெழுத்தை ஓதுதலும், தேவாரம், திருவாசகம், பேரிய புராணம் முதலிய அருட்பாக்களைப் பாடுதலும் சிவ புண்ணியமாகும்.

"தொண்டர் தண்கய மூழ்கித் துணையலுஞ் சாந்தமும் புகையும்
கொண்டு கொண்டடி பரவிக் குறிப்பறி முருகன்செய் கோலம்
கண்டு கண்டுகண் குளிரக் களிபரந் தொளிமல்கு கள்ளார்
வண்டு பண்செயும் புகலூர் வர்த்தமா னீச்சரத் தாரே."

(சம்பந்தர் தேவாரம்)

"கொந்தலர் கொய்யும்போது கூர்விழி மையலாலே
பைந்தொடி மடவார்தம்மைப் பார்த்தலாற் கயிலை வெற்பிற்
சுந்தரன் பட்டகாதை யறிதிரே துணர்மென் போதா
லந்தணர் கீழ்களாவார் கீழ்களந் தணர்களாவார்"

என்பதனல் சிவஞானத்தோடு பத்திர புஷ்பம் கொய்தல் வேண்டும் என்பது தெளியப்படும்.

"நிலைபெறுமா றெண்ணுதியே னெஞ்சே நீவா
நித்தலுமெம் பிரானுடைய கோயில் புக்குப்
புலர்வதன்மு னலகிட்டு மெழுக்கு மிட்டுப்
பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித்
தலையாரக் கும்பிட்டுக் கூத்து மாடிச்
சங்கரா சயபோற்றி போற்றி யென்று
மலைபுனல்சேர் செஞ்சடையெம் மாதியென்று
மாரூரா வென்றென்றே யலறா நில்லே"

"மாதர் பிறைக்கண்ணி யானை மலையான் மகளொடும் பாடிப்
போதொடு நீர்சுமந் தேத்திப் புகுவா ரவர்பின் புகுவேன்"

என வரும் திருநாவுக்கரசர் தேவாரப் பாக்களிலும்,

"முத்தனே முதல்வா முக்கணா முனிவா
மொட்டறா மலர்பறித் திறைஞ்சிப்
பத்தியாய் நினைந்து பரவுவார் தமக்குப்
பரகதி கொடுத்தருள் செய்யுஞ்
சித்தனே செல்வத் திருப் பெருந் துறையிற்
செழுமலர்க் குருந்தமே விய சீ
ரத்தனே யடியே னுதரித் தழைத்தா
லதெந்து வேயென் றருளாயே"

என்னும் திருவாசகத்திலும் மலர்கொய்து மாலை தொடுத்துச் சிவனுக்குச் சாத்துவது உத்தம சிவபுண்ணியம் என உணர்த்தப்பட்டது.

முருக நாயனூர் இவ்வாறு தொண்டு செய்துவரும் நாளில் திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகளுக்குத் தோழராகிய பெரும்பேறுடையாராய் அவரது திருமணத்திலே தாம் செய்த தவத்தினுல் சிவபெருமான் திருவடி சேர்ந்தார்.

# உருத்திரபசுபதி நாயனர்

பங்கமில் வண்புகழ் நிலவு தலையூர் வாழும்
    பசுபதியா ரெனுமறையோர் பணிந்து செந்தே
னங்கமல மடுவினிடை யல்லு மெல்லு
    மகலாதே யாகளமா யமர்ந்து நின்று
திங்கள்வளர் சடைமுடியா னடிகள் போற்றித்
    திருவெழுத்து முருத்திரமுந் திகழ வோதி
மங்கையிட முடையபிரா னருளான் மேலை
    வானவர்க டொழுமுலகின் மன்னி னரே.

சோழ நாட்டிலே திருத்தலையூர் என்னும் தலத்திலே மேன்மை பொருந்திய வேதியர் குலத்தில் உருத்திர பசுபதி நாயனர் தோன்றினர். இவர் சிவபெருமானுக்குச் செய்யும் திருத்தொண்டில் சிறந்தவர்.

"செங்கண் மால்விடை யார்செழும் பொன்மலை வல்லி
பங்கினரடி மைத்திறம் புரிபசு பதியார்" —பெரியபுராணம்.

இவர் தாமரைத் தடாகத்தில் கழுத்தளவு தண்ணீரில் நின்று இருகைகளையும் உச்சிமேற் குவித்துச் சிவபெருமானிடத்தில் வைத்த பேரன்போடு உருத்திர மந்திரத்தைச் செபித்துச் சிவபெருமான் திருவடியை அடைந்தார். உருத்திர மந்திரத்தை இரவும் பகலும் அன்போடு செபித்து வந்தமையால் உருத்திர பசுபதி நாயனர் என்னும் மகிமை வாய்ந்த நாமம் பெற்றார்.

நீடு மன்பினி லுருத்திர மோதிய நிலையா
லாடு சேவடி யருகுற வணைந்தனர வர்க்குப்
பாடு பெற்றசீ ருத்திர பசுபதி யாராங்
கூடு நாமமு நிகழ்ந்தது குவலயம் போற்ற.

—பெரியபுராணம்.

உருத்திர மந்திரத்தின் மகிமை இந்நாயனர் சரித்திரத்தால் புலனாகின்றது.

---

# திருநாளைப் போவார் நாயனர்

நன்மைதிகழ் மேற்காநாட் டாத னூர்வாழ்
நந்தனூர் புறத்தொண்டர் நாளைப் போகப்
பொன்மலிதென் புலியூர்க்கென் றுரைப்பார் புன்கூர்ப்
பொய்கையமைத் தடலேறு பிரிய நோக்கி
வன்மதில்சூழ் தில்லையிறை யருளால் வாய்ந்த
வண்டழலி னிடைமூழ்கி மறையோர் போற்ற
மின்மலிசெஞ் சடைமுனியா யெழுந்து நாதன்
விளங்குநடந் தொழ மன்றுண் மேவி னாரே.

சோழ மண்டலத்திலே ஆதனூரிற் புலையர் சேரியில், நந்தனூர் என்பவர் ஒருவர் அவதரித்தார். தங்குலாசாரத்துக் கேற்பப் பேரிகை, யாழ், வீணை முதலிய வாத்தியங்களுக்குத் தோல், வார், நரம்பு முதலானவைகளையும், சிவபெருமானுடைய பூசனைக்குக் கோரோசனையையுங் கொடுத்துக் கோயில்களில் மதிற்புறத்தில் நின்று அன்பின் மிகுதியினல் ஆனந்தக் கூத்தாடிப் பாடுவார். ஒரு நாள் இவர் திருப்புன்கூர் என்னும் தலத்திற்குச் சென்று சிவபெருமானை நேரே தரிசிக்க விரும்பினார். சிவபெருமான் நந்தி தேவரை விலகச்செய்ய, நந்தனூர் அப்பெருமானைக் கோயில் வாசலில் நின்று பணிந்தெழுந்து புறம் போந்தார். நந்தனூர் அத்தலத்தில் ஓர் பள்ளத்தைக் கண்டு அதைக் குளமாகத் தோண்டித் தமது ஊருக்குச் சென்றார். இந் நாயனார் பல சிவ ஸ்தலங்களுக்குச் சென்று வணங்கித் திருத்தொண்டு செய்துவரும் நாளில் சிதம்பர தரிசனஞ் செய்யவேண்டுமென்னும் ஆசைகொண்டார்.

தலங்களுள் சிதம்பரம் முதன்மை பெற்றது.

இடம்படு முடம்பின்மூலத் தெழுந்தநற் சுழுனை நாடி
யுடன்கிள ரொளியேயாகி யொளியிலஞ் செழுத்து மொன்றாய்
நெடுங்குழ லோசை யாகி நிலவுமவ் வோசை போயங்
கடங்கிய விடமே யென்று மாடுமம் பலம தாகும்.

அந்தநன் னடமே தென்னி னைந்தொழி நிகழ்த்த லாகும்
பந்தம தகற்று மிந்தப் படிவமு மதுவே யாகும்
வந்துல கத்தில் யாருங் காண்பரேல் வழுவா முத்தி
தந்தரு ளளிக்குந் தெய்வத் தலமுமத் தலமே கண்டாய்.

—திருவாதவூரடிகள் புராணம்.

இதனல் சிதம்பரத்தின் மகிமை தெளியப்படும்.

கனக சபையிலே நடராசப்பெருமான் செய்யும் ஆனந்த நடனத்தை முறுகிய பத்தியோடு தரிசிக்கும் அடியவர் முத்தி பெறுவர். இதற்குப் பிரமாணம்:—

"கற்றாங் கெரியோம்பிக் கலியை வாராமே
செற்றார் வாழ்தில்லைச் சிற்றம்பல மேய
முற்றா வெண்டிங்கண் முதல்வன் பாதமே
பற்றா நின்றாரைப் பற்றா பாவமே"

(சம்பந்தர் தேவாரம்)

பிறந்தில மாரூர் தன்னிற் பேசிய காசி மேவி
யிறந்தில மிரண்டு முத்தி யின்பமும் பின்ப தாநா
முறைந்திடுந் தில்லை ஞான யோகமார் தான மாமாற்
செறிந்தடி காணச் சீவன் முத்தராய்த் திரிய லாமே.

—கோயிற் புராணம்.

சிதம்பரத்தை யடைந்து தரிசிக்க வேண்டுமென்ற விருப்பினால் இரவில் நித்திரையின்றிப் பொழுது விடிந்த பின் சிதம்பரம்போகத் தகுதியில்லாமையினால் போகா விடினும் ஆசை மேலீட்டினால் "நாளைப்போவேன்" என்று சொல்லி வந்தமையால் 'திருநாளைப்போவார்' என்னும் நாமம் பெற்றார். பிறகு, ஆசை மிகுதியினால் சிதம்பரத்தை நோக்கிச் சென்றார். அத்தலத்தின் மகிமையினையும் அங்குள்ள தில்லைவாழந்தணர்களின் பெருமையையும் நினைந்து தில்லையின் எல்லையில் நின்றார். மேன்மேலும் வளரும் ஆசையால் அவ்வூரெல்லையைக் கடந்து மதிலின் புறத்தினுள்ள திருவெல்லையைப் பிரதட்சணம் செய்து தான் உள்ளே புகுந்து திருநடங் கும்பிடுவது எவ்வாறென எண்ணி மனக்கவலையோடு நித்திரை செய்தார். தான் பத்துக்குரிய இழிந்த பிறவியானது உள்ளே சென்று தரிசிப்பதற்குத் தடையாவதை நினைந்து துயிலும்போது நடராசமூர்த்தி சொப்பனத்தில் தோன்றி "அன்பனே; உன் பிறவிப் பிணி நீங்க நீ தீயில் மூழ்கி தில்லைவாழந்தணருடன் நமது சந்நிதிக்கு வருவாயாக" என்று அருள் செய்தார். தில்லைவாழந்தணருக்கும் சொப்பனத்தில் தோன்றி நந்தனார் தீ மூழ்கித் தம்மிடம் போயணையும் பொருட்டுத் தீ மூட்டும்படி கட்டளையிட்டருளினார். அது

கேட்ட தில்லைவாழந்தணர் நந்தனரிடம் சென்று இவ்வாறு கூறுவார் :—

ஐயரே யம்பலவ ரருளாலிப் பொழுதணைந்தோம்
வெய்யவழ லமைத்துமக்குத் தரவேண்டி யெனவிளம்ப
மையுமனத் திருத்தொண்டர் நானுய்ந்தே னெனத்தொழுதார்
தெய்வமறை முனிவர்களுந் தீயமைத்த படிமொழிந்தார்.

—பெரிய புராணம்.

தில்லைவாழந்தணர் அழைத்தபடி நாயனர் சென்று அவர்கள் வளர்த்த அக்கினியில் மூழ்கிப் புண்ணிய முனியின் வடிவம் பெற்றெழுந்து கனகசபையின் திரு வெல்லையை அடைந்தார். அப்போது நடராசப்பெருமான் தம்மை யணைந்த தொண்டர் தம் வினைகளை நீக்கித் தமது திருவடிகளைத் தொழுதிருக்கும் வண்ணம் அருள் புரிந்தார்.

"வரஞானத் துயர்தில்லை வாழ்தருமந் தணர்விதிசேர்
வழிபா டொப்பத்
திருநாளைப் போவார்தம் புன்றொண்டு மகிழ்ந்து கொளுந்
தில்லை வாணர்"

என்று போற்றினர் சிதம்பர சபாநாத புராண ஆசிரியர்.

# திருக்குறிப்புத்தொண்ட நாயனூர்

கொந்தலர்பூம் பொழிற்கச்சி நகரே காலிக்
குலத்தலைவர் தவர்குறிப்புக் குறித்து ளார்பால்
வந்திறைவர் நமக்கின்று தாரீ ராகின்
வருந்துமுட லெனவாங்கி மாசு நீத்த
கந்தைபுல ராதொழிய மழையு மாலைக்
கடும்பொழுதும் வரக்கண்டு கலங்கிக் கன்மேற்
சிந்தமுடி புடைப்பளவிற் றிருவே கம்பர்
திருக்கைகொடு பிடித்துயர்வான் சேர்த்தி னூரே.

வேதகாம விதிப்படி ஆன்மாக்கள் சிவபிரானை வழி படட்டுய்யும் வண்ணம் உலகநாயகியாகிய காமாட்சியம்மை யார் தாமே சிவபெருமானைப் பூசித்த காஞ்சிபுரத்தில் ஏகாலியர் குலத்திலே திருக்குறிப்புத்தொண்ட நாயனூர் தோன்றினூர். இவர் மனம் வாக்குக் காயம் மூன்றும் சிவபெருமான் திருவடிகளில் பதியப்பெற்ற மெய்யன்பர். அடியார்களின் குறிப்பறிந்து தொண்டுசெய்த காரணத்தால் திருக்குறிப்புத்தொண்ட நாயனூர் என்னும் நாமம் பெற்றனர். வண்ணூர் குலத்தில் பிறந்தவராகையால் தமது குலவொழுக்கத்தை விடாது அடியார்களுக்கு வஸ்திரங்களைச் சுத்தி செய்யும் உதவிபுரிந்து வந்தார்.

தேசுடைய மலர்க்கமலச் சேவடியா ரடியார்தந்
தூசுடைய துகண்மாசு கழிப்பார்போற் றூல்லைவினை
யாசுடைய மலமூன்று மணையவரும் பெரும்பிறவி
மாசுதனை விடக்கழித்து வருநாளி லங்கொருநாள்

—பெரிய புராணம்.

இத்தொண்டு செய்து வரும்போது மழைபெய்யும் ஓர்நாள் ஏகாம்பரநாதர் தபோதனர் வேடம் தாங்கி அழுக்கேறிய கந்தையுடுத்து வறுமையினூல் மெலிந்தவராய்த் திருக்குறிப்புத் தொண்டரிடஞ் சென்றூர். நாயனூர் இனிய வசனங்களைக் கூறி வணங்கி அவர் குறிப்பறிந்து கந்தையினைக் கசக்கத் தந்தருளும் என்றூர். இக்கந்தை மிக அழுக்குடையதாயினும் தன் சரீரம் குளிரினூல் வருந்துதலால் கைவிடுதல் கூடாதென்றும், சூரியன் அஸ்தமனமாகுமுன்

வெளுத்துத்தரமுடியுமாயின் கொண்டுபோய் ஒலித்துவிரை வில் கொடுக்கவேண்டுமென்றும், பொழுதுபடுமுன் கொடா விடில் தம்முடலுக்குத் துன்பஞ் செய்ததாக முடியும் என்றும் அடியார் கூறிக்கொடுத்தார். நாயனார் கந்தையைப் பெற்றுக்கொண்டுபோய்க் குளத்தில் தோய்த்து அழுக்கைப் போக்கி வெள்ளாவியில் வைத்து வெளுக்கப் புகுந்தார். அப்போது சிவபெருமான் மேகங்கள் இருண்டு பகல் வெளிச்சம் நீங்கி இராக்காலம்போல் இருளுண்டாகி மழை சொரியும்படி செய்தார். நாயனார் தாம் அடியவருக்குச் செய்த வாக்கை நினைந்து வருந்தி மழைவிடுமென்று அவ் விடத்தில் நின்றார். விடா மழை பெய்து இராக்காலம் வந்து சேர்ந்தது. அடியவர் குளிரினால் வருந்தத் தீங்கு செய் தேனே என்று தம் தலையைத் துணி வெளுக்கும் கல்லில் சிதறும்படி மோதும்போது சிவபெருமானுடைய திருக் கரம் அந்தக் கல்லின் பக்கத்தில் தோன்றி நாயனார் தலையைப் பிடித்துக்கொண்டது. பொழிந்த மழை நின்றது. ஆகாயத்திலிருந்து பூமழை சொரிந்தது நாயனார் சிவானந்த பரவசமாய் நிற்கச் சிவபெருமான் விடை யின்மேல் உமையம்மையாரோடு வெளிநின்று "உன் அடி யார் பத்தியை மூன்றுலகமும் அறியச் செய்தோம்" எனக் கூறிப் பேரின்பங் கொடுத்தருளினார்.

முன்னவரை நேர்நோக்கி முக்கண்ணர் மூவுலகு
நின்னிலைமை யறிவித்தோ நீயுமினி நீடியநம்
மன்னுலகு பிரியாது வைகுவா யெனவருளி
யந்நிலையே யெழுந்தருளி யணியேகாம் பரமணைந்தார்

—பெரிய புராணம்.

"தலையுடை ஒலிக்குஞ் சிலையிடை மோதியும்
பண்டைநா ளொருசிலர் தொண்ட ராயினர்"

என்று நால்வர் நான்மணிமாலையில் இந்நாயனார் பெருமை கூறப்படு கின்றது.

# சண்டேசுர நாயனர்

வேதமலி சேய்ஞலூ ரெச்ச தத்தன்
விளங்கியசேய் மறைபயிலும் விசார சன்மர்
கோதனமேய்ப் பவன்கொடுமை பொருது தாமே
கொண்டுநிரை மண்ணியின்றன் கரையி னீழற்
ருதகியின் மணலிலிங்கத் தான்பா லாட்டத்
தாதைபொரு தவையிடறுந் தாள்கண் மாளக்
காதிமலாத் தாமமுயர் நாம முண்ட
கலமகனும் பதமருளாற் கைக்கொண் டாரே.

திருச்சேய்ஞலூரிலே வேதியர் குலத்தில் எச்ச தத்தன் என்பவர்க்குத் திருமைந்தராய் விசாரசருமர் அவதரித்தார்.

நன்றி புரியு மவர்தம்பா னன்மை மறையின் றுறைவிளங்க
வென்று மறையோர் குலம்பெருக வேழு புவனங் களுமுய்ய
மன்றி னடஞ்செய் பவர்சைவ வாய்மை வளர மாதவத்தோர்
வென்றி விளங்க வந்துதயஞ் செய்தார் விசார சருமனர்.

—பெரிய புராணம்.

பிறவிகள் தோறும் முயன்று கற்ற அறிவின் விசேடத்தினல் இவர் ஐந்தாம் வயதில் வேதாகமங்கள் முதலான பலகலைகளையும் ஓதாதுணர்ந்து அவைகளின் முடிந்த பொருள் சிவபெருமானுடைய திருவடிகளை யடைதலா மென்னும் மெய்ஞ்ஞானம் பெற்றார்.

ஐந்து வருட மவர்க்கணைய வங்க மாறு முடனிறைந்த
சந்த மறைக ளுட்படமுன் றலைவர் மொழிந்த வாகமங்கண்
முந்தை யறிவின் றொடர்ச்சியினன் முகைக்கு மலரின் வாசம்போற்
சிந்தை மலர வுடன்மலருஞ் செல்வி யுணர்வு சிறந்ததால்.

—பெரிய புராணம்.

"ஒருமைக்கட் டான்கற்ற கல்வி யொருவற்
கெழுமையு மேமாப் புடைத்து"

இவருக்கு ஏழாம் வயதில் பெற்றோர் உபநயனச் சடங்கு செய்து தங்கள் மரபுக்கேற்ப ஆசாரியரிடம் வேதாத்தியயனஞ் செய்வித்தனர். ஓதுவித்தற்கு முன்னமே விசார சருமருக்கு அமைந்திருந்த மேலான அறிவைக் கண்டு

ஆசாரியர்கள் அதிசயித்தனர். சிவபெருமானும் உமையம்மையாருமே பரம பிதா மாதாக்கள் என்றும்,* பெறுதற்கரிய மானுடப் பிறவியின் பெரும்பயன் பரமசிவனுக்கு அன்புபூண்டு வழிபட்டுய்தலே என்றும் உணர்ந்தார்.

குலவு மறையும் பலகலையும் கொளுத்து வதன்முன் கொண்டமைந்து
நிலவு முணர்வின் றிறங்கண்டு நிறுவு மறையோ ரதிசயித்தா
ரலகில் கலையின் பொருட்கெல்லை யாடுங் கழலே யெனக்கொண்ட
செலவு மிகுந்த சிந்தையினிற் றெளிந்தார் சிறிய பெருந்தகையார்.

—பெரிய புராணம்.

ஒரு நாள் வேதம் ஓதுகின்ற பிராமணப் பிள்ளைகளோடு வித்தியாசாலைக்குப் போகும்போது அவ்வழியாகப் பசுக்களை யோட்டிச்சென்ற ஓர் இடையன் தன்னை முட்ட வந்த பசு ஒன்றை அடித்தான். அதனைக்கண்ட விசாரசருமர் மனம் வருந்தி அவனை நோக்கிப் பசுவின் பெருமையை எடுத்துக் கூறினார். மேலும், பசுக்கள் விபூதிக்குரிய சாணம், திருமஞ்சனப் பொருட்களாகிய பால், தயிர், நெய், கோசலம், கோமயம் என்னும் ஐந்தையும் கொடுப்பவை என்றும் சொல்லி, இனிமேல் அப்பசுக்களை மேய்க்க வேண்டாமென்றும், தானே அவைகளை மேய்ப்பதாகப் பசுக்களை உடையவருக்குத் தெரிவித்து அவர்கள் சம்மதம் பெற்று "ஆவினுக் கருங்கலம் அரனஞ்சாடுதல்" என்னும் பெருமையை உடைய பசுக்களுக்கு யாதும் துன்பம் வராமல் மேய்க்கவேண்டிய காலங்களில் மேய்த்து, தண்ணீர் ஊட்டவேண்டிய காலங்களில் ஊட்டி, வெய்யில் உள்ளபோது மர நிழலில் விட்டு இளைப்பாற்றி, சூரியன் அஸ்தமிக்கும்போது அப்பசுக்களை அவரவர் வீடுகளிற் கொண்டுபோய் விட்டுத் தமது வீடு சேர்வார். விசாரசருமர் மேய்க்கத் தொடங்கிய பின் பசுக்கள் பெருகி வேண்டியபடி பால் கொடுத்தன. இதனால் பசுக்களின் சொந்தக்காரர் மிக மகிழ்ச்சியடைந்தனர். பசுக்களும் விசாரசருமரிடத்தில் அன்புடையனவாய்ப் பால்மடி சுரந்து ஒருவரும் கறக்காமல் பால் பொழிவதை நாயனார் கண்டார்.

முற்பிறப்பில் வேதாகமங்கள், கலைஞானங்களைக் கற்று அன்போடு சிவனைப் பூசித்த தவவிசேடத்தினால் மீண்டும் சிவபூசை செய்வதில் இவருக்கு விருப்பமுண்டாயிற்று. நாயனார் மண்ணியாற்றங்கரையில் ஆத்திமரத்தின்கீழ் விளையாட்டாக மணலினால் சிவலிங்கஞ் செய்து ஆலயம், கோபுரம், திருமதில் முதலியவையும் வகுத்து அமைத்தார்.

அங்கண் முன்னை யர்ச்சனையி னளவின் றொடர்ச்சி விளையாட்டாப்
பொங்கு மன்பான் மண்ணிமணற் புளினக் குறையி லாத்தியின்கீழ்ச்
செங்கண் விடையார் திருமேனி மணலா லாக்கிச் சிவாலயமுந்
துங்க நீடு கோபுரமுஞ் சுற்று வயமும் வகுத்தமைத்தார்,

—பெரிய புராணம்.

சிவபூசைக்கு வேண்டிய பூக்களைக் கொய்து வைத்துக்கொண்டு குடங்களை ஏந்திப் பசுக்களிடஞ் சென்று சுரக்கும் மடியின்கீழ்ப் பிடிக்க அவைகள் தாமே பால் பொழியக் கொண்டு வந்து சிவலிங்கத்துக்கு அபிடேகஞ் செய்து பத்திர புட்பத்தினால் அருச்சித்து வந்தார். சிவபெருமான் தமது அன்பராகிய விசாரசருமரது பத்தியினால் பிடிக்கப்பட்டு அவர் செய்த பூசனையைச் சிவலிங்கத்தினின்று உவந்தேற்றருளினர்.

மீள மீள வி்வண்ணம் வெண்பால் சொரிமஞ் சனமாட்ட
ஆள வுடையார் தம்முடைய வன்ப ரன்பின் பாலுளதாய்
மூள வமர்ந்த நயப்பாடு முதிர்ந்த பற்று முற்றச்சூழ்
கோள மதனி லுண்ணிறைந்து குறித்த பூசை கொள்கின்றார்.

—பெரிய புராணம்.

விசாரசருமர் பூசனைக்கு வேண்டிய திருமஞ்சனம் முதலிய திரவியங்களுள் கிடையாதவைகளை அன்புடன் மனத்தினால் கிடைத்தவைபோல் பாவனை செய்து பூசித்து வணங்கி மகிழ்ந்தார். பசுக்கள் விசாரசருமருக்கு அபிடேகத்துக்குப் பால் கொடுத்தும் மறையோர் வீடுகளில் முன்போல் குறைவின்றிப் பால்கொடுத்தன. முற்பிறப்பில் விதிப்படி செய்த சிவபூசையின் தொடர்ச்சி காரணமாக இளம் பருவத்தில் இந்நாயனார் செய்த பூசை மற்றவர்

களுக்கு விளையாட்டாகத் தோன்றினாலும், அன்பின் மிகுதியினால் செய்யப்பட்டதனால், சிவபெருமானுக்கு உவப்பாயிற்று.

ஐம்பொறிகளையும் ஒருவழிப்படுத்தி முழுமனதோடு பூசை செய்தல்வேண்டும்.

"கையொன்று செய்ய விழியொன்று நாடக் கருத்தொன்றெண்ணப்
பொய்யொன்று வஞ்சக நாவொன்று பேசப் புலால்கமழு
மெய்யொன்று சாரச் செவியொன்று கேட்க விரும்புமியான்
செய்கின்ற பூசையெவ் வாறுகொள் வாய்வினை தீர்த்தவனே."

என்று பட்டணத்தடிகள் கூறியவாறு இறைவனைப் பூசித்தலால் பெறும் பயன் யாது?

"சென்ற விடத்தாற் செலவிடா தீதொரீஇ
நன்றின்பா லுய்ப்ப தறிவு"—என்றார் நாயனார்

விசாரசருமர் தம் உள்ளத்தை ஐம்புலன்வழிச் செலுத்தாது ஐம்புலன்களும் தம் உள்ளத்துக்குக் கட்டுப்பட்ட நிலையில் பூசை செய்து வரும்போது, அவ்வழிச் சென்ற ஒருவன் இவரது அன்பு மயமான செயலை உணராமல், பாலைக் குடங்களில் கறந்து மணலில் சொரிதலைக் கண்டு இதனை அப்பதியிலுள்ள பிராமணர்களுக்குத் தெரிவித்தான். அதுகேட்ட வேதியர்கள் தங்கள் பசுக்கள் குறைவில்லாது பால் கொடுத்தலை அறிந்தும் இச்செயலை எச்சதத்தனுக்குத் தெரிவித்தனர். எச்சதத்தன் அவர்கள் சொல்லைக் கேட்டுப் பயந்து குற்றத்தைப் பொறுக்கும்படி வேண்டிக்கொண்டு மறுநாள் மண்ணியாற்றங்கரைக்குச் சென்று ஓர் குராமரத்திலேறி மறைந்திருந்து தன் மகன் செய்யும் பூசையைக் கண்டு கோபத்தோடு இறங்கிப் போய்க் கோல்கொண்டு முதுகிலடித்தான். அடிபட்டும் தாம் செய்யும் பூசனையில் மிகுந்த பக்தி வைத்ததனால் வேறொன்றையும் அறிந்திலர்.

"தொண்டுபுரியுஞ் சிறியபெருந் தோன்றலார் தம்பெரு மான்மேன்
மண்டுகாத லருச்சனையின் வைத்தார் மற்றொன் றறிந்திலரால்"
—பெரிய புராணம்.

நாயனார் சலியாது மெய்யன்போடு பாலினால் அபிடேகஞ் செய்தலைக் கண்ட எச்சதத்தன் மிகுந்த கோபத்தோடு பாற்குடங்களைக் காலாலிடறிச் சிந்தினான். அது கண்ட நாயனார் இவ்வாறு செய்தோன் தம் தந்தை யென்றறிந்தும், சிவத்துரோகஞ்செய்தமையினால் அவன் காலைத் துணிக்கக் கருதி முன்னிருந்த கோலையெடுக்க அது மழுவாக மாறியது. அம்மழுவைத் தம் தந்தையின் தாள்களில் வீசினார். அவனும் உடனே வீழ்ந்திறந்தான்.

இவ்வாறு தந்தையின் கால்களைத் துணித்த மைந்தர் முன்போல் அருச்சனை செய்யப் புகுதலும் சிவபெருமான் உமையம்மையாரோடு விடையின்மேல் தோன்றியருள, நாயனார் அதுகண்டு திருவடிகளில் வீழ்ந்து மூர்ச்சித்தார்.

> பூத கணங்கள் புடைசூழப் புராண முனிவர் புத்தேளிர்
> வேத மொழிக ளெடுத்தேத்த விமல மூர்த்தி திருவுள்ளங்
> காதல் கூர வெளிப்படலுங் கண்டு தொழுது மனங்களித்துப்
> பாத மலர்கள் மேல்விழுந்தார் பத்தி முதிர்ந்த பாலகனார்.
>
> —பெரிய புராணம்.

சிவபெருமான் நாயனாரைத் தமது திருக்கரங்களினால் எடுத்து அவரை நோக்கி "நம் பொருட்டாக உன் தந்தையின் கால்களை வெட்டினாய். இனி உன் தந்தை நாமே" என்று கூறி, அவரைத் தழுவி உச்சி மோந்து மகிழ்ந்து கொண்டாடித் தொண்டர்க்கெல்லாம் நாயகமாய் விளங்கச் செய்து சண்டேசனுமாம் பதங் கொடுத்துத் தமது சடாமுடியிலிருந்த கொன்றை மாலையை எடுத்து நாயனார் முடியில் சூட்டினார்.

> எல்லா வுலகு மார்ப்பெடுப்ப வெங்குமலர்மா ரிகள்பொழியப்
> பல்லா யிரவர் கணநாதர் பாடி யாடிக் களிபயிலச்
> சொல்லார் மறைக டுதிசெய்யச் சூழ்பல் லியங்க ளெழச்சைவ
> நல்லா ரேங்க நாயகமா நங்கள் பெருமான் றொழுதணைந்தார்.
>
> —பெரிய புராணம்.

எச்சதத்தன் நாயனாரது மழுப்படையினால் வெட்டப்பட்டமையினால் தான் செய்த குற்றத்திலிருந்து நீங்கிச் சுற்றத்தோடு சிவலோகம் எய்தப் பெற்றான்.

இச்சண்டேசுர நாயனார் தம் செயலற்றுச் சிவன்மாட்டுள்ள பேரன்பினால் தந்தையும் குருவும் பிராமணனுமாகிய எச்சதத்தனைக் கொன்ற பாதகமும் புண்ணியமாய் முடிந்தது. இதனை

" அரனடிக் கன்பர்செய்யும் பாவமு மறம தாகும்
பரனடிக் கன்பி லாதார் புண்ணியம் பாவ மாகும்
வரமுடைத் தக்கன் செய்த மாவேள்வி தீமை யாகி
நரரினிற் பாலன் செய்த பாதக நன்மை யாய்த்தே "

என்னும் சிவஞான சித்தியாரில் கண்டுகொள்க.

தேவாரத்திலும் திருவாசகத்திலும் சமயாசாரியர் நால்வராலும் சண்டேசுர நாயனார் பத்தியின் மகிமை எடுத்துப் போற்றப்பட்டிருத்தல் காண்க.

தாதையைத் தாளறவீசிய சண்டிக்கிவ் வண்டத்தொடு முடனே
பூதலத் தோரும் வணங்கப் பொற்கோயிலும் போனகமு மருளிச்
சோதி மணிமுடித் தாமமு நாமமுந் தொண்டர்க்கு நாயகமும்
பாதகத் துக்குப் பரிசுவைத் தானுக்கே பல்லாண்டு கூறுதுமே "

என்பதனால், சிவாலயங்களில் சண்டேசுரருக்குக் கோயில் அமைக்கப் படும் விதியுளதாம். அடியார்கள் சுவாமி தரிசனஞ்செய்த பின்னர், சண்டேசுரரை வழிபடுதல் வேண்டும் என்னும் நியமம் சைவ சித்தாந்தக் கொள்கை. இது ஆன்றோரால் தழுவிவரப்படும் வேதாகம வழக்கென்பது உணர்க.

பீரடைந்த பால தாட்டப் பேணு தவன்றாதை
வேரடைந்து பாய்ந்த தாளை வேர்த்தடிந் தான்றனக்குத்
தாரடைந்த மாலை சூட்டித் தலைமை வகுத்ததென்னே
சீரடைந்த கோயின் மல்கு சேய்ஞலூர் மேயவனே.

—தேவாரம்.

தீதில்லை மாணி சிவகருமஞ் சிதைத்தானைச்
சாதியும் வேதியன் தாதைதனைத் தாளிரண்டுஞ்
சேதிப்ப ஈசன் திருவருளால் தேவர்தொழப்
பாதகமே சோறு பற்றினவா தோணோக்கம். —திருவாசகம்.

# திருநாவுக்கரசு நாயனார்

போற்றுதிரு வாமூரில் வேளாண் டொன்மைப்
பொருவில்கொ றுக்கையர திபர் புகழ னார்பால்
மாற்றருமன் பினிற்றிலக வதியா மாது
வந்துதித்த பின்புமரு ணீக்கி யாருந்
தோற்றி யமண் சமயமுறு துயர நீங்கத்
துணைவரரு டரவந்த சூலை நோயாற்
பாற்றருநீ ளிடரெய்திப் பாடலிபுரத்திற்
பாழியொழித் தரனதிகைப் பதியில் வந்தார்.

வந்துதமக் கையாருளா னீறு சாத்தி
வண்டமிழா லுய்தீர்ந்து வாக்கின் மன்னும்
வெந்தபொடி விடம் வேழம் வேலைநீந்தி
வியன்சூலங் கொடியிடபம் விளங்கச் சாத்தி
யந்தமிலப் பூதிமக னரவு மாற்றி
யருட்காசு பெற்றுமறை யடைப்பு நீக்கிப்
புந்திமகிழ்ந் தையாற்றிற் கயிலை கண்டு
பூம்புகலூ ரரன்பாதம் பொருந்தி னாரே.

திருநாவுக் கரசுவளர் திருத்தொண்டி னெறிவாழ
வருஞானத் தவமுனிவர் வாகீசர் வாய்மைதிகழ்
பெருநாமச் சீர்பரவ லுறுகின்றேன் பேருலகி
லொருநாவுக் குரைசெய்ய வொண்ணுமை யுணராதேன்.

—பெரிய புராணம்.

திருமுனைப்பாடி நாட்டில் வேளாளர் குலத்தில் புகழனார் என்பவருக்கு அவர் மனைவியார் மாதினியார் வயிற்றில் திலகவதியார் என்னும் பெண்மணி பிறந்தார். திலகவதியார் பிறந்து சில ஆண்டுகளின்பின் சைவநெறி விளங்க மருணீக்கியார் என்னும் புதல்வர் அவதாரஞ் செய்தார். மருணீக்கியார் சகல கலை ஞானங்களையும் களங்கமறக்கற்று வல்லவராயினர். திலகவதியாருக்குப் பன்னிரண்டு வயதானபோது அவர் பெற்றோர் சிவபத்தியில் சிறந்தவரும் சேனாதிபதியுமாகிய கலிப்பகையாருக்கு மணம்பேசி வைத்தனர். கலிப்பகையார் அரசன் ஏவலினால் வடதேசஞ்சென்று பகைவரோடு பலநாள் அமர்புரியும்போது புகழனார் தேக வியோகமாயினர். அவர் மனைவியாரும் கற்புநெறி வழுவாமல் கணவனுடன் உயிர்நீத்தார். திலக

வதியாரும் மருணீக்கியாரும் தந்தைதாயார்க்குச் செய்ய வேண்டிய கடன்களைச் செய்துமுடித்தனர். தங்கள் பெற்றோரை இழந்த துயரம் நீங்குமுன் கலிப்பகையார் வடதேசத்தில் நடந்த போரில் வெற்றியோடு சிவபதமடைந்தார். அச்செய்தியை இருவரும் அறிந்தனர். திலகவதியார் மனம் வருந்தித் தமது உயிரைப் கலிப்பகையாருடன் சேர்ப்பிக்கத் துணிந்தனர். அப்போது மருணீக்கியார் தமது தமக்கையாரின் அடிகளில் விழுந்து தம்மைத் தனியே விட்டுச் செல்லத் துணிவாராகில் தாம் தமது தமக்கையாருக்கு முன்னே உயிர் விடுவதாக உறுதிமொழி கூறினார். தம்பியார் உயிரோடிருந்து வாழவேண்டுமென்னும் அன்பின் மிகுதியினால் உயிர் துறவாமல் தவம் செய்தார் திலகவதியார்.

> தம்பியா ருளராக வேண்டுமென வைத்ததயா
> வும்பருல கணையவுறு நிலைவிலக்க வுயிர்தாங்கி
> அம்பொன்மணி நூல்தாங்கா தனைத்துயிர்க்கு மருடாங்கி.
> இம்பர்மனைத் தவம்புரிந்து திலகவதி யாரிருந்தார்
>
> —பெரிய புராணம்.

மருணீக்கியார் உலக வாழ்க்கை அநித்திய மென்றுணர்ந்து பல தருமங்களைச் செய்து முத்திநெறி அறிய வேண்டுமென்னும் கருத்துடன் சமய சாத்திரங்களை ஆராய்ந்தார். அவைகள் கூறும் உலக நிலையாமையை உணர்ந்து அறநெறியில் நின்றார். அறச்சாலைகள் அமைத்தார். தண்ணீர்ப் பந்தல்கள் வைத்தார். சோலைகள் வளர்த்தார். குளங்கள் வெட்டினார். விருந்தளித்தார். வேண்டுவோர்க்குப் பொருளுமீந்தார். இவ்வாறு பல அறங்களைச் செய்தும் சிவபெருமானின் அருளைப் பெறுமையால் தர்ம நீதிகளைக் கூறும் சமண சமயத்தையே மேலான சமயமென்று கைக்கொண்டார்.

> நில்லாத வுலகியல்பு கண்டு நிலையாவாழ்க்கை
> அல்லேனென் றறத்துறந்து சமயங்க ளானவற்றி
> னல்லாறு தெரிந்துணர நம்பரரு ளாமையினாற்
> கொல்லாமை மறைந்துறையு மமண்சமயங் குறுகுவார்.
>
> —பெரிய புராணம்.

"விதி வழி மதி செல்லும்" என்பதை இச்செய்யுளிலிருந்து அறியலாம். சமணசமயத்திற்குச் சென்றது தம்முடைய முற்பிறப் பின் வினைப்பயன் என்பதைத் திருநாவுக்கரசு சுவாமிகள் தாம் திருவாய்மலர்ந்தருளிய தமிழ் வேதமாகிய தேவாரத்தில் ஆங்காங்கு அருளிச் செய்திருக்கின்றார்.

"முன்ன ரமண்மதத்து மூண்டரசர் பின்சைவந்
துன்னியது மென்வியப்போ சோமேசா—வுன்னுங்காற்
பேதைப் படுக்கு மிழவூ ழறிவகற்று
மாகலூ முற்றக் கடை"

என்னும் சோமேசர் முதுமொழி வெண்பா இங்கே கருதற்பாலது. ஊழ், விதி, வினை ஒருபொருட் சொற்கள். எவரும் சிவபெருமா னுடைய திருவருளில்லையாயின் சைவ சித்தாந்த சமயமே மெய்ச் சமயம் எனச் சந்தேக விபரீதமறக் கற்றுத் தெளியமாட்டார். சிவ பெருமான் திருவருளை முன்னிட்டுக் கற்ற மாணிக்கவாசக சுவாமி கள் பதினாறு வயதில் முத்தியடைதற்குரிய சகல கலைகளையும் சந்தேக விபரீதமறக் கற்றுத் தெளிந்தனர். இதனை,

மிக்கலையுஞ் செழுநீரு மதிக்கலையு மிலைக்குமவ
ரக்கலையுந் தோளர்புலி யதட்கலையர் நல்லருளா
லொக்கலையும் பிறக்கலையு மொழித்திடுமா கமகலையு
மெக்கலையுங் கற்றுணர்ந்தா ரீரெட்டாண் டெல்லையினில்

எனவரும் திருவாதவூரடிகள் புராணத்தால் அறிக.

திருவருளைப் பெறவேண்டுமென்னும் ஆசையோடு தவஞ் செய்தாலன்றி அத்திருவருள் கிடைப் பதரிது. திருவருளில்லா விடத்து உண்மை நெறியை யறிந்து முத்தியடைதல் கூடாது. " அவனருளாலே யவன்றாள் வணங்கி " என்னும் திருவாசகமும்,

ஆட்டுவித்தா லாரொருவ ராடா தாரே
அடக்குவித்தா லாரொருவ ரடங்கா தாரே
ஓட்டுவித்தா லாரொருவ ரோடா தாரே
உருகுவித்தா லாரொருவ ருருகா தாரே
பாட்டுவித்தா லாரொருவர் பாடா தாரே
பணிவித்தா லாரொருவர் பணியா தாரே
காட்டுவித்தா லாரொருவர் காணா தாரே
காண்பாரார் கண்ணுதலாய் காட்டாக் காலே

என்னும் அப்பர் சுவாமிகள் தேவாரமும் கண்டு தெளிக.

இம்மருணீக்கியார் சைவ நூல்களை யுணர்ந்தும் திரு வருளைப் பெறாமையால் அமண சமயத்தில் புகுந்தார்.

சமணசமயக் கலைநூல்களையெல்லாங் கற்று மிகவல்லவராய்த் தருமசேனன் என்னும் பெயர் பெற்றுச் சமண சமயத் தலைவராய் விளங்கினார்.

இவர் நிலைமை இவ்வாறாகத் திலகவதியார் திருவதிகையில் சேர்ந்து சிவ சின்னங்களைத் தரித்துப் பேரன்போடு திருவலகிடுதல், கோமயத்தினால் மெழுகுதல், திருமாலை தொடுத்துச் சாத்தக்கொடுத்தலாகிய திருத்தொண்டுகளைச் செய்து தமது தம்பியார் பரசமயத்தில் பிரவேசித்ததை நினைந்து மனம் வருந்தி வீரட்டானேசுரரை வணங்கி "ஐயனே! தேவரீர் என்னை அடிமை கொள்வது மெய்யானால், என்னுடன் பிறந்தவனைச் சமணசமயமாகிய படுகுழியினின்றும் எடுத்துக் காத்தருளவேண்டும்" எனப் பலகாலும் வேண்டினார்.

தூண்டுதவ விளக்கனையார் சுடரொளியைத் தொழுதென்னை
ஆண்டருளி னீராகி லடியேன்பின் வந்தவனை
ஈண்டுவினைப் பரசமயக் குழிநின்று மெடுத்தாள
வேண்டுமெனப் பலமுறையும் விண்ணப்பஞ் செய்தனரால்.

—பெரிய புராணம்.

சிவபெருமான் திலகவதியார் சொப்பனத்தில் எழுந்தருளி "உன் தம்பி முற்பிறப்பில் ஓர் முனிவனாகி நம்மையடையும் பொருட்டுத் தவஞ்செய்தான். அத்தவத்திற்நேர்ந்த அற்ப வழுவினால் இங்குற்பவித்தனன். இப்பொழுது சூலைநோயால் வருத்தி ஆட்கொள்வோம்" என்று சொல்லி மறைந்தனர்.

மன்னுதபோ தனியார்க்குக் கனவின்கண் மழவிடையா
ருன்னுடைய மனக்கவலை யொழிநீயுன் னுடன்பிறந்தான்
முன்னமே முனியாகி யெனையடையத் தவமுயன்றா
னன்னவனை யினிச்சூலை மடுத்தாள்வ மெனவருளி.

பண்டுபுரி நற்றவத்துப் பழுதினள விறைவழுவுந்
தொண்டரையா ளத்தொடங்குஞ் சூலைவே தனைதன்னைக்
கண்டருநெற் றியாரருளக் கடுங்கனல்போ லடுங்கொடிய
மண்டுபெருஞ் சூலையவர் வயிற்றினிடைப் புக்கதால்.

—பெரிய புராணம்.

ஊழ்வசத்தால் திருநாவுக்கரசு சுவாமிகள் புறச்சமயத்தில் பிரவேசித்தாரென்று சேக்கிழார் பெருமான் பாடியருளினர்.

சிவபெருமான் திலகவதியாருக்குக் கனவில் அருளிய பிரகாரம் தருமசேனனுக்குச் சூலைநோயைக் கொடுத்தார். அந் நோயைச் சகிக்க முடியாது தாம் கற்றுக்கொண்ட மந்திரங்களினால் தடுக்க முயன்றார். அந் நோய் குறையாது அதிகரிக்கக் கண்டார். மற்றைய சமணர்கள் தங்கள் மயிற் பீலி கொண்டு தடவியும், கமண்டல நீரை மந்திரித்துக் குடிக்கச் செய்தும் சூலை நோய் தணியாது முன்னினும் அதிகப்பட அவர்கள் மனங்கலங்கித் தங்களால் நீக்க முடியாதென்று கைவிட்டனர். தருமசேனர் முன்செய்த நல்வினைப் பயனாகத் தமது சகோதரியாராகிய திலகவதியாரைநினைந்து அவருக்குச் சொல்லும்படி தமது ஏவலாளரில் ஒருவனை அனுப்பினார். ஏவலாளன் சென்று திலகவதியாரைத் திருவதிகையிலுள்ள ஓர் நந்தவனத்தின் புறத்தே கண்டு இறைஞ்சி அவரது தம்பியாரின் ஏவலினால் வந்ததாகச் சொன்னான். அம்மையார் தமது தம்பியாருக்கு ஏதும் தீங்கு உண்டோ என்று வினவ, அவன் அவர் சூலை நோயால் வருந்துவதையும், சமண முனிவர்கள் அந் நோயைத் தீர்க்க முடியாது கைவிட்டமையையும், அவர் உய்யும் வழியைக் கேட்டு இரவிலே திரும்பி வரும்படி தன்னை அனுப்பியதையும் சொன்னான். பெண்மணியாகிய திலகவதியார் கடவுள் தமக்குக் கனவில் அருளியதை நினைந்து தாம் சமணர்பாழிக்கு வரமுடியாதென்று தம்பியாருக்குச் சொல்லும்படி கட்டளையிட்டார். தமக்கையார் சொல்லியனுப்பிய செய்தியைக் கேட்ட தருமசேனர் சிவபெருமானுடைய திருவருள் கூடுதலால் இச்சமண சமயத்தில் நீங்காத இந்நோய் நீங்கும்படி சைவ மார்க்கத்தை யனுட்டிக்கின்ற திலகவதியாருடைய திருவடிகளை யடைவேன் என்று அன்றிரவே ஒருவருமறியாது ஏவலாளரைப் பிடித்துக்கொண்டு திருவதிகை சேர்ந்தார். அவ்விடத்தில் திலகவதியாரைக் கண்டு வணங்கி, "அம்மே, என்னை வருத்துகின்ற கொடிய சூலை நோயைச் சகிக்க முடியாது உம்மை வந்தடைந்தேன். இனிமேல் பிழைத்துய்யும்படி நன்னெறி காட்டவேண்டும்" என விழுந்து வணங்கினர். திலகவதியார் சிவபெருமான் திருவருளை

னைந்து தம்பியாரை நோக்கி, "பிறவிக்கடலாகிய சமுத்திரத்தினின்றும் நீங்கி எழுந்திரும்" என இரண்டு பொருள் பட "எழுந்திரும்" என்ருர். அவரெழுந்து நடுக்கத்துடன் நிற்க, "இந்நோய் வீரட்டானேசுரர் அருளால் வந்தது. அவரை வணங்கித் தொண்டு செய்வாயாக" என்று கட்டளையிட்டு விபூதியை ஸ்ரீ பஞ்சாட்சரத்தை யோதித் தம்பியாருக்குக் கொடுத்தார். அவ்விபூதியைப் பெருவாழ்வு வந்ததென அவர் அன்புடன் ஏற்று உடம்பு முழுவதும் அணிந்தனர். பின்னர், திலகவதியார் மருணீக்கியாரைத் திருப்பள்ளியெழுச்சி காலத்தில் திருக்கோயிலுக்கு அழைத்துச் சென்றனர்.

மருணீக்கியார் திருக்கோயிலை வலம் வந்து சந்நிதானத்தில் விழுந்து வணங்கி எழுந்து நின்று, சிவபெருமானது திருவருளினல் தமிழ் வேதமாகிய பாமாலையைப் பாடும் உணர்வுபெறத் திருவருளைச் சிந்தித்துப் பாடலுற்ருர்.

அவர் விபூதி நிறைய விளங்கும் திருமேனியோடு உள்ளத்தில் அன்பானது அதிகரிக்கச் சூலைநோயும் பிறவிக்கேதுவாகிய மலப்பிணியும் அறும்பொருட்டு, "கூற்ருயின வாறு விலக்க கிலீர்" என்னும் முதலையுடைய திருப்பதிகத்தைத் திருக்கோயில் சந்நிதானத்தில் நின்று தமது துன்பத்தோடு இனிமேல் அன்போடு ஓதுகின்ற ஆன்மாக்களுக்கு வருந் துன்பமும் நீங்கப் பாடியருளினர்.

திரைக்கெடில வீரட்டா னத்திருந்த செங்கனக
வரைச்சிலையார் பெருங்கோயி லுருழுதுவலங் கொண்டிறைஞ்சித்
தரைத்தலத்தின் மிசைவீழ்ந்து தம்பிரான் திருவருளால்
உரைத்தமிழ்மா லைகள்சாத்து முணர்வுபெற வுணர்ந்துரைப்பார்.

நீற்ரு னிறைவா கியமே னியுட
 னிறையன் புறுசிந் தையினே சமிக
மாற்ருர் புரமாற் றியவே தியரை
 மருளும் பிணிமா யையறுத் திடுவான்

கூற்ருயினவா றுவிலக்ககிலீ
ரெனகீ டியகோ திிருப் பதிகம்
போற்று லுலகே ழின்வருந் துயரும்
போமா றெதிர்நின் றுபுகன் றனரால்.

—பெரிய புராணம்.

திருவதிகை வீரட்டானம்.

பண் கொல்லி

கூற்ருயின வாறு விலக்ககிலீர்
கொடுமைபல செய்தன நானறியே
னேற்ருயடிக்கே யிரவும்பகலும்
பிரியாது வணங்குவ னெப்பொழுதும்
தோற்ருதென் வயிற்றி னகம்படியே
குடரோடு துடக்கி முடக்கியிட
ஆற்றேனடி யேனதி கைக்கெடில
வீரட்டா னத்துறை யம்மானே.

போர்த்தாயங்கொ ரானையி னீருரிதோல்
புறங்காடரங் காநடமாட வல்லா
யார்த்தானரக் கன்றனை மால் வரைக்கீ
ழடர்த்திட்டருள் செய்த வதுகருதாய்
வேர்த்தும் புரண்டும் விழுந்து மெழுந்தா
லென்வேதனை யான விலக்கியிடா
யார்த்தார் புனல்சூழ திகைக்கெடில
வீரட்டா னத்துறை யம்மானே.

என்னும் தேவாரத் திருப்பதிகம் பாடியதும் சூலை நோய் நீங்கியது.

"இறைவர் திருவருளால் இந்நோய் வந்தது; அவர் திருவடியைப் பணிந்து திருத்தொண்டு செய்வீர்" என்று திலகவதியார் செய்த உபதேசமானது மருணீக்கியாரின் நோயைத் தீர்த்தது.

"உயர்தவத்தோர்-கற்றைவேணியரருளே காணுமிது கழலடைந்தோர், பற்றறுப்பார்தமைப் பணிந்து பணிசெய்வீரெனப்பணித்தார்."

—பெரிய புராணம்.

அவ்வம்மையாரின் கற்பு போற்றத் தக்கது. பேரன்புடைய அவர் தவ வலிமையை யார் எடுத்துரைக்கவல்லார்.

"நல்ல திலக வதியார்மொழியை நம்பிவெங்நோய்
சொல்லரசர் தீர்ந்துய்ந்தார் சோமேசா-புல்லிய
நோய்நாடி நோய்முத னாடி யதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்"

என்பது முதுமொழி வெண்பா.

மருணீக்கியார் ஆனந்தபரவசராகிச் சிவபெருமா னுடைய கிருபைக்கடலில் மூழ்கி, சரீரம் புளகம்கொள்ள, ஆனந்தக் கண்ணீர் சொரிய பூமியில் விழுந்து புரண்டு மாயையிலிருந்து நீங்கப்பெற்றுச் சிவானந்த மேலீட்டினால் பணிந்து தோத்திரம் பண்ணி வணங்கினார்.

அங்கங்க ளடங்க ரோமமெலா மடையப்
புளகங் கண்முகிழ்த் தலரப்
பொங்கும் புனல்கண் கள்பொழிந் திழியப்
புவிமீ துவிழுந் துபுரண் டயர்வார்
இங்கென்செயலுற் றபிழைப் பதனு
லேறு தபெருந் திடரே றிடநின்
றங்குங் கருணைப் பெருவெள் ளமிடத்
தகுமோவென வின் னனதா மொழிவார்.
—பெரிய புராணம்.

அப்போது சிவபெருமான் அசரீரி வாக்காகச் "செ தமிழ்ச் சொல்வளம் நிறைந்த தேவாரப் பதிகம்பாடிய உனக்கு 'நாவுக்கரசு' என்னும் நாமம் உலகெங்கும் நிலை பெறும் வண்ணம் வழங்கினோம்" என்று அருள்செய்தார். நாயனார் மகிழ்ந்து சுவாமியை வணங்கிக்கொண்டு அன்று முதல் சிவ சின்னங்களைத் தரித்து மனம் வாக்குக் காயங் களினால் முறையே சிந்தித்துணர்ந்து பாடித் துதித்து உழ வாரப்பணியும் செய்துகொண்டிருந்தார்.

சிவபெருமான் ஆன்மாக்களைத் தண்டிப்பது அவற்றின் தீய வினைகளைநீக்கி ஈடேற்றியாளும் கருணையினால் என்பதும், புண்ணி யம் செய்த ஆன்மாக்கள் ஒருபோது தீமைசெய்யினும் அவற்றைக் கைவிடாது காக்கும் கிருபையுடையவர் என்பதும் இதனால் அறியப் படும். மருணீக்கியார் சிவபெருமானுடைய திருவருள் கைகூடிய தனால் சிவஞானம் எய்தப்பெற்றார்.

"வன்சமணர் தன்பிரிவால் வாகீசர்க் கின்பமன்றித்
துன்பமென்ப தில்லையே சோமேசா—நன்காம்

பேரிதினிது பேதையார் கேண்மை பிரிவின்கட்
பீழை தருவதொன் றில்"

என்பது முதுமொழி வெண்பா.

அறிவில்லார் நட்பு பிரிவின்கண் துன்பமளிப்பதில்லை யாத லின் இனிதென்பதாம்.

சிவனருளாற் றேவரு மாவார்
சிவனருளாற் சிலர் தெய்வத்தோ டொப்பர்
சிவனருளால் வினைசேர கிலாமை
சிவனருட் கூறிலச் சிவலோக மாமே. —திருமந்திரம்.

பாடலிபுரத்துச் சமணர்கள் இதை யறிந்து தம் சமயத்துக்குப் பங்கம் வந்ததென்று அரசன் அறிவதற்கு முன் தாங்கள் போய் வேறுவகையாய்த் தெரிவிக்க வேண்டுமென ஆலோசனைசெய்து அரசனிடம் சென்று தருமசேனர் சடையான் சமயஞ்சார விரும்பித் தமக்குச் சூலை நோய் உண்டானதென்று பொய்வேடம் பூண்டு நமது மந்திர முதலியவைகளால் தீரவில்லை என்று பாசாங்குசெய்து தமக்கையாரிடம் போய்ச் சேர்ந்தா ரென்று கூறினர்.

இப்படி நம் சமயத்தைப் பொய்யாக்கி யழித்தவனை என்ன செய்யவேண்டுமென்று அரசன் கேட்டான். தங்களுக்குத் தலைவராயிருந்தார் என்பதைச் சிறிதேனும் நினையாது தருமசேனருக்குத் துன்பம் செய்யவேண்டும் என்றார்கள். விபரீத உணர்ச்சியுடைய பல்லவராசனும் தர்மசேனனுக்குத் தண்டனை செய்ய எண்ணி அவரை அழைத்து வரும்படி மந்திரிகளுக்குக் கட்டளையிட்டான். அவர்களும் சேனைவீரரோடு புறப்பட்டுத் திருவதிகையில் சிவபெருமானது அடியாராகிய திருநாவுக்கரசு சுவாமிக ளிடஞ் சென்று, "அரசன் உம்மை அழைத்து வரும்படி கட்டளை யிட்டனன்" என்றார். அதுகேட்ட நாயனார் "நாம் சிவபெருமானுக்கு அடிமையாகித் திருவருள் மார்க்கத்தில் நிற்பதேயன்றி உங்கள் அரசன்கீழ் வாழ ஒருப்படோ மாதலால், அவ்வரசன் அழைக்க நாம் அவனைப் பொரு ளாகக்கொண்டு வருதல் எவ்வாறு?" என மறுத்தனர்.

நாமார்க்குங் குடியல்லோ மென்றெடுத்து நான்மறையின்
கோமானை நதியினுடன் குளிர்மதிவாழ் சடையானைத்
தேமாலைச் செந்தமிழின் செழுந்திருத்தாண் டகம்பாடி
யாமாறு நீரழைக்கு மடைவிலமென் றருள்செய்தார்.

—பெரிய புராணம்.

"துறவிக்கு வேந்தன் துரும்பு" என ஔவையார் கூறியவாறு "நாமார்க்குங் குடியல்லோம்" என்னும் திருத்தாண்டகத்தைப் பாடியருளினுர்.

நாமார்க்குங் குடியல்லோ நமனையஞ்சோ
நரகத்தி லிடர்ப்படோ நடலை யில்லோம்
ஏமாப்போம் பிணியறியோம் பணிவோ மல்லோ
மின்பமே யெந்நாளுந் துன்ப மில்லை
தாமார்க்குங் குடியல்லாத் தன்மை யான
சங்கரனற் சங்கவெண் குழையோர் காதிற்
கோமாற்கே நாமென்று மீளா வாளாய்க்
கொய்மலர்ச்சே வடியிணையே குறுகி னேமே.

என்பது மறுமாற்றத் திருத்தாண்டகம்.

"யாமார்க்கும் குடியல்லோம்" என்னும் திருவாசகமும் இங்கே சிந்திக்கத்தக்கது.

மந்திரிமார் அதுகேட்டு திருநாவுக்கரசு சுவாமிகளை வணங்கி அழைத்துக்கொண்டுபோய் அரசன் முன்னிலையில் விட்டனர். பலலவராசன் இப்படித் தஞ் சமயநிந்தை செய்த இவரை என்ன செய்யலாம் என்றுன். சமணர் அஞ்சாது நீற்றறையில் விடவேண்டும் என்றுர். அப்படியே நீற்றறையில் விட்டுப் பூட்டியபோது கனக சபையில் தாண்டவம் செய்தருளும் நடராச மூர்த்தியைச் சிந்தித்து இம்மையில் சிவனடியார்களுக்கு யாதொரு துன்பமும் வரமாட்டாதென்று "மாசில் வீணையு மாலைமதியமும்" என்னும் முதலடியையுடைய தேவாரத் திருப்பதிகத்தைப் பாடிச் சிவசதியானஞ் செய்து இனிதமர்ந்திருந்தார்.

"மாசில் வீணையு மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈச னெந்தை யிணையடி நீழலே.

விறகிற் றீயினன் பாலிற் படுநெய்போல்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்
உறவு கோனட் டுணர்வு கயிற்றினால்
முறுக வாங்கிக் கடையமுன் னிற்குமே."

—தேவாரம்.

நீற்றறையின் சுண்ணத்தின் நெடி நாசிக்கும், அதன் பரிசம் உடம்புக்கும், பராகம் நாவிற்கும், தோற்றம் கண்ணுக்கும், அதன் கொதித்தவோசை காதிற்கும் துன்பத்தைக் கொடாமல், நாசிக்கு மலர்களும், தேகத்திற்குத் தென்றலும், நாவிற்குத் தண்ணீரும், காட்சிக்கு நிலவும், காதிற்கு யாழினொலியும்போல் இன்பத்தைக் கொடுத்தன.

வெய்யநீற் றறையதுதான் வீங்கிளவே னிற்பருவந்
தைவருதண் டென்றலணை தண்கழுநீர்த் தடம்போன்று
மொய்யொளிவெண் ணிலவலர்ந்து முரன்றயா ழொலியினதா
யையர்திரு வடிநீழ லருளாகிக் குளிர்ந்ததே.

—பெரிய புராணம்.

சமணர்கள் ஏழாம்நாள் நீற்றறையைத் திறந்துபார்க்கும்போது சுவாமிகளின் திருமேனிக்கு யாதொரு வருத்தமுமில்லாதிருக்கக் கண்டு அதிசயித்தனர். பிறகு, பாலுடன் விடத்தைக் கலந்து கொடுத்தார்கள். சிவபெருமானுடைய திருவருளே ஆசாரியத் திருவுருவங்கொண்டு உலகத்திலுள்ள ஆன்மாக்களுக்கு விளங்கும்பொருட்டுத் திருவவதாரஞ் செய்த திருநாவுக்கரசு நாயனார் சமணர் ஊட்டிய விடம் கலந்த பாற்சோற்றை உண்டும் ஒரு இடையூறுமின்றி இருந்தார்.

நஞ்சமமு தாமெங்க ணாதனடி யார்க்கென்று
வஞ்சமிகு நெஞ்சுடையார் வஞ்சனையாம் படியறிந்தே
செஞ்சடையார் சீர்விளக்குந் திறலுடையார் தீவிடத்தால்
வெஞ்சமண ரிடுவித்த பாலடிசின் மிசைந்திருந்தார்.

—பெரிய புராணம்.

" வஞ்சனைப்பாற் சோறாக்கி வழக்கிலா வமணர் தந்த
நஞ்சமு தாக்கு வித்தார் நனிபள்ளி யடிக ளாரே "

என்பது அப்பர் சுவாமிகள் தேவாரம்.

அதன் பின்னர் அவரை மிதித்துக்கொல்லும்படி யானையைத் தூண்டினார்கள். தவத்துக்கோர் தலைமையான நாயனார் தம்மைக் கொல்லச் சமணர்கள் விட்ட யானை எதிரில் வந்தபோது அச்சமின்றி உலகம் உய்யும்வண்ணம் தேவாரத்திருப்பதிகம் பாடியருளினார்.

சுண்ணவெண் சந்தனச் சாந்துஞ் சுடர்த்திங்கட் சூளா மணியும்
வண்ண வுரிவை யுடையும் வளரும் பவள நிறமும்
அண்ண லரண்முர ணேறு மகலம் வளாய வரவும்
திண்ணன் கெடிலப் புனலு முடையா ரொருவர் தமர்நாம்
அஞ்சுவ தியாதொன்று மில்லை யஞ்ச வருவது மில்லை.

நரம்பெழு கைகள் பிடித்து நங்கை நடுங்க மலையை
உரங்களெல் லாங்கொண் டெடுத்தா னென்பது மொன்று மலற
வரங்கள் கொடுத்தருள் செய்வான் வளர்பொழில் வீரட்டஞ் சூழ்ந்து
நிரம்பு கெடிலப் புனலு முடையா ரொருவர் தமர்நா
மஞ்சுவ தியாதொன்று மில்லை யஞ்ச வருவது மில்லை. —தேவாரம்.

அம்மத யானையானது சிவபெருமானைத் தியானஞ் செய்து அவரே கதி என்று கொண்ட நாயனாரை வலஞ் செய்து எதிர்நின்று நிலத்திலே தாழ்ந்து வணங்கி எழுந்து சென்றது. மீண்டும் நாவுக்கரசர்மேல் செல்லும்படி தூண்டிய பாகர்களையும் சமணர்கள் பலரையுங் கொன்று, நகரவாசிகள் எல்லோரையும் கலங்க வைத்து பல்லவராசனுக்கு மனக்கவலை உண்டாகச் செய்தது. அதன்மேல் சமணர்கள் நாயனாரைக் கல்லோடு சேர்த்துக்கட்டி நடுக்கடலில் தள்ளிவிட்டனர். அப்பொழுது நாயனார் சிவபெருமானைத் தியானித்துச் "சொற்றுணை வேதியன்" என்னும் நமச்சிவாயப் பதிகம் பாடியருளினார்.

சொற்றுணை வேதியன் சோதி வானவன்
பொற்றுணை திருந்தடி பொருந்தக் கைதொழக்
கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணை யாவது நமச்சி வாயவே.

மாப்பிணை தழுவிய மாதோர் பாகத்தன்
பூப்பிணை திருந்தடி பொருந்தக் கைதொழ
நாப்பிணை தழுவிய நமச்சி வாயப்பத்
தேத்தவல் லார்தமக் கிடுக்க ணில்லையே —தேவாரம்.

பஞ்சாட்சரப்பதிகம் ஓதியருளவும், கடலினுள் கல் மிதந்தது. நாயனாரைச் சேர்த்துக் கட்டப்பட்ட கல்லானது தெப்பமாய் மிதந்து சுவாமிகளைத் தாங்கிக்கொண்டு வந்து திருப்பாதிரிப்புலியூருக்கு அடுத்த திருக்கெடிலநதி முகத்துவாரக்கரை சேர்ந்தது.

நல்வினை தீவினைகளாகிய பாசமும் ஆணவமலமாகிய கல்லும் சேர்த்துக் கட்டப்பட்ட ஆன்மாக்களைப் பிறவி என்னும் கடலிலிருந்து நீக்கிக் கரையேற்றுதற்குத் தோணியாயுள்ள ஸ்ரீபஞ்சாட்சரமானது திருநாவுக்கரசு நாயனாரைத் திருப்பாதிரிப்புலியூர் என்னும் க்ஷேத்திரத்தில் கொண்டுவந்து கரையேறச் செய்தது ஓர் அற்புதமன்று.

இருவினைப் பாசமு மலக்க லார்த்தலின்
வருபவக் கடலில்வீழ் மாக்க ளேறிட
வருளுமெய் யஞ்செழுத் தரசை யிக்கடல்
ஒருகன்மே லேற்றிட லுரைக்க வேண்டுமோ
—பெரிய புராணம்.

நாயனார் திருப்பாதிரிப்புலியூருக்கு எழுந்தருளிச் சிவபெருமானை வணங்கிப் பதிகம் பாடித் துதித்துத் திருவதிகை வீரட்டானத்தை யடைந்தார்.

அந்நகரவாசிகள் அத்திருப்பதியை அலங்கரித்துத் திருநாவுக்கரசு நாயனாரை எதிர்கொண்டனர். விபூதி நிறையப் பூசப்பெற்ற பொன்போன்ற திருமேனியோடு உருத்திராட்சமாலை அணிந்து, இரண்டு கண்களிலிருந்தும் அன்புமயமான மழைசொரிய, தமிழ் வேதம் பாடுகின்ற திருநாவுக்கரசு நாயனார் தம்மை எதிர்கொண்டழைத்த அடியார்களோடு திருவீதியுள் புகுந்தார்.

"தூயவெண் ணீறு துதைந்தபொன் மேனியுந் தாழ்வடமும்
நாயகன் சேவடி தைவரு சிந்தையு நைந்துருகிப்
பாய்வது போலன்பு நீர்பொழி கண்ணும் பதிகச் செஞ்சொல்
மேயசெவ் வாயு முடையார் புகுந்தனர் வீதியுள்ளே"

எனச் சேக்கிழார் பெருமான் நாயனார் தவக்கோலத்தை எடுத்துப் புகழ்ந்து பாடுவாராயினர்.

நாயனார் சிவபெருமானை வணங்கித் துதித்துக் கைத்தொண்டு செய்திருந்தார். அப்போது நாயனாருக்குத்

துன்பஞ் செய்த சமண சமயத்தனுகிய பல்லவன் என்னும் அரசன் அறியாமையினால் செய்த பிழைகளை உணர்ந்து நாயனாரிடம் வந்து அவரை வணங்கித் தான் செய்த குற்றத்தைப் பொறுத்தருள வேண்டினான். நாயனாரும் அவனுக்குக் கருணை செய்தார்.

கொல்லாவிரதம் பற்றிப் போதிக்கும் சமண சமயத்தவர்கள் எத்துணை வன்கண்ணர் என்பது அவர்கள் அரசனுக்குப் பொய் கூறித் தங்கள் சாரபில் அவனை இழுத்துக்கொண்டமையாலும், நாயனாரைக் கொல்லும் நோக்கத்தோடு அவர்கள் செய்த பாதகத் தொழில்களாலும் தெரியப்படும்.

முன்செய்த வினைப்பயனை உணரும் ஞானிகளுக்கு வரும் இடையூறுகள் சிவபோகமாய் விளைகின்றன.

> "பல்லவர் கோன்வந்து பணியக் கருணைசெய்தார்
> தொல்லைநெறி வாகீசர் சோமேசா—கொல்ல
> இணரெரி தோய்வன்ன வின்னா செயினும்
> புணரின் வெகுளாமை நன்று"

என்பது முதுமொழி வெண்பா.

அதுபற்றியே நீற்றறையானது திருவடி நிழலாய்ச் சிவானந்தமயமாகியது. ஈசனடியார்களுக்கு யார் எத்தீமைகள் செய்யினும் அவற்றால் அடியார் துன்பமெய்தார் என நாயனார் பாடுகின்றார்.

> வானந் துளங்கிலென் மண்கம்ப மாகிலென் மால்வரையும்
> தானந் துளங்கித் தலைதடு மாறிலென் றண்கடலும்
> மீனம் படிலென் விரிசுடர் வீழிலென் வேலைநஞ்சுண்
> டூனமொன் றில்லா வொருவனுக் காட்பட்ட வுத்தமர்க்கே.
>
> —தேவாரம்.

பல்லவராசன் சைவ சமயப் பிரவேசஞ் செய்தான். சமண மடங்களையும் ஆலயங்களையும் இடித்துச் சிவாலயப் பிரதிட்டை செய்வித்தான்.

திருநாவுக்கரசு சுவாமிகள் திருவதிகையிலிருந்து புறப்பட்டு மற்றத் தலங்களையும் வணங்கித் திருத்தூங்கானை மாடம் என்னும் தலத்துக்குச் சென்றார். அங்கே சிவபெருமானை வணங்கி, "ஐயனே, புன்கொள்கைகளைக் கொண்ட கீழான சமண சமயத்தில் வீழ்ந்து குற்றம்

பொருந்திய இவ்வுடம்போடு உயிர் வாழமாட்டேன். ஆத லால் தேவரீருடைய இடப முத்திரையையும் சூல முத் திரையையும் அடியேன்மேல் பொறித்தருளவேண்டும்'' எனத் திருப்பதிகம் பாடித் துதித்தார்.

பொன்னார் திருவடிக் கொன்றுண்டு விண்ணப்பம் போற்றிசெய்யும்
என்னாவி காப்பதற் கிச்சையுண் டேல் இருங் கூற்றகல
மின்னாரு மூவிலைச் சூலமென் மேற்பொறி மேவுகொண்டல்
துன்னார் கடந்தையுட் டூங்கானை மாடச் சுடர்க்கொழுந்தே.

கடவுந் திகிரி கடவா தொழியக் கயிலையுற்றான்
படவுந் திருவிர லொன்றுவைத் தாய்பனி மால்வரைபோல்
இடவம் பொறித்தென்னை வேன்றுகொள் ளாயிருஞ் சோலைதிங்கள்
தடவுங் கடந்தையுட் டூங்கானை மாடத்தெந் தத்துவனே.

—தேவாரம்.

பாடியதும் திருவருளினால் ஓர் சிவபூதம் வந்து நாயனார் திருத்தோளில் மூவிலைச் சூல முத்திரையை இடப முத் திரையோடு பொறித்தது. வாகீசர் அதுகண்டு மகிழ்ந்து திருமுதுகுன்றம் முதலிய தலங்களை வணங்கிப் பதிகம் பாடி, தில்லையம்பலத்தில் திருநடனஞ் செய்யும் நடராச மூர்த்தியைத் தரிசிக்கும் பெருவிருப்பங்கொண்டு பூஞ் சோலைகள் நிறைந்த சிதம்பரத்தைச் சேர்ந்தார். கனக சபையில் திருநடனங்கண்டு சிவானந்தமிகுதியினால் திரு நேரிசை, திருக்குறுந்தொகை, திருத்தாண்டகம் முதலிய பதிகங்களைப் பாடித் துதித்தார்.

பத்தனாய்ப் பாட மாட்டேன் பரமனே பரம யோகி
எத்தினாற் பத்தி செய்கே னென்னைநீ யிகழ வேண்டா
முத்தனே முதல்வா தில்லை யம்பலத் தாடு கின்ற
அத்தாவுன் னாடல் காண்பா னடியனேன் வந்த வாறே.

மண்ணுண்ட மால வனும் மலர்மிசை மன்னி னானும்
விண்ணுண்ட திருவு ருவம் விரும்பினார் காண மாட்டார்
திண்ணுண்ட திருவே மிக்க தில்லைச்சிற் றம்பலத்தே
பண்ணுண்ட பாட லோடும் பரமநீ யாடு மாறே.

---

அன்னம் பாலிக்குந் தில்லைச்சிற் றம்பலம்
பொன்னம் பாலிக்கு மேலுமிப் பூமிசை
என்னம் பாலிக்கு மாறுகண் டின்புற
வின்னம் பாலிக்கு மோவிப் பிறவியே.

மதுர வாய்மொழி மங்கையோர் பங்கினன்
சதுரன் சிற்றம் பலவன் றிருமலை
அதிர வார்த்தெடுத் தான்முடி பத்திற
மிதிகொள் சேவடி சென்றடைந் துய்ம்மினே.

---

பனைக்கை மும்மத வேழ முரித்தவன்
நினைப்ப வர்மனங் கோயிலாக் கொண்டவன்
அனைத்து வேடமா மம்பலக் கூத்தனைத்
தினைத்த னைப்பொழு தும்மறந் துய்வனோ.

ஓங்கு மால்வரை யேந்தலுற் றான்சிரம்
வீங்கி விம்முற வூன்றிய தாளினன்
தேங்கு நீர்வயல் சூழ்தில்லைக் கூத்தனைப்
பாங்கி லாத்தொண்ட னேன்மறந் துய்வனோ.

---

அரியானை அந்தணர்தஞ் சிந்தை யானை
யருமறையி னகத்தானை யணுவை யார்க்குந்
தெரியாத தத்துவனைத் தேனைப் பாலைத்
திகழொளியைத் தேவர்கடங் கோனை மற்றைக்
கரியானை நான்முகனைக் கனலைக் காற்றைக்
கனைகடலைக் குலவரையைக் கலந்து நின்ற
பெரியானைப் பெரும்பற்றப் புலியூ ரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே.

காரொளிய திருமேனிச் செங்கண் மாலுங்
கடிக்கமலத் திருந்தவனுங் காணா வண்ணஞ்
சீரொளிய தழற்பிழம்பாய் நின்ற தொல்லைத்
திகழொளியைச் சிந்தைதனை மயக்கந் தீர்க்கும்
ஏரொளியை யிருநிலனும் விசும்பும் விண்ணு
மேழுலகுங் கடந்தண்டத் தப்பா னின்ற
பேரொளியைப் பெரும்பற்றப் புலியூ ரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே.

சிதம்பரத்தில் தமது உழவாரத் திருத்தொண்டையும் பாடல் திருத்தொண்டையும்செய்து சிவபெருமான் தமக்குச் சிவானந்தப் பெருவாழ்வைக் கொடுத்தருளியதைப் போற்றி அங்குச்சிலநாள் இருந்தனர். பின்னர் நடராச மூர்த்தியிடம் விடை பெற்றுக்கொண்டு திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகளைத் தரிசிக்க விரும்பிச் சீர்காழிக்கு எழுந்தருளினர். இவர் வரவைக் கேள்விப்பட்ட திருஞான சம்பந்தர் எதிர்கொள்ளத் திருநாவுக்கரசு சுவாமிகள் அவரை

வணங்க அவர் தமது திருக்கரங்களால் திருநாவுக்கரசு சுவாமிகளைப் பிடித்துத் தாமும் அஞ்சலிசெய்து, 'அப்பரே!' என்றார். திருநாவுக்கரசர் 'அடியேன்!' என்றார். இருவரும் சேர்ந்து தோணியப்பரை வணங்கினர். திருநாவுக்கரசு சுவாமிகள் சிலநாள் திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகளது மாளிகையில் தங்கியிருந்தனர்.

> சம்பந்தர் நாவரசர் பாற்கண்டோஞ் சாந்துவப்ப
> தும்பிரிவி னுள்ளுவதுஞ் சோமேசா — நம்பி
> உவப்பத் தலைக்கூடி யுள்ளப் பிரித
> லனைத்தே புலவர் தொழில்"

எனவரும் முதுமொழி வெண்பாவுங் கண்டுகொள்க.

இருவரும் புறப்பட்டுத் திருக்கோலக்காவை வணங்கினர். அங்கிருந்து திருநாவுக்கரசு சுவாமிகள் பிள்ளையாரின் அனுமதி பெற்றுப் புறப்பட்டுத் திருக்கருப்பறியலூர், திருப்புன்கூர், திருநீடூர், திருநின்றியூர், திருநனிபள்ளி, திருச்செம்பொன்பள்ளி, திருமயிலாடுதுறை, திருத்துருத்தி, திருவேள்விக்குடி, எதிர்கொள்பாடி, திருக்கோடிகா முதலிய தலங்களை வணங்கித் துதித்துத் திருவாவடுதுறை வந்து சேர்ந்தனர். அத்தலத்தில் சிலநாள் தங்கித் திருத்தொண்டு செய்து திருத்தாண்டகம், திருக்குறுந்தொகை, திருநேரிசை முதலிய தேவாரத் திருப்பதிகங்களைப் பாடித் துதித்தார். அவ்விடத்திலிருந்து புறப்பட்டுத் திருவிடைமருதூர், திருநாகேச்சுரம் முதலிய தலங்களைப் பாடிப்போந்து திருச்சத்திமுற்றம் என்னுஞ் சேத்திரத்தில் சிவபெருமானை வணங்கிக் கூற்றுவன் வருமுன் தமக்குத் திருவடி தீட்சை செய்யும்படி வேண்டிக்கொண்டனர். சிவபெருமான் அசரீரிவாக்காகத் திருநல்லூருக்கு வருக என்றனர் அவர் மிகவும் மகிழ்ந்து திருநல்லூருக்குப் போய்ப் பூமியில் விழுந்து வணங்கி எழுந்தபோது வேண்டுவார் வேண்டுவதை ஈயும் சிவபெருமான் நாயனார் சிரசின் மேல் தமது திருவடிகளைச் சூட்டியருளினர்.

> நன்மைபெரு கருணெறியே வந்தணைந்து நல்லூரின்
> மன்னுதிருத் தொண்டனார் வணங்கிமகிழ்ந் தெழும்பொழுதி

லுன்னுடைய நினைப்பதனை முடிக்கின்றே மென்றவர்தஞ்
சென்னிமிசைப் பாதமலர் சூட்டினன் சிவபெருமான்.

— பெரிய புராணம்.

தரித்திரன் ஒருவன் பெருஞ் செல்வத்தைப் பெறும்போது மிக மகிழ்ச்சியடைவான். அதுபோல திருநாவுக்கரசு நாயனர் சிவானந்த வெள்ளத்தில் மூழ்கித் திருவருளை நினைந்துருகும்போது "நினைந்துருகுமடியாரை" *என்னும் முதலையுடைய திருத்தாண்டகத்தில் திருப்பாட்டின் இறுதிதோறும் "திருவடி என் தலைமேல் வைத்தார் நல்லூரெம்பெருமானர் நல்லவாறே" என்று பாடியருளினர்.

நினைந்துருகு மடியாரை நைய வைத்தார்
நில்லாமே தீவினைக ணீங்க வைத்தார்
சினந்திருகு களிற்றுரிவைப் போர்வை வைத்தார்
செழுமதியின் றளிர்வைத்தார் சிறந்து வானோர்
இனந்துருவி மணிமகுடத் தேறத் துற்ற
வினமலர்கள் போதவிழ்ந்து மதுவாய்ப் பில்கி
நனைந்தனைய திருவடியென் றலைமேல் வைத்தார்
நல்லூரெம் பெருமானர் நல்ல வாறே.

குலங்கிளரும் வருதிரைக ளேழும் வைத்தார்
குருமணிசேர் மலைவைத்தார் மலையைக் கையால்
உலங்கிளர வெடுத்தவன்றேண் முடியு நோவ
வொருவிரலா லுறவைத்தா ரிறைவா வென்று
புலம்புதலு மருளொடுபோர் வாளும் வைத்தார்
புகழ்வைத்தார் புரிந்தாளாக் கொள்ள வைத்தார்
நலங்கிளருந் திருவடியென் தலைமேல் வைத்தார்
நல்லூரெம் பெருமானர் நல்ல வாறே. —தேவாரம்.

திருநல்லூரில் திருத்தொண்டுகளைச் செய்து அங்கிருந்து புறப்பட்டு மற்றைய தலங்களைத் தரிசித்துத் திங்களூர் என்னும் தலத்தைச் சார்ந்தார். அப்பதியில் அப்பூதி நாயனர் தம்மாட்டுவைத்துள்ளபேரன்பை யறிந்து மகிழ்ந்து அவர் மாளிகைக்குச் சென்றார். திருநாவுக்கரசு சுவாமிகளை அப்பூதிநாயனர், மனைவியார், புதல்வர், சுற்றத்தார் முதலாயினோர் வணங்கித் தங்கள் மாளிகையில் திருவமுது செய்யும்வண்ணம் வேண்டினர். அப்பர் சுவாமிகளும் திருவமுது செய்ய உடன் பட்டார். சுவாமிகளுக்குத் திருவமுது படைத்தற்காக வாழையிலை கொண்டுவரும்படி அப்பூதி நாயனரது மனைவியார் தமது மகனாகிய மூத்த திருநாவுக்

கரசை யனுப்ப, அப்பிள்ளை வாழையிலை அரியும்போது சர்ப்பந் தீண்ட இறந்தான். அதை யறிந்த அப்பூதியாரும் அவர் மனைவியாரும் 'ஐயோ! இனி நாயனார் திருவமுது செய்யாரே' என்று வருந்தி சவத்தை மறைத்துவைத்து நாயனாரைத் திருவமுது செய்தருள வேண்டினார்கள். நாயனார் நிகழ்ந்ததைத் திருவருளால் அறிந்து அவர்களது அன்பை நினைந்துருகி அப்பிள்ளையின் உடம்பைச் சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் திருக்கோயிலுக்குக் கொண்டு வரச் செய்து "ஒன்று கொலாம்" என்னும் முதலையுடைய திருப்பதிகம் பாடி அப்பிள்ளையை எழுப்புவித்தார்.

ஒன்றுகொ லாமவர் சிந்தை யுயர்வரை
ஒன்றுகொ லாமுய ரும்மதி சூடுவர்
ஒன்றுகொ லாமிடுவெண்டலை கையது
ஒன்றுகொ லாமவ ரூர்வது தானே.

பத்துக்கொ லாமவர் பாம்பின்கண் பாம்பின்பல்
பத்துக்கொ லாமெயி றுங்நெரிந் துக்கன
பத்துக்கொ லாமவர் காயப்பட் டான்றலை
பத்துக்கொ லாமடி யார்செய்கை தானே. —தேவாரம்.

சாமானிய மக்களால் செய்யக்கூடாத அரிய செயல்களைச் சங்கற்ப விகற்பமற்று இறைவனை என்றும் தங்கள் மனதில் குடிகொள்ள வைத்திருக்கும் சிவஞானிகள் செய்யக்கூடும் என்பதை இந்நாளில் பலர் நம்புவதில்லை. எல்லா உலகங்களாயும் உலகங்களுக்கு வேறாயும் நின்று அவைகளை எல்லாம் நடத்தும் முழுமுதற்கடவுள் உண்டு என்றும், அக்கடவுள் மெய்யடியார் வேண்டும்போது வேண்டியபடி திருவருள் புரிவர் என்னும் உணர்ச்சி இல்லாமையே நம்பிக்கை யின்மையின் காரணமாம். மெய்யடியார்கள் பூதங்களை நிலை மாறச்செய்யும் ஆற்றல் வாய்ந்தவர் என்பதை யார் அறிபவல்லார்? இறந்த பிள்ளையை எழுப்புவதற்குத் திருநாவுக்கரசு நாயனார் பாடிய தேவாரத் திருப்பதிகமே பெரும் மந்திரமாயிற்று. ஆகலின் நம்போலிகள் தேவாரத் திருமுறைகளைப் பாராயணம் செய்து திருவருட் பயனைப் பெற்றுய்வோமாக.

அப்பூதியடிகள் மனையில் திருவமுது செய்தபின் திருப்பழனம் என்னும் தலத்துக்குப் போய், சிவபெருமானை வணங்கிப் பாடிய திருப்பதிகத்தில் அப்பூதியடிகளுடைய மேன்மையைச் சிறப்பித்தனர்.

சொன்மாலை பயில்கின்ற குயிலினங்காள் சொல்லீரே
பன்மாலை வரிவண்டு பண்மிழற்றும் பழனத்தான்
முன்மாலை நகுதிங்கண் முகிழ்விளங்கு முடிச்சென்னிப்
பொன்மாலை மார்பனென் புதுநலமுண் டிகழ்வானோ.

வஞ்சித்தென் வளைகவர்ந்தான் வாரானே யாயிடினும்
பஞ்சிக்காற் சிறகன்னம் பரந்தார்க்கும் பழனத்தான்
அஞ்சிப்போய்க் கலிமெலிய வழலோம்பும் அப்பூதி
குஞ்சிப்பூ வாய்நின்ற சேவடியாய் கோடியையே.

—தேவாரம்.

திருப்பழனத்தில் சிலகாலம் தங்கியபின் நல்லூருக்கு மீண்டும் வந்தனர். சிலகாலம் அப்பதியில் திருத்தொண்டு செய்து நல்லூர்ச் சிவபெருமானிடம் விடைபெற்றுக் கொண்டு, திருவலஞ்சுழி, திருக்குடமூக்கு (கும்பகோணம்), குடவாயில் முதலிய சேத்திரங்களை வணங்கித் திருவாரூர் சென்றடைந்தார். திருவாரூரிலுள்ள சிவனடியார்கள நாயனாரை மங்கலகரமாய் எதிர்கொண்டேற்றார்கள். எதிர் கொண்ட அடியார்களைநோக்கி, "தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியமே" என்னும் முடிவையுடைய தேவாரத் திருப்பதிகத்தைப் பாடிக்கொண்டு அவர்களுடன் திருக் கோயிலுட் சென்று புற்றிடங் கொண்டாரைத் தொழுது விழுந்து எழும்பி இரண்டு கரங்களும் தலைமேற் குவிய, மழைமாரி கண்கள் இரண்டிலுமிருந்து பொழிய, பேரன் போடு வணங்கிப் போற்றினர். பிறகு, திருக்கோயிலை வலஞ்செய்து தேவாசிரியன் மண்டபம் சார்ந்தார். திரு நாவுக்கரசு சுவாமிகள் அத்தலத்தில் சிவபெருமானிடம் வைத்த பேரன்போடு திருத்தொண்டு செய்துவந்தார்.

மார்பாரப் பொழிகண்ணீர் மழைவாருந் திருவடிவு மதுர வாக்கிற்
சேர்வாகுந் திருவாயிற் றீந்தமிழின் மாலைகளுஞ் செம்பொற் றாளே
சார்வான திருமனமு முழவாரத் தனிப்படையுந் தாமு மாகிப்
பார்வாழத் திருவீதிப் பணிசெய்து பணிந்தேத்திப் பரவிச் செல்வார்.

—பெரிய புராணம்.

இப்பாடல் நாயனாரின் திருவுருவையும் சிவவேடப் பொலிவை யும் காட்டுகின்றது. 'இடையறாப் பேரன்பும்' என்னும் சிவஞான சுவாமிகளின் அப்பர் துதியும் இதனோடு ஒப்பிடத் தக்கது.

தாம் பாடிய தேவாரத் திருப்பதிகத்தில் நமிநந்தியடிகள் நாயனார் நீரால் விளக்கேற்றிய திருத்தொண்டின் பெருமையை வைத்துப் பாடினர். திருவாரூரின் பக்கங்களிலுள்ள திருவலிவலம், திருக்கீழ்வேளூர், திருக்கன்றாப்பூர் முதலிய தலங்களையும் வணங்கித் திருவாரூர் வந்து திருவாதிரைநாளில் வன்மீகத் தியாகராசமூர்த்தியினது பவனி தன்னிற் சேவித்துத் திருத்தாண்டகம் பாடித் துதித்தனர். நாயனார் அங்கிருந்து புறப்பட்டுத் திருப்புகலூரில் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளைச் சந்தித்து அப்பதியில் முருகநாயனார் திருமடத்திலிருந்து கொண்டு பல தலங்களுக்குஞ் சென்று வணங்கித் திருப்பதிகம் பாடினர்.

திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் திருவாரூருக்குப் போய் மீண்டும் திருப்புகலூருக்கு வந்தனர். திருநாவுக்கரசு சுவாமிகளும் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளும் அங்கேயிருக்கும் நாளில் சிறுத்தொண்டநாயனாரும், திருநீலநக்க நாயனாரும் வந்தனர். எல்லோரும் அடியார் கூட்டத்தோடு முருகநாயனார் திருமடத்தில் தொண்டர் பெருமையினை விரித்துரைத்து ஆனந்தித்து உடனுறவின் பயன் பெற்றார்கள். திருநீலநக்கர், சிறுத்தொண்டர், முருகநாயனார் முதலிய அடியார்கள் விடைபெற்றுப் போக, அப்பர் சுவாமிகளும் திருஞானசம்பந்த மூர்த்திகளும் திருப்புகலூரினின்றும் புறப்பட்டுத் திருவம்பரை வணங்கி, திருக்கடவூர் வந்து இயமதர்மராசனை உதைத்த சிவபெருமானை வணங்கிக் குங்குலியக்கலய நாயனார் திருமடத்தில் அடியார்களுடன் திருவமுது செய்தார்கள். பின்னர், திருநாவுக்கரசு சுவாமிகளும் திருஞானசம்பந்த மூர்த்திகளும் மற்றைய தலங்களையும் வணங்கித் திருவீழிமிழலையில் சிவபெருமானை வணங்கி வீற்றிருந்தனர். அவ்விடத்தில் மழையின்றிப் பஞ்சம் அதிகரித்தபோது சிவபெருமான் அடியார்களுக்காகத் தினந்தோறும் இருவருக்கும் ஒவ்வொரு படிக்காசு கொடுத்தருளினார். அதனைப்பெற்று தங்களிடம் வரும் அடியார்களுக்குத் திருவமுது செய்துவந்தார்கள். பஞ்சம் நீங்கி ஞாலம் எங்கும் நலஞ்சிறக்க இறைவனை

வணங்கி மொழிமாலைகள் சாத்தி அங்கிருந்து திருமறைக் காடு என்னும் தலத்துக்கு நாயன்மார் இருவரும் வந்து சேர்ந்து திருக்கோயிலை வலங்கொண்டு வேதங்களால் அருச்சித்து அடைக்கப்பட்டிருந்த சதவுக்குமுன் வந்தார்கள். வேதங்களால் அருச்சிக்கப்பட்ட நாள் முதல் அக் கதவு அடைக்கப்பட்டதென்றும், அக்கதவைத் திறக்க வல்ல அடியார் வாராமையினால் வேறோர் வாசல் வைத்து அவ்வழியாகச் செல்வதும் வருவதுமாக இருந்துவருகின்றனரென்றும் கேட்டறிந்தார்கள். அப்போது திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகள் அப்பர் சுவாமிகளை நோக்கி "அபிமுகத்திருவாயிலாகச் சென்று இறைவனை வணங்க வேண்டும். நீவிர் இக்கதவு திருக்காப்பு நீங்கப்பாடும்" என்றார். திருநாவுக்கரசு சுவாமிகள் "பண்ணினேர் மொழியாள்" என்னும் திருப்பதிகத்தைப் பாடியருள, சிவபெருமான் திருக்கதவு திறத்தற்குத் தாமதம் செய்ய, அதனால் "யாம் பாடுதலைக் கருதீர், இரக்கமொன்றிலீர்" என்று திருக்கடைக் காப்பில் வைத்து வணங்கவும், திருக்கதவு சிவபெருமான் திருவருளால் திறக்கப்பட்டது. அடியார்கள் ஆனந்தங்கொண்டனர். நாயன்மார் இருவரும் விழுந்து நமஸ்கரித்து இன்பவெள்ளத்தில் மூழ்கி அடியார்களுடன் உட்சென்று சிவபெருமானை வணங்கி வெளிவந்தார்கள்.

பண்ணி னேர்மொழி யாளுமை பங்கரோ
மண்ணி னார்வலஞ் செய்மறைக் காடரோ
கண்ணி னாலுமைக் காணக் கதவினைத்
திண்ண மாகத் திறந்தருள் செய்ம்மினே.

அரக்க னைவிர லாலடர்த் திட்டநீர்
இரக்க மொன்றிலீ ரெம்பெரு மானிரே
சுரக்கும் புன்னைகள் சூழ்மறைக் காடரோ
சரக்க விக்கத வந்திறப் பிம்மினே. —தேவாரம்.

அப்பர்சுவாமிகள் திருஞானசம்பந்தர் மூர்த்தி சுவாமிகளைக் கதவு அடைக்கப்படும் திறக்கப்படும் என்றும் வழங்கும்பொருட்டு பதிகம் பாடும்படி கேட்டருளினர். பிள்ளையார் தேவாரத் திருப்பதிகத்தின் முதல் திருப்பாட்டுப் பாடவும், திருக்கதவு அடைக்கப்பட்டது.

பின்னர், பிள்ளையார் பதிகத்தைப் பாடி முடித்தனர். அன்று முதல் கதவு அடைக்கப்பட்டும் திறக்கப்பட்டும் வந்தது. அடியார்கள் அதிசயித்துக் கண்ணீர் சொரிந்து நாயன்மார் இருவரையும் வணங்கினர்.

திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரத் திருப்பதிகத்தைப் பாடிய போது திருக்கதவு திறக்கக் காலம் நீடித்தது அவருடைய தேனினும் இனிய அன்புமயமாகிய பாடல்களைக் கேட்கும் ஆனந்தத்தினால் சிவ பெருமான் தாமதம் செய்தனர் போலும்!

சமயகுரவர் இருவரும் திருமறைக்காட்டில் திரு மடத்தை அடைந்தனர். திருநாவுக்கரசு சுவாமிகள் தாம் பாடியபோது கதவு திறக்கத் தாழ்ந்ததை நினைந்து நித் திரை கொள்ளும்போது சிவபெருமான் "வாய்மூரில் இருப்போம் தொடர்ந்து வா" என்றனர். அப்பர் சுவாமி கள் "அங்கே வா என்று போனார். அதென்கொலோ" என்னும் இறுதியையுடைய தேவாரத் திருப்பதிகத்தைப் பாடிக்கொண்டு செல்லச் சிவபெருமான் முன்னமே கனவில் தோன்றிய தோற்றத்தைக் காட்டிக்கொண்டு செல்லத் திருநாவுக்கரசு சுவாமிகள் பின் தொடர்ந்தார். திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரும் அப்பரைப் பின் தொடர்ந்துவந்தார். இருவரும் சிவபெருமானுடைய தோற் றத்தைத் தரிசித்து வணங்கித் திருவாய்மூரை யடைந்தனர். சிலநாள் கழிந்தபின் இருவரும் மறைக்காட்டுக்குத் திரும்பி வந்தார்கள். திருமறைக்காட்டிலிருக்கும்போது பாண்டிமா தேவியாராகிய மங்கையர்க்கரசியாரும் குலச்சிறை நாய னாரும் அனுப்பிய தூதுவர்கள் வந்து பாண்டிநாட்டில் சமணரால் விளையும் தீமைகளை எடுத்துரைத்தனர். அப் போது திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் சமணர் செய்யும் அநீதிகளை நீக்கிச் சைவ நெறியை விளக்கப் பாண்டிநாட் டுக்குச் செல்ல எழுந்தார். அப்போது அப்பர் சுவாமிகள் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரிடம் கொண்ட பேரன்பி னால் அவரைப் போகாது தடுத்துத் தாமே பாண்டிநாட் டுக்குச் சென்று அச்சமணர்கள் தீமையை ஒழித்து வருவ தாகச் சொன்னார். திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் அதற்கிசையாது "யானே அங்குச் சென்று சமணர் வலி

மையை அடக்கிச் சைவநெறியை நிலைநாட்டாமல் ஒன்றும் செய்யேன்" என்று ஆணை இட்டபோது அப்பர் சுவாமிகளால் மறுக்க முடியவில்லை. சம்பந்தமூர்த்தி சுவாமிகள் பாண்டிநாட்டுக்குப் புறப்பட்டனர்.

"வாக்கரசர் பிள்ளா யெனவலித்து மாற்றலுற்றார்
தூக்கு பிள்ளையார் செலவைச் சோமேசா—நோக்கி
நகுதற் பொருட்டன்று நட்டன் மிகுதிக்கண்
மேற்சென் றிடித்தற் பொருட்டு.

என்பது முதுமொழி வெண்பா.

பின்னர், திருநாவுக்கரசு நாயனார் திருமறைக்காட்டை விட்டுச் சென்று திருவீழிமிழலையை வணங்கித் திருவாவடுதுறையை அடைந்து அங்குத் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளுக்கு ஒரு திருப்பதிகத்தின் பொருட்டு இறைவர் ஆயிரம் பொன் கொடுத்ததைத் தமது தேவாரத் திருப்பதிகத்தில் வைத்துப் பாடியருளினார்.

மாயிரு ஞால மெல்லா மலரடி வணங்கும் போலும்
பாயிருங் கங்கை யாளைப் படர்சடை வைப்பர் போலும்
காயிரும் பொழில்கள் சூழ்ந்த கழுமல வூரர்க் கம்பொன்
ஆயிரங் கொடுப்பர் போலு மாவடு துறைய னாரே.

பார்த்தனுக் கருள்வர் போலும் படர்சடை முடியர் போலும்
ஏத்துவா ரிடர்க டீர வின்பங்கள் கொடுப்பர் போலும்
கூத்தராய்ப் பாடி யாடிக் கொடுவலி யரக்கன் றன்னை
ஆர்த்தவா யலறு விப்பா ராவடு துறைய னாரே. —தேவாரம்.

திருவாடுதுறையிலிருந்து புறப்பட்டு மற்றைய திருப்பதிகளையும் வணங்கிப் பழையாறை வந்து எய்தினார். அத்தலத்திலே வடதளியில் உறையும் சிவலிங்கப் பெருமானைச் சமணர்கள் பொய் விமானத்தில் மறைத்திருப்பதைக் கேட்டு மனம் வருந்திச் "சிவலிங்கப்பெருமானை நேரே வணங்கினாலன்றித் திருவமுது செய்யேன்" என்று பணிந்திருந்தார். சிவபெருமான் அவ்வூர் மன்னனுக்குக் கனவில் தோன்றிச் சமணர்கள் தன்னை வஞ்சனையால் மறைத்திருக்கும் இடத்தைத் தெரிவித்து வாகீசர் தன்னை வணங்கும் பொருட்டுச் சமணர்கள் செய்த வஞ்சனையை நீக்கும்படி

சொல்லியருளினர். அரசன் சிவபெருமான் கட்டளைப் படியே வஞ்சனை செய்த சமணர்களை யொழித்துச் சிவ லிங்கப் பெருமானுக்குப் புது விமானம் செய்வித்துப் பூச னைக்கு வேண்டிய நிபந்தங்கள் எல்லாம் செய்வித்தான். அப்பர் சுவாமிகள் அங்குச் சென்று சிவலிங்கப் பெருமானை வணங்கித் தாம் பாடிய திருக்குறுந்தொகையில் சமணரால் பெருமானர் மறைக்கப்பட்டாரென்று வைத்துப் பாடி யருளினர்.

> தலையெ லாம்பறிக் குஞ்சமண் கையருள்
> நிலையி னுன்மறைத் தான்மறைக் கொண்ணுமே
> அலையி னர்பொழி லாறை வடதளி
> நிலையி னனடி யேநினைந் துய்ம்மினே.
>
> செருத்த னைச்செயுஞ் சேணரக் கன்னுடல்
> எருத்தி றவிர லாலிறை யூன்றிய
> அருத்த னைப்பழை யாறை வடதளித்
> திருத்த னைத்தொழு வார்வினை தேயுமே. —தேவாரம்

சிவஞானிகள் தாம் செய்யும் திருத்தொண்டுக்கு இடையூறுக உள்ளவைகளை வெறுப்பார்கள். அவர்கள் எண்ணியபடி அருள் செய்யுங் கடவுள் அவர்கட்கு இடையூறு செய்வோர்க்குத் தண்டனை செய்வார் என்பது இதனுல் அறியப்படும்.

> ஈச னடியா ரிதயங் கலங்கிடத்
> தேசமு நாடுஞ் சிறப்பு மழிந்திடும்
> வாசவன் பீடமு மாமன்னர் பீடமும்
> நாசம தாகுமே நம்நந்தி யாணையே

என்பது திருமந்திரம்.

தமிழ் வேந்தர் அவ்விடத்தினின்று புறப்பட்டுக் காவிரி நதியின் இருகரையிலுள்ள தலங்களை வணங்கிப் பதிகங்கள் பாடித் துதித்துத் திருவானைக்காவிற்கு வந்து சிலந்திக்கு அருள்புரிந்த சிவபெருமானை வணங்கித் திருப் பைஞ்ஞீலி என்னும் சேத்திரத்தை நோக்கிச் சென்ருர். செல்லும் காலத்தில் வழிநடையால் இளைப்பும் பசி தாகமும் உண்டாகி வருந்தியும் சிறிதும் சித்தமலையாமல் நடக்கும் போது சிவபெருமான் ஒரு குளத்தையும் சோலையையும் உண்டாக்கிப் பொதி சோற்றை வைத்துக்கொண்டு வேதி யர்போல் இருந்து திருநாவுக்கரசு சுவாமிகளுக்குக் கொடுத்

தார். நாயனார் திருவமுது செய்து தண்ணீரைப் பருகி இளைப்பு நீங்கி இருந்தார். மறையவர் வேடம் தாங்கி வந்த சிவபெருமான் நாயனாரை நோக்கி "எங்கு நீர் போகிறீர்?" என்றுகேட்க, அவர் திருப்பைஞ்ஞீலிக்குப் போகிறதாகச் சொன்னார். வேதியர், தாமும் அங்கேயே போகிறதாகக் கூறினார். இருவரும் திருப்பைஞ்ஞீலியைச் சமீபித்தவுடன் மறையவராக வந்த சிவபெருமான் மறைய, அப்பர் சுவாமிகள் தம்பொருட்டாகப் பிரானார் எழுந்தருளி வந்து செய்த கருணையினை வியந்து சாஷ்டாங்கமாய்க் கீழே விழுந்து வணங்கிச் சிவானந்தத்தில் மூழ்கிக் கண்ணீர் பொழிந்தார்.

*கூட வந்து மறையவனார் திருப்பைஞ் ஞீலி குறுகியிட*
*வேட மவர்முன் மறைத்தலுமே மெய்ம்மைத் தவத்து மேலவர்தா*
*மாடல் புரிந்தா ரடியேனைப் பொருளா வளித்த கருணையெனப்*
*பாடல் புரிந்து விழுந்தெழுந்து கண்ணீர் மாரி பயில்வித்தார்.*

—பெரியபுராணம்.

திருப்பைஞ்ஞீலிக்குச் சென்று சிவபெருமானை வணங்கித் திருப்பதிகங்களைப் பாடித்துதித்து உழவாரத் திருத்தொண்டு செய்துகொண்டு சிலநாள் அத்தலத்தில் இருந்தார். அங்கிருந்து புறப்பட்டுத் திருவண்ணாமலை முதலிய க்ஷேத்திரங்களை வணங்கிப்பதிகம்பாடித் தொண்டைநாட்டையடைந்து காஞ்சிபுரம், திருவொற்றியூர், திருப்பாசூர், திருவாலங்காடு முதலிய தலங்களை வணங்கிப் பதிகம் பாடித்திருக்காளத்திக்கெழுந்துகாளத்தியப்பரை வணங்கித் திருப்பதிகங்களைப் பாடித் துதித்து அத்தலத்தில் திருப்பணி செய்துகொண்டு சிலநாள் இருந்தார். அவ்விடத்தில் தோன்றிய குறிப்பினால் ஸ்ரீகைலாயகிரியில் சிவபெருமான் வீற்றிருந்தருளும் பெரிய திருக்கோலத்தைத் தரிசிக்க வேண்டுமென்னும் விருப்பங்கொண்டு காடு, மலை, நாடுகளைக் கடந்து தெலுங்குநாடு கன்னடதேசம் முதலியவைகளையும் விட்டு வாரணாசியைச் (காசி) சேர்ந்து விசுவநாதரைத் தரிசித்து அங்குத் தம்முடைய பரிசனங்களை நிறுத்திவிட்டுத் தனியே புறப்பட்டு இலை கிழங்கு பழங்கள் உண்பதையுந் தவிர்த்து இரவும்பகலும் பாலைவனத்தில் நடக்கும்

போது அந்நில வெப்பத்தினால் காற்பரடுவரையிலுள்ள தசைகள் தேய்ந்தன. நடக்கமாட்டாமல் கைகளை ஊன்றிக் கொண்டு செல்லும்போது ஆதரவாயிருந்த கைகளும் மணிக்கட்டு வரையில் கரைந்து தேய்ந்தன. பின்னும் அன்பின் உறுதிப்பாட்டினால் மார்பினால் நகர்ந்தும் புரண்டும் போனார். அதனால் தேகம் முழுவதும் தேய, செயலற்று வழியில் கிடந்தபோது இன்னும் இவர் உலகில் ஆன்மாக்கள் உய்யும்வண்ணம் தலங்கள்தோறும் சென்று தமிழ் வேதமாகிய தேவாரம் பாடியருளுமாறு அவர் கருதியபடி கயிலாயமலைக்குப் போகக் கிருபைசெய்யாது சிவபெருமான் ஓர் தவமுனிவராய் எழுந்தருளிவந்து தடாகமொன்றை அவ்விடத்தில் தோன்றச் செய்தார்.

அன்ன தன்மையர் கயிலையை யணைவதற் கருளார்
மன்னு தீந்தமிழ் புவியின்மேற் பின்னையும் வழுத்த
நன்னெ டும்புனற் றடமுமொன் றுடன்கொடு நடந்தார்
பன்னகம்புனை பரமரோர் முனிவராம் படியால்.

—பெரியபுராணம்.

அப்பமூர்த்திகள் தலங்கள்தோறும் சென்று சரியை முதலிய வழிபாடுகள் செய்தது ஆன்மாக்கள் பொருட்டன்றித் தம் பொருட்டன்று என்பது இதனால் நன்கு தெளியப்படும். சிவஞானிகள் பசுத்துவம் நீங்கிச் சிவமயமாய் விளங்கும் தன்மையர். அவர்கள் செயல்கள் சிவன் செயலாகவே இருக்கும். சிவபெருமான் கல்லால விருட்சத்தின்கீழ்த் தட்சிணாமூர்த்தியாய்த் திருக்கரத்தில் செபமாலை வைத்துக்கொண்டிருத்தல் ஆன்மாக்கள் மேலான தவத்தைச் செய்யும்பொருட்டேயாம்.

ஓங்குசெப மாலைகொ டிருத்தலுல கெல்லா
மீங்குயர் தவங்கள்செய வென்றினிது கொள்ளாய்
தாங்கிய படைத்தொழில்கள் சார்பொடு பழக்கும்
பாங்குள பணிக்கர்கர பத்திரம தாகும்

எனவரும் திருவாதவூரடிகள் புராணத்தாலறிக.

அவ்வண்ணமே திருநாவுக்கரசு சுவாமிகளும் மக்கள் தம்மைப் பார்த்துக் திருத்தொண்டு செய்து முத்தியடையும்பொருட்டுத் திருக்கோயில்கள்தோறுஞ் சென்று வணங்கி உழவாரத் திருத்தொண்டு செய்துவந்தார். சிவஞானிகள் சரியை முதலியவைகளைச் செய்ய வேண்டுமல்லது செய்யாது விடவேண்டும் என்னும் சங்கற்ப முள்ளவரல்லர்.

தவமுனிவர் வேடங்கொண்டெழுந்தருளிவந்த சிவ பெருமான் திருநாவுக்கரசு சுவாமிகள் முன் சென்று இப்படி வருந்தி வந்த காரணம் யாதெனக் கேட்டனர். சிவபெருமானாகிய முனிவரைக்கண்டதும் அறிவு தெளிந்து, "கயிலாய மலைக்குச் சென்று சிவபெருமானைத் தரிசிக்க விரும்பி வந்தனன்." என்றார். முனிவர் "கயிலாயமலையை மக்கள் தரிசிக்கக் கூடுமோ?" என்றார். "எப்படியேனும் கயிலையைத் தரிசனஞ் செய்யாது மீளேன்" என்று அப்பர் சுவாமிகள் கூறினார். அவரது உறுதிப்பாட்டை யறிந்த முனிவர் தாம் யாரென்று அறிந்துகொள்ளும்படி மறைந்து அசரீரிவாக்காக "ஓங்கும் நாவினுக்கரசனே எழுந்திரு" என்று சொல்லியருளினார். நாயனார் "அடியேனுக்குக் கயிலாயதரிசனம் கொடுத்தருள வேண்டும்" என வேண்டினார்.

> அண்ண லேயெனை யாண்டுகொண் டருளிய வமுதே
> விண்ணி லேமறைந் தருள்புரி வேதநா யகனே
> கண்ணி னாற்றிருக் கயிலையி லிருந்தநின் கோல
> நண்ணி நான்றொழ நயந்தருள் புரியெனப் பணிந்தார்.
>
> —பெரியபுராணம்.

சிவபெருமான் தாம் உண்டாக்கிய தடாகத்தைக்காட்டி "இத் தடாகத்தில் மூழ்கித் திருவையாறு என்னும் தலத் துக்குப் போய் நாம் கயிலாயகிரியில் வீற்றிருக்கும் முறை மையை அங்கே காண்பாயாக!" எனக் கட்டளையிட் டருளினார்.

சிவஞானச் செல்வராகிய அப்பர் சுவாமிகள் "வேற் றாகி விண்ணாகி" என்னும் திருத்தாண்டகம் பாடி ஐந்தெ ழுத்தோதி அத்தடாகத்தில் மூழ்கித் திருவையாற்றுத் தீர்த்தக் கரையிலேறிச் சுவாமி சந்நிதிக்குச் சென்றார். அத் தலத்திலுள்ள சரம் அசரமாகிய சகலமும் சிவசத்தி ரூபமாக இருக்கக் கண்டு வணங்கித் திருக்கோயிலுக்கு முன் வந்தார். அத்தலம் வெள்ளிமலைபோலத் தோன்றி அங்கே நந்தி தேவர் முதலிய தேவகணங்களும், முனிவர்களும், இந்திரன் முதலான தேவர்களும் குழுமியிருக்கவும், தேவதுந்துபி

முழங்கவும் வேதங்கள் சத்திக்கவும், பார்வதி சமேதராய்க் கயிலாயபதி வீற்றிருந்தருளும் திருக்கோலத்தைத் தரிசித்துச் சிவானந்தமாகிய அமுதத்தை உட்கொண்டு திருத்தாண்டகம் பாடியருளினார்.

திருவையாறு - திருத்தாண்டகம்.

ஆரார் திரிபுரங்க ணீறு நோக்கு
மனலாடி யாரமுதே யென்றே னானே
கூரார் மழுவாட் படையொன் றேந்தி
குறட்பூதப் பல்படையா யென்றே னானே
பேரா யிரமுடையா யென்றே னானே
பிறைசூடும் பிஞ்ஞகனே யென்றே னானே
ஆரா வமுதேயென் னையா றனே
யென்றென்றே நானரற்றி நைகின் றேனே.

வில்லாடி வேடனே யென்றே னானே
வெண்ணீறு மெய்க்கணிந்தா யென்றே னானே
சொல்லாய சூழலா யென்றே னானே
சுலாவாய தொன்னெறியே யென்றே னானே
எல்லாமா யென்னுயிரே யென்றே னானே
இலங்கையர்கோன் றோளிறுத்தா யென்றே னானே
அல்லா வினைதீர்க்கு மையா றனே
யென்றென்றே நானரற்றி நைகின் றேனே

---

ஓசை யொலியெலா மானாய் நீயே
யுலகுக் கொருவனாய் நின்றாய் நீயே
வாச மலரெலா மானாய் நீயே
மலையான் மருகனாய் நின்றாய் நீயே
பேசப் பெரிது மினியாய் நீயே
பிரானா யடியென்மேல் வைத்தாய் நீயே
தேச விளக்கெலா மானாய் நீயே
திருவையா றகலாத செம்பொற் சோதீ.

ஆரு மறியா விடத்தாய் நீயே
யாகாயந் தேரூர வல்லாய் நீயே
பேரும் பெரிய விலங்கை வேந்தன்
பெரிய முடிபத் திறுத்தாய் நீயே
ஊரும் புரமூன்று மட்டாய் நீயே
யொண்டா மரையானு மாலுங் கூடித்
தேரு மடியென்மேல் வைத்தாய் நீயே
திருவையா றகலாத செம்பொற் சோதீ.

தாண்டகவேந்தர் சிவானந்தத்தில் மூழ்கிச் சந்நிதானத்தில் நின்றபோது சிவபெருமான் கைலாயத் திருக்கோலத்தை மறைத்தருள மனம் வருந்தித் தெளிவுற்றுத் தாம் தரிசித்த திருக்கோலத்தின் பெருமையை மக்கள் அறிந்துய்ய, "மாதர்ப் பிறைக் கண்ணியானை" என்னும் திருப்பதிகம் பாடினார்.

திருவையாறு - பண்காந்தாரம்

மாதர்ப் பிறைக்கண்ணி யானை மலையான் மகளொடும் பாடிப்
போதொடு நீர்சுமந் தேத்திப் புகுவா ரவர்பின் புகுவேன்
யாதுஞ் சுவடு படாம லையா றடைகின்ற போது
காதன் மடப்பிடி யோடுங் களிறு வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன்.

வளர்மதிக் கண்ணியி னானை வார்குழ லாளொடும் பாடிக்
களவு படாததொர் காலங் காண்பான் கடைக்கணிக் கின்றேன்
அளவு படாததொ ரன்போ டையா றடைகின்ற போது
இளமண நாகு தழுவி யேறு வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன்.

சிவபோகத்தைப் புசிக்கும் ஞானிகள் தம் உடம்புக்கு உண்டாகும் இடையூறுகளைச் சிறிதும் கவனிக்கமாட்டாரென்பது அப்பர் சுவாமிகள் திருக்கைலாயம் செல்லும்போது தமது கால் கை தேய்ந்தும் அதைப் பொருட்படுத்தாது கயிலைக்குப்போய் வணங்கவேண்டும் என்பதையே பொருளாகக் கொண்டதனால் விளங்கும். அப்பர் சுவாமிகள் "கயிலையிலிருந்த நின்கோல நண்ணி நான்தொழ நயந்தருள் புரியெனப் பணிந்தார்" என்றதனால், கயிலைக்குப் போயிருக்க வேண்டினார் அல்லர். கயிலையை இவ்வுலகில் காண விரும்பியபடி சிவபெருமான் இவ்வுலகத்திலேயே அக்காட்சியைக் கொடுத்தருளினர்.

சிலநாள் அப்பர் சுவாமிகள் திருவையாற்றில் தங்கிச் சிவபெருமானுடைய அனுமதி பெற்று மற்றைய சேத்திரங்களையும் வணங்கித் திருப்பூந்துருத்திக்கு எழுந்தருளித் திருத்தாண்டகம், திருக்குறுந்தொகை, திருவிருத்தம் முதலிய பதிகங்களைப் பாடி, அவ்விடத்தில் ஒரு திருமடத்தை உண்டாக்கி, காலந்தோறும் இறைவரை வணங்கிக்கொண்டிருந்தார்.

அப்போது திருஞானசம்பந்தர்மூர்த்தி சுவாமிகள் மதுரைக்குச் சென்று சமணரை வாதில்வென்று பாண்டிய

னுடைய கூனை நிமிர்த்தருளிச் சைவ நெறியைத் தாபித்துத் திரும்பிச் சோழ நாட்டுக்கு வந்தார். வரும்போது அப்பர் சுவாமிகளைக் காணும் விருப்பத்தோடு திருப்பூந்துருத்திக்கு எழுந்தருளினர். அதனையறிந்த அப்பர் சுவாமிகள் எதிர் சென்று வணங்கும் காதலோடு அடியார்கள் சூழ்ந்துவரும் நெருக்கத்தில் தம்மை இன்னாரென்று ஒருவரும் அறியாதபடி உட்புகுந்து தொழுது "இம்முத்துச் சிவிகையை இழிவாகிய இந்த உடம்பால் அடியேனும் தாங்குவேன்" என்று அதனைச் சுமந்தார்.

> காழியர்கோன் வருமெல்லை கலந்தெய்திக் காதலித்தார்
> சூழுமிடைந் திடுநெருக்கிற் காணாமே தொழுதருளி
> வாழியவர் தமைத்தாங்கு மணிமுத்தின் சிவிகையினைத்
> தாழுமுட லிதுகொண்டு தாங்குவன்யா னெனத்தரித்தார்.
>
> —பெரிய புராணம்

> அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
> பொறுத்தானோ டூர்ந்தா னிடையை—மறுத்தார்சம்
> பந்தன் சிவிகை பரித்தார் மற்
> றுந்துஞ் சிவிகையினை யூர்ந்து."

என்றார் நால்வர் நான்மணிமாலை நூலுடையார்.

திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் திருப்பூந்துருத்திக்கு அணித்தாக வந்து "எங்குற்றாரப்பர்?" என வினவினர். அடியேன் உமது சிவிகையைத் தாங்கும் பெருமையைப் பெற்றுப் பேரானந்தங் கொண்டு இங்குற்றேன்" என அப்பர் சுவாமிகள் கூறினர். அதுகேட்ட பிள்ளையார் பதைப்புடன் முத்துச் சிவிகையிலிருந்து இறங்கி அப்பர் சுவாமிகளை வணங்க, தாமும் அவரைத் தொழ ஒருவரோ டொருவர் கலந்து அத்தலத்தில் இருவருமாகச் சில நாள் தங்கினர். பிள்ளையார் பாண்டி நாட்டில் நடந்தவைகளை எடுத்துக் கூறினர். பிள்ளையார் தொண்டை நாட்டுக்கு எழுந்தருள, அப்பர் சுவாமிகள் திருப்புத்தூரை யடைந்து வணங்கி மதுராபுரிக்குச் சென்று திருவாலவாயிற் சொக்கநாத சுவாமியையும் மீனாட்சி அம்மையையும் வணங்கினர். அப்போது தம்மை வந்து வணங்கிய பாண்டிய மன்னனாகிய நின்றசீர்நெடுமாறனுக்கும்

மங்கையர்க்கரசியாருக்கும் மந்திரியாகிய குலச்சிறை நாயனாருக்கும் இனிய வார்த்தைகளைக் கூறி அங்கிருந்து புறப்பட்டுத் திருப்பூவணத்தைத் தரிசித்து, "வடிவேறு திரிசூலம்" என்னும் திருத்தாண்டகம் பாடியருளினார்.

வடிவேறு திரிசூலந் தோன்றுந் தோன்றும்
வளர் சடைமே லிளமதியந் தோன்றுந் தோன்றும்
கடியேறு கமழ்கொன்றைக் கண்ணி தோன்றுங்
காதில்வெண் குழைதோடு கலந்து தோன்றும்
இடியேறு களிற்றுரிவைப் போர்வை தோன்றும்
எழிறிகழுந் திருமுடியு மிலங்கித் தோன்றும்
பொடியேறு திருமேனி பொலிந்து தோன்றும்
பொழிறிகழும் பூவணத்தெம் புனித னார்க்கே.

பின்பு இராமேச்சுரத்தை யடைந்து பதிகம் பாடிச் சிலநாள் அங்கிருந்தார். பாண்டிநாட்டிலுள்ள மற்றத் தலங்களையும் தரிசித்துச் சோழநாட்டுக்கு வந்து திருப்புகலூரை யடைந்து சிவபெருமானை வணங்கி உழவாரத் திருத்தொண்டு செய்து பலவகைத் திருப்பதிகங்களையும் பாடியருளினர். இவருக்குப் பொருளில் விருப்பமில்லாமையையும் மோகமில்லாமையையும் உலகத்தாருக்கு விளக்கும் பொருட்டுச் சிவபெருமான் உழவாரத் திருத்தொண்டு செய்யும்போது உழவாரம் நுழைந்த இடமெல்லாம் நவரத்தினங்களும் பொன்னும் பொலியச் செய்தார். அவைகளை எல்லாம் "ஓடும் செம்பொன்னும் ஒக்கவே நோக்குவார்" என்றபடி, பருக்கைக் கற்களோடு ஒரே தன்மையாக மதித்து உழவாரத்தில் ஏந்தித் திருக்குளத்தில் வீசி யெறிந்தார். சிவபெருமான் கட்டளைப்படி தேவமாதர்கள் வந்து தங்களால் இயன்ற அளவு மோகத்தை யுண்டாக்கும்படி முயற்சி செய்தார்கள். முன் செய்த நன்மை தீமைகள் காரணமாகவுள்ள இருவினைகளை முன்னிலையாக நோக்கி, சுகதுக்கம் இரண்டும் மயக்கம் என்னுங் கருத்துடையவராய் அம்மாதர்களை விளித்து "உங்களாலாகவேண்டிய உபகாரம் ஒன்றுமில்லை. நீங்கள் அஞ்ஞானிகளிடத்தன்றித் திருவாரூர் வன்மீகத் தியாகராச மூர்த்திக்கு அடியவனாகிய நம்மை அலையன்மின்" என்று "பொய்ம்மாயப் பெருங்கட

வில்." என்னும் தேவாரத் திருப்பதிகத்தைப் பாடியருளினார்.

"இம்மாயப் பவத்தொடக்கா மிருவினைக டமைநோக்கி
யும்மாலிங் கென்னகுறை யுடையேன்யான் றிருவாரூ
ரம்மானுக் காளானே னலையேன்மி னீரென்று
பொய்ம்மாயப் பெருங்கடலு ளெனுந்திருத்தாண் டகம்புகன்றார்."
—பெரியபுராணம்.

அரம்பையர்கள் தங்கள் கருத்து நிறைவேறாதது கண்டு அவரை நமஸ்கரித்துத் திரும்பிப் போயினர்

சிவானந்த சொரூபியாகிய அப்பர் சுவாமிகள் தாம்செய்த திருத்தொண்டுகளை யெல்லாம் மக்களுக்கு உதாரணமாகத் தம் செயலாகக் கொள்ளாது சிவன் செயலாகக்கொண்டு செய்தார் என்பதும், இவர் பசுத்துவம் நீங்கிச் சிவமாந் தன்மையில் நின்றார் என்பதும், சித்த நிலை வேறுபடாத தத்துவஞானி என்பதும் நன்கு தெளியப்படும்.

காரிகையாரைப் பொன்னைக்காட்டவுங் காமாதிமும்மைச்
சோர்விழந் துய்ந்தாரரசர் சோமேசா—வோருங்காற்
காமம் வெகுளி மயக்க மிவைமூன்ற
ஞமங் கெடக்கெடு நோய்"

என்பது முதுமொழி வெண்பா

"ஏந்திழையார் தஞ்சயனத் தெய்தித் தம்மெய்தொடினுங்
காய்ந்துவர்த்தலே துறவு காண்"

என்பதனாலும்,

"தன்னை யறிந்திடும் தத்துவ ஞானிகள்
முன்னை வினையின் முடிச்சை யவிழ்ப்பார்கள்
பின்னை வினையைப் பிடித்துப் பிசைவர்கள்
சென்னியில் வைத்த சிவனரு ளாலே"

என்னும் திருமந்திரத்தாலும் அறிக.

அப்பர் சுவாமிகள் சிவபிரானார் திருவடிகளைச் சேரும் காலம் வரைக்கும் அத்தலத்திலேயே அப்பெருமானை வணங்கிக் கொண்டிருந்தார். ஆன்மாக்கள் சிவஞானம் பெற்றுய்யும் வண்ணம் "புண்ணியா வுன்னடிக்கே போதுகின்றேன்" என்னும் தேவாரத் திருப்பதிகம் பாடி எண்ணுதற்கரிய ஞான வடிவை எய்தி சிவானந்தக்கடலில்

மூழ்கிச் சிவபெருமான் திருவடியில் இரண்டறக்கலத்த லாகிய சிவசாயுச்சியப் பேறு பெற்றுச் சித்திரை மாதச் சதய நட்சத்திரத்தில் பரிபூரணம் எய்தினர்.

மண்முதலா மூலகேத்த மன்னுதிருத் தாண்டகத்தைப்
புண்ணியா வுன்னடிக்கே போதுகின்றே னெனப்புகன்று
நண்ணரிய சிவானந்த ஞானவடி வேயாகி
யண்ணலார் சேவடிக்கீ ழாண்டவர செய்தினர்.

—பெரியபுராணம்.

திருப்புகலூர்த் - திருத்தாண்டகம்.

எண்ணுகே னென்சொல்லி யெண்ணு கேனோ
எம்பெருமான் திருவடியே எண்ணி னல்லால்
கண்ணிலேன் மற்றோர் களைக ணில்லேன்
கழலடியே கைதொழுது காணி னல்லால்
ஒண்ணுளே யொன்பது வாசல் வைத்தா
யொக்க வடைக்கும்போ துணர மாட்டேன்
புண்ணியா வுன்னடிக்கே போது கின்றேன்
பூம்புகலூர் மேவிய புண்ணி யனே.

ஒருவனையு மல்லா துணரா துள்ள
முணர்ச்சித் தடுமாற்றத் துள்ளே நின்ற
இருவரையு மூவரையு மென்மே லேவி
யில்லாத தரவறுத்தாய்க் கில்லே னேலக்
கருவரை சூழ்கான லிலங்கை வேந்தன்
கடுந்தேர்மீ தோடாமைக் காலாற் செற்ற
பொருவரையா யுன்னடிக்கே போது கின்றேன்
பூம்புகலூர் மேவிய புண்ணி யனே. —தேவாரம்.

அப்பர் சுவாமிகள் தமது உடல் நலன் பொருட்டு ஒன்றையும் கருதாது "யான்" "எனது" என்னுஞ் செயலற்றுச் சிவனார் திருவருளில் நின்றனர். பகைவராகிய சமணர்கள் கொடுந் தொழில்களைச் செய்தும் அவர்கள் மேல் கோபித்துப் பகைகொள்ளாமல் பொறுமையுடன் அன்பு காட்டினார். தாம் வேண்டியபடி சிவபெருமான் திருவருளினால் சூலக் குறியையும் இடபக் குறியையும் தமது திருத் தோளில் பொறிக்கப்பெற்றார். திருநல்லூரில் சிவபெருமான் தன் திருவடியை அவர் சென்னியில் சூட்டினார். அப்பூதியடிகள் நாயனாரை மார்ச்சார சம்பந்தம் பற்றி அடிமை கொண்டு பாம்பு கடித்திறந்த அவருடைய புதல்வனை உயிர்ப்பித்தார். சிவனடியார்களுக்கு அன்னம் கொடுத்தற்குச் சிவபெருமானிடம் படிக்காசு பெற்றார்.

வேதாரணியத்தில் வேதங்களால் பூட்டப்பட்டிருந்த திருக்கதவு திறக்கத் தேவாரப் பதிகம் பாடியருளினார். திருப்பைஞ்ஞீலியில் சிவபெருமானிடம் பொதி சோறு பெற்றார். திருவையாற்றில் சிவபெருமான் கைலையில் இருக்கும் திருக்கோலத்தைத் தரிசித்தார். இவர் ஆன்மாக்கள் உய்யும் வண்ணம் இவ்வுலகில் அவதாரஞ் செய்து பொன், பெண் முதலிய பற்றை அறவே நீக்கிச் சீவன் முத்தரா யிருந்து, உலகத்துக்கு ஓர் பரமாசாரியரானார் என்பது நன்கு தெளி யப்படும். ஆதலால், சிவபெருமானை இடையறாது வணங்கி எந்தக் கல் மனமுடையோரையும் உருகச் செய்யும் அவர் அருளிச் செய்த தேவாரத் திருப்பதிகங்களை மெய்யன்போடு ஓதித் திருவருளை நாமெல்லாம் பெற்றுய்வோமாக.

திருநாவுக்கரசு சுவாமிகள் திருவடி வாழ்க.

---

# குலச்சிறை நாயனார்

கோதில்புகழ் தருமணமேற் குடியார் கோவண்
குலச்சிறையார் தென்னர்குல வமைச்சர் குன்றா
மாதவர்க ளடிபரவு மரபார் பாண்டி
மாதேவி யாரருள்வான் பயிர்க்கு வேலி
காதன்மிகு கவுணியர்கோன் வாதிற் றோற்ற
கையரை கைக்கரைசேர் கழுவி லேற்று
நீதியினா ரலவாய் நிமலர்ச் சேர்ந்த
நின்மலனா ரென்மலங்க ணீக்கி னாரே.

குலச்சிறை நாயனார் பாண்டி நாட்டிலுள்ள மணமேற் குடி என்னும் நகரத்தில் தோன்றி அப்பதிக்கு முதல்வராய் விளங்கினார். திருத்தொண்டத் தொகையில் "பெருநம்பி" எனச் சிறப்பித்துச் சுந்தர மூர்த்தி நாயனாரால் புகழப்படும் பெருமை வாய்ந்தவர். எக்குலத்தாராயினும் அடியார் வேடத்தோடு வந்தால் அவர்கள் குணம் குற்றம் பாராது சிவமாகப் பாவித்து, அவர்களைக் கண்டவுடன் விழுந்து வணங்கி அழைத்துச் சென்று அமுது படைக்கும் பேரன் புடையவர்.

உலகர் கொள்ளு நலத்தின ராயினு
மலகி றீமைய ராயினு மம்புலி
யிலகு செஞ்சடை யாரடி யாரெனிற்
றலமு றப்பணிந் தேத்துந் தகைமையார். —பெரியபுராணம்.

நலமிலராக நலமதுண்டாக நாடவர் நாடறிகின்ற
குலமிலராகக் குலமதுண்டாகத் தவம்பணி குலச்சிறை பரவுங்
கலைமலிகரத்தன் மூவிலைவேலன் கரியுரிமூடிய கண்டன்
அலைமலி புனல்சேர் சடைமுடி யண்ணலால வாயாவது மிதுவே.

எனத் திருஞான சம்பந்தர் சுவாமிகள் தேவாரத்தில் இவர் புகழ்ந்து பாடப்பெற்றார்.

அடியார்களிடத்தில் சாதிவேற்றுமை இருந்ததில்லை யென்பது இத்தேவாரத்தால் அறியப்படும்.

விபூதி, உருத்திராட்சம், கோவணம் ஆகிய சிவசின்னங்களைத் தரித்து ஐந்தெழுத்தை இடைவிடாது ஓதும் அடியார்களது திருவடிகளை நாள்தோறும் வணங்கும் பெருங்குணமுடையவர்.

"நாவணங்கியல்பாமஞ் செழுத்தோதி நல்லராய் நல்லியல்பாகும்
கோவணம்பூதி சாதனங்கண்டாற் றொழுதெழு குலச் சிறைபோற்ற
வேவணங்கியல் பாமிரா வணன்றிண் டோளிருபது நெரிதரவூன்றி
ஆவணங் கொண்டசடைமுடி யண்ணலால வாயவது மிதுவே"

என்னும் தேவாரத்தால் அறிக.

நின்ற சீர் நெடுமாற நாயனார் என்னும் பாண்டியனுக்கு முதன் மந்திரியாயிருந்து, பகைவர்களை வென்று இராச காரியங்களை ஒழுங்குபெற நீதிவழுவாது நடத்திவந்தார். பாண்டிமா தேவியினுடைய திருத்தொண்டுக்கு மெய்த் தொண்டரானார். பாண்டிய நாட்டில் பரந்திருந்த சமண சமயம் நீங்கிச் சைவநெறி வளரச்செய்த திருஞான சம்பந்த மூர்த்தி சுவாமிகளின் திருவருளைப் பெற்றவர். சமண சமயத்தை நீக்கிச் சைவசமயத்தை வளர்த்தற்கு வேண்டிய பணிசெய்த பெரும் புண்ணியமும் புகழும் பெற்றுச் சிவபெருமான் திருவடி நிழலையடைந்தார்.

இந்நாயனார் சகல அதிகாரத்தோடு இருந்தும் சிறிதும் அகங்கார மில்லாது கடவுள் இடத்தும் அடியார் இடத்தும் பேரன்போடு இம்மைக்கும் மறுமைக்கும் நன்மைபயக்கும் சிவநெறி உலகில் நிலை பெறச் செய்வதற்கு வேண்டிய பணி செய்தார் என்பது திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் சுந்தரமூர்த்தி நாயனார் ஆகிய இரு பரமா சாரியரும் இவரைச் சிறப்பித்துப் பாடியருளியதனால் உணர்க.

# பெருமிழலைக் குறும்ப நாயனார்

கொண்டல்பணி வளர்சோலை மிழலை நாட்டுக்
கோதில்புகழ்ப் பெருமிழலைக் குறும்ப னார்சீ
ரண்டர்பிரா னடியவருக் கடியா ராகு
மாதரவா லணுக்கவன் றொண்டர்க் காளாய்
மண்டொழுபெண் டருசித்தி வாய்ந்து ளார்தாம்
வன்றொண்டர் வடகயிலை மருவு நாண்மு
னெண்டிகழு மறைமூல நெறியூ டேகி
யிலங்கொளிசேர் வடகயிலை யெய்தி னாரே.

மிழலை நாட்டிலுள்ள பெருமிழலை என்னும் சேத்திரத்தில் குறுநிலமன்னர்குலத்திற் பெருமிழலைக்குறும்ப நாயனாரென்பவர் தோன்றினார். அவர் அடியார் குறிப்பறிந்து தொண்டுசெய்பவர். பலபேர் வந்தாலும் குறைவிலாது அமுது செய்வித்துத் திரவியங்களும் ஏராளமாகக் கொடுப்பவர். சிவபெருமானது பாதகமலங்களைத் தமது இருதயத்தில் பொருந்தத் தியானிக்கின்றவர்.

தொண்டர் பலரும் வந்தீண்டி யுண்ணத் தொலையா வமுதூட்டிக்
கொண்டு செல்ல விருநிதிய முகந்து கொடுத்துக் குறைந்தடைவார்
வண்டு மருவுங் குழலுமையாள் கேள்வன் செய்ய தாளென்னும்
புண்டரீக மகமலரில் வைத்துப் போற்றும் பொற்பினார்.

—பெரிய புராணம்.

இவ்வாறு திருத்தொண்டுகளைச் செய்துவரும் நாளில் ஆன்மாக்கள் உய்யும் பொருட்டுத் திருத்தொண்டத்தொகை பாடியருளிய சுந்தரமூர்த்தி சுவாமிகளை உபாசனாமூர்த்தியாகக்கொண்டு அவரது திருநாமத்தை யுச்சரித்து வந்த நன்மையினால் எண்வகைச் சித்திகளையும் பெற்றார்.

நாளு நம்பி யாரூரர் நாம நவின்ற நலத்தாலே
யாளும் படியா லணிமாதி சித்தி யான வணைந்ததற்பின்
மூளுங் காத லுடன்பெருக முதல்வர் நாமத் தஞ்செழுத்துங்
கேளும் பொருளு முணர்வுமாம் பரிசு வாய்ப்பக் கெழுமினார்.

—பெரிய புராணம்.

சற்குருவானவர் தம்மை யடைந்தவர்களை நன்னெறியில் நடத்துதலினால் அவரைச் சிவமாகப் பாவித்து மனம் வாக்குக் காயங்

களினால் அவரை வழிபடல்வேண்டும். அப்படி வழிபடுவோர் வேண்டிய சித்திகளைப் பெற்று முத்தியும் அடைவர்.

ஏறுநெறியே மலத்தை யெரித்தலா
லீறிலுரையா லிருளை யறுத்தலான்
மாறில்பசு பாசம்வாட்ட லால்வீடுக
வேறுபரனே குருவாமி யம்பிலே.

தெளிவு குருவின் திருமேனி காண்டல்
தெளிவு குருவின் திருநாமஞ் செப்பல்
தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்
தெளிவு குருவுரு சிந்தித்தல் தானே. —திருமந்திரம்.

சுந்தரமூர்த்தி நாயனார் திருக்கயிலாயத்தை நாளைய தினத்தில் அடையப்போகின்றார் என்பதை யறிந்து, நன்மை தீமைகளைக் கண்மணியானது வேறு பிரித்துக் காட்டுவது போல், தம்மை நல்லவழியில் நடத்தும் உபா சனாமூர்த்தியாகிய சுந்தரமூர்த்தி சுவாமிகளிடத்தேகொண் டிருந்த குருபத்தியின் தடிப்பினால் அவரை விட்டுத் தனித்து வாழ்ந்திருத்தல் கூடாது என்று நினைத்தார். அன்றையதினமே தாம் பயின்று வந்த யோகமுயற்சியினால் உடலினின்றும் பிரிந்து சிவபெருமானுடைய திருவடிகளைச் சேர்ந்தார்.

குரு பத்தி முதிர்ச்சியினால் மோட்சம் பெறலாம் என்பது இதனால் கண்டு தெளிக.

# காரைக்காலம்மையார்

தங்குபுகழ்க் காரைக்கால் வணிகன் மிக்க
தனதத்தன் றரும்புனித வதியார் மாவின்
செங்கனிக டிருவருளா லழைப்பக் கண்டு
திகழ்கணவ னதிசயித்துத் தேசநீங்க
வங்கவுட லிழந்துமுடி நடையா லேறி
யம்மையே யெனநாத னப்பா வென்று
பொங்குவட கயிலைபணிந் தாலங் காட்டிற்
புனிதனட மனவரதம் போற்றி னாரே.

சோழதேசத்தில் காரைக்கால் நகரத்திலே வைசிய குல முதல்வராகிய தனதத்தன் என்பவருக்குப் புனிதவதியார் என்னும் ஓர் புதல்வி திருவவதாரஞ் செய்தார். அவர் சிவபக்தி சிவனடியார் பத்தியில் மேம்பட்டு அழகுக்கோர் அணிகலன்போல் வளர்ந்து மணப்பருவம் அடைந்தார். அப்போது தனதத்தன் நாகபட்டணத்தில் மிகுந்த செல்வந்தரான நிதிபதி என்னும் புகழ்படைத்த செட்டியார் குமாரனாகிய பரமதத்தன் என்பானுக்கு வைதிக முறைப்படி விவாகஞ் செய்து வைத்தார். புனிதவதி தன் குடிக்கு ஓர் அரும்புதல்வி யாதலினால் காரைக்காலிலேயே கணவனுடன் வாழ்ந்திருக்கும்படி தனதத்தன் ஏற்பாடு செய்தான். புனிதவதியார் மனையறத்தை வழுவாது நடத்திவந்தார். அவர் சிவபெருமானது திருவடிகளில் பேரன்பு பெருக, அடியார்களுக்குத் திருவமுது படைத்து, அவர்களுக்கு வேண்டிய பொன் வெள்ளி நவரத்தினம் செழுந்துகில் முதலானவைகளைத் தகுதிக்கேற்பக் குறைவறக் கொடுத்து வந்தார். இப்படி ஒழுகும் நாளில் ஒரு நாள் பரமதத்தனைக் காண வந்தவர்கள் இரண்டு மாங்கனிகளை அவனுக்குக் கொடுத்தனர். அவன் அவைகளைத் தன் மனைவியிடம் அனுப்பிவிட்டான். அம்மையார் அப்பழங்களை வாங்கி வைத்தபின்னர் ஓர் சிவனடியார் பசியுடன் அவர் வீட்டுக்கு வந்தார். அடியவர் பசியுடன் வந்ததைக் கண்ட புனிதவதியார் அவ்வடியவருக்கு அமுதைப்படைத்து அந்நேரத்தில் கறிசமைக்கக் கூடாமையினால் கணவன்

அனுப்பிய மாம்பழங்களில் ஒன்றைக் கறியமுதாகப் படைத்து "அல்லறீர்ப் பவரடியார் தமையமுது செய்வித் தார்." அடியவர் உண்டு புனிதவதியாரின் செய்கையைப் புகழ்ந்து சென்றனர். பரமதத்தன் வீடுவந்து பகற்போச னம் பண்ணும்போது எஞ்சியிருந்த மாங்கனியைப் புனித வதியார் தம் கணவனின் கலத்தில் படைத்தார். அவன் அக்கனியைத் தின்று அதன் இனிய சுவையின் விருப்பினால் தனது மனைவியை நோக்கி "இன்னும் ஒரு பழமுண்டு; அதனையும் இடுக" என்றான். புனிதவதியார் கொண்டுவரப் போகிறவர்போல் உள்ளேபோய் நின்று தம்மை நம்புகின்ற மெய்யன்பர்களுக்கு உற்றவிடத்து உதவும் இறைவன் திரு வடிகளைத் தியானித்தார். உடனே இறைவர் திருவருளால் ஓர் மதுரமான மாங்கனி புனிதவதியார் கையில் வந்திருந் தது. அவர் அதனைக் கொண்டுவந்து கணவனு டைய கலத்தில் மகிழ்ச்சியோடு இட்டார். அவன் அப் பழத்தைத் தின்றபோது அதன் சுவை தேவாமிர்தத்திலும் இனிமையாய் இருந்தமையால், "இது நான் தந்த மாங்கனி யன்று. இக்கனி மூவுலகங்களிலும் கிடைக்காதது. இது உனக்கு வந்த வகை எப்படி?" என்றான். புனிதவதியார் திருவருளின் பெருமையை மற்றவர்களுக்குச் சொல்லக் கூடாதெனச் சற்று யோசித்தார். உடனே கணவனுக்கு மறைத்துக்கூறுது நிகழ்ந்தவைகளைச் சொல்லுதலே முறை யென்று எண்ணி இறைவனை வணங்கி உண்மையைக் கூறினார்.

> செய்தபடி சொல்லுவதே கடனென்னுஞ் சீலத்தான்
> மைதழையுங் கண்டர்சே வடிகண்மனத் துறவணங்கி
> மெய்தவருங் கனியளித்தா ரியாரென்னுங் கணவனுக்கு
> மொய்தருபூங் குழன்மடவார் புகுந்தபடி தனைமொழிந்தார்.
>
> —பெரிய புராணம்.

அதுகேட்ட பரமதத்தன் மனம் தெளியாது மனைவி யாரை நோக்கி "அப்படியாயின் இறைவரது திருவருளால் மற்றொருகனி யழைத்துக் கொடு பார்ப்போம்" என்றான். புனிதவதியார் உள்ளே சென்று இறைவனைத் துதித்து, "எம்பெருமானே! தேவரீர் இன்னும் ஒரு கனி தந்தருள

வேண்டும்; இல்லையேல் என் உரை பொய்யாய் முடியும்" என்று கூறிப் பிரார்த்தித்தார். அப்போது இறைவர் திருவருளால் மற்றொரு மாங்கனி அம்மையார் கையில் வந்திருந்தது. அக்கனியைக் கணவனிடம் கொண்டுவந்து கொடுக்க, அவன் அதிசயித்து வாங்கினான். வாங்கிய கனியைப் பின் காணாது மிகுந்த அச்சத்தோடு உள்ளம் தடுமாறி, அவ்வம்மையாரைத் தெய்வமாகக் கொண்டான். புனிதவதியாரைத் தனக்கு மனைவியாகக் கொண்டு பணிசெய்வித்தல் முறையல்ல என்று எண்ணி அவரைப் பிரிந்து வாழவேண்டுமெனத் துணிந்தான். அதுமுதல் அவரோடு தொடர்பின்றி யொழுகி வந்தான்.

புனிதவதியார் தம்மிடம் வந்த அடியார்களைச் சிவமாகப் பாவித்து மிகுந்த அன்புடன் திருவமுது செய்துவித்து வந்தார். இளையான் குடிமாற நாயனாரைப்போல, அடியார் பூசையைச் சிரத்தையோடு செய்தமையினாலன்றோ இவ்வம்மையார் வேண்டியவுடனே வேண்டுவார் வேண்டுவதை யீந்தருளும் சிவபிரான் மாங்கனியைக் கொடுத்தார். பரமதத்தன் அவ்வம்மையார் சொன்னதை நம்பாமையினால் இறைவர் தாம் கொடுத்த மற்றப்பழத்தை அவன் கையிலிருந்து மறையச் செய்தார் போலும். பரமதத்தன் அனுப்பிய இரண்டு பழங்களில் ஒன்றை அடியவருக்குக் கொடுத்தபின், அவன் அதைக் கேட்டதும் இறைவர் ஒரு கனியைக் கொடுக்க அவன் புசித்ததும் அம்மையார் தம் கணவனுக்குச் செய்யும் தொண்டின் பெருமையைக் குறிக்கும்.

புனிதவதியாரைவிட்டு நீங்கவேண்டுமென்று எண்ணிய பரமதத்தன் வியாபாரஞ் செய்து வருவதாகச் சுற்றத்தாருக்கு அறிவித்துக் கப்பலேறி வியாபாரஞ் செய்து பொருளையீட்டிப் பாண்டிநாட்டிலே ஒரு பட்டினத்திலுள்ள வைசியர் குலத்து வேறொரு பெண்ணை விவாகஞ் செய்து ஒரு பெண்குழந்தையைப் பெற்றெடுத்தான். தான் தெய்வப் பெண் என்று அஞ்சி நீத்த அம்மையாரின் பெயராகிய புனிதவதியார் என்னும் புனிதப் பெயரையே அக்குழந்தைக்கும் இட்டு அங்கேயே வாழ்ந்துவந்தான். பரமதத்தன் இப்படி வாழ்வதைக் கேள்விப்பட்ட புனிதவதியாரின் சுற்றத்தார் அவ்வம்மையாரைப் பல்லக்கி லேற்றிக்கொண்டு அவன் வாழும் ஊருக்கு அருகில் தங்கித் தாங்கள் வந்துள்ள செய்தியை அவனுக்கறிவித்தனர். அப்போது பரம

தத்தன் தனது இரண்டாம் மனைவியையும் குழந்தையையும் அழைத்து வந்து புனிதவதியாரை வணங்கச் செய்து தானும் வணங்கி அச்சத்தோடு ஒதுங்கி நின்றனன். அது கண்ட சுற்றத்தார் பரமதத்தனை நோக்கி, "இப்படி நீ செய்த காரணம் என்ன?" என்று கேட்டனர்.

பரமதத்தன் தான் அவரிடத்தில் பெரிய அற்புதத்தைக் கண்டதாகவும், அவர் தெய்வப்பெண்ணேயன்றி மானுடப் பெண்ணன்று எனவும் அதனால் அவரை விட்டுப்பிரிந்து வேறு விவாகம் செய்ய நேர்ந்ததாகவும், தன் பிள்ளைக்குக் குலதெய்வத்தின் பெயரிடுவதுபோல அம்மையாரின் திருப் பெயரையே வைத்திருப்பதாகவும் கூறியதுடன், "நீங்களும் அவரை வணங்குங்கள்" என்றான். இதனைக் கேட்ட சுற்றத் தார் அவன் கூறியவைகளைக் கேட்டுத் திகைத்து நின் றனர். புனிதவதியார் ஆண்டவன் திருவடிகளைச் சிந்தித்து "சுவாமி! என் கணவன்பொருட்டு யான் இதுவரை தாங்கி யிருந்த வனப்புவாய்ந்த தசையை யொழித்துத் தேவரீரைப் பக்கத்தில் நின்று தொழுகின்ற பேய்வடிவைத் தந்தருள வேண்டும்" என வணங்கினார். அவ்வாறே உடனே மன்றுள் ஆடுவார் திருவருளினால் பேய்வடிவைப் பெற்றார். அப் போது வானவர் மலர்மழை பொழிந்தனர். உலகெலாம் வானதுந்துபி ஒலித்தது. தேவகணங்கள் எல்லாம் குணலைக் கூத்தாடின. சுற்றத்தார் எல்லோரும் அஞ்சித் தொழுது அகன்று போனார்கள். புனிதவதியார் தாம் பெற்ற சிவஞானத் தொருமையால் அடியார் கூட்டத்தில் தாமும் ஒன்றானார்.

பெறினும் பிறிதியாதும் வேண்டேம் நமக்கீ
தூறினு முறாதொழியு மேனுஞ்—சிறிதுணர்த்தி
மற்றொருகண் ணெற்றியின்மேல் வைத்தான்றன் பேயாய
நற்கணத்தி லொன்றாய நாம்.

என்னும் அற்புதத் திருவந்தாதியினால் இதனை அறிக.

புனிதவதியார் அப்பொழுதுதானே அற்புதத் திரு வந்தாதியும், திருவிரட்டை மணிமாலையும் பாடித் துதித்துக் கயிலாயமலையின்கண் சிவபெருமானைத் தரிசிக்க

உள் நிறைந்த அன்புடன் மனோவேகத்திலும் கடிதிற் சென்றார். கண்டவர் அஞ்சினார்கள். திருக்கயிலைமலையின் அடிவாரத்தில் வந்து சேர்ந்ததும், காலால் நடவாது தலையால் நடந்து சமீபத்தில் சென்று நிற்கச் சிவபெருமான் உலகுய்ய "அம்மையே" என்று அழைத்தார். அதைக்கேட்ட புனிதவதியார் "அப்பா" என்று சொல்லிப் போற்றினார். இறைவர், "உனக்கு வேண்டும் வரம் யாது?" என்றார். புனிதவதியார் "ஒருகாலும் அழியாத அன்பும் இவ்வுலகத்தில் இனிப் பிறவாதிருக்கவும், அப்படி வினைவசத்தால் பிறப்புண்டாயினும் தேவரீரை என்றும் மறவாதிருக்கவும், தேவரீர் ஆனந்தத் தாண்டவஞ் செய்யும்போது அடியேன் தேவரீரைப் பாடிக்கொண்டு திருவடியின் கீழிருக்கவும் அருளவேண்டும்" என்று வணங்கினார்.

இறவாத வின்ப வன்பு வேண்டிப்பின் வேண்டு கின்றார்
பிறவாமை வேண்டு மீண்டும் பிறப்புண்டே லுன்னை யென்று
மறவாமை வேண்டு மின்னும் வேண்டுநான் மகிழ்ந்து பாடி
யறவாநீ யாடும் போதுன் னடியின்கீ ழிருக்க வென்றார்.

—பெரிய புராணம்.

அடியார் இருதய கமலத்தில் பற்றாய் நிற்கும் சிவபெருமான் அம்மையார் கேட்ட வரங்களைக் கொடுத்துத் திருவாலங்காட்டில் திருவடியைத் தூக்கி ஊர்த்த தாண்டவஞ் செய்தருளுந் திருக்கோலத்தைத் தரிசித்துக் தம் திருவடி நிழற்கீழ் என்று மிருக்கும் வண்ணம் அருள் புரிந்தார். அப்பரிசைப் பெற்ற அம்மையார் இறைவரை வணங்கி விடைபெற்றுக்கொண்டு திருவாலங்காட்டுக்குத் தலையினால் நடந்து சென்று சிவபெருமான் செய்யும் ஊர்த்த தாண்டவத்தைத் தரிசித்து "கொங்கை திரங்கி" என்றெடுத்து மூத்த திருப்பதிகத்தைப் பாடிப் போற்றி நண்ணும் நாளில் தாண்டவத் திருக்கோலத்தைத் தரிசித்துப் பேரன்பின் மிகுதியினால் "எட்டியிலவமீகை" என்னும் திருப்பதிகத்தைப் பாடி இறைவர் திருவடியின் கீழ் என்றும் பெறற்கரிய பேறு பெற்றிருக்கின்றார்.

இவ் வம்மையாரின் அன்பின் முதிர்ச்சி "அம்மையே!" எனச் சிவபெருமான் இவரை அழைத்தருளினமையாலும், இவர் திருத்தலை

யால் நடந்தடைந்த திருவாலங்காட்டைத் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் மிதிக்க அஞ்சினமையாலும் அறியப்படும். முன் நாளில் பெண்கள் கல்வியில் சிறந்து இறைவர் திருவருளின் வழியில் நின்று இல்லறம் நடத்தித் தத்துவஞானம் பெற்றனர் என்பது இவ்வம்மை யார் வாழ்க்கையினுல் தெளியப்படும். இவர் கணவனே இவரைத் தெய்வமாக வணங்கியதால் இவர் செய்த இல்லறம் எவ்வளவு மாண் புடையது ?

இம்மையிலே புவியுள்ளோ ரியாருங்காண
வேழுலகும் போற்றிசைப்ப வெம்மையாளும்
அம்மைதிருத் தலையாலே நடந்துபோற்று
மம்மையப்பர் திருவாலங் காடாமென்று
தம்மையுடை யவர்மூதூர் மிதிக்கவஞ்சிச்
சண்பைவருஞ் சிகாமணியார் சாரச்சென்ருர்
செம்மைநெறி வழுவாத பதியின்மாடோர்
செழும்பதியி லன்றிரவு பள்ளிசேர்ந்தார்.

—பெரிய புராணம்.

அம்மையார் பேய்வடிவத்தை வேண்டிப் பெற்றமையால் 'பேயார்' என்று அழைக்கப்படுவர். திருத்தொண்டத்தொகையில் 'பேயார்க்கு மடியேன்' என்று சுந்தரர் பாடியிருத்தல் காண்க. அம்மையாரும் தமது பாடல்களில் தம்மைக் 'காரைக்காற் பேய்' என்று கூறிக் கொள்ளுகின்றனர். இவருடைய திருவாலங்காட்டுத் திருப்பதிகங்க ளிரண்டையும் மூத்த தேவாரமென்ப; மூவர் தேவாரத்திற்கு முந்திய தாகலின். அம்மையார் பாடல்களெல்லாம் பதினோராந் திருமுறையிற் சேர்க்கப்பட்டுள்ளன.

# அப்பூதியடிகணாயனார்

*அந்தமினற் றிங்களூர் வருமப்பூதி*
*யருமறையோர் திருநாவுக் கரசி னாமம்*
*பந்தரிடை யெழுதக்கண் டரசு மெய்தப்*
*பணிந்துபரி கலனேடிப் படப்பை சேர்ந்த*
*மைந்தனாயி ருயர்கதலி யிலைமேற் றுஞ்சும்*
*வாளரவு கவரவுடன் மறைத்தல் கேட்டுச்*
*சிந்தைமகிழ்ந் துயர்பதிக மருந்தாற் றீர்த்துத்*
*திருவமுது செயவருளைச் சேர்ந்து ளாரே.*

சோழநாட்டில் திங்களூரிலே மறைத் தலைவராய் அப்பூதியடிகணாயனார் அவதாரம் செய்தார். களவு, பொய், காமம், கோபம் முதலிய குற்றங்களைக் காய்ந்த பெரியோர். சிவபெருமானிடம் பேரன்புடையவர். சைவசித்தாந்த மார்க்கத்தில் வழுவாதொழுகி வருபவர். திருநாவுக்கரசு சுவாமிகளுக்குச் சூலைநோயைக் கொடுத்துச் சிவபெருமான் அடிமை கொண்டதைக் கேள்வியுற்று அவரைக் காண்பதற்கு முன்னமே அவரிடத்தில் தலையன்பு பூண்டு நாவரசரை உபாசனா மூர்த்தியாகத் தியானித்து வந்தார். தமது புதல்வர்களுக்கும், வீட்டுப் பொருள்களுக்கும், பசு எருமை முதலிய மிருகங்களுக்கும், தண்ணீர்ப் பந்தல், தடாகம், கூபங்களுக்கும் தமது குருசுவாமிகளுடைய நாமமாகிய திருநாவுக்கரசு என்னும் பெயரையிட்டு வாழ்ந்து வந்தார்.

அந்நாளில் திருநாவுக்கரசு சுவாமிகள் திருப்பழனம் என்னும் தலத்திலிருந்து மற்றைய சேத்திரங்களைத் தரிசிக்கும் பொருட்டுத் திங்களூர் மார்க்கமாய் எழுந்தருளும் போது அளவில்லாத சனங்கள் செல்லும் வழிக்கரையில் ஓர் தண்ணீர்ப் பந்தலையும் அதன்கண் அமுதம் போன்ற தண்ணீரையும் கண்டார். அவ்விடத்தில் தம் பெயர் எங்கும் செம்மையாக வரைந்திருப்பதையும் கண்டனர். அங்கு நின்றவர்கள் மூலமாக விவரங்களை அறிந்து, அப்பூதி நாயனார் மாளிகையின்வாசலில் வந்து சேர்ந்தார். மாளிகையினில் இருந்தமறைத் தலைவராகிய அப்பூதியடிகள் ‘‘சிவ பெருமானுடைய தொண்டர் ஒருவர் வந்து வாயிலில்

நிற்கின்றார்'' என்பதைக் கேள்விப்பட்டு விரைந்தோடி-வந்து வாகீசர் கழல்பணிய, அவரும் அப்பூதியடிகளை வணங்கினர். அப்பூதியடிகள் அப்பரை நோக்கி,

"முடிவிறவஞ் செய்தேன்கொன் முன்பொழியுங் கருணைபுரி
வடிவுடையீ ரென்மனையில் வந்தருளிற்றென்.''

என்று கேட்டார்.

திருநாவுக்கரசு நாயனார் "நாம் திருப்பழனத்தை வணங்கிக்கொண்டு வரும்போது வழிக்கரையில் தண்ணீர்ப் பந்தரைக்கண்டு நீர்செய்கிற மற்றைய தருமங்களையும் கேட்டு வந்தோம். அடியார்களுக்காக நீர் அமைத்த தண்ணீர்ப்பந்தலுக்கு உமது பேர் எழுதாது மற்றொருவர் பெயரை வைத்திருக்கும் காரணம் என்ன'' என்றார். அப்பூதியடிகள் மனங்கலங்கித் தேறி "நீர் நல்லவார்த்தை கூறினீர். மானமில்லாத கொடிய பாதகர்களாகிய சமணர் வழிப்பட்டிருந்த பல்லவராசன் செய்த துன்பங்களால் பாதிக்கப்படாது சிவபத்தி வலிமையினால் அவைகள் தம்மை யணுகாமல் வென்ற பெருந் தொண்டராகிய எமது சுவாமிகளது திருப்பெயரோ வேறொரு பெயர்'' என்று கோபத்துடன் விடை பகர்ந்தார்.

நின்றமறை யவர்கேளா நிலையழிந்த சிந்தையராய்
நன்றருளிச் செய்திலீர் நாணிலமண் பதகருடன்
ஒன்றியமன் னவன்சூழ்ச்சி திருத்தொண்டி னுறைப்பாலே
வென்றவர்தந் திருப்பேரோ வேறொருபே ரெனவெகுள்வார்.
—பெரிய புராணம்.

"திருத்தொண்டின் வலிமையால் இம்மையில் பிழைக்கலாம் என்று நம் போலிகள் தெளிய வழி காட்டிய திருநாவுக்கரசு சுவாமிகள் திருப்பெயரை எழுதி யிருப்ப, இப்படிக் கொடிய மொழிகளைக் கூறினீர். சமணர்கள் சேர்த்துக் கட்டிய கல்லைத் தெப்பமாகக் கொண்டு கடல் கடந்த திருநாவுக்கரசு சுவாமிகள் பெருமையை இவ்வுலகத்தில் அறியாதார் உளரோ? மங்கலமான அடியார் வேடத்தோடு நின்று இப்படிப் பேசிய நீர் யாவர்'' என்று கேட்டார்.

குரு சுவாமிகளாகவும் உபாசனா மூர்த்தியாகவுங் கொண்ட திருநாவுக்கரசு நாயனாரிடத்தில் தாம் வைத்த முறுகித்தடித்த பத்தியினால் "திருப்பேரோ" என்றும் மற்றப் பேர்கள் ஒன்றும் அதற்குச் சமமாகமாட்டாவென்பது தோன்ற, "வேறொரு பேரென" என்றுங் கேட்டார். களவு, பொய், காமம், கோபம் முதலிய குற்றங்களைக் காய்ந்த அப்பூதியடிகள் தமது உடல் பொருள் ஆவி மூன்றையும் தங்குருவாகிய திருநாவுக்கரசு சுவாமிகளுக்கே கொடுத்திருக்க இவ்வடியார் "நும்பேரெழுதாது அவர் பேரை என் எழுதவேண்டும்" என்ற "வெம்மொழி" கேட்டதனால் கோபங்கொண்டார். தமது குருவின் திருநாமத்தை மேலாக மதியாமையினால் இப்படி வருந்தியவர், அக்குருவுக்கு மாறுபாடாகப் பேசினால் எப்படி வருந்துவார்?

திருநாவுக்கரசு சுவாமிகள் அப்பூதி நாயனாரின் பெருமையை யறிந்து, "பிறவித் துறையினின்று கரையேற இறைவர் திருவருளினால் சூலைநோயை அடைந்து அவரால் ஆட்கொள்ளப்பெற்ற தெருளும் உணர்வில்லாத சிறுமையேன் யான்" என்றார். அப்போது அப்பூதியடிகள் இரண்டு கைகளும் தலைமிசைக் குவிய, கண்களினின்றும் நீர்பொழிய, உடம்பெல்லாம் புளகாங்கிதம் கொள்ள நாயனாரது திருவடிகளில் விழுந்து வணங்கினார். திருநாவுக்கரசரும் அப்பூதியடிகளை எதிர்வணங்கி எடுத்தருள, செல்வத்தைப்பெற்ற தரித்திரர்போல அவருக்கு முன்னே ஆனந்தக்கூத்தாடி வலம்வந்து, களிப்பின் மேலீட்டினால் முன் அவருக்கு ஆசனம் கொடுத்து உபசரிக்கவேண்டியதை யறியாமல் வீட்டுக்குள் சென்று மனைவி, மக்கள், பந்துக்கள் எல்லோருக்கும் திருநாவுக்கரசு சுவாமிகள் வந்த செய்தியை யறிவித்து அவர்களைக் கொடுவந்து நாயனாரை வணங்கும்படி செய்தார்.

> மற்றவரை யெதிர்வணங்கி வாகீச ரெடுத்தருள
> வற்றவர்க ளருநிதியம் பெற்றார்போ லருமறையோர்
> முற்றவுளங் களிகூர முன்னின்று கூத்தாடி
> யுற்றவிருப் புடன்சூழ வோடினார் பாடினார்.
>
> மூண்டபெரு மகிழ்ச்சியினான் முன்செய்வ தறியாதே
> மீண்டமனை யகத்தெய்தி யில்லவர்க்கு மக்களுக்கும்
> ஆண்டவர செழுந்தருளு மோகையுரைத் தார்வமுறப்
> பூண்டபெருஞ் சுற்றமெலாங் கொடுமீளப் புறப்பட்டார்.

—பெரிய புராணம்.

தமது உபாசனா மூர்த்தியினுடைய திருநாமத்தைக் கேட்ட உடனே தலை யன்பும், கண்டபோது இடை யன்பும், திருவடிகளில் விழுந்து வணங்கின பரிசத்தினால் கடை யன்பும் அடைந்த அப்பூதி யடிகளின் நிலை கருதற்பாலது. இன்னது செய்வதென அறியாது, தமது குருசுவாமிகளுக்கு ஆசனங்கொடுத்து இருக்கச் செய்ய மெண்டும் என்ற முறைமைகளையும் மறந்து அவரை வெளியில் நிற்கவிட்டு ஆடிப்பாடிக் கூத்தாடினார். வீட்டினுள் சென்று தமது மனைவி மக்களைக் கொண்டு வந்து வணங்கச் செய்தார்.

பின்னர், சுவாமிகளை மாளிகைக்குள் அழைத்துக் கொண்டுபோய்ப் பாதபூசனை செய்து அப்பாத தீர்த்தத் தைத் தங்கள் சிரசின்மேல் தெளித்து, தேசமுய்ய வந்த வரை ஆசனத் தெழுந்தருளச்செய்து, விதிப்படி அர்ச்சனை செய்து திருவமுது செய்தருள வேண்டும் என்று விண் ணப்பம்செய்தார். சுவாமிகளும் அதற்கு இசைந்தருளினார். அப்பூதியடிகளும், அவர் மனைவியும் அறுவகைச் சுவை யுடன் திருவமுது சமைத்துப் புதல்வனாகிய மூத்த திருநாவுக் கரசை வாழையிலை கொண்டுவரும்படி அனுப்பினார்கள். பிள்ளை தோட்டத்துள் சென்று வாழைக் குருத்தரியும் போது சர்ப்பந் தீண்டிற்று. அதன் விடம் தலைக்கேறித் தான் கீழே விழுவதற்கு முன்னமே ஒடி வந்து தாயார் கையில் வாழைக்குருத்தைக் கொடுத்ததும் உயிர் துறந் தான். குறிகளினால் விடந் தீண்டியதெனத் தாய் தந்தையர் அறிந்து, தங்கள் குருசுவாமிகள் திருவமுது செய்வதற்கு இடையூறாய்விடும் என்ற மனவருத்தத்தோடு அவ்வுடலை வீட்டின் புறத்தில் மறைத்து வைத்துச் சுவாமிகளை "திரு வமுதுசெய்து குடி-முழு துய்யக் கொள்வீர்" என்று வணங்கினர்.

சுவாமிகள் திருவமுது செய்வதற்கு முன் ஆசனத்தி லிருந்து வெண்ணீறு சாத்தி அப்பூதியடிகளுக்கும், மனைவி யாருக்கும் விபூதி கொடுத்து, புதல்வர்களுக்குக் கொடுக்கும் போது அப்பூதியடிகளை நோக்கி மூத்த புதல்வன் எங்கே என்றார். அவன் இங்கே இப்போது உதவான் என்றார் அப்பூதியார். திருநாவுக்கரசுசுவாமிகள் அவ்வார்த்தையைக் கேட்டதும், சிவபெருமான் திருவருளினால் அப்புதல்வன்

உயிர்பெறவும், விபூதி தரிக்கவும் வேண்டும் என்ற கருத்து முற்றுப்பெறுதற்காக, அவர் திருவுள்ளத்தில் தடுமாற்றம் உண்டாக தமது ஞான உணர்வினால் உண்மையை உணர்ந்தும் அறியாதவர்போல் அவர்களைப் பார்த்து உண்மையை விரித்துச் சொல்லுங்கள் என்றார். தாய்தந்தையர் சுவாமிகள் கேட்கும்போது அஞ்சி உண்மையைச் சொல்வதே தக்கது என்று நடந்ததைக் கூறினர்.

> அப்பூதி யார்மறைத்தும் வாகீச ரக்கரவைத்
> துப்பா னறிந்தனரே சோமேசா—இப்புவியில்
> ஐயப் படாஅ தகத்த துணர்வானைத்
> தெய்வத்தோ டொப்பக் கொளல்

என்னும் முதுமொழி வெண்பாவும் இதனை விளக்கும்.

உடனே திருநாவுக்கரசு சுவாமிகள் "நீர் செய்தது போல் யாவர் இவ்வாறு செய்தார்" என்று சொல்லி அப்பிள்ளையின் உடம்பைத் திருக்கோயிலின் முன் கொணர்வித்து "ஒன்றுகொலாம்" என்னும் தேவாரத் திருப்பதிகத்தைப் பாடியருள அப்பிள்ளை நித்திரைவிட்டெழுந்தாற்போல எழுந்து சுவாமிகளை வணங்க, அவர் அப்பிள்ளைக்கு விபூதி கொடுத்தருளினர். பெற்றோர் மைந்தன் உயிர்பெற்று எழுந்ததுபற்றி மகிழாமல் சுவாமிகள் திருவமுது செய்தற்குத் தடையாயிருந்தமைபற்றி மனம் வருந்தியதைத் சுவாமிகள் அறிந்து அப்புதல்வன் முன் கொண்டு வந்த வாழையிலையைச் சுத்திசெய்து அவ்விலையில்தானே அமுது செய்தனர். திருவமுது செய்யும்போது அப்பூதியடிகளுநாயனார் அவர் புதல்வர்கள் மற்றைய அடியார்களையும் உடன் இருந்து அமுது செய்யும்படி செய்வித்தார்.

அப்பூதியடிகளுநாயனார் மறையவர் குலத்தில் தோன்றியவர். திருநாவுக்கரசு சுவாமிகள் தொன்மைவேளாண் குலத்தில் தோன்றியவர். இவ்விரு நாயன்மாரும் கூடி ஒரு பந்தியிலிருந்து திருவமுது செய்தனர். ஞானியாகிய அடியார் கூட்டத்தில் சாதிபேதம் இல்லை என்பது கவனிக்கத் தக்கது.

சுவாமிகள் சிலநாள் அங்குத் தங்கித் திருப்பழனஞ் சென்று சுவாமி தரிசனஞ்செய்து பதிகம் ஓதினர்.

அப்பதிகத்தில் அப்பூதியடிகளுயனுரைச் சிறப்பித்துப் பாடியருளினர்.

வஞ்சித்தென் வளைகவர்ந்தான் வாரானே யாயிடினும்
பஞ்சிக்காற் சிறகன்னம் பரந்தார்க்கும் பழனத்தான்
அஞ்சிப்போய்க் கலிமெலிய வழலோம்பு மப்பூதி
குஞ்சிப்பூ வாய்நின்ற சேவடியாய் கோடியையே. —தேவாரம்.

தமது பிள்ளை இறந்ததுபற்றித் துக்கப்படாது சுவாமிகள் திருவமுது செய்ய இடையூறு வந்ததுபற்றி மனம் வருந்திய அப்பூதியடிகள் தமது குரு சுவாமிகளிடத்தில் வைத்த அன்பின் திறம் எத்துணைத்தென அளவிடுதல் கூடுமோ?

" திருநாவுக்கரசு " என்னும் திருப்பெயரையே பெரிய மந்திரமாகக்கொண்டு அப்பூதியடிகளும் அவர் மனைவி மக்களும் அதனைச் சிந்தித்துச் சிவபெருமான் திருவடிகளைச் சேர்ந்தனர்.

உற்ற னலன்றவந் தீயினின் றனல வூண்புனலா
வற்ற னலனுகர் வுந்திரு நாவுக் கரசெனுமோர்
சொற்ற னெழுதியுங் கூறியு மேயென்றுந் துன்பில்பதம்
பெற்ற னொருநம்பி யப்பூதியென்னும் பெருந்தகையே.

---

# திருநீலநக்க நாயனர்

நீதிதரு மறையோர்வாழ் சாத்த மங்கை
நீலநக்க ரயவந்தி நிமலர் மேனி
பூதிவிழுஞ் சிலம்பிகடிந் தவளை நீத்தார்க்
குமியாத விடநாத னுறுநோய் காட்டக்
காதன்மிகு மனைவியையு மகிழ்ந்து மேவிக்
காழியர்கோ னமுதுசெயக் களித்து வாழ்ந்து
வேதிகையிற் பாணனர்க் கிடமு நல்கி
விளங்குபெரு மணத்தரனை மேவி னரே.

சோழநாட்டில் திருச்சாத்தமங்கை என்னும் சேத்திரத்தில் மறையோர் குல சிரேட்டராய்த் திருநீலநக்கநாயனர் அவதரித்தார். வேத விதிப்படி வைதிக பூசையோடு விசேட பூசைகளையும் நியமமாகச் செய்து சிவனடியார்

களுக்குத் திருவமுது செய்வித்ததோடு வேறு பல திருப் பணிகளும் செய்துவந்தார்.

மெய்த்த வாகம விதிவழி வேதகா ரணரை
நித்தல் பூசனை புரிந்தெழு நியமமுஞ் செய்தே
யத்த ரன்பருக் கமுதுசெய் விப்பது முதலா
வெத்திறத்தன பணிகளு மேற்றெதிர் செய்வார்.

—பெரிய புராணம்.

அரிய மானுடப்பிறவியை எடுத்ததன் பயன் சிவபெருமானை வழி பட்டு முத்தியடைதலாம். "இப்பிறவி தப்பினால் எப்பிறவி வாய்க் குமோ" என்றதை யறியாத நாம் இம்மனித உடம்புள்ளபோதே சிவபெருமானை மனத்தால் நினைத்தல், வாக்கினால் துதித்தல், கைகளி னால் பூசித்தல், கால்களினால் வலம் வருதல், தலையினால் வணங்குதல், செவிகளினால் சிவபெருமான் புகழையும் அடியார்கள் பெருமையை யும் கேட்டல், கண்களினால் தரிசித்தல் என்னும் இவைகளைச் செய்து முத்தியடைய வேண்டும்.

" கண்ணுதலா லயநோக்குங் கண்களே கண்கள்
கறைக்கண்டன் கோயில்புகுங் கால்களே கால்கள்
பெண்ணொருபா கனைப்பணியுந் தலைகளே தலைகள்
பிஞ்ஞகனைப் பூசிக்குங் கைகளே கைகள்
பண்ணவன்றன் சீர்பாடு நன்னாவே நன்னா
பரன்சரிதை யேகேட்கப் படுஞ்செவியே செவிகள்
அண்ணல்பொலங் கழல்நினைக்கு நெஞ்சமே நெஞ்சம்
அவனடிக்கீ ழடிமைபுகு மடிமையே யடிமை "

என்னும் பிரமோத்தர காண்டத்தால் இவ்வுண்மை அறியத்தக்கது.

இந் நாயனார் சிவபூசையை வேத விதிப்படி செய்து சிவனடியார் களைச் சிவமாகப் பாவித்துத் திருவமுது செய்வித்தல் முதலான பணி களும் செய்துவந்தார். அடியார் பூசை சிவபூசையிலும் பார்க்க மிகவும் விசேடமான புண்ணியம்.

அதிகநல்லற நிற்பதென் றறிந்தனை யறத்துள்
அதிகமாஞ் சிவபுண்ணியஞ் சிவார்ச்சனை யவற்றுள்
அதிகமாஞ் சிவபூசையு னடியவர் பூசை
யதிகமென் றறிந்தன்பரை யருச்சனை செய்வாய்.

என்பது திருவிளையாடற் புராணம்.

இவ்வரிய புண்ணியங்களைச் செய்து சிறப்புற்ற திரு நீலநக்க நாயனார் ஓர் திருவாதிரை நாளில் தாம் செய்யும்

பூசையை முடித்து அயவந்தி என்னும் திருக்கோயிலில் சிவபெருமானை அருச்சிக்க நினைந்து பூசைக்கு வேண்டியவைகளை மனைவியார் கொண்டுவர இறைவர் கோயிலை வந்தடைந்தார். அங்கு மனைவியாருடன் சிவலிங்கப்பெருமானை ஆகம விதிப்படி வழிபட்டு வலம் வந்து இறைவர் முன்பு வணங்கி ஐந்தெழுத்தோதிக் கொண்டிருந்தார். அப்போது ஒரு சிலந்திப்பூச்சி நிலையினின்று முன் வழுவிச் சிவலிங்கத் திருமேனியில் விழ, மனைவியார் அஞ்சிக் குழந்தைகளின் மேல் சிலந்தி விழுந்தால் விடம் நீங்கும்படி வாயினல் ஊதி வாய் நீரை உமிழ்வார்போல அன்பின் மிகுதியினல் சிலந்தி விழுந்த இடத்தில் வாயினல் ஊதித் திருமேனியில் உமிழ்ந்தார். அதுகண்ட மாதவ மறையவர் கண்ணை மூடிக்கொண்டு "பொறியிலாய்! இப்படியான காரியம் ஏன் செய்தாய்?" என்று கேட்டார். மனைவியார் "சிவபெருமானுடைய திருமேனியின்மேல் சிலந்தி விழுந்தமையால் கொப்புளங்கொள்ளாத வண்ணம் ஊதி உமிழ்ந்தேன்" என்றார். மனைவியாரது அன்பின் திறத்தை நாயனர் மனதில் கொள்ளாது "வேறு வழியாய்ச் சிலம்பியை விலக்காமல் வாய்நீர் படச்செய்தனை. ஆகையால், உன்னை யான் இனித் துறந்தேன். என்னை விட்டு நீங்குக" என்றார். கணவன் கட்டளையை மறுக்க அஞ்சிய மனைவியார் ஒருபால் ஒதுங்கியிருந்து வீட்டுக்குச் செல்லாமல் ஆலயத்தில் அன்றிரவைக் கழித்தார். நாயனர் பிராயச்சித்த பூசையினை முடித்து வீட்டுக்குப்போய் நித்திரை செய்தார். அப்போது நீர்மலி வேணியனும் இறைவன் கனவில் எழுந்தருளித் தமது திருமேனியைக் காட்டி "உன் மனைவி என் மாட்டுவைத்த அன்பினல் ஊதி உமிழ்ந்த இடத்தில் விடம் நீங்கியதையும், அவ்வாறு செய்யாத புறத்தில் கொப்புளமிருப்பதையும் காண்க" என்று கூறி மறைந்தருளினர்.

சிவலிங்கத் திருமேனியில் வாய் நீர் உமிழ்தல் அனுசிதம் என்பதைத் திருநீலநக்கர் மனைவியார் அறியாதவரல்லர். சிலந்தியைக் கண்டவுடனே மனப் பதைப்பினல் என்ன செய்யலாம் என்ன செய்யக்கூடாது என்பதை மறந்து அன்பின் பெருக்கத்தினல் செய்தனர் என்பதைத் தெளிந்துகொள்ளாத திருநீலநக்கநாயனர் தாம்

வேத விதிப்படி செய்யும் பூசைக்கு அனுசிதமான செய்கை என்று தம் மனைவியை நீக்கிவைத்தார்.

அன்பானது ஒருவரால் எளிதில் காணக்கூடியதன்று; அதனால் உண்டாகும் செயல்களால் அறியத்தக்கது. முறுகித்தடித்த பத்தியினால் செய்யும் குற்றமும் நன்மையாய் முடியுமன்றித் தீமையாகாது. கண்ணப்ப நாயனார் செய்த பூசையை அனுசிதம் என்று எண்ணிய சிவகோசரியாருக்குச் சிவபெருமான் கனவில் தோன்றி "ஒரு முனிவன் செவியுமிழு முயர்கங்கை முதறீர்த்தப்—பொருபுனலி னெனக் கவன்றன் வாயுமிழும் புனல்புனிதம்" என்று கூறி அச்சிவகோசரியார் காணத் தமது கண்ணில் உதிரம் பெருகச்செய்து கண்ணப்பர் அன்பின் சிறப்பை விளக்கினர். அவ்வண்ணமே திருநீலநக்க நாயனாருக்கும் கனவில் தோன்றி "உன் மனைவி அன்பின் மேலீட்டினால் வாய்நீருமிழ்ந்தார்" என்று கூறி, அவருமிழ்ந்திடாத மற்றைய இடத்தில் கொப்புளமிருப்பதைக் காட்டியருளினார். இதனால் இவ்வம்மையார் சிவபெருமானிடம் வைத்திருந்த அன்பு எத்துணையதென்பது தெளியப்படும். தனது கணவன் சொல்லைத் தட்டாது அன்று இராமுழுதும் வீட்டுக்குச் செல்லாது திருக்கோயிலில் இருந்த அவ்வம்மையாரின் இல்லற தர்மம் எவ்வளவு மாண்புடையது.

திருநீலநக்க நாயனார் விழித்தெழுந்து தொழுதார்; ஆடினார்; பாடினார்; திருவருளின் திறத்தைப்போற்றி நின்று அழுதார். விடியுமுன் கோயிலுக்குச் சென்று சுவாமியை வணங்கி மனைவியையும் அழைத்துக்கொண்டு வீடுசேர்ந்து மேலும் அதிக சிரத்தையோடு சிவ பூசையும் அடியார் பூசையும் செய்துவந்தார். அப்படி ஒழுகிவரும் நாளில் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் மகிமையைக் கேள்வியுற்று அவரை வணங்கும் விருப்புடனிருந்தார். அந்நாளில் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் அடியார் கூட்டத்தோடு சாத்தமங்கைக்கு எழுந்தருளி வந்தார். அதுகேட்ட திருநீலநக்கர் மனமகிழ்ந்து நடைப்பந்தலிட்டு வாழை கமுகுமரங்கள் நாட்டித் தோரணங்கள் தூக்கித் தமது சுற்றத்தாரோடு எதிர்கொண்டு வணங்கிப் பிள்ளையாரையும் அடியார்களையும் தமது மாளிகைக்கு அழைத்துக் கொண்டுபோய்த் திருவமுது செய்வித்தார். அன்றிரவு திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளும், திருநீலகண்டப் பெரும்பாணரும், விறலியாரும், மற்றும் அடியார் கூட்டமும் அங்குத் தங்கினர். மறுநாட் காலையில் பிள்ளையார்

தாம் பாடிய திருப்பதிகத்தில் திருநீலநக்க நாயனாரைச் சிறப்பித்துப் பாடினர். சிலநாட் சென்றபின் செந்தமிழ்ப் பழமறை மொழிந்த பிள்ளையார் திருநீலநக்க நாயனாருக்கு விடைகொடுத்து மற்றைய தலங்களை வணங்கப் புறப்பட்டார். திருநீலநக்க நாயனார் பிள்ளையார் திருவடிகளை மறவாது தாம் செய்யும் திருத்தொண்டினில் முதன்மையுடையவராய்த் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளின் திருப்பெருமணத்தைச் சேவித்து இறைவன் திருவடி சேர்ந்தார்.

---

# நமிநந்தியடிகணாயனார்

நண்ணுபுகழ் மறையோர்வா ழேமப் பேறார்
நமிநந்தி யடிகடிரு விளக்கு நல்க
வெண்ணெயமணர்கள்விலக்க நீரா லாரு
ரிலங்குமா னெறி யாருக் கேற்று நாளிற்
கண்ணமணர் கெடக்கண்பெற் றடிகள் வாழக்
காவலனு னிபந்தங்கள் கட்டு வித்தே
யண்ணலருள் கண்டாரு ரமர்ந்து தொண்டர்க்
காணியெனு மரசினரு ளடைந்து ளாரே.

நமிநந்தியடிகணாயனார் சோழ நாட்டிலுள்ள ஏமப்பேறாரில் சைவநெறி யொருமை வழுவா அந்தணர் குலத்தில் பிறந்தார். சிவன்மாட்டு அன்பு பூண்டு திருவாரூருக்கு நாள்தோறுஞ் சென்று வன்மீகத் தியாகராச மூர்த்தியை வணங்கி வந்தார். ஒரு நாள் அத்திருக்கோயிலில் புரியும் பல திருத்தொண்டுகளைச் செய்து வணங்கி, பக்கத்திலுள்ள அரநெறி என்னும் ஆலயத்துக்குள் புகுந்து அரநெறியப்பரை வணங்கி, அத்திருக்கோயிலில் தீபங் குறைவாய் இருந்தமையால் அநேக தீபங்களையேற்ற விரும்பி அருகிலிருந்த வீடு சேர்ந்து நெய் கேட்டார். அந்த வீட்டில் உள்ளோர் சமண சமயத்தவராகையால் அவரை நோக்கி "உங்கள் கடவுள் கரத்தில் அக்கினியுண்டாதலால் விளக்கு வேண்டியதில்லை. வேண்டுமாயின் குளத்து நீரை விட்

டெரியும்" என்றார்கள். அதுகேட்ட நாயனார் மனம் வருந்திச் சுவாமி சந்நிதியில் வந்து வணங்கி நிற்க, சிவபெருமான் திருவருளால் "உன் மனக்கவலையை ஒழித்துப் பக்கத்திலுள்ள குளத்து நீரைக் கொண்டுவந்து விளக்கேற்றுவாய்" என்ற அசரீரிவாக்கு எழுந்தது. அதைக்கேட்டதும் நாயனார் சிந்தை மகிழ்ந்து திருவருளை வியந்து குளத்து நீரை முகந்து வந்து திருக்கோயில் எங்கும் நீரால் விளக்கேற்றினார். விளக்குகள் சுடர்விட்டெரிந்தன. சமணர்கள் எதிரே நாடு அறிய திருவிளக்கு நீரால் எரித்தார். மறுநாள் பகற் காலம் வரும்வரையும் நின்றெரியக் குறையும் தகழிகளுக் கெல்லாம் நீர் வார்த்து அவ்விரவில்தானே தமது மனைக் குச் சென்று பூசையை முடித்துத் திருவமுது செய்து நித்திரை போனார்.

மேவு மாலய மலகிடன் மெழுகல்
விளங்க நல்விளக் கிடுதலெம் மடியார்க்
கேவ லானவை செய்தலிச் சரியை
யியற்ற வல்லவர்க் கெம்முல களிப்போம்

என்பது திருவாதவூரடிகள் புராணம்.

'விளக்கினாற் பெற்றவின்ப மெழுக்கினாற் பதிற்றியாகும்" என்றபடி விளக்கிடுதல் பெரும் புண்ணியமாகும்.

பத்தியினால் சிறந்த இந்நாயனார் தியாகராசப் பெருமானுக்குத் திருவாரூரில் பல திருப்பணிகளையும் செய்து வரும் நாளில் சமணர் கலக்கம் விளைந்து அழிந்தது. திருவாரூர்ப் பெருமை நிலவியது. நீதி வழுவாது அரசு செலுத்தும் வளவர்கோன் நமிநந்தியடிகளைத் தலைமைப் பூசகராக வைத்து வன்மீகத் தியாகராச மூர்த்திக்கு வேண்டும் பல நிபந்தங்களையும் வேதாகம நூல் விதி விளங்க அமைத்தான். நாயனார் பங்குனி உத்திரத் திருநாளில் தியாகராச மூர்த்திக்கு விசேடமான திருவிழா நடத்தினார். நடத்தும்போது ஒரு நாள் சுவாமி திருமணலிக்கு எழுந்தருள, எல்லாக் குலத்தினரும் ஒருங்குசேர்ந்து செல்ல, நாயனாரும் சுவாமியைச் சேவித்துச் சென்று களிப்புற்றார். பொழுது செல்லச் சுவாமி மீண்டும் கோயில்

புக, நாயனூர் தமது ஊர் வந்து தூய இல்லம் புகாது புறக் கடையில் துயிலும்போது அவர் மனைவியார் கண்டு "உள்ளே வந்து பூசனைகளையும் அக்கினி காரியங்களையும் முடித்துப் பள்ளிகொள்வீர்" என்றூர். அப்போது நாயனூர், சுவாமி திருமணலிக்கு எழுந்தருளியபோது, தாமும் போய்ப் பல்சாதியாரோடும் கலந்து சேவித்து வந்தபடியால் தீட்டுடையது என்று உள்ளே நுழையாது நீராடிச் சுத்தி செய்து வீட்டினுள் செல்லத் தண்ணீர் கொண்டுவரும்படி தாதன் மனைவிக்குக் கற்பித்தார். மனைவியார் தண்ணீர் கொண்டுவரச் சென்றனர். அப்போது நாயனூர் வெளியில் துயின்றனர். தூங்கும்போது சிவபெருமான் சொப்பனத் தில் எழுந்தருளி வந்து "திருவாரூரில் வாழ்வா ரெல்லா ரும் சிவகணங்கள். அதை நீ காண்பாயாக" என்று சொல்லி மறைந்தனர். தாம் தீட்டென்று நினைத்தது குற்றம் என்றஞ்சி வீட்டுக்குள் நுழைந்து பூசையை முடித்தார். தமது மனைவியாருக்கும் திருவருளின் திறத்தைச் சொல்லி மறுநாள் திருவாரூருக்குச் சென்றூர். அங்குள்ளார் யாவ ரும் சிவகணங்களாய்த் தோன்றத் தரிசித்துக் களிப்படைந் தார். அவர்கள் அவ்வுருவம் நீங்கி முன்போல் இருந்தனர். தாம் குற்றமென எண்ணியதைப் பொறுத்தருளவேண்டும் எனச் சிவபெருமானை வணங்கி அன்று முதல் அத்தலத்தி லேயே வாழ்ந்து திருத்தொண்டுகளைச் செய்தார். அவர் திருத்தொண்டின் பெருமையைக் குறித்துத் திருநாவுக்கரசு சுவாமிகள் தொண்டர்களுக்கு "ஆணிப் பொன்" என்று தேவாரத்தில் பாடியருளினர்.

> ஆராய்ந் தடித்தொண்ட ராணிப்பொ னூரு ரகத்தடக்கிப்
> பாரூர் பரிப்பத்தம் பங்குனி யுத்திரம் பாற்படுத்தான்
> ஆரூர் நறுமலர் நாத னடித்தொண்ட னம்பிநந்தி
> நீராற் றிருவிளக் கிட்டமை நீணு டறியுமன்றே.

பேரன்புடன் சிவத்தொண்டும் அடியார் தொண்டும் விடாது செய்து வன்மீகத் தியாகராசமூர்த்தியின் திருவடிநிழலைச் சேர்ந்தார்.

கந்தபுராணத்தில் நாட்டுச் சிறப்புக் கூறுமிடத்து,

"பாட்டிய லளிமுரல் பதுமக் கோயிலி
னூட்டிய நிமலன்மு னந்தி நீரிடை
மாட்டிய பல்பெருஞ் சுடரை மானுமாற்
கோட்டுயர் தடந்தொறுங் குவளை பூத்தவே"

என்னுஞ் செய்யுளில் குளங்களில் செங்கழுநீர்ப்பூக்கள் மலர்ந்து விளங்கின என்பதற்கு நமிநந்தியடிகள் நீராலேற்றிய விளக்குகளை உவமானமாக எடுத்து உரைத்தமை காண்க. திருவாரூரிலுள்ளோ ரெல்லோரும் சிவகணங்களேயாம் என்பதைத் "திருவாரூர்ப் பிறந் தார்க ளெல்லார்க்கு மடியேன்" என்னும் திருத்தொண்டத்தொகை யினடியால் அறியலாம்.

---

# திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர்

சீழிநகர்ச் சிவபாத விதயர் தந்த
கவுணியர்கோ னமுதுமையாள் கருதி யூட்டு
மேழிசையி னமுதுண்டு தாளம் வாங்கி
யிலங்கியமித் திலச்சிவிகை யிசைய வேறி
வாழுமுய லகனகற்றிப் பந்த ரேய்ந்து
வளர்கிழிபெற் றரவின்விட மருகற் றீர்த்து
வீழிநகர்க் காசெய்தி மறைக்கதவம் பிணித்து
மீனவன்மே னியின்வெப்பு விடுவித் தாரே.

ஆரெரியிட் டெடுத்தவே டவைமுன் னேற்றி
யாற்றிவிடு மேடெதிர்போ யணைய வேற்றி
யோரமண ரொழியாமே கழுவி லேற்றி
யோதுதிருப் பதிகத்தா லோட மேற்றிக்
காருதவு மிடிபுத்தன் றலையி லேற்றிக்
காயாத பனையின்முது கனிக ளேற்றி
யீரமிலா வங்கமுயி ரெய்த வேற்றி
யிலங்குபெரு மணத்தரனை யெய்தி னரே.

---

வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்கப்
பூதபரம் பரைபொலியப் புனிதவாய் மலர்ந்தழுத
சீதவள வயற்புகலித் திருஞான சம்பந்தர்
பாதமலர் தலைக்கொண்டு திருத்தொண்டு பரவுவாம்

—பெரியபுராணம்.

கப்பல் செல்லும் கடல் மார்க்கம் செப்பமாய் இருந்தாலன்றி அது துறைமுகத்தைச் சேரமாட்டாது. உயிர்கள் கடவுளை அடைதற்கு வேதம் வழியும், சைவசித்தாந்தம் அவ்வழியின் முடிவாயுள்ள துறையுமாம். வேதநெறியைத் தழுவி நிற்கும் உயிர்கள் போக போக்கியங்களை விரும்பி இடையில் தடைபட்டு நிற்கும். சைவநெறி இடையில் உயிர்களை தடைபட்டு நிற்கவிடாது சிவபெருமானது திருவடி நிழலை அடையச் செய்யும். அதுபற்றியே "வேதநெறி தழைத்தோங்க" என்றும் "மிகுசைவத் துறைவிளங்க" என்றும் எடுத்தார் சேக்கிழார் பெருமான்.

சீர்காழியில் கவுணியர் கோத்திரத்தில் அந்தணர் தலைவரான சிவபாதவிருதயர் என்பவரும், கற்பிற் சிறந்த பகவதியார் என்னும் அவர் மனைவியாரும் பரம்பரையாகச் சைவநெறி யொழுகும் மரபினராக விளங்கினர். அக்காலத்தில் தமிழ்நாட்டில் சமண சமயமும் புத்த சமயமும் பரவியிருந்தன. சைவநெறி நிலைகுன்றியதைக் கண்டு சிவபாதவிருதயர் கவலையுற்றார். சமணம் புத்த சமயங்களை நீக்கிச் சைவசித்தாந்த மார்க்கத்தை நிலைநிறுத்தவல்ல அரும்புதல்வனை விரும்பித் தமது மனைவியாருடன் திருத்தோணிபுரத்தில் வீற்றிருக்கும் சிவபெருமானையும் உமையம்மையாரையும் வழிபட்டு அருந்தவஞ் செய்தனர். அவர்கள் எண்ணம் நிறைவேறவும் உலகம் உய்யவும் பகவதியார் கர்ப்பவதியானார். ஐயிரண்டு திங்களில் வேண்டிய சடங்குகளைச் செய்து இன்பம் நுகர்ந்தார். பத்தாம்மாதம் அருக்கன் முதலிய கோள்கள் உச்சநிலையில் நிற்க * திருவாதிரைப் பெருநாளில் சிவனடியார்கள் களிப்படையவும், சைவசித்தாந்த மார்க்கம் எங்கும் ஓங்கவும், செந்தமிழ் மொழியில் வேதம் நிறைந்து விளங்கவும், யாக காரியங்கள் விருத்தியடையவும், சமணம் புத்தம் முதலிய புறச்சமயங்கள் ஒழியவும், சரம் அசரமாகிய ஆன்மாக்கள் மலங்களினின்று நீங்கிச் சிவஞானம் பெற்றுய்யவும் திருஞானசம்பந்தப் பிள்ளையார் திருவவதாரஞ் செய்தார்.

பிள்ளையார் திருவவதாரஞ் செய்தபோது சீர்காழியில் உள்ளோர் எல்லாம் பெரிதும் களிப்படைந்தார்கள்.

* சிவபெருமானது திருநாளும் திருவாதிரையே. "ஆதிரையினான் தாம்" (அப்பர் தேவாரம்).

வானவர் பூமாரி பொழிந்தனர். சீர்காழித் திருவீதிக ளெல்லாம் வாத்தியங்கள் ஒலித்தன. அருந் தவத்தினால் பெற்றெடுத்த இக்குழந்தைக்குப் பத்து நாளும் வேண்டிய சடங்குகளைப் பெற்றோர் செய்தனர். சிவனடியார்களுக்குத் திருவமுது அளித்தும் வறியார்க்குப் பொருளீந்தும் பல தர்மங்கள் புரிந்தனர்.

ஆளுடைய பிள்ளையார் குழந்தைப் பருவத்தில் செய்த செயற்கரிய செயல்கள் எல்லோருக்கும் வியப்பையும், மன மகிழ்ச்சியையும் கொடுத்தன. "பண்டு திருவடி மறவாப் பான்மையோர்" என்றபடி, பிள்ளையார் தமது ஆன்ம முதல்வரான சிவபெருமானைப் பிரிந்திருக்கும் உணர்ச்சி தோன்றும்போதெல்லாம் அழுதார். ஆளுடைய பிள்ளை யாருக்கு மூன்று வயதானபோது ஒரு நாள் சிவபாதவிரு தயர் நீராடப்போனார்.

அப்போது பிள்ளையாரும் தம் பெருமான் அருள் கூட அவர் பின் சென்றார். தந்தையார் அவரை வராமல் தடுக்க வும் அவர் கேளாது அவருடன் செல்வதற்கு அழுதார். அழுதபடி நின்ற பிள்ளையாரைச் சிவபாத விருதயர் அழைத் துச்சென்றார். பிள்ளையாரைத் தீர்த்தக் கரையிலிருத்தித் தனிமையாய் விட்டுப்போகின்ற குழந்தையைச் சிவபிரானே காத்தருளக் கடவரென்று வேண்டிக்கொண்டு சிவபாத விருதயர் நீரில் மூழ்கி அகமருடண மந்திரஞ் செபித்தெழு வதற்குமுன் பிள்ளையார் தாம் முன் சிவபெருமானை உபாசனை செய்த உணர்வு தோன்ற, அதை நினைந்து ஆன் மாக்களிற் கொண்ட கருணை மேலீட்டினால் தோணியப்பர் வீற்றிருக்கும் கோயிலின் சிகரத்தை நோக்கி "அம்மே! அப்பா!" எனக் கண்ணீர் விட்டழுதார். சிவபெருமான் பிள்ளையார் முன் செய்த திருத்தொண்டினை நினைந்து அவ ருக்குத் திருவருள் செய்யத் திருவுளங்கொண்டு இடபவாக னத்தில் உமையம்மையாரோடு எழுந்தருளி வந்து அழு கின்ற பிள்ளையாருக்குத் திருமுலைப்பால் கறந்து ஊட்டும் படி உமாதேவியாருக்கு அருள் புரிந்தார். அம்மை யார் திருமுலைப் பாலுடன் சிவஞானமாகிய அமுதமுங்கலந்

தூட்டிக் கண்ணீர் துடைத்துக் கையில் பொற்கிண்ணங் கொடுத்துப் பிள்ளையாரை அழுகை தீர்த்தருளினார்.

சகல ஆன்மாக்களுக்கும் தந்தை தாயரான சிவமும் சத்தியும் பிள்ளையாருக்கு இங்ஙனம் ஞானங் கொடுத்தாண்டருளினர். அதனால் அவர் "ஆளுடைய பிள்ளையார்" என்னும் பெயரும், அகில தேவர்க்கும் முனிவர்க்கும் தெரிவரிய சிவஞானத்தோடு சம்பந்தப் பட்டமையால் "திருஞானசம்பந்தர்" என்னும் நாமமும் பெற்றார். திருவருட் சத்தியின் ஞானப்பால் உண்டதனால் கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டை என்னும் ஞானங்களையும் அந்நிலையில் அடைந்தருளினார்.

சிவனடியே சிந்திக்குந் திருப்பெருகு சிவஞானம்
பவமதனை யறமாற்றும் பாங்கினிலோங் கியஞானம்
உவமையிலாக் கலைஞான முணர்வரிய மெய்ஞ்ஞானந்
தவமுதல்வர் சம்பந்தர் தாமுணர்ந்தா ரந்நிலையில்.

—பெரியபுராணம்.

நீராடிச் சந்தியாவந்தனம் முதலிய நியமங்களை விரைவாக முடித்துக் கரையேறிய சிவபாத விருதயர் பிள்ளையார் வாயில் பால் வடிந்து எச்சிலடையாளம் இருக்கக்கண்டு "யார் கொடுத்த பாலடிசிலை நீ யுண்டாய்?" என்று கையில் ஒரு சிறுகோலை எடுத்துப் பயமுறுத்தினார். அப்போது பிள்ளையார் "எம்மை இது செய்தபிரான் இவனன்றே" என்று ஆகாயத்தில் பெருங் கருணையுடன் எழுந்தருளிய சிவபெருமானை உச்சியின்மேல் எடுத்த ஒரு திருக்கை விரலால் சுட்டிக்காட்டித் தமது திருவுள்ளத்திலிருந்து எழுந்த ஞானத் திருமொழியால் "தோடுடைய செவியன்" என்னும் தேவாரத் திருப்பதிகம் பாடியருளினார்.

எல்லையிலா மறைமுதன்மெய் யுடனெடுத்த வெழுதுமறை
மல்லனெடுந் தமிழாலிம் மாநிலத்தோர்க் குரைசிறப்பப்
பல்லுயிருங் களிகூரத் தம்பாடல் பரமர்பாற்
செல்லுமுறை பெறுவதற்குத் திருச்செவியைச் சிறப்பித்து.

செம்மைபெற வெடுத்ததிருத் தோடுடைய செவியனெனு
மெய்ம்மைமொழித் திருப்பதிகம் பிரமபுர மேவினார்

தம்மையுடை யாளங்க ளுடன்சாற்றித் தாதையார்க்
கெம்மையிது செய்தபிரா னிவனன்றே யெனவிசைத்தார்.

—பெரியபுராணம்.

தமக்குப் பால் கொடுத்ததோடு சிவஞானமுங் கொடுத்து மலங்களை நீக்கிச் சிவ சொரூபமாக்கினர் என்பது தோன்ற "எம்மையிது செய்தபிரான்" என்றார். பிள்ளையார் மதுரையில் இருக்கும் நாளில் திருத்தோணியப்பரை நினைந்து பாடிய "மண்ணினல்ல வண்ணம்" என்னும் பதிகத்தில் இரண்டாம் திருப்பாட்டில் தமக்குச் சிவஞானப் பால் கொடுத்தருளியதை சிறப்பித்துப் பாடியருளியதும் நோக்கற்பாலது.

" போதையார் பொற்கிண்ணத் தடிசில் பொல்லாதெனத்
தாதையார் முனிவுறத் தானெனை யாண்டவன்
காதையார் குழையினன் கழுமல வளநகர்ப்
பேதையா ளவளொடும் பெருந்தகை யிருந்ததே" —தேவாரம்.

"மானினேர்விழி மாதராய்" எனத் தொடங்கும் மதுரைப் பதிகத்தில்,

"பானல்வா யொருபால னீங்கிவனென்று நீபரி வெய்திடேல்"

என்பதும் ஓர் அகச்சான்றாகும்.

முற்பிறப்பில் சரியை, கிரியை, யோகம் முடித்துத் திருவருளைப் பெற்றவர்கள் இப்பிறப்பில் இளம் பருவத்தில் திருவருளைப் பெறுவர். சண்டேசுர நாயனார் இளமையில் திருவருளைப் பெற்றார். "அம்மே! அப்பா!" என்று பிள்ளையார் அழுதபோது இறைவர் பார்வதி சமேதராய் விடையின்மேல் எழுந்தருளிவந்தது முன் சென்மத்தில் பற்றிக்கொண்ட திருவருளேயாம். சிவஞானப்பால் உண்டபடியால் சேக்கிழார் பெருமான் பிள்ளையாரைச் சிவபெருமான் திருமகனாரென்று எடுத்துப் புகழ்ந்து பாடினர்.

பாடினர்மூ வாண்டினிற் சம்பந்தரென யாவோருஞ்
சூடுமகிழ்ச்சி மெய்யே சோமேசா—நாடியிடில்
தம்மிற்றம் மக்களறி வுடைமை மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லா மினிது.

என்பது முதுமொழி வெண்பா.

ஒப்பற்ற வேதத்தின் முதலாகிய "ஓம்" என்னும் பிரணவத்தைத் தகரமெய்யோடு சேர்த்துத் தொடங்கி உலகம் உய்யும் வண்ணம் தமது பாடல் சிவபெருமானது திருச்செவியிலேற, முன்னர்த் திருச்செவியைச் சிறப்பித்

துப் பிள்ளையார் பாடினர். பிழைகளைச் செய்வோர் மீண்டும் சிவபெருமானைச் சரணமென்றடைந்தால் அவர் பெருங் கருணையினால் அவர்களைப் பொறுத்து அருள்புரிவர். செருக்கினால் தம்மை மதியாத இராவணன் இசைபாட அவனுக்கு அருள் புரிந்ததை எட்டாம் பாசுரத்திலும், எத்துணைச் சிறப்புடையராயினும் தம்மை அன்போடு வழிபடினன்றி *அனுக்கிரகம் பெறமாட்டார் என்பதை விளக்கும் பொருட்டுப் பிரமாவும் விட்டுணுவும் மயக்கத்தினால் அடைந்த குற்றத்தினின்று அஞ்செழுத்தைச்செபித்து நீங்கினர் என்பதை ஒன்பதாம் பாசுரத்திலும், சைவ சித்தாந்த சமயம் ஒழிந்த புறச்சமயங்களாகிய சமணம் புத்த மதங்கள் கீழான புன்சமயங்கள் என்பதைப் பத்தாந்திருப்பாட்டிலும் வைத்தருளிச் செய்து பதினோராம் திருப்பாடலைத் திருக்கடைக்காப்பாக அமைத்துப் பாடினர்.

திருப்பிரமபுரம் - பண் - நட்டபாடை

தோடுடைய செவியன் விடையேறியோர் தூவெண் மதிசூடிக்
காடுடைய சுடலைப் பொடி பூசியென் னுள்ளங் கவர்கள்வ
னேடுடைய மலரான் முனை நாட்பணிந் தேத்த வருள்செய்த
பீடுடைய பிரமாபுர மேவிய பெம்மா னிவனன்றே.

அருநெறிய மறை வல்ல முனியகன் பொய்கை யலர்மேய
பெருநெறிய பிரமாபுர மேவிய பெம்மா னிவன்றன்னை
ஒருநெறிய மனம் வைத்துணர் ஞானசம் பந்த னுரைசெய்த
திருநெறிய தமிழ் வல்லவர் தொல்வினை தீர்த லெளிதாமே.

பிள்ளையார் இப்பதிகம் பாடி எதிரே தொழுது நிற்கும் போது தேவர்கள் எல்லோரும் பூமாரி பொழிந்தார்கள். ஆகாயத்தில் மங்கல ஓசையும் கந்தருவர் கின்னரர் கான ஒலிக்கடல் முழக்கமும் இந்திரன் முதலிய தேவர்கள் ஏத்தித் துதி கூறும் முழக்கமும் அளவில்லாத கணநாதர் "அரகர" என்னும் ஓசையில் அடங்கின. தமக்குச் சிவஞானப்பாலை ஊட்டிய அம்மையும் அப்பனும் திருத் தோணியை அடைந்தனர். அது கண்ட பிள்ளையாரும் திருக்கோயிலுள் சென்றார். சிவபாதவிருதயர் கையில் எடுத்த சிறு கோல் தம்மையறியாது கீழேவிழக் கை

குவித்து ஆனந்தக் கூத்தாடிப் பிள்ளையார் அருளிச்செய்த தேவாரப் பதிகத்தின் பொருளை யுணர்ந்தார். திருவருளை வியந்து தம் புதல்வர் பின் சென்றார். அந்தணர்களும் அடியார்களும் சரீரம் புளகங்கொண்டு இதனினும் அற்புதம் உண்டோ என வியந்து திருக்கோயில் வாசலிற் கூடினர். பிள்ளையார் சிவபெருமான் தம்மை யடிமை கொண்ட திருவருட்டிறத்தை எடுத்து அவர்கட்குரைத்தார். சிவஞானப் பால்மணம் கமழும் பிள்ளையார் திருக்கோயிலி னின்றும் புறப்பட்டார். அப்போது சீர்காழிப் பதியி லுள்ள எல்லோரும் அங்கு வந்து கூடி அவர் திருவருள் பெற்ற சிறப்பை வியந்து துதித்தனர்.

> காழியர் தவமே கவுணியர் தனமே கலைஞானத்
> தாழிய கடலே யதனிடை யமுதே யடியார்முன்
> வாழிய வந்திம் மண்மிசை வானோர் தனிநாத
> னேழிசை மொழியா டன்திரு வருள்பெற் றனையென்பார்.
>
> மறைவளர் திருவே வைதிக நிலையே வளர்ஞானப்
> பொறையணி முகிலே புகலியர் புகலே பொருபொன்னித்
> துறைபெறு மணியே சுருதியி னொளியே வெளியேவந்
> திறையவ னுமையா ளுடனரு டரவெய் தினையென்பார்.
>
> புண்ணிய முதலே புனைமணி யரைஞா ணொடுபோதுங்
> கண்ணிறை கதிரே கலைவளர் மதியே கவின்மேவும்
> பண்ணியல் கதியே பருவம தொருமூ வருடத்தே
> யெண்ணிய பொருளாய் நின்றவ ரருள்பெற் றனையென்பார்.
>
> —பெரிய புராணம்.

பிள்ளையார் திருக்கோயிலினின்று தமது மாளிகைக் குச் செல்லுகையில் அந்தணர்களும் மற்றையோரும் பிள்ளையாருடைய திருவடிகளைத் தங்கள் சிரசில் சூட்டி மகிழ்ந்தனர். சிவபாத விருதயர் பிள்ளையாரைத் தமது தோளின்மேல் ஏற்றிக்கொண்டு மனமகிழ்ச்சியோடு சென்றார். செல்லும்போது எல்லோரும் தங்கள் மேலாடைகளை ஆகாயத்தில் வீசி ஆரவாரம் செய்தனர். அப்பதியிலுள்ள பெண்கள் தங்கள் வீடுகளின் மேல்மாடிகளிலிருந்து பிள்ளையாரை வாழ்த்தி மலர் பொரி சாந்து ஆகியவைகளைத் தூவி நின்றனர். மங்கல வாத்தியங்களுடன் மறையோர்

வேதமோதப் பிள்ளையார் மாளிகை புகுந்தனர். பிள்ளையார் மறுநாள் காலையில் திருத்தோணியப்பரையும் அம்மையாரையும் வணங்கி விடை பெற்றுக்கொண்டு திருக்கோலக்கா என்னும் தலத்துக்கு எழுந்தருளிக் கைகளையொத்தித் தேவாரப்பதிகம் பாடும்போது, இறைவர் திருவருளினால் அஞ்செழுத்து எழுதப்பெற்ற செம்பொற்றாளம் வையமெலாம் உய்ய மறைச்சிறுவர் திருக்கரத்தே வந்திருந்தது. பிள்ளையார் அதுகண்டு தமது திருமுடிமேற்கொண்டு வணங்கி மனங்களிப்ப ஏழு இசையும் தழைத்தோங்க திருப்பதிகம் பாடித் திருக்கடைக் காப்புச் சாத்தினார்.

திருக்கோலக்கா—பண் தக்கராகம்

மடையில் வாளை பாய மாதரார்
குடையும் பொய்கைக் கோலக் காவுளான்
சடையும் பிறையுஞ் சாம்பற் பூச்சுங்கீழ்
உடையுங் கொண்ட வுருவ மென்கொலோ.

நலங்கொள் காழி ஞான சம்பந்தன்
குலங்கொள் கோலக் காவு ளானையே
வலங்கொள் பாடல் வல்ல வாய்மையார்
உலங்கொள் வினைபோ யோங்கி வாழ்வரே.

பிள்ளையார் திருக்கரங்களில் வலியுண்டாகாதவண்ணம் இறைவர் பொற்றாளங்களைக் கொடுத்தருளினார். சிவஞானிகளுக்குத் தேவையானவைகளைச் சிவபெருமான் அவர்கள் வேண்டாது கொடுத்தருளுவர். பிள்ளையார் தாளத்தை விரும்பினாரல்லர். இக்காலத்தில் கடவுள் தாளத்தை எங்கே பெற்றார் என்று கேட்பாருமுளர். இறைவன் திருவடிகளால் எப்பொருளும் உடனே தோற்றவும் மறையவுங் கூடும்.

நாளு மின்னிசை யாற்றமிழ் பரப்பு
ஞான சம்பந்த னுக்குல கவர்முன்
தாள மீந்தவன் பாட லுக் கிரங்குந்
தன்மை யாளனை யென்மனக் கருத்தை
ஆளும் பூதங்கள் பாடநின் றாடுமங்க
ணன்றனை யெண்கண மிறைஞ்சுங்
கோளி லிப்பெருங் கோயிலுள் ளானைக்
கோலக் காவினிற் கண்டுகொண் டேனே.

என்னும் சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரம் பிள்ளையார் தாளம் பெற்றதற்குச் சான்றாகும்.

அங்கிருந்து திரும்பிச் சீர்காழிக்கு வந்து சிவபெருமானை வணங்கிப் "பூவார் கொன்றை" என்னும் திருப்பதிகம் பாடித் தமது மாளிகையில் தங்கியிருந்தார். பிள்ளையாரைப் பெற்றெடுத்த தாயாரான பகவதியாருடைய பிறப்பிடமாகிய திருநனிபள்ளியிலும் மற்ற அயல் நாடுகளிலுமுள்ள அந்தணர்களும் தொண்டர்களும் பிள்ளையார் திருவருள் பெற்றதை யறிந்து சீர்காழிக்கு மங்களகரமாய் வந்து பிள்ளையார் திருவடிகளை வணங்கினார்கள். அங்கு வந்தணைந்த எல்லோருக்கும் சீர்காழியிலுள்ளோர் விருந்தளித்தார்கள். திருநனிபள்ளியிலுள்ளோர் தங்கள் ஊருக்கு எழுந்தருளிவரவேண்டும் என்று பிள்ளையாரைக் கேட்டனர். பிள்ளையார் இசைந்து தோணிபுரத்துப் பெருமானிடம் விடைபெற்றுப் புறப்பட, அவர் தந்தையார் முன்போலத் தோளில் வைத்துச் சென்றார். திருநனிபள்ளி, திருவலம்புரம், திருச்சாய்க்காடு, திருவெண்காடு, திருமுல்லைவாயில் முதலிய தலங்களை வணங்கித் திருப்பதிகம்பாடி மீண்டும் சீர்காழிக்கு வந்தனர். அப்போது திருநீலகண்டத் துப் பாணரும், மதங்க சூளாமணியாரும் சீர்காழிக்கு வந்து பிள்ளையாரை வணங்கினர். பிள்ளையாரும் அவர்களைத் திருக்கோயிலுக்கு அழைத்து "இசையாழ் உங்களிறைவருக் கிங்கியற்றும்" என்று யாழினை வாசிப்பித்து மகிழ்ந்தார். மறையோர் அதிசயித்தார். பிள்ளையார் அருளும் திருப்பதிகங்களின் இசையை யாழிலமைத்து வாசித்து அவரைப் பிரியாதிருக்கும் பேற்றினை யாழ்ப்பாண நாயனார் வேண்டினார். பிள்ளையாரும் அதற்கிசைந்தார். பிள்ளையார் திருத்தோணியப்பரிடம் விடைபெற்றுத் தந்தையாருடன் அடியார் சூழ சிதம்பரத்துக்கு எழுந்தருளினார். தில்லைவாழந்தணர்கள் எல்லோரும் தில்லை மூதூரை அலங்கரித்து வேத ஒலியும் மங்கல முழக்கமும் விசும்பிடை நிறையப் பிள்ளையாரை எதிர்கொண்டு அழைத்துச் சென்றனர். திருஞான சம்பந்தப் பிள்ளையார் திருவீதியை வணங்கி, தில்லைவாழந்தணர்களோடு திருக்கோபுரத்தை விழுந்து வணங்கித் திருக்கோயிலுட்சென்று, செம்பொன் மாளிகையை வலம்வந்து, இரண்டு கைகளையும் சென்னிமேல்

வைத்து, கண்களில் மழைமாரி பொழிய, "ஞானமயமான சிற்றம்பலத்தையும் சிவானந்த சொரூபமாகிய திருநடனத்தையும் ஐம்பொறிகளால் எளிதாய் உணரச் செய்தனை" என்று வணங்கி ஆனந்த வெள்ளத்தில் திளைத்து "கற்றாங் கெரியோம்பி" என்னும் முதலையுடைய திருப்பதிகத்தை யருளிச்செய்தார்.

அண்ண லார்தமக் களித்தமெய்ஞ் ஞானமே
  யானவம் பலமுந்த
முண்ணி றைந்தஞா னத்தெழு மானந்த
  வொருபெருந் தனிக்கூத்துங்
கண்ணின் முன்புறக் கண்டுகும் பிட்டெழுங்
  களிப்பொடுங் கடற்காழிப்
புண்ணி யக்கொழுந் தனையவர் போற்றுவர்
  புனிதரா டியபொற்பு.

உணர்வி னேர்பெற வருஞ்சிவ போகத்தை
  யொழிவின்றி யுருவின்க
ணணையு மைம்பொறி யளவினு மெளிவர
  வருளினை யெனப்போற்றி
யிணையில் வண்பெருங் கருணையே யேத்திமுன்
  னெடுத்தசொற் பதிகத்திற்
புணரு மின்னிசை பாடினா ராடினர்
  பொழிந்தனர் விழிமாரி.

—பெரிய புராணம்.

சிவசத்தியின் வடிவம் ஞானம். சிவபெருமானது திருமேனி சத்தியாகும். பொன்னம்பலத்தை மெய்ஞ்ஞானமாகவும், நடேசப் பெருமானது ஐந்தொழிற் கூத்தைப் பேரானந்தமாகவும் பிள்ளையார் தமது அனுபவத்தில் கண்டார்.

கோயில் - பண் - குறிஞ்சி.

கற்றாங் கெரியோம்பிக் கலியை வாராமே
செற்றார் வாழ்தில்லைச் சிற்றம் பலமேய
முற்றா வெண்டிங்கண் முதல்வன் பாதமே
பற்றா நின்றாரைப் பற்றா பாவமே.

ஞாலத் துயர்காழி ஞான சம்பந்தன்
சீலத் தார்கொள்கைச் சிற்றம் பலமேய
சூலப் படையானைச் சொன்ன தமிழ்மாலை
கோலத் தாற்பாட வல்லார் நல்லாரே.

பிள்ளையார் தம்மைச் சிவஞானி என்று எண்ணாது தூரத்தில் கண்டவுடன் திருக்கோபுரத்தை வணங்கியதும், கோபுரவாயிலில் எட்டு அங்கமும் பூமியில்பட விழுந்து வணங்கியதும், திருக்கோயி லுட் சென்று வலம்வந்து இரண்டு கரங்களைச் சென்னிமேல் கூப்பி வணங்கியதும் மக்கள் அவ்வாறு வழிபட்டு உய்யுமாறு வழி காட்டும் பொருட்டேயாம் என்பது போதரும்.

சிதம்பரத்தில் இருத்தற்கு அஞ்சித் திருவேட்களத் துக்குச் சென்று பதிகம் பாடித்துதித்து அங்கிருந்தே சிதம்பரத்துக்குத் தினம்வந்து நடராச மூர்த்தியைத் தரிசனஞ்செய்தார். தில்லைவாழந்தணர்கள் நடராசப்பெரு மானை அருச்சிக்கப் பெரும் பேறுபெற்றனர் என்னுங் கருத்துடன் ஒருநாள் சிதம்பரத்துக்கு எழுந்தருளும்போது தில்லைவாழந்தணர்கள் மூவாயிரவர் சிவகண நாதர்களாய்த் தோன்றக்கண்டு தரிசித்து அக்காட்சியைத் திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனருக்குங் காண்பித்துச் சபைக்கு எழுந் தருளி நடராச மூர்த்தியை வணங்கிப் பதிகம் பாடியருளி ஞர். அப்பதிகத்தில் தில்லைவாழந்தணரைத் தாம் கண்ட நிலையெலாம் வைத்துப் பாடிஞர்.

கோயில் - பண் - காந்தார பஞ்சமம்

ஆடி ணய்நறு நெய்யொடு பாறயி ரந்த ணர்பிரி
யாதசிற் றம்பலம்
நாடி ணுயிட மாநறுங் கொன்றை நயந்தவனே
பாடி ணய்மறை யோடுபல் கீதமும் பல்ச டைப்பனிக்
கால்கதிர் வெண்டிங்கள்
சூடி ணயரு ளாய்சுருங் கவெம தொல்வினையே.

நீலத் தார்கரி யமிடற் றார்நல்ல நெற்றி
மேலுற்ற கண்ணி ஞர்பற்று
சூலத் தார்சுட லைப்பொடி நீறணி வார்சடையார்
சீலத் தார்தொழு தேத்துசிற் றம்பலஞ்
சேர்த லாற்கழற் சேவடி கைதொழக்
கோலத் தாயரு ளாயுன காரணங் கூறுதுமே

நாறு பூம்பொழி னண்ணிய காழியு ளன்மறை
வல்ல ஞானசம் பந்தன்
ஊறு மின்றமி ழாலுயர்ந் தாருறை தில்லைதன்னுள்
ஏறு தொல்புக ழேந்துசிற் றம்பலத் தீசனையிசை
யாற்சொன்ன பத்திவை
கூறு மாறுவல் லாருயர்ந் தாரொடுங் கூடுவரே.

பிள்ளையார் அங்கிருந்து புறப்பட்டு யாழ்ப்பாணரது தாயார் பிறந்த தலமாகிய திருவெருக்கத்தம் புலியூர் முதலிய சேத்திரங்களுக்குப் பாணர் வேண்டுகோளின்படி சென்று திருப்பதிகம் பாடியருளினூர். பின்னர்த் திருமுதுகுன்றம், பெண்ணுகடம், திருத்தூங்கானை மாடம் முதலிய சேத்திரங்களுக்குச் சென்று சிவபெருமானை வணங்கிப் பதிகங்கள் பாடினூர். அதன்பின் திருவரத்துறைக்குப் போகவிரும்பித் தந்தையார் தோளின்மேல் செல்லாது திருவடிக்கமலம் நோவ நடந்து திருவைந்தெழுத்தை ஓதிக்கொண்டு அடியார் சூழ மாறன்பாடி என்னும் சேத்திரத்துக்கு வந்தார். தாதையாரும் பிள்ளையார் நடந்து செல்வதைப் பார்த்து வருந்தினர். சூரியனும் அஞ்சினூற்போல் மேற்குக் கடலுள் வீழ்ந்தான். அன்றிரவு அடியார் கூட்டத்தோடு அங்குத் தங்கியிருக்கையில் திருவரத்துறையில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமான் ஆன்மாக்களின் பொருட்டுப் பிள்ளையார் நடந்து வருந்தியதைத் திருவுளத்துக்கொண்டு அப்பதியிலுள்ள மறையவர்க்குக் கனவில் தோன்றிப் பிள்ளையார் ஏறிச் செல்வதற்கு முத்துச் சிவிகையும், பிடிக்க முத்துக்குடையும், ஊதுவதற்கு முத்துச் சின்னமும் தம்மிடமிருந்து எடுத்துக்கொண்டு போய்க் கொடுக்கும்படி கட்டளையிட்டார். அப்போது மறையவர் எல்லோருங் கூடித் திருப்பள்ளியெழுச்சிக் காலத்திலே திருக்கோயிலுக்குச் சென்றபோது முத்துச் சிவிகை, வெண்குடை, முத்துச்சின்னம் அங்கே யிருக்கக் கண்டு அவைகளை எடுத்துக்கொண்டு பிள்ளையாரிடம் சென்றூர்கள். முன்னமே சிவபெருமான் அவைகளை ஏற்றுக்கொள்ளும்படி பிள்ளையாருக்குத் தோன்றிக் கட்டளையிட்டார். இறைவர் தம்மைத் தியானிக்கின்றவர்களுக்கே யன்றி வழிபடாதவருக்குத் திருவருள் புரியமாட்டார் என்னும் பொருள் அமைந்த "எந்தை யீசன்" என்னும் முதலையுடைய பதிகம் பாடி இறைவர் கட்டளைப்படி முத்துச்சிவிகையை வலம்வந்து பூமியில் விழுந்து வணங்கியெழுந்து ஐந்தெழுத்தோதி ஆன்மாக்கள் உய்யும் வண்ணம் அச்சிவிகையில் ஆரோகணித்தார் பிள்ளையார்.

திருநெல்வாயில் திருவரத்துறை
பண் - பியந்தைக் காந்தாரம்.

எந்தை யீசனெம் பெருமா னேறமர் கடவுளென் றேத்திச்
சிந்தை செய்பவர்க் கல்லாற் சென்றுகை கூடுவ தன்றால்
கந்த மாமல ருந்திக் கடும்புன னிவாமல்கு கரைமேல்
அந்தண் சோலைநெல் வாயி லரத்துறை யடிகடம் மருளே.

கறையி னூர்பொழில் சூழ்ந்த காழியுண் ஞானசம் பந்தன்
அறையும் பூம்புனல் பரந்த வரத்துறை யடிகடம் மருளை
முறைமையாற்சொன்னபாடன் மொழியுமார்ந்தர் தம்வினை போய்ப்
பறையு மையுற வில்லை பாட்டிவை பத்தும்வல் லார்க்கே.
—தேவாரம்.

சோதி முத்தின் சிவிகைசூழ் வந்துபார்
மீது தாழ்ந்துவெண் ணீற் றொளி போற்றிநின்
றூதி யாரரு ளாதலி னஞ்செழுத்
தோதி யேறினா ருய்ய வுலகெலாம்.
—பெரிய புராணம்.

வேதத்தின் முதல் இடை கடையில் அகர உகர மகரங்களாகிய பிரணவத்தைக் கூறுதல் போலச் சேக்கிழார் சுவாமிகள் இப்பெரிய புராணத்தின் முதலில் நடராசப் பெருமான் அடியெடுத்துக் கொடுத்த "உலகெலாம்" என்னும் சொற் றொடரை இப்புராணத்தின் நடுப் பாதமாகிய இவ்விடத்தில் "உய்ய உலகெலாம்" என்று அமைத் தனர். பெரியபுராணத்துள் அவ்வேத சாரங்கள் செறிந்துள்ளன வாம் என்பது காண்க.

ஏழுலகங்களும் போற்ற, வேதங்கள் ஒலிக்க, அடியார் கள் "திருஞானசம்பந்தர், பாலறுவாயர், வேதபாரகர், முத்தமிழ் விரகர், பரசமய கோளரி" என்னும் நாமங்களைக் கூறி யூத, முத்துச்சிவிகையில் பாற்கடலில் சந்திரன் உதித் தாற்போல் எழுந்தருளித் திருவரத்துறையிலிறங்கித் திருக் கோபுரத்தை வணங்கித் திருக்கோயிலுட் சென்று நிலமுற வணங்கி திருப்பதிகம்பாடி அத்தலத்தில் சிலநாள் தங்கியிருந் தனர். பின்னர்ச்சீர்காழியில்எழுந்தருளியிருக்கும்சிவபெரு மானையும் பெரிய நாயகியம்மையையும் திருவுள்ளத்தில் சிந்தித்து, திருவரத்துறைப் பெருமானிடம் விடைபெற்று முத்துச்சிவிகைமீது புறப்பட்டார். மறையவர்கள் ஆனந் தக் கூத்தாடி வேதம் ஓதினர். முத்துச் சின்னங்கள் முழங்

கின. பல வாத்தியங்கள் ஒலித்தன. இங்ஙனம் வரிசையோடு செல்லும்போது வழியிலுள்ளவர்கள் நடைப்பந்தர்கள், தோரணங்கள், வாழைகள், கமுகுகள்நாட்டி நிறைகுடங்கள் வைத்துப் பிள்ளையாரை வரவேற்றுபசரித்தனர். செல்லும் வழியிலுள்ள சேத்திரங்களில் சிவிகையை விட்டிறங்கித் திருப்பதிகம்பாடி வணங்கிக்கொண்டு திருச்சேய்ஞ லூருக்கு எழுந்தருளினுர். அங்குள்ள மறையவர் அப்பதியை மிக அலங்கரித்துச் சகல ஆடம்பரங்களுடன் பிள்ளையாரை எதிர்கொண்டு அழைக்க, முத்துச் சிவிகையினின்றும் இறங்கித் திருக்கோயிலை வலம் வந்து உட்சென்றுர். தமது தந்தை யென்பதைச் சற்றும் எண்ணுமல் எச்சதத்தனுடைய கால்களை வெட்டிய விசாரசருமர் செய்த சிவார்ச்சனையின் பொருட்டுச் சிவபெருமான் தமது கொன்றை மாலையைக் கழற்றி அவருக்குச் சூட்டி அவரைச் சிவகணங்களுக்குத் தலைவராக்கிவைத்த பெருமையைத் தாம் பாடிய பதிகத்தில் சிறப்பித்துப் பாடியருளினுர்.

திருச்சேய்ஞலூர்—பண் - பழந்தக்கராகம்.

நூலடைந்த கொள்கையாலே நுன்னடி கூடுதற்கு
மாலடைந்த நால்வர்கேட்க நல்கிய நல்லறத்தை
ஆலடைந்த நீழன்மேவி யருமறை சொன்னதென்னே
சேலடைந்த தண்கழனிச் சேய்ஞலூர் மேயவனே.

பீரடைந்த பாலதாட்டப் பேணுத வன்றுதை
வேரடைந்து பாய்ந்ததாளை வேர்த்தடிந் தான்றனக்குத்
தாரடைந்த மாலைசூட்டித் தலைமைவ குத்ததென்னே
சீரடைந்த கோயின்மல்கு சேய்ஞலூர் மேயவனே.

சேயடைந்த சேய்ஞலூரிற் செல்வன சீர்பரவித்
தோயடைந்த தண்வயல்சூழ் தோணிபு ரத்தலைவன்
சாயடைந்த ஞானமல்கு சம்பந்த னின்னுரைகள்
வாயடைந்து பாடவல்லார் வானுல காள்பவரே.

பின்பு, அங்கிருந்து புறப்பட்டுத் திருப்பனந்தாள், பந்தணைநல்லூர், திருவாழ்கொளிபுத்தூர், திருக்கடம்பை, திருநாரையூர், திருக்கருப்பறியலூர் முதலிய தலங்களை வணங்கிப் பாமாலை சாத்தித் துதித்துச் சீர்காழிக்குச் சென்றனர். அங்குள்ள மறையவர் வீதிகளை அலங்கரித்து

ஆடம்பரத்தோடு எதிர்சென்று வணங்கினர். பிள்ளையார் திருக்கோயிலுட் சென்று வணங்கித் துதித்து, தமிழ் வேதம் பாடிப் புறம்போந்து தம்முடன் வந்த திருநீலகண்ட யாழ்ப்பாணர் வீடு செல்ல விடைகொடுத்துத் தமது மாளிகைக்கு எழுந்தருளினர். அப்போது தமது தாயாரால் திருநீறு சாத்தப்பெற்றுத் திருமடத்தில் தங்கினர். தினந்தோறும் தோணியப்பரை வணங்கியிருக்கும் நாளில் மறையவர் திருஞானசம்பந்தப் பிள்ளையாருக்கு உபவீதம் தரிக்க விரும்பி அவரை வேண்டினர். பிள்ளையார் அதற்கு இசைந்து வேதவாக்கியங்களை எடுத்துக்காட்டினர். மறையவர் தங்கள் சந்தேகங்களை அவரிடம் கேட்டு மகிழ்ந்து அவரை வணங்கினர். மந்திரங்களுக்கெல்லாம் பஞ்சாட்சரம் மூலமாகும் என்பதை விளக்கும்பொருட்டுப் பிள்ளையார் பஞ்சாட்சரப் பதிகத்தைத் திருவாய்மலர்ந்தருளினர்.

பஞ்சாட்சரப் பதிகம்
பண் - காந்தார பஞ்சமம்.

துஞ்சலுந் துஞ்ச லிலாத போழ்தினும்
நெஞ்சக நைந்து நினைமி னாடொறும்
வஞ்சக மற்றடி வாழ்த்த வந்தகூற்
றஞ்ச வுதைத்தன வஞ்செ ழுத்துமே.

மந்திர நான்மறை யாகி வானவர்
சிந்தை யுணின்றவர் தம்மை யாள்வன
செந்தழ லோம்பிய செம்மை வேதியர்க்
கந்தியுண் மந்திர மஞ்செ ழுத்துமே.

நற்றமிழ் ஞான சம்பந்த னான்மறை
கற்றவன் காழியர் மன்ன னுன்னிய
அற்றமின் மாலையீ ரைந்து மஞ்செழுத்
துற்றன வல்லவ ரும்ப ராவரே.

சிவஞானிகள் புறக்கிரியைகளில் பற்றில்லா திருப்பினும் மறையவர்கள் தம் வழக்கத்தைக் கைவிடாது அனுசரிக்க வேண்டியது அவசியமென்பதையுணர்த்த உபநயனச்சடங்கு செய்தற்குப் பிள்ளையார் உடன்பட்டார். வேதங்களின் உண்மைப் பொருள்களை எல்லாம் மறையவருக்கு எடுத்து விளக்கி ஐய விபரீதங்களைத் தீர்த்ததனல் பிள்ளையாரை அம்மறையவர் தங்கள் தெய்வமாகக்கொண்டு வணங்கினர்.

பிள்ளையார் உபநயனச் சடங்கு முடித்துக்கொண்டு சீர்காழியில் தமது மாளிகையில் தங்கியிருந்தனர். திருஞானசம்பந்தப் பிள்ளையார் வரம்பிலாச் சிவஞான அமுதுண்ட திறத்தைத் திருநாவுக்கரசு சுவாமிகள் கேட்டறிந்து அவரை வணங்கச் சீர்காழிக்கு வந்தணைந்தார். பிள்ளையார் அவர் வருகையைக் கேட்டு அவரைக் காண்பது தவமென்று நினைந்து அவரை அடியார் கூட்டத்தோடு எதிர்கொள்ள எழுந்தார். அப்பர் சுவாமிகளின் அன்புமயமான திருவேடத்தைத் தூரத்தே கண்டு பிள்ளையார் வணங்கி எதிர் செல்ல, ஆண்ட அரசும் எதிர்வந்து பிள்ளையாரை வணங்கினர்.

சிந்தை யிடையறு வன்புந் திருமேனி தன்னி லசைவுங்
கந்தை மிகையாங் கருத்துங் கையுழ வாரப் படையும்
வந்திழி கண்ணீர் மழையும் வடிவிற் பொலிதிரு நீறு
மந்தமி லாத்திரு வேடத் தரசு மெதிர்வந் தணைய.

இப்பாடல் அப்பர் சுவாமிகளின் தோற்றத்தைக் காட்டுவது. இதை ஒட்டியே பின்வந்த காஞ்சிப் புராண ஆசிரியர் "இடையறாப் பேரன்பும்" என்னும் அப்பர் துதியைப் பாடியுள்ளார்.

கண்ட கவுணியக் கன்றுங் கருத்திற் பரவுமெய்க் காதற்
றொண்டர் திருவேட நேரே தோன்றிய தென்று தொழுதே
யண்டரும் போற்ற வணைந்தங் கரசு மெதிர்வந் திறைஞ்ச
மண்டிய வார்வம் பெருக மதுர மொழியருள் செய்தார்.

சிவஞானிகள் வேடத்தைச் சிவமாகப் பிள்ளையார் தொழுதனர் என்பதை அப்பரைத் தூரத்தில் கண்டபோது வணங்கினதால் அறிக.

பிள்ளையார் அப்பரைத் திருக்கோயிலுக்கு அழைத்துச் சென்று சிவபெருமானை வணங்கித் தமது மாளிகையில் அப்பருக்கும் அவருடன் வந்த அடியார்களுக்கும் திருவமுது செய்வித்து பெரு நட்புடன் கலந்திருந்தனர். இருவரும் தோணியப்பரை வணங்கித் திருப்பதிகங்களைத் திருவாய் மலர்ந்தருளினர். திருநாவுக்கரசு சுவாமிகள் மற்றத் தலங்களை வணங்கப் பிள்ளையாரிடம் விடைபெற்றுச் சென்றார். பிள்ளையார் திருக்கோலக்கா வரையும் சென்று

வழியனுப்பி மீண்டும் சீர்காழிக்கு வந்தார். அங்கிருக்கும் நாளில் பல பதிகங்களைத் தோணியப்பர்மீது பாடினார். பாணரும் அவர் மனைவியார் மதங்க சூளாமணியாரும் அவைகளை யாழில் அமைத்து வாசித்தார்கள். சிலநாள் சென்றபின் திருத்தோணியப்பரிடம் விடைபெற்றுத் தமிழ் நாட்டிலுள்ள பல தலங்களை வணங்கப் பாணரோடு தந்தையார் பின்செல்ல, முத்துச்சிவிகையின்மேல்வெண்குடை நிறைமதி போல நிழற்ற, சின்னங்கள் ஊத, சங்கநாதம் முழங்க, மங்கல வாழ்த்தொலி மல்கப் புறப்பட்டார். திருக்கண்ணார் கோயில் முதலிய க்ஷேத்திரங்களை வணங்கிப் பாமாலை சாத்திப் பொன்னியாற்றின் வடகரையில் மேற்குத் திசையை நோக்கிச் சென்றார். திருப்புள்ளிருக்கு வேளூர் பணிந்து வணங்கித் தாம் பாடிய தேவாரத் திருப்பதிகத்தில் சம்பாதி சடாயு என்னும் இரு பட்சிகளுக்குச் சிவபெருமான் திருவருள் புரிந்ததை வைத்துப் பாடினார்.

திருப்புள்ளிருக்கு வேளூர்

பண் - சீகாமரம்.

கள்ளார்ந்த பூங்கொன்றை மதமத்தங் கதிர்மதியம்
உள்ளார்ந்த சடைமுடியெம் பெருமானா ருறையுமிடந்
தள்ளாய சம்பாதி சடாயென்பார் தாமிருவர்
புள்ளானார்க் கரையனிடம் புள்ளிருக்கு வேளூரே.

செடியாய வுடறீர்ப்பான் றீவினைக்கோர் மருந்தாவான்
பொடியாடிக் கடிமைசெய்த புள்ளிருக்கு வேளூரைக்
கடியார்ந்த பொழிற்காழிக் கவுணியன்சம் பந்தன்சொல்
மடியாது சொல்லவல்லார்க் கில்லையா மறுபிறப்பே.

பின்னர், திருநின்றியூர், திருநீடூர், திருப்புன்கூர், திருமண்ணிப் படிக்கரை, திருக்குறுக்கை, திருவன்னியூர், பந்தண நல்லூர், திருமணஞ்சேரி, திருஎதிர்கொள்பாடி, திருவேள்விக்குடி, திருக்கோடிகா, கஞ்சனூர், திருமாந்துறை, திருமங்கலக்குடி, திருந்துதேவன்குடி, இன்னம்பர் முதலிய க்ஷேத்திரங்களை வணங்கிப் பாமாலை சாத்தினர். பின்னர் வடகுரங்காடுதுறைக்கு எழுந்தருளிச் சிவபெருமானை வணங்கித் தாம் பாடிய பதிகத்தில் வாலிக்குச் சிவ

பெருமான் அருள்புரிந்ததைச் சிறப்பித்துப் பாடினர். அங்கிருந்து அடியார்களுடன் புறப்பட்டுத் திருப்பழனம் பாடி, நந்தி திருவருள் பெற்ற திருவையாறு வந்து சேர்ந்தார். அத்தலவாசிகள் பிள்ளையார் எழுந்தருளுவதைக் கேட்டு அப்பதியை அலங்கரித்துப் புகலி வேந்தரை எதிர்கொள்ள, முத்துச்சிவிகையினின்றும் இறங்கித் திருக்கோயிலுக்குச் செல்லும்போது "புலனைந்தும் பொறி கலங்கி" என்னும் திருப்பதிகத்தைப் பாடித் திருக்கோயிலுட்சென்று சிவபெருமான் திருவருளை நினைந்து ஆனந்தக் கண்ணீர் சொரிய ஆடிப்பாடிப் புறம் போந்தார். பின்னர்த் திருப்பெரும்புலியூர், நெய்த்தானம், திருமழபாடி, திருக்கானூர், திருமாந்துறை முதலிய சேத்திரங்களை வணங்கித் திருப்பாச்சிலாச்சிராமத்திற்குப் புறப்பட்டார்.

அப்பதியில் சிவநெறியில் ஒழுகும் கொல்லி மழவன் என்னும் அரசன் தனது மகள் முயலகன் என்னும் நோயினால் வருந்தி அந்நோய் மணிமந்திர ஔடதங்களால் நீங்காமை கண்டு அவளைச் சிவபெருமானுடைய சந்நிதானத்தில் விட்டு வைத்திருந்தான். உலகத்தார் ஈடேறும் பொருட்டுத் 'திருஞானசம்பந்தன் வந்தான்' என்று முத்துக்காளங்கள் ஊதின ஓசையைக்கேட்ட கொல்லி மழவன் அப்பதியை அலங்காரம் செய்வித்து எதிர்கொண்டு போய்ப் பிள்ளையாரை விழுந்து வணங்கினன். பிள்ளையார் கட்டளைப்படி எழுந்து அவருடன் சென்றான். பிள்ளையார் கோபுர வாயிலின் புறத்து முத்துச் சிவிகையினின்றும் இழிந்தருளித் திருக்கோயிலை வலம்வந்து திருமுன்பு வணங்க வந்தார். அப்போது உயிர் நீத்த உடம்பைப் போலக் கிடந்த அக்கன்னியைக் கண்டார். "இப்பெண் இவ்வாறு கிடப்பதன் காரணம் என்ன?" என்று கேட்டார். "இவள் அடியேன் பெற்ற பெண். இவளை முயலகன் என்னும் நோய் பிடித்தது. அதினின்றும் நீங்கும் பொருட்டுச் சிவபெருமான் சந்நிதியில் கொண்டு வந்தேன்" என்று கொல்லி மழவன் கூறினன். பிள்ளையார் அந்நிலையில் நின்று "துணிவளர் திங்கள்" என்னும் முதலையுடைய பிணி தவிர்க்கும் திருப்பதிகம் பாடியருளினர்.

திருப்பாச்சிலாச்சிராமம்

பண் - தக்கராகம்.

துணிவளர் திங்க டுளங்கி விளங்கச் சுடர்ச்சடை
 சுற்றி முடித்துப்
பணிவளர் கொள்கையர் பாரிடஞ் சூழ
 வாரிட மும்பலி தேர்வர்
அணிவளர் கோலமெ லாஞ்செய்து பாச்சி
 லாச்சிரா மத்துறை கின்ற
மணிவளர் கண்டரோ மங்கையை வாட
 மயல்செய்வ தோவிவர் மாண்பே.

அகமலி யன்பொடு தொண்டர் வணங்க
 வாச்சிரா மத்துறை கின்ற
புகைமலி மாலை புனைந்தழ காய புனிதர்கொ
 லாமிவ ரென்ன
நகைமலி தண்பொழில் சூழ்தரு காழி நற்றமிழ்
 ஞானசம் பந்தன்
தகைமலி தண்டமிழ் கொண்டிவை யேத்தச்
 சாரகி லாவினை தானே.

இத்திருப்பதிகம் பாடியருளிய அளவில் அப்பெண் நோய் நீங்கப் பெற்றுத் தந்தையிடம் போய் நின்றாள். கொல்லி மழவனும் மகளும் சண்பை மன்னரை மகிழ்ச்சியோடு வணங்கினர். சுவாமிகள் அவர்களுக்கு அருள் செய்தார். அடியார்கள் பெரு முழக்கம் செய்தார்கள். அங்குச் சிலநாள் தங்கித் திருப்பைஞ்ஞீலி, திருவீங்கோய்மலை முதலிய தலங்களுக்குச் சென்று திருப்பதிகங்கள் பாடித் திருக்கொடிமாடச் செங்குன்றூர் போந்தார். அத்தலத்தில் பலநாள் தங்கியிருந்தார். அப்போது மழைக்காலம் நீங்கிப் பனிக்காலம் வந்து குளிர் அதிகரித்தது. பிள்ளையாருடைய பரிசனங்கள் பலநாள் அந்நாட்டில் பயின்றதினால் சுரப் பிணியினால் வருத்தமுற்றார்கள். அவர்கள் தாம்படும் துன்பத்தைப் பிள்ளையாருக்குச் சொல்லி வணங்கினார்கள். பிள்ளையார் "அவ்வினைக் கிவ்வினை" என்னும் திருநீலகண்டப் பதிகத்தைத் திருவாய்மலர்ந்தருளினார். அடியார்களுக்கும் அந்நாட்டில் உள்ள யாவருக்கும் சுரம் நீங்கியது.

திருநீலகண்டம்—பண் - வியாழக் குறிஞ்சி

அவ்வினைக் கிவ்வினை யாமென்று சொல்லு மஃதறிவீர்
உய்வினை நாடா திருப்பது முந்தமக் கூனமன்றே
கைவினை செய்தெம் பிரான்கழல் போற்றுது நாமடியோம்
செய்வினை வந்தெமைத் தீண்டப் பெறுதிரு நீலகண்டம்.

பிறந்த பிறவியிற் பேணியெஞ் செல்வன் கழலடைவான்
இறந்த பிறவியுண் டாகில் இமையவர் கோனடிக்கண்
திறம்பயின் ஞானசம் பந்தன் செந்தமிழ் பத்தும் வல்லார்
நிறைந்த வுலகினில் வானவர் கோனொடுங் கூடுவரே.

திருநீலகண்டப் பதிகம் நச்சு நோய்க்குப் பெரும் மருந்து. இத் திருப்பதிகத்தை அன்புடன் ஓதுவோர் நச்சு நோயிலிருந்து நீங்குவர். பிள்ளையார் திருவருளினால் அந்நோய் தேச முழுவதிலுமிருந்து நீங்கியது; "நல்லார் ஒருவர் உளரேல் அவர் பொருட்டு எல்லார்க்கும் பெய்யும் மழை" என்றபடி.

பிள்ளையார் அங்குச் சிலகாலமிருந்து புறப்பட்டுத் திருப்பாண்டிக் கொடுமுடி, திருவெஞ்சமாக்கூடல் முதலிய தலங்களை வணங்கித் திருப்பதிகம் பாடிக் குண திசையை நோக்கிச் சென்று செல்வக்கருவூர் பாடி, கொங்கு நாட்டைக் கடந்து பொன்னியாற்றின் தென்கரையிலுள்ள பல தலங்களையும் வணங்கித் திருப்பராய்த்துறை, திருவாலந் துறை, திருக்கற்குடி, திருமூக்கீச்சரம், திருச்சிராப்பள்ளி முதலிய சேத்திரங்களை வணங்கிப் பாமாலைசாத்தித் திருவானைக்கா வந்து சேர்ந்தார். திருவானைக்காவில் வெண்ணாவல் விருட்சத்தின் கீழ் வீற்றிருந்தருளும் சம்புகேசுரரை வணங்கி, அவரை யானையானது பூசித்து முத்தியடைந்ததையும் கோச்செங்கட்சோழ நாயனார் முற்பிறப்பில் சிலந்தியாய்ப் பிறந்து நூல் நூற்றுப் பூசித்ததையும் சிறப்பித்துப் பதிகம் பாடியருளினார்.

திருவானைக்கா—பண்—இந்தளம்

மழையார் மிடறு மழுவா ளுடையா
யுழையார் கரவா வுமையாள் கணவா
விழவா ரும்வெண் ணாவலின்மே வியவெம்
அழகா வெனுமா யிழையா ளவளே.

செங்கட் பெயர்கொண் டவன்செம் பியர்கோன்
அங்கட் கருணை பெரிதா யவனே
வெங்கண் விடையா யெம்வெண்ணெ வலுளாய்
அங்கத் தயர்வா யினளா யிழையே.

வெண்ணெ வலமர்ந் துறைவே தியனைக்
கண்ணார் கமழ்கா ழியர்தந் தலைவன்
பண்ணோ டிசைபா டியபத் தும்வல்லார்
விண்ணோ ரவரேத் தவிரும் புவரே.

திருவானைக்காவில் சிலநாள் வைகி, அங்கிருந்து புறப்பட்டுத் திருப்பாற்றுறை, திருஎறும்பியூர், திருநெடுங்களம், திருக்காட்டுப்பள்ளி, திருவாலம்பொழில், திருப்பூந்துருத்தி, திருக்கண்டியூர் வீரட்டம், திருச்சோற்றுத்துறை, திருவேதிகுடி, திருவெண்ணி, திருச்சக்கரப்பள்ளி, திருப்பாலத்துறை, திருநல்லூர், திருக்கருகாவூர், அவளிவணல்லூர், திருப்பரிதி நியமம், திருப்பூவனூர், திருப்பசுபதீச்சரம், திருவலஞ்சுழி, திரு ஆறைமேற்றளி முதலிய தலங்களுக்குச் சென்று வணங்கித் திருப்பதிகம் பாடித் திருப்பட்டீச்சரத்துக்கு எழுந்தருளினர். அப்பொழுது கொடிய வேனிற் காலமாகையால் வெய்யில் வெப்பத்தைத் தணிக்கும் பொருட்டு ஓர் சிவபூதம் முத்துப்பந்தலைக் கொண்டு வந்து பிடித்தது. தன்னைச் சிவபெருமான் அனுப்பியதாகச் சொல்லியது. பரிசனங்கள் முத்தப்பந்தரின் கால்களைக் கைப்பற்றினர். மெய்ஞ்ஞான உணர்வினராகிய பிள்ளையார் திருவருட் பயனுகவந்ததென்று பணிந்தார். எட்டுத் திக்குகளிலும் வேதங்கள் ஒலிக்க, அடியார் கூட்டங்கள் "அரகர" என்றோசையிட, முத்துப்பந்தல் வேனிற்கால வெப்பத்தைத்தணிக்க, நடராச மூர்த்தியினுடைய குஞ்சித பாத நிழலில் வீற்றிருப்பவர் போல இருந்து, திருப்பட்டீச்சரத்துக்கு வந்து திருக்கோயிலுட் சென்று பூமியில் விழுந்து சிவபெருமானை வணங்கி "பாடன்மறை" என்னும் முதலையுடைய திருப்பதிகத்தைப் பாடியருளி அப்பதியில் தங்கினர்.

திருப்பட்டீச்சரம்—திருவிராகம்—பண்—சாதாரி.

பாடன்மறை சூடன்மதி பல்வளையொர்
 பாகமதின் மூன்றொர் கணையால்
கூடவெரி யூட்டியெழில் காட்டிநிழல்
 கூட்டுபொழில் சூழ்பழசையுள்
மாடமழ பாடியுறை பட்டிசர
 மேயகடி கட்டரவினார்
வேடநிலை கொண்டவரை வீடுநெறி
 காட்டிவினை வீடுமவரே.

மந்தமலி சோலைமழ பாடிநகர் நீடுமறை யாறையதனுள்
பந்தமுயர் வீடுநல பட்டிசர மேயபடர் புன்சடையனை
அந்தண்மறை யோரினிது வாழ்புகலி
 ஞானசம் பந்தனணியார்
செந்தமிழ்கள் கொண்டினிது செப்பவல
 தொண்டர்பிணி நிற்பதிலவே.

முத்துப்பந்தலைப் பிள்ளையார் இறைவரிடம் வேண்டினார் அல்லர். அடியார்க்கு வேண்டியவைகளைக் கடவுள் தாமே கொடுத்தருளுவர். பிள்ளையாரும் முத்துப் பந்தலைத் திருவருட் பயனாகவே கொண்டார்.

அங்கிருந்து திருவாறை வடதளி, திரு இரும்பூளை, திருவரதைப் பெரும்பாழி, திருச்சேறை, திருநல்லூர், குடவாயில், திருநறையூர், அரிசிற்கரைப்புத்தூர், திருக்குடமூக்கு, திருக்குடந்தைக்கீழ்க்கோட்டம், திருக்குடந்தைக் காரோணம், திருநாகேச்சரம், திருவிடைமருதூர், திருக்குரங்காடுதுறை முதலிய தலங்களை வணங்கித் திருப்பதிகம் பாடித் திருவாவடுதுறைக்கு வந்து சேர்ந்தார். அத்தலத்தில் இருக்கும் நாளிலே சிவபாத விருதயர் பிள்ளையாரிடம் தாம் யாகஞ் செய்வதற்குச் சீர்காழிக்குப் போக வேண்டுமென்றும் அது செய்தற்குப் பொருள் வேண்டும் என்றும் சொன்னார். அதைக் கேட்ட பிள்ளையார் மாசிலாமணியீசுரர் சந்நிதானஞ் சென்று, 'நம்மிடம் செல்வப்பொருள் வேண்டி யடைந்தவர்களுக்குக் கொடுக்கத் தேவரீருடைய திருவடிகளை யன்றி வேறொன்றையும் அறிகிலேன்' என்னும் கருத்தை ஒவ்வொரு திருப்பாட்டிலும் வைத்துப் பாடி யருளினார்.

திருவாடுதுறை—நாலடிமேல் வைப்பு

பண்—காந்தார பஞ்சமம்.

இடரினுந் தளரினு மெனதுறு நோய்
தொடரினு முனகழ லொழு தெழுவேன்
கடறனி லமுதொடு கலந்த நஞ்சை
மிடறினி லடக்கிய வேதியனே
இதுவோ வெமையாளு மாறீவ தொன் றெமக்கில்லையேல்
அதுவோ வுனதின் னருளாவடு துறையரனே.

அலைபுன லாவடு துறைய மர்ந்த
இலைநுனை வேற்படை யெம்மிறையை
நலமிகு ஞானசம் பந்தன்சொன்ன
விலையுடை யருந்தமிழ் மாலைவல்லார்
வினையாயின நீங்கிப் போய் விண்ணவர் வியனுலகம்
நிலையாகமுன் னேறுவர் நிலமிசை நிலையிலரே.

பிள்ளையார் திருவுள்ளத்தின்படியே சிவபெருமான் திருவருளால் ஓர் சிவ பூதம் ஆயிரம் பசும் பொன் முடிப்பைப் பலிபீடத்தின் உச்சியில் வைத்து அவர் முன்னே நின்று, "இந்த முடிப்பைச் சிவபெருமான் உமக்குக் கொடுக்கும்படி யருளினார். இது எடுக்க எடுக்கக் குறையாத உலவாக்கிழி" என்று பிள்ளையாருக்குச் சொல்ல, அவர் பணிந்தெழுந்து பலிபீடத்தின்மேலிருந்த பொற்கிழியை எடுத்துத் தந்தையாரிடம் கொடுத்தார். தந்தையாரை நோக்கி "இக்கிழி சிவபெருமானை முதல்வராகக் கொண்டு யாகஞ் செய்தால் நீரும் சீர்காழியிலுள்ள வேதியர் அனைவரும் யாகஞ் செய்யப் போதியது. நாள்தோறும் எடுத்தாலுங் குறையாது அதிகரிக்கும்" என்றும் கூறினார்.

ஆதி மாமறை விதியினு லாறுசூழ் வேணி
நாத னுரைமுன் னாகவே புரியுநல் வேள்வி
தீது நீங்க நீர்செய்யவுந் திருக்கழு மலத்து
வேத வேதிய ரனைவருஞ் செய்யவு மிகுமால்.

—பெரியபுராணம்.

சிவபெருமானைத் தலைவராகக்கொண்டு செய்யாத யாகம் தக்கனது யாகம் போல இடையிலழிந்து பயன் கொடுக்காது என்றும், வேதங்களின் கருத்தும் அதுவே என்றும் இச் செய்யுளில் உரைத்தார்.

சிவபாத விருதயர் தாம் விரும்பிய தொகையிலும் அதிகமான பணம் பெற்ருர். தந்தையாருக்கும் சீர்காழி மறையவர் எல்லோருக்கும் யாகஞ் செய்யப் போதிய பணத்தை அவ்வுலவாக்கிழி கொடுத்தது. பிள்ளையார் ஆயிரம் பொன் பெற்றதைத் திருநாவுக்கரசு சுவாமிகள் தாம் பாடிய திருவாவடுதுறைப் பதிகத்தில் வைத்துப் பாடியதும் காண்க.

மாயிரு ஞாலமெல்லா மலரடி வணங்கும் போலும்
பாயிருங் கங்கை யாளைப் படர்சடை வைப்பர் போலும்
காயிரும் பொழில்கள் சூழ்ந்த கழுமல வூரர்க் கம்பொன்
ஆயிரங் கொடுப்பர் போலு மாவடு துறைய ஞரே.

—தேவாரம்.

இதுவன்றே தந்தைக்கு மைந்தன் செய்யும் உதவி!

பிள்ளையார் தந்தையாருக்கு அனுமதி கொடுத்துச் சீர்காழிக்கு அனுப்பியபின் சிலநாள் திருவாடுதுவறையில் மகிழ்ந்து இனிது இருந்தார். பின்னர், திருக்கோழம்பம், வைகன்மாடக் கோயில், திருநல்லம், திருவழுந்தூர், திருத்துருத்தி, திருமூவலூர், திருமயிலாடுதுறை, திருவிளநகர், திருப்பறியலூர் வீரட்டம், திருவேட்டக்குடி முதலிய தலங்களை வணங்கிப் பாமாலை சாத்தி யாழ்ப்பாணரது தாயார் பிறந்த தலமாகிய தருமபுரத்திற்கு எழுந்தருளினர். அங்குச் சென்றபோது திருநீலகண்டப்பெரும்பாணருடைய சுற்றத்தார் எதிர்கொண்டு வணங்கவும், பாணர் அவர்களை நோக்கிச் "சுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய தேவாரப் பதிகங்களை யாழிலமைத்து வாசிக்கும் பெரும்பேறு பெற்றனன்" என்று கூறி மகிழ்ந்தார். அவர்கள் அதுகேட்டு "நீர் திருப்பதிக இசையை அளவுபெற யாழில் அமைத்து வாசித்ததனுல் உலகம் எங்கும் பதிகங்கள் இசை உடனே நிலவும்" என்றனர்.

பெரும்பாணர் மனம் நடுங்கிப் பிள்ளையாருடைய திருவடிகளை வணங்கி நின்று திருப்பதிகம் இசையளவுபடாத் தன்மையது என்பதைத் தமது சுற்றத்தாரும் உலகிலுள்ளோரும் தெரிந்து உய்யும்படி ஒரு திருப்பதிகம்பாடியருளவேண்டும் என்றும், அவ்விசை யாழில் சேர்த்து வாசிக்க அடங்காதெனக் காட்டவேண்டும் என்றும் விண்

ணப்பஞ் செய்தார். அப்பொழுது வேதநெறி வளர்ப்பவ ராகிய பிள்ளையார் சிவபெருமானை வணங்கித் தேவாரத் திருப்பதிகத்தின் இசையானது யாழிலும் உலகிலுள்ளோர் கண்டத்திலும் அடங்காமையைக் காட்டுமாறு "மாதர் மடப்பிடியும்" என்பதை முதலாகவுடைய பதிகம் பாடி யருளினார்.

திருத்தருமபுரம் - யாழ்மூரி.

மாதர்ம டப்பிடியும் மட வன்னமு மன்னதோர்
நடை யுடைம் மலை மக டுணையென மகிழ்வர்
பூதவி னப்படைநின் றிசை பாடவு மாடுவ
ரவர் படர் சடைந் நெடு முடியதொர் புனலர்
வேதமொ டேழிசைபா டுவ ராழ்கடல் வெண்டிரை
யிரைந் நுரை கரை பொரு துவிம் மிநின் றயலே
தாதவிழ் புன்னைதயங் குமலர்ச்சிறை வண்டறை
யெழில் பொழில் குயில் பயி றருமபு ரம்பதியே.

பொன்னொடு நன்மணிமா ளிகை சூழ்விழ வம்மலி
பொருஉ புன றிருஉ வமர் புகலியென் றுலகில்
தன்னொடு நேர்பிறவில் பதி ஞானசம் பந்தனஞ்
சுசெந் தமிழ்த் தடங் கடற் றருமபுரம் பதியைப்
பின்னொடு வார்சடையிற் பிறை யும்மர வும்முடை
யவன் பிணை துணை கழல் கள்பேணுத லரியார்
இன்னொடு நன்னுல கெய்துவ ரெய்திய போகமும்
முறு வர்கள் ளிடர் பிணி துயரணைவ் விலரே.

தேவாரத் திருப்பதிகத்தின் இசையை உலகத்தார் அறிந்து உய்யும் பொருட்டுப் பாடும்படி கேட்டதனால் யாழ்ப்பாணர் கல்விச் செருக் கற்றவர் என்பதும் அவர் அதன் இசையை நுட்பமாய் அறிந்தவர் என்பதும் பெறப்படும்.

பெரும்பாணர் வழக்கம்போல அப்பதிகத்தை யாழில் அமைத்து வாசிக்க அதன் இசையானது யாழில் அடங்க வில்லை. யாழைப் பூமியில் வைத்துவிட்டுத் திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனார் அச்சத்தோடும் அன்போடும் சுவாமி கள் கழல்களில் விழுந்து வணங்கி எழுந்து அவரை நோக்கி, "தேவரீர் திருவாய்மலர்ந்தருளிய திருப்பதிகத்தின் இசையை யான் யாழிலிட்டு வாசிப்பேன் என்றது இந்த யாழை நான் வைத்திருந்ததனால் அன்றோ?" என்று அதனை

உடைக்க ஓங்கினர். பிள்ளையார் அவரைத் தடுத்து யாழினை வாங்கிக் கொண்டார். "ஐயரே! கடவுள் திருவருளின்பெருமை யெல்லாம் இக்கருவியில் அளவுபடுமோ? உலகிலுள்ளார் அறிய இயன்றமட்டும் வாசிப்பதே வழக்கு" என்று கூறி யாழினைப் பாணரிடம் கொடுத்தார். பாணரும் அப்பணியைத் தலைமேற்கொண்டார்.

சிந்தையா லளவுபடா விசைப்பெருமை
செயலளவி லெய்து மோநீ
ரிந்தயா ழினைக்கொண்டே யிறைவர்திருப்
பதிகவிசை யிதனி லெய்த
வந்தவா றேபாடி வாசிப்பீ ரெனக் கொடுப்பப்
புகலி மன்னர்
தந்தயா ழினைத்தொழுது கைக்கொண்டு
பெரும்பாணர் தலைமேற் கொண்டார்.

—பெரிய புராணம்.

தேவாரத்தின் பொருள் திருவருளை விளக்குதல்போல அதன் இசையும் திருவருளின் பெருமையை விளக்கும். பரம ஞானிகளே இதன் பெருமையை அறியவல்லவர். உலகினர் தங்கள் அறிவுக்கு எட்டிய அளவில் இசைக் கருவியில் அமைத்து வாசிப்பதே முறைமை என்று பிள்ளையார் அறிவுறுத்தினர்.

சிலநாள் சென்றபின் தருமபுரத்தை விட்டுத் திருநள்ளாறு என்னுஞ் சேத்திரத்துக்கு எழுந்துபோய், "போகமார்த்த பூண் முலையாள்" என்னும் திருப்பதிகத்தை யாழிசை கூடத் திருத்தாளம்கொண்டு பிள்ளையார் பாடப் பெரும்பாணர் அதனை யாழிலிட்டு வாசித்து உலகத்தவர் மகிழச்செய்தார்.

திருநள்ளாறு - பண் - பழந்தக்கராகம்.

போகமார்த்த பூண்முலையாள் தன்னொடும் பொன்னகலம்
பாகமார்த்த பைங்கண்வெள் ளேற்றண்ணல் பரமேட்டி
ஆகமார்த்த தோலுடையன் கோவண வாடையின்மேல்
நாகமார்த்த நம்பெருமான் மேயது நள்ளாறே.

தண்புனலும் வெண்பிறையுந் தாங்கியதாழ் சடையன்
நண்புநல்லார் மல்குகாழி ஞானசம் பந்தனல்ல
பண்புநள்ளா றேத்து பாடல்பத்து மிவைவல்லார்
உண்புநீங்கி வானவரோ டுலகிலுறை வாரே.

பெரும்பாணர் மனம் தளரா வண்ணமும் அவர் பெருமையை அடியார்கள் அறியும்பொருட்டும் திருப்பதிகத்தின் இசை பாணரின் இசைக்கருவியில் அமையப் பிள்ளையார் பாடியருளினார்.

அங்கிருந்து திருச்சாத்த மங்கைக்குச் சென்றனர். அங்கே திருநீலநக்க நாயனார் தமது நகரை அலங்கரித்து எதிர்கொண்டழைக்கத் திருக்கோயிலுட்சென்று வணங்கித் திருநீலநக்க நாயனார் மனையில் தங்கினர். தாம் பாடிய திருப்பதிகத்தில் அவர் பெருமையைத் திருக்கடைக் காப்பில் வைத்துப் புகழ்ந்தார். திருநீலநக்க நாயனாருக்கு விடை கொடுத்து அங்கிருந்து திருநாகைக்காரோணம் சென்று வணங்கிப் பதிகம் பாடினர். பின்னர், கீழ்வேளூர் வணங்கித் திருச்செங்காட்டங்குடி யடைந்தார். அத்தலத்தில் சிறுத்தொண்டநாயனார் எதிர்கொண்டழைக்க உடன் சென்று திருச்செங்காட்டங் குடியிலுள்ள கணபதீச்சரம் என்னும் திருக்கோயிலின் இறைவரை வணங்கிச் சிறுத்தொண்ட நாயனாரைத் தாம் பாடிய தேவாரப் பதிகத்தில் வைத்துப் பாடி சிறப்பித்தருளினார்.

திருச்செங்காட்டங்குடி பண் - பஞ்சமம்.

பைங்கோட்டு மலர்ப்புன்னைப் பறவைகாள் பயப்பூரச்
சங்காட்டந் தவிர்த்தென்னைத் தவிராநோய் தந்தானே
செங்காட்டங் குடிமேய சிறுத்தொண்டன் பணிசெய்ய
வெங்காட்டு ளனலேந்தி விளையாடும் பெருமானே.

செந்தண்பூம் புனல்பரந்த செங்காட்டங் குடிமேய
வெந்தநீ றணிமார்பன் சிறுத்தொண்ட னவன்வேண்ட
அந்தண்பூங் கலிக்காழி யடிகளையே யடிபரவும்
சந்தங்கொள் சம்பந்தன் றமிழுரைப்போர் தக்கோரே.

சிறுத்தொண்ட நாயனார் மாளிகையில் சிலநாள் வைகினர். அங்கிருக்கும் நாளில் திருமருகலுக்குச் சென்று இறைவரை வணங்கிப் பதிகம் பாடினர். அந்நாளில் வழிப் போக்கனாகிய ஓர் வணிகன் ஓர் சிறுபெண்ணுடன் திருக் கோயிலின் பக்கத்திலுள்ள மடத்தில் நித்திரை செய்யும் போது சர்ப்பந்தீண்டி இறந்தான். அக்கன்னிகை அவனைத் தீண்டாது சமீபத்தில் விழுந்து புரண்டு தனக்கோர் துணையு மின்மையைக் கருதித் திருக்கோயிலின் வாயிலை நோக்கி

"தேவர்கள் உய்யும் வண்ணம் ஆலால விடத்தை உண்டு அவர்களைக் காத்தருளினீர். கருடனுக்குப் பயந்து அடைக்கலம் புகுந்த பாம்புக்கு அருள்புரிந்தீர். நெற்றிக் கண்ணினுல் சாம்பலான மன்மதனை இரதிக்கு இரங்கி எழுப்பிக் கொடுத்தீர். இயமனை உதைத்து மார்க்கண்டேயருக்கு அருள்செய்தீர். அதுபோல இந்த விடந்தீர்ந்து இவனுயிர் பிழைக்கும் வண்ணமும், அளவில்லாத என் கவலை நீங்கும் வண்ணமும், திருமருகலில் எழுந்தருளும் பெருமானே! உமக்கு அடைக்கலம் புகுந்த அடியேனுக்கு அருள வேண்டும்" என்று அழுது வணங்கினள்.

அடியாரா மிமையவர்தங் கூட்ட முய்ய
வலைகடல்வாய் நஞ்சுண்ட வமுதே செங்க
ணெடியானு நான்முகனுங் காணக் கோல
நீலவிடவர வணிந்த நிமலா வெந்து
பொடியான காமனுயி ரிரதி வேண்டப்
புரிந்தளித்த புண்ணியனே பொங்கர் வாசக்
கடியாரு மலர்ச்சோலை மருங்கு சூழுங்
கவின்மருகற் பெருமானே காவா யென்றும்

வந்தடைந்த சிறுமறையோ னுயிர்மேற் சீறி
வருங்காலன் பெருங்கால வலயம் போலுஞ்
செந்தறுகண் வெள்ளெயிற்றுக் கரிய கோலஞ்
சிதைந்துருள வுதைத்தருளுஞ் செய்ய தாளா
விந்தவிடக் கொடுவேக நீங்கு மாறும்
யானிடுக்கட் குழிநின்று மேறு மாறு
மந்தமதிக் குழவிளர் செய்ய வேணி
யணிமருகற் பெருமானே யருளாயென்றும்,

—பெரிய புராணம்.

சிவபெருமானை நினைந்து இவ்வாறு வருந்தித் துதிக்கின்ற கன்னியின் அழுகைக் குரலானது சுவாமியை வணங்கும் பொருட்டுத் திருக்கோயிலுக்கு எழுந்து வந்த பிள்ளையார் திருச்செவிகளில் விழுந்தது. அவர் அவள் மாட்டுக் கருணை வைத்து அவள் முன்னே சென்று "நீ அஞ்சற்க! நீ யார்? எங்கிருந்து எங்குற்ருய்? நீ இப்படி வருந்த நிகழ்ந்தவைகளைக் கூறுக?" என்று கேட்டருளினர். அப்பெண் கண்ணீர் சொரியப் பிள்ளையார் திருவடிகளில்

வீழ்ந்து வணங்கி "எங்கள் இருப்பிடம் வைப்பூர்; என் தந்தையார் பெயர் தாமன். அவருக்குப் பெண் மக்கள் என்னோடு எழுவர். எனக்கு மூத்தோர் அறுவரையும் தன் மருமகனுக்கும் இவருக்குக் கொடுப்பதாகச் சொல்லிப் பின் பொருளாசையால் பணம் வாங்கிக்கொண்டு பிறருக்கு விவாகம் செய்து கொடுத்துவிட்டார். கடைசியாக என்னையும் இவருக்குக் கொடுப்பதாக நிச்சயித்தபின் பொருளைப்பெற்று அன்னியனுக்குக் கொடுக்க என் தந்தை எண்ணியதை யறிந்து கவலைப்பட்ட இவருக்கு மனைவியாக எண்ணி நடுநிலைமை கருதி இவரை நம்பி வந்தேன். இவரும் அரவு தீண்டி மாண்டார். தேவரீர் அடியாளைக் காத்தருள வேண்டுகின்றேன்" என்றாள். அப்போது காழிவேந்தர் அவன் விடம் தீரும்வண்ணம் இப்பெண் வருந்துதல் முறையோ என்பதை யமைத்து "சடையா யெனுமால்" என்னும் முதலையுடைய திருப் பதிகம் பாடியருளினார். உடனே வணிகன் விடம் தீர்ந்து உயிர் பெற்றெழுந்து பிள்ளையாரை வணங்கி நின்றான். அடியார்கள் மகிழ்ச்சியினால் முழக்கம் செய்தனர். அக் கன்னியும் மனம் மகிழ்ந்து பிள்ளையார் திருப்பாதங்களில் விழுந்து வணங்கினாள். பிள்ளையார் வணிகனுக்கும் அப் பெண்ணுக்கும் மணம் செய்வித்து அவர்கட்கு விடை கொடுத்து அனுப்பினார்.

திருமருகல் விடந்தீர்த்த திருப்பதிகம்.

பண் - இந்தளம்.

சடையா யெனுமால் சரணீ யெனுமால்
விடையா யெனுமால் வெருவா விழுமால்
மடையார் குவளை மலரும் மருகல்
உடையாய் தகுமோ விவளுள் மெலிவே.

வையஞா னம்வல்லார் மருகற் பெருமா
னுயர்ஞா னமுணர்ந் தடியுள் குதலா
லியன்ஞா னசம்பந் தனபா டல்வல்லார்
வியன்ஞா லமெல்லாம் விளங்கும் புகழே.

பிள்ளையார் வேண்டும் வரங்களை இறைவர் அவ்வப்போதே கொடுத்தருளுவர் என்பது இதனால் அறியப்படும். தம்மை அடைந்த

வர்கட்கு இம்மையில் போகங்களும் முத்தி யின்பமும் கொடுக்கும் பரமாசாரியர் பிள்ளையார் என்பது வணிகனுக்கும் அப்பெண்ணுக்கும் மணம் செய்து வைத்ததனுல் விளங்கும். போன உயிரை மீண்டும் வரச் செய்யத்தக்க பரமாசாரியர் பிள்ளையார். எவர் எதை வேண்டி னும் அதை ஈந்தருளும் வள்ளலார் என்பது தெளியப்படும்.

சிலநாள் அத்தலத்தில் பிள்ளையார் அடியாருடன் எழுந்தருளியிருந்தார். அந்நாளில் சிறுத்தொண்டநாயனுர் திருமருகனுக்கு வந்து மறுபடியுஞ் செங்காட்டங்குடிக்கு அழைத்துச்செல்ல விரும்பியபோது பிள்ளையார் திருமரு கற் கோயிலுக்குச் சென்று வணங்க, சிவபெருமான் செங் காட்டங்குடியில் எழுந்தருளியிருக்கும் திருக்கோலத்தைக் காட்ட அது கண்டு பிள்ளையார் மனமகிழ்ந்து பதிகம்பாடி அத்திருப்பதியில் தானே இருந்தார். பின் சிறுத்தொண்ட நாயனுருக்கு விடைகொடுத்துத் திருப்புகலூருக்குச் சென்றுர். அங்கே முருகநாயனுர் எதிர்சென்றழைக்கத் திருக்கோயிலுட்சென்று போன்போடு தமிழ் வேதமாகிய திருப்பதிகத்தில் "மூசுவண்டறை கொன்றை முருகன் முப்போதுஞ் செய் முடிமேல்—வாசமா மலருடையார் வர்த்தமானீச்சரத்தாரே'' என்று முருகநாயனுரைப் புகழ்ந்து பாடி அந்நாயனுர் திருமடத்தில் சிலநாள் தங்கி யிருந்தனர். அப்பொழுது திருநாவுக்கரசு சுவாமிகள் அங்கு வருவதைக் கேட்ட பிள்ளையார் அவரைக் காண விரும்பி எதிர்கொண்டு ஒருவரை யொருவர் வணங்கி நல் வரவு கேட்டு மகிழ்ந்தனர். பிள்ளையார் திருவாரூரின் சிறப் பைக் குறித்து வினவியபோது திருநாவுக்கரசு நாயனுர் தேவாரப்பதிகம் பாடி அதன் மகிமையைக் கூறியருளினுர். அதுகேட்ட பிள்ளையார் அப்பமூர்த்தியைத் திருப்புகலூரில் தங்கியிருக்குமாறு வேண்டித் தாம் திருவாரூர் சென்று வன்மீகத் தியாகராசமூர்த்தியை வணங்கித் திரும்புவதாகச் சொல்லிப் புறப்பட்டார்.

நாடகக் காட்சியைப் பார்த்து மகிழும் ஒருவன் அதைப்பற்றித் தன் நண்பனுக்குச் சொல்லுவான். அவன் நண்பனும் அதைப் பார்க்க விரும்புவான். அதுபோல அப்பர் சுவாமிகள் தாம் திருவாரூரில் கண்ட திருக்கோலத்தைச் சொல்ல, பிள்ளையாரும் அக்கோலத்தைத் தரிசனஞ் செய்ய விரும்பித் திருவாரூர் சென்றுர்.

பிள்ளையார் திருவாரூர் சென்று புற்றை இடமாகக் கொண்ட சிவபெருமானை வணங்கித் தேவாரப்பதிகங்களைப் பாடினார். அங்கிருக்கும் நாளில் திருவலிவலம், திருக்கோளிலி முதலிய தலங்களுக்குப் போய் வணங்கித் திருவாரூருக்கு வந்து சிலநாள் இருந்தார். திருவாரூர் இறைவரைத் "தொழுதுய்யலாம் மையல்கொண்டு அஞ்சல் நெஞ்சே" என்று ஒவ்வொரு திருப்பாட்டின் இறுதியிலும் வைத்து "பவனமாய்ச் சோடையாய்" என்னும் திருப்பதிகம் பாடியருளினார்.

புவனவா ரூரினிற் புறம்போந் ததனையே நோக்கிநின்றே
யவமிலா நெஞ்சமே யஞ்சனீ யுய்யுமா றறிதியன்றே
சிவனதா ரூர்தொழாய் நீமற வாதென்று செங்கைகூப்பிப்
பவனமாய்ச் சோடையா யெனுந்திருப் பதிகமுன் பாடினாரே.

—பெரியபுராணம்.

திருவாரூர் - பண் - காந்தாரம்.

பவனமாய்ச் சோடையாய் நாவெழாப் பஞ்சுதோய்ச் சட்டவுண்டு
சிவனதாட் சிந்தியாப் பேதைமார் போலநீ வெள்கினாயே
கவனமாய்ப் பாய்வதோ ரேறுகந் தேறிய காளகண்டன்
அவனதா ரூர்தொழு துய்யலா மையல்கொண் டஞ்சனெஞ்சே.

பல்லிதழ் மாதவி யல்லிவண் டியாழ்செயுங் காழியூரன்
நல்லவே நல்லவே சொல்லிய ஞான சம்பந்த னாரூர்
எல்லியம் போதெரி யாடுமெம் மீசனை யேத்துபாடல்
சொல்லவே வல்லவர் தீதிலா ரோதநீர் வையகத்தே.

அங்கிருந்து புறப்பட்டுத் திருப்பனையூர் முதலிய க்ஷேத்திரங்களையும் வணங்கி மறுபடியுந் திருப்புகலூருக்கு வந்தார். அப்போது முருக நாயனாரும் திருநாவுக்கரசு சுவாமிகளும் எதிர்கொண்டனர். அவர்களுடன் சிவபெருமானை வணங்கி முருகனார் திருமாளிகையில் தங்கினர். அப்போது திருநீலநக்க நாயனாரும் சிறுத்தொண்ட நாயனாரும் அங்கு வந்தனர். அவர்களோடு சிவபெருமானை வழிபட்டுச் சிலநாள் அத்தலத்தில் தங்கியிருந்தார். பின்னர், அவர்களுக்கு விடைகொடுத்துத் தம்பிரான் அருள்வழி நிற்கும் பிள்ளையாரும் திருநாவுக்கரசு சுவாமிகளும் மற்றைய தலங்களை வணங்கப் புறப்பட்டுப்போம்போது அப்பரை விட்டு

விலகாது முத்துச்சிவிகை பின்வரப் பிள்ளையார் அவருடன் நடந்தார். அப்பமூர்த்திகள் "இறைவர் உமக்குக் கொடுத்த முத்துச்சிவிகையில் எழுந்தருளுவீர்" என்றார். பிள்ளையார் "ஈசன் அருள் இதுவாயின் நீர் செல்லும் இடத்துக்கு யானும் வருவேன்" என்று முத்துச் சிவிகையில் அப்பதிக்குப் பின் சென்றார்.

நாய னருமக் களித்தருள் செய்தவிந்
நலங்கிள ரொளிமுத்தின்
றூய யானத்தின் மிசையெழுந் தருளுவீ
ரென்றலுஞ் சுடர்த்திங்கண்
மேய வேணியா ரருளுமிவ் வாறெனில்
விரும்புதொண் டர்களோடும்
போய தெங்குநீ ரங்குயான் பின்வரப்
போவதென் றருள்செய்தார்.

—பெரியபுராணம்.

சம்பந்தமூர்த்தி நாயனார் அப்பருடன் முத்துச் சிவிகையின் பின் நடந்தது பிள்ளையார் அப்பமூர்த்தியினிடத்தில் வைத்த அன்பினைக் காட்டும். சிவபெருமானால் பிள்ளையாருக்குக் கொடுக்கப்பட்ட முத்துச்சிவிகையும் சம்பந்தமூர்த்தி ஒருவரே இருக்கக்கூடிய அளவினதாய் இருந்திருத்தல் வேண்டும். அப்படியில்லாதிருப்பின் சம்பந்தர் அப்பரை முத்துச்சிவிகையில் தம்முடன் ஏறிச் செல்லும்படி செய்திருப்பார். சம்பந்தமூர்த்தி அப்பமூர்த்தியைப் பெரிதும் பேணினர் என்பது அவர் சென்ற தலத்துக்குத் தாம் அவர் பின் சென்றதினால் பெறப்படும்.

அப்பமூர்த்திகள் அம்பருக்குச் சென்றார். பிள்ளையாரும் பரிசனங்களோடு அப்பதியை அடைந்து தாம்பாடிய தேவாரத் திருப்பதிகத்தில் கோச்செங்கட்சோழர் அத்தலத்தில் செய்த திருப்பணியைச் சிறப்பித்துப் பாடினர். பின்னர்த் திருக்கடவூருக்கு அப்பர் சுவாமிகளோடு சென்றார். அப்பதியில் குங்குலியக்கலய நாயனார் மற்ற அடியார்களுடன் எதிர் கொண்டார். காலனை உதைத்த சிவபெருமானை வணங்கிப் பாமாலைசாத்திக் குங்குலியக்கலய நாயனார் மாளிகையில் தங்கி விருந்துகொண்டார். அங்கிருந்து புறப்பட்டுத் திருவாக்கூர், திருமீயச்சூர், திருப்பாம்புரம் முதலிய தலங்களுக்குச் சென்று, பாமாலைகள் சாத்தித்

துதித்து, திருவீழிமிழலைக்கு எழுந்தருளினார். அப்பதியில் அந்தணர் நிறைகுடம் தூபம் தீபம் பொற்சுண்ணம் பொரி முதலிய வரிசைகளோடு வேத ஒலி வானத்தை அளாவி நிற்க எதிர்கொண்டனர். பிள்ளையார் முத்துச் சிவிகையி னின்று இழிந்து திருநாவுக்கரசு சுவாமிகளுடன் திருக் கோயிலுட் சென்று "சடையார் புனலுடையான்" என் னும் திருப்பதிகம்பாடி ஆனந்த வெள்ளத்தில் மூழ்கிப் பணிந்தெழுந்து, புறத்தே வந்து ஓர் திருமடத்தில் எழுந் தருளினார். திருநாவுக்கரசு சுவாமிகள் இன்னொரு மடத்தில் எழுந்தருளினார். அந்நாளில் சீர்காழியில் உள்ளவர்கள் அங்குவந்து திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளை வணங் கித் தங்களோடு சீர்காழிக்கு எழுந்தருளும்படி வேண்டி னர். "திருவீழிமிழலை இறைவர் அருள்பெற்று நாளையத் தினம் சீர்காழிக்கு உங்களுடன் செல்வோம்" எனக்கூறி அன்றிரவு பள்ளிகொள்ளும்போது தோணியப்பர் பிள்ளை யார் சொப்பனத்தில் தோன்றி "நாம் சீர்காழியில் திருத் தோணியில் வீற்றிருக்குங் கோலத்தை இந்த இடத்திலேயே காண்பாய்" என்று சொல்லி மறைந்தருளினார்.

> தோணியினு மங்கிருந்த வண்ணந்
> தூமறை வீழி மிழலை தன்னுட்
> சேணுயர் விண்ணின் றிழிந்தவிந்தச்
> சீர்கொள் விமானத்துக் காட்டுகின்றோம்
> பேணும் படியா லறிதியென்று
> பெயர்ந்தருள் செய்யப் பெருந்தவங்கள்
> வேணு புரத்தவர் செய்யவந்தார்
> விரவும் புளகத் தொடுமுணர்ந்தார்.
>
> —பெரியபுராணம்.

பிள்ளையார் அதிசயித்து உச்சிமேல் கைகூப்பி வணங்கித் திருக்கோயிலுட் சென்றார். அங்கே இறைவர் சீர்காழியில் திருத்தோணியில் பராசத்தியோடு இருக்கும் திருக்கோலத்தைக்காட்ட வணங்கி, "மைம்மரு பூங்குழல்" என்னும் திருப்பதிகம் பாடி மகிழ்ந்தார். சீர்காழியிலிருந்து வந்தவர்களுக்குச் சிவபெருமானது திருவருளைச் சொல்லி அவர்களை அனுப்பினார்.

வினாவுரை.

திருப்புகலியும் திருவீழிமிழலையும்.

பண் - நட்டபாடை.

மைம்மரு பூங்குழற் கற்றை துற்ற வாணுதன்
மான்விழி மங்கையோடும்
பொய்ம்மொழி யாமறை யோர்க ளேத்தப் புகலி
நிலாவிய புண்ணியனே
எம்மிறை யேயிமை யாதமுக்க ணீசவெ னேசவி
தென்கொல் சொல்லாய்
மெய்ம்மொழி நான்மறை யோர்மிழலை
விண்ணிழி கோயில் விரும்பியதே.

விண்ணிழி கோயில் விரும்பி மேவும் வித்தக
மென்கொலி தென்று சொல்லிப்
புண்ணிய னைப்புக லிந்நிலாவு பூங்கொடியோ
டிருந்தானைப் போற்றி
நண்ணிய கீர்த்தி நலங்கொள் கேள்வி
நான்மறை ஞானசம் பந்தன் சொன்ன
பண்ணியல் பாடல்வல் லார்க ளிந்தப் பாரொடு
விண்பரி பாலகரே.

அப்பமூர்த்தி திருக்கைலாய மலையைத் தரிசிக்க விரும்பிச் சென்றபோது சிவபெருமான் அவரை அங்குச் செல்லாவண்ணம் தடுத்துத் திருக்கயிலாய மலையில் தாம் எழுந்தருளியிருக்கும் திருக்கோலத்தைத் திருவையாற்றில் தரிசிக்கும் வண்ணம் அருளிச் செய்தது தமிழ் வேதமாகிய தேவாரப் பதிகங்களால் தம்மைப் பூமியில் வழுத்தும்பொருட்டேயாம். அதுபோலத் திருவீழிமிழலையில் பஞ்சகாலத்தில் அடியார்களுக்கு அமுது அளிக்குமாறும், வேதாரணியத்தில் வேதங்கள் அருச்சித்துத் திருக்காப்புச் செய்து அடைக்கப்பட்ட கதவு திறக்கப்பட வேண்டிய காலம் சமீபித்தமையாலும், சமணசமயம் நீங்கவும், சைவசமயம் வளரவும் செய்யத்தக்க புதல்வனைப் பெற வேண்டுமென்று சிவபாதவிருதயர் செய்த தவமானது பயன்படுங் காலம் வந்தமையாலும், திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகள் திருவீழிமிழலையிலிருந்து சீர்காழிக்கு எழுந்தருள எண்ணியபோது சிவபெருமான் சீர்காழியில் தாம் எழுந்தருளியிருக்கும் திருக்கோலத்தை அங்குக் காட்டி அவரைத் தடுத்தருளினர் போலும்.

பிள்ளையார் திருநாவுக்கரசருடன் திருவீழிமிழலையில் தங்கியிருக்கும் போது மழையில்லாமையால் பஞ்சம் உண்டானது. அப்போது நாயன்மார் இருவரும் திருநீற்றைப்

பரிபாலனஞ் செய்யும் அடியவர்களுக்குக் கவலை வருமோ என்று சிந்தனை செய்தனர்.

சிவபெருமான் சொப்பனத்தில் இருவருக்கும் காட்சி கொடுத்து "பஞ்சகாலம் நீங்கும்வரை உங்கள் அடியார் பசி நீக்குதற்குக் கிழக்குப் பீடத்திலும் மேற்குப் பீடத்தி லும் ஒவ்வொரு காசு உங்களுக்குத் தருகின்றேம். அதை நீங்கள் எடுத்து வேண்டிய பொருள்களை வாங்கி அடியார் களுக்கு அமுது படையுங்கள்" என்றருளிச் செய்தார்.

வானாகி நிலனாகி யனலு மாகி மாருதமா
யிருசுடராய் நீரு மாகி
யூனாகி யுயிராகி யுணர்வு மாகி
யுலகங்க ளனைத்துமா யுலகுக் கப்பா
லானாத வடிவாகி நின்றார் செய்ய
வடிபரவி யன்றிரவு துயிலும் போது
கானாடு கங்காளர் மிழலை மூதூர் காதலித்தார்
கனவிலணைந் தருளிச் செய்வார்.

உலகியல்பு நிகழ்ச்சியினி லணைந்த தீய
வுறுபசிநோ யுமையடையா தெனினு மும்பா
னிலவுசிவ நெறிசார்ந்தோர் தம்மை வாட்ட
நீக்குதற்கு நித்தமொரோர் காசு நீடு
மிலகுமணிப் பீடத்துக் குணக்கு மேற்கும்
யாமளித்தோ முமக்கிந்தக் காலந் தீர்ந்தா
லலகில்புக ழீர்தவிர்வ தாகு மென்றே
யருள்புரிந்தார் திருவீழி மிழலை யையர்.

—பெரியபுராணம்.

கிழக்குப் பீடத்திலிருந்து திருஞானசம்பந்தப் பிள்ளை யாரும், மேற்குப்பீடத்திலிருந்து திருநாவுக்கரசு சுவாமி களும் தினந்தோறும் ஒவ்வொரு காசு எடுத்துப் பறையறை வித்துஅங்குச்செல்லும் அடியார்களுக்கு அமுது படைத்து வந்தனர். அப்பமூர்த்தி பெற்ற காசுக்கு வாசி யில்லாமலும், பிள்ளையார் பெற்ற காசுக்கு வாசி கொடுத்தும் கடை வீதியில் மாற்றவேண்டி யிருந்தமையைப் பாருகர்கள் பிள்ளையாருக்கு அறிவித்தனர். அது கேட்ட பிள்ளையார் நாவுக்கரசர் கைத்தொண்டு செய்தமையால் நல்ல காசு

பெற்றார் என்று எண்ணித் தாம் பெறுங் காசுக்கு வாசி தீரப் பாடி மறுநாள் நல்லகாசு பெற்றார்.

வாசி தீரவே
காசு நல்குவீர்
மாசின் மிழலையீர்
ஏச லில்லையே. —தேவாரம்.

சிவஞானிகள் ஓடும் செம்பொன்னும் ஒக்கவே நோக்குவர். ஆகையால் பஞ்சகாலம் நீங்கும் வரையில் காணக்கூடிய பொருளைக் கொடுக்காது சிவபெருமான் நாளொன்றுக்கு ஒவ்வொரு காசாகக் கொடுத்தார் போலும். சிவஞானிகள் பொருளைப் பாதுகாக்கும் இயல்புடையவரல்லர்.

பஞ்சம் நீங்கியபின் பரமாசாரியர் இருவரும் அங்கிருந்து புறப்பட்டுத் திருவாஞ்சியம், திருத்தலையாலங்காடு, திருச்சாத்தங்குடி, திருக்கரவீரம், திருவிளமர், திருவாரூர், திருக்காறாயில், திருத்தெங்கூர், திருக்கொள்ளிக்காடு, திருக்கோட்டூர், திருவெண்டுறை, திருத்தண்டலைநீணெறி, திருக்களர் முதலிய தலங்களை வணங்கித் திருமறைக்காட்டுக்கு வந்தனர். அப்பட்டினவாசிகளும் அடியார்களும் அப்பதியை அலங்கரித்து நாயன்மார் இருவரையும் எதிர்கொண்டு வணங்கினர். அடியார்கள் "அரகர!" என்று செய்த முழக்கமானது பத்துத் திசைகளிலும் ஒலித்தது. அங்குத் திருக்கோயிலுக்குச் சென்று வலஞ் செய்து வணங்கித் திருவாயிலில் பரமாசாரியர் இருவரும் வந்தனர். வேதங்களால் அருச்சித்துத் திருக்காப்புச் செய்த அந்நாள் முதல் வேதம் ஓதும் பேரன்புடையார் வந்து திறக்கப்படாமையினால் அன்று முதல் வேறோர் வாசல் வகுத்து வழிபடுதலைப் பிள்ளையார் கேட்டறிந்தார். அதனால் புகலி வேந்தர் வியப்பெய்தி அப்பரை நோக்கி "நாம் அபிமுகத்து வழியாக உள்ளே சென்று இறைவரை வணங்கவேண்டும். நீரே இத்திருக்கதவு திறக்க மெய்ப்பொருள் வண்டமிழ் பாடும்" என்றார். அப்பர் சுவாமிகள் அங்ஙனமே திருப்பதிகம் பாடினர். பத்தாம் திருப்பாட்டுவரையில் திருக்கதவு திறவாதிருந்தது. திருக்கடைக் காப்பில் சிவபெருமானை மிக வருந்திப்பாடத் திருக்கதவு திறந்தது. அடியார்கள் வியந்து

மகிழ்ந்தனர். பின் அவர்கள் திருக்கோயில் உள்ளே சென்று வேதாரணியேசுரரை வணங்கிச் சிவானந்த வெள்ளத்தில் மூழ்கினர். இருவரும் வெளியேறி வந்தபோது அப்பர் சுவாமிகள் பிள்ளையாரை நோக்கி "சுவாமி திருவருளினால் இக்கதவு எப்போதும் அடைக்கப்படவும் திறக்கப்படவும் திருப்பதிகம் பாடியருளும்" என வேண்டினர். அவர் "சதுரம்மறை" என்னும் முதலையுடைய திருப்பதிகத்தைப் பாடத் தொடங்கவும் திருக்கதவு உடனே அடைந்தது. அன்று முதல் அவ்வாயில் வழியாகப் போக்கு வரவு என்றும் வழக்கமாய் நடைபெறுவதாயிற்று.

திருமறைக்காடு - பண் - இந்தளம்.

சதுரம்மறை தான்றுதி செய்து வணங்கும்
மதுரம் பொழில் சூழ்மறைக் காட்டுறை மைந்தா
இதுநன்கிறை வைத்தருள் செய்க வெனக்குன்
கதவந்திருக் காப்புக் கொள்ளுங்கருத் தாலே.

காழிந்நக ரான்கலை ஞானசம் பந்தன்
வாழிம்மறைக் காடனை வாய்ந்தறி வித்த
ஏழின்னிசை மாலையீ ரைந்திவை வல்லார்
வாழியுல கோர்தொழ வானடை வாரே.

இதனால் வடமொழி வேதம் போலத் தமிழ் வேதமும் சிறப்புடைத்து என்பது பெறப்படும்.

தொண்டர் நாதனைத் தூதிடை விடுத்தது முதலை
உண்ட பாலனை யழைத்தது மெலும்பு பெண்ணுருவாக்
கண்டதும் மறைக் கதவினைத் திறந்ததுங் கன்னித்
தீண்டமிழ்ச் சொலோ மறுபுலச் சொற்களோ சாற்றீர்.

—திருவிளையாடற் புராணம்.

"ஈசுரனால் அருளிச்செய்யப்பட்ட வேதப் பொருளமைத்துத் தமிழ் வேதமாகிய தேவாரப் பதிகங்களைத் திருவாய் மலர்ந்தருளும் சிவஞான அமுதுண்ட பிள்ளையாரே இவ்வாறு அற்புதம் செய்யவல்லார். வேதத்தினால் அடைக்கப்பட்ட கதவு என் பாட்டுக்குத் திறக்கத் தாழ்ந்ததற்கும், அவர் பாடத்தொடங்க எளிதில் அடைக்கப்பட்டதற்கும் இதுவே காரணம்" என நினைந்து வாக்கின் வேந்தராகிய அப்பர் சுவாமிகள் துயிலும்போது சிவபெருமான் அவருக்

குத் தோன்றி "நாம் வாய்மூரில் இருப்போம்; அங்கே வா" என்று அருளிச் செய்து சென்றார்.

திருமறை நம்பர்தாமுன் பருள்செய்த வதனைச் செப்பு
மொருமையி னின்ற தொண்டர் தம்பிரா னார்பா லொக்க
வருமருட் செய்கை தாமே வகுத்திட வல்லோ ரென்றூற்
பெருமறை யுடன்மெய்த் தொண்டர்க் கிடையீடு பெரிதா மன்றே.

இவ்வகை திருமறைக்காட் டிறையவ ரருளை யுன்னி
மெய்வகை தெரிந்த வாக்கின் வேந்தர்தாந் துயிலும் போதின்
மைவளர் கண்டர் சைவ வேடத்தால் வந்து வாய்மூ
ரவ்விடை யிருத்து மங்கே வாவென்றங் கருளிப் போக.

—பெரிய புராணம்.

அப்போது அப்பர் சுவாமிகள் வணங்கிப் பின் செல்ல அவரைக் கிட்டினார் அல்லர். இறைவர் ஓர் திருக்கோயிலைக் காட்டியதனுட் சென்றார். பிள்ளையார் அப்பர் சுவாமிகள் போனதை யறிந்து பின் தொடர்ந்து செல்ல இறைவர் உமாதேவியாரோடு ஆடல் காட்டப் பிள்ளையார் தரிசித்து "தளிரிவளரொளி" என்னும் திருப்பதிகம் பாடினர். பின் இருவரும் திருவாய்மூருக்குப்போய்த் திருப்பதிகம்பாடிச் சிவபெருமானைத் துதித்துக்கொண்டு சிலநாள் தங்கி மறுபடியும் வேதாரணியத்துக்கு மீண்டனர். அந்நாளில் பாண்டிநாட்டை யரசாண்ட கூன்பாண்டியன் முற்பிறப்பில் செய்த தீவினைப் பயனால் சமண சமயத்தை மெய்ச் சமய மென்றெண்ணி அச்சமயத்தில் பிரவேசித்தான். அந்நாளில் சமணர்கள் பள்ளிகள் மிகுந்திருந்தன. சமண முனிவர்கள் எங்கும் சென்று தமது சமயத்தைப் பரப்பினர். "அரசனெவ்வழி குடிகளவ்வழி" என்றபடி, பாண்டியன் பத்தினியாரும் மங்கையர்க்கரசியாரும் மந்திரியாகிய குலச்சிறை நாயனாரும் தவிர, பாண்டிநாட்டிலுள்ள யாவரும் சமணமதம் சார்ந்தனர். "அவம்பெருக்கும் புல்லறிவினமண்முதலாம் பரசமயப் பவம்பெருக்கும் புரைநெறிகள் பாழ்பட" அவதாரஞ் செய்த திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் திருமறைக்காட்டில் எழுந்தருளியிருப்பதைக் குலச்சிறை நாயனாரும் மங்கையர்க்கரசியாரும் கேட்டறிந்து கைகூப்பி வணங்கினர். சில பரிசனங்களைப்

பிள்ளையாரிடம் அனுப்பிப் பாண்டிமன்னனும் பாண்டி நாட்டு மக்களும் சமண மதத்தில் பிரவேசித்தார்கள் என் பதை அறிவிக்கும்படி கட்டளையிட்டனர். பரிசனங்கள் பாண்டிநாட்டிலிருந்து மறைக்காடு வந்து பிள்ளையாரை வணங்கிநின்று பாண்டிநாட்டில் சமணர்செய்யும் தீமை களை எடுத்துக் கூறினர். பிள்ளையார் திருநாவுக்கரசு சுவாமிகளுக்குப் பாண்டிநாட்டின் செய்தியைத் தெரிவித் துத் தாம் பாண்டிநாட்டுக்குப் போகப் புறப்பட்டார். திருநாவுக்கரசு சுவாமிகள் அவரை நோக்கி "நீர் சிறு பிள்ளையாய் இருக்கிறீர்! இப்போது கிரகங்களும் சுபமா யில்லை; சமணர்கள் வஞ்சனைக்கோ எல்லையில்லை. ஆகையால், நீர் மதுரைக்குப் போதல்கூடாது" என்றார். அது கேட்ட பிள்ளையார் "சிவபெருமானை என்றும் வழிபடும் நமக்கு யாதொரு தீங்குமில்லை" என்றுகூறி "வேயுறுதோளிபங் கன்" என்னும் முதலையுடைய திருப்பதிகம் பாடியருளினார்.

கோளறு பதிகம்

பண் - பியந்தைக் காந்தாரம்.

வேயுறு தோளி பங்கன் விடமுண்ட கண்டன்
  மிகநல்ல வீணை தடவி
மாசறு திங்கள் கங்கை முடிமே லணிந்தெ
  னுளமே புகுந்த வதனால்
ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன்வியாழன்
  வெள்ளி சனிபாம் பிரண்டு முடனே
ஆசறு நல்ல நல்ல வவை நல்ல நல்ல
  வடியா ரவர்க்கு மிகவே.

தேனமர் பொழில் கொளாலை விளைசெந்நெ
  றுன்னி வளர்செம்பொ னெங்குநிகழ
நான்முக னாதி யாய பிரமா புரத்து மறைஞான
  ஞான முனிவன்
தானுறு கோளு நாளுமடியாரை வந்து
  நலியாத வண்ண முரைசெய்
ஆனசொன் மாலை யோது மடியார்கள்
  வானி லரசாள்வ ராணை நமதே.

அதனைக்கேட்ட திருநாவுக்கரசு சுவாமிகள் பாண்டி நாட்டுக்குத் தாமும் புறப்படப் பிள்ளையார் அவரைச்

சோழ நாட்டிலே இருக்கவேண்டுமென்று கைகுவித்து வணங்கித் தடுத்தனர். திருநாவுக்கரசு சுவாமிகளைச் சோழ தேசத்திலுள்ள தலங்களுக்குச் செல்லவிட்டு அவரிடம் விடைபெற்றுப் பாண்டிநாட்டுக்கு முத்துச்சிவிகையின் மேலேறி அஞ்செழுத்தை ஓதிக்கொண்டு புறப்பட்டனர்.

நாவுக்கரசர் ஞானசம்பந்த சுவாமிகளிடம் எவ்வளவு அன்பு பூண்டு இருந்தார் என்பது பிள்ளையாரை மதுரைக்குப் போகாமல் தடுத்துத் தாம் போகப் புறப்பட்டதனுலும் அவரோடு சேர்ந்து தல யாத்திரை செய்ததனுலும் அறியப்படும்.

> வாக்கரசர் பிள்ளா யெனவலித்து மாற்றலுற்ருர்
> தாக்கு பிள்ளை யார்செலவைச் சோமசோ - நோக்கி
> நகுதற் பொருட்டன்று நட்டன் மிகுதிக்கண்
> மேற்சென் றிடித்தற் பொருட்டு.

என்னும் முது மொழி வெண்பாவினுலும் அறிக. எப்போதும் இறைவர் திருவடிகளை மறவாதவராகையால் ஐந்தெழுத்தை ஓதிக் கொண்டே சென்ருர் பிள்ளையார்.

பிள்ளையார் செல்லும்போது தொண்டர்கள் முழக்கம் செய்தனர். மங்கல வாத்தியங்கள் ஒலித்தன. கொடிகள் ஆகாயத்தை மறைத்தன. அடியார்கள் ஒவ்வொரு தலத்திலும் எதிர்கொண்டழைத்தனர். வழியிலுள்ள அகத்தியான் பள்ளி, கோடிக்குழகர் கோயில், திருக்கடிக்குளம், திருவிடும் பாவனம், திருவு சாத்தானம் முதலிய தலங்களை வணங்கிச் சோழ தேசத்தைக் கடந்து பாண்டிநாட்டை யடைந்து திருக்கொடுங்குன்றம் வணங்கி மதுரையைச் சமீபித்தார்.

அப்போது சமணர்கள் துர்ச்சகுனங்களைக் கண்டார்கள். ஆந்தைகளும் கூகைகளும் தீய புள்ளினங்களும் பள்ளிகள் மேலும், அசோக மரத்தின்மேலும், மண்டபங்கள் மேலும் பூசலிட்டு அழிவுக்குரிய குறிகளைக் காட்டின. பீலியும் தடுக்கும் பாயும் வழுவி விழுந்தன. கால்கள் தடுமாறின. இடக்கண்கள் துடித்தன. சமணர்களெல்லாம் மயங்கிப் பயந்து அரசனுக்கு இவைகளை அறிவித்தார்கள். சிவதொண்டரெல்லாம் மதுரையிற் கூடினராகவும், அரசன்

தீயில் மூழ்கி எழும்பினதாகவும், இளங்கன்று ஒன்று தங்களைச் சிதறி ஓடச்செய்ததாகவும், தாங்கள் நிழலில்லா மரங்களில் ஏறி நின்றிடக் கண்டதாகவுங் கூறி வருந்தினார்கள். அவர்கள் நிலை இப்படி யிருக்க, சைவ மரபில் வந்த மங்கையர்க்கரசியாரும், குலச்சிறையாரும் நன்நிமித்தங்கள் கண்டு மகிழ்ந்தனர்.

பிள்ளையார் வரவைக் கேட்ட மங்கையர்க்கரசியார் பிள்ளையாரை எதிர்கொள்ளக் குலச்சிறை நாயனாரை அனுப்பினார். மந்திரியார் செல்லவும் மதுரைக்குப் புறத்தில் முத்துச்சிவிகையில் பிள்ளையார் எழுந்தருளி அடியார் கூட்டத்தோடு வருதலைத் தூரத்தில் கண்டு வணங்கி ஆனந்தங் கொண்டு பூமியில் விழுந்துகிடந்தார். பிள்ளையார் அவர் சமீபத்தில் வந்ததும் முத்துச்சிவிகையினின்று இறங்கி விரைந்து சென்று தமது திருக்கரங்களினால் அடியற்றமரம் போலக் கிடக்கும் குலச்சிறையாரைத் தூக்கி எடுக்க, அவர் எழுந்து கைதொழுது "பாண்டி நாடு முழுதும் சுவாமிகள் வரவைப்பெற்று வாழ்ந்தது" என்றும், இங்கே சுவாமிகள் எழுந்தருளிய பெருமையைக் கேட்டு மகிழ்ந்து அதனைப் பெரும்பேறாக மதித்துத் தேவரீரை எதிர்கொண்டு அழைக்கும்படி மங்கையர்க்கரசியார் அருள் செய்தார் என்று கூறி மீண்டும் பணிந்து வணங்கினார். பிள்ளையார் மந்திரியாருக்கு அருள் செய்து அவரை நோக்கி, "எம்பெருமான் திருவாலவாய் எம்மருங்குளது?" என்று கேட்டார். சோலைகள் சூழப்பெற்று வானளாவிய உயர்ந்தகொடியுடைய திருக்கோயிலைக் குலச்சிறையார் காட்டினர். பிள்ளையார் உடனே கைகுவித்துப் பூமியில் விழுந்து வணங்கி எழுந்து மங்கையர்க்கரசியாரை ஓர் பாசுரத்திலும், குலச்சிறை நாயனாரை இன்னோர் பாசுரத்திலும் முறையே வைத்தும் இறுதிப்பாசுரத்தில் இருவரையும் வைத்தும் சிறப்பித்துத் திருப்பதிகம் பாடியருளினார்.

திருவாலவாய்—பண் - புறநீர்மை.

மங்கையர்க் கரசி வளவர்கோன் பாவை வரிவளைக் கைம்மட மானி
பங்கயச் செல்வி பாண்டிமா தேவி பணிசெய்து நாடொறும் பரவப்

பொங்கழ லுருவன் பூதநா யகனல் வேதமும் பொருள்களு மருளி
அங்கயற் கண்ணி தன்னேடு மமர்ந்த வாலவா யாவது மிதுவே.

வெற்றவே் யடியா ரடிமிசை வீழும் விருப்பினன்
வெள்ளை நீறணியும்
கொற்றவன் றனக்கு மந்திரியாய குலச்சிறை
குலாவினின் றேத்தும்
ஒற்றைவெள் விடைய னும்பரார் தலைவ னுலகினி
லியற்கையை யொழிந்திட்
டற்றவர்க் கற்ற சிவனுறை கின்ற வாலவா
யாவது மிதுவே.

பன்னலம் புணரும் பாண்டிமா தேவி குலச்சிறை
யெனுமிவர் பணியும்
அந்நலம் பெறுசீ ராலவா யீசன் றிருவடி
யாங்கவை போற்றிக்
கன்னலம் பெரிய காழியுண் ஞான சம்பந்தன்
செந்தமி ழிவைகொண்
டின்னலம் பாட வல்லவ ரிமையோ ரேத்தவீற்
றிருப்பவ ரினிதே.

பிள்ளையார் கோயிலுட் சென்று வலம் வந்து பலகால் எட்டு அங்கங்களும் பூமியிற்பட விழுந்து எழும்பிப் புளகங் கொண்டுக் கண்ணீர் சொரிய, சோமசுந்தரக் கடவுளை வணங்கி நல்லிசைத் தமிழ்ச்சொன் மலர்மாலை சாத்தித் திருமுன்றிலிற்கு வந்தார். முன்னரே அங்கு வந்து ஓர் பக்கத்தில் ஒதுங்கி நின்ற பாண்டிமாதேவியாரை மந்திரியார் பிள்ளையாருக்கு அறிவித்தார். பிள்ளையார் அவர்முன் களிப்புடன் சென்றார். மங்கையர்க்கரசியார் பிள்ளையார் திருவடிகளில் விழுந்து வணங்கினார். பிள்ளையார் அவரைத் திருக்கையால் எடுத்து அருள் புரிந்தார். பாண்டிமாதேவியார் தமது கருத்து முற்றியதென மதித்துக் கண்களிலிருந்து நீர் சொரிய, மொழி தடுமாற "யானும் என் பதியும் செய்த தவம் என்கொல்" என்று வியந்தார். பிள்ளையார் "சூழு மாகிய பரசமயத்திடைத் தொண்டு வாழு நீர்மையீ ருமைக் காண வந்தனம்" என்றார். பிள்ளையார் மற்ற அடியார்களுக்கும் அருள்செய்து மடத்துக்கு எழுந்தருளிப் பரிசனங்களுடன் இனிதமர்ந்தார். மங்கையர்க்கரசியார் அருளால்

குலச்சிறைநாயனார் பிள்ளையாரோடு கூடிய அடியார்களுக்கு விருந்தளித்தனர்.

பிள்ளையார் அடியாருடன் பகலில் வரக்கண்ட சமணர்கள் மனங்கலங்கினார்கள். எல்லோருங் கூடினார்கள். பிள்ளையார் இருந்த திருமடத்தில் ஓதும் திருப்பதிகத்தின் இசையைக் கேட்டுப் பொறாமை கொண்டு பாண்டியனிடம் சென்று இன்று உன்தன் மதுரையில சைவ வேதியர் வருதலால் நாங்கள் எல்லோரும் 'கண்டு முட்டு' என்றார்கள். அரசனும் தான் 'கேட்டு முட்டு' என்று இயம்பிக் கோபத்துடன் "அச்சைவ வேதியர் யார்? இங்கு ஏன் வந்தார்" என்றான். "சீர்காழியில் சிவன்பால் ஞானம் பெற்ற ஓர் சுருதிப்பாலன் முத்துச்சிவிகையில் தன்னுடைய அன்பருடன் எங்களை வாதில் வெல்ல வந்தனன்" என்றார்கள். அதுகேட்ட அரசன் கோபித்து என்ன செய்யவேண்டும் என்று கேட்டான். சமணர்கள் சிறு மறையோன் இருக்கும் மடத்தில்விஞ்சை மந்திரத்தால் நெருப்புப்பற்றிஎரியச்செய்தால் அவன் இந்நகரை விட்டு ஓடிவிடுவான் என்றார்கள். அரசனும் அப்படியே விரைந்து செய்யும்படி சொல்லி அவர்களை அனுப்பிவிட்டுத் துக்கத்தோடு ஒருவரோடும் பேசாது பூவணையமளியில் படுத்திருந்தான். மங்கையர்க்கரசியாரும் அங்கு வந்தார். பாண்டியன் ஒன்றும் பேசாது கவலையோடு இருக்கத்தேவியார் "எனது பிராண நாயகரே! வழக்கம்போல மகிழ்ச்சி இல்லாது முகம்புலர்ந்து இருக்கின்றீர்; என்ன கவலை?" என்று கேட்டார். காவிரி நாட்டிலிருந்து ஒருவன் சங்கரன் அருள்பெற்று இங்கு நமது அடிகண்மாரை வாதில் வெல்லுமாறு தன் அடியார்களோடு வந்துள்ளான். அடிகண்மார் அவர்களைக் கண்டு முட்டு, நான் கேட்டு முட்டு என்றான் பாண்டியன். "அப்படியாயின் இருதிறத்தினரும் வாதுசெய்து வென்றவர் பக்கம் சேர்ந்துய்வது உறுதியாகும். அரசே! கவலை யொழிக" எனக் கூறித் தமது மாடத்துக்குச் சென்றார். பின்னர், குலச்சிறை நாயனார் அங்கு வந்தார். தேவியார் மந்திரியாருக்கு அரசன் சொன்ன செய்தியைத் தெரிவித்தார்.

குலச்சிறையார் தலைமேல் கைகுவித்து நின்று "பிள்ளையார் இங்குவரப் பேறுபெற்றோம். ஆனால், சமணர் செய்யும் வஞ்சனையை அறியோம்" என்றார். பாண்டிமாதேவி யாரும் சமணர்கள் கொடுந்தொழில் செய்ய வல்லவர்கள். திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளுக்குச் சமணர்களால் தீமை வந்தால் நாம் உயிர் துறந்துவிடுவோம் என்று கூறி அச்சத்தோடு இருந்தார்.

சமணர்கள் பிள்ளையார் எழுந்தருளியிருக்கும் மடத்தில் தீப்பற்றி எரியும்படி தங்கள் மந்திரத்தைச் செபித்தார்கள். ஆதி மந்திரமாகிய ஐந்தெழுத்தை ஓதும் பெரியோர் நோக்கும் திசையில் மற்றைய மந்திரம் பலிக்குமோ? பலிக்காது. சமணர்கள் தங்கள் மந்திரத்தினால் தீப்பற்றாததைக் கண்டு மனம் தளர்ந்தார்கள். அரசன் அறிந்தால் தங்கள் சார்பில் நிற்கமாட்டான். தங்கள் விருத்தியையும் ஒழித்திடுவன் என்று எண்ணிப் பிள்ளையார் இருக்கும் மடத்தில் தீயைக் கொண்டுவந்து மூட்டினார்கள். இது கண்ட பரிசனங்கள் பதைப்புடன் அத்தீயை அணைத்துப் பிள்ளையாருக்குச் சமணர்கள் செய்த கொடிய செய்கையை விண்ணப்பம் செய்தனர். பிள்ளையார் இத்தீங்கைத் தம் பொருட்டுச் சமணர்கள் செய்தனராயினும், சிவனடியார்கட்கு எய்துமோ என்று முதலில் அஞ்சினார்.

"அன்றமணர் தீவைப்ப வஞ்சிய தென்னென்னின்மின்
துன்றியசீர்ச் சம்பந்தர் சோமேசா - நன்றேயாம்
அஞ்சுவ தஞ்சாமை பேதைமை யஞ்சுவ
தஞ்ச லறிவார் தொழில்"

பின் கோபங்கொண்டு "இஃது அரசனது செங்கோன் முறை வழுவால் நேரிட்டது" என்று திருவுள்ளங்கொண்டார். "அடியார்கள் இருக்கும் மடத்தில் சமணர்கள் கொளுத்தின தீயையவே சென்று பாண்டியற்காக" எனப் பணித்தார்.

மங்கையர்க்கரசியார் திருமங்கிலியத்தைக் காக்கவும், குலச்சிறை நாயனாரது அன்பைக்கண்டும், பாண்டியன்பால் அபராதம் உறுதலாலும், பின்னர் அவன் அதினின்று நீங்

சப்பெற்றுச் சிவநெறியடையும்விதியுண்மையாலும், வெப்பு நோய் நீங்கும்பொருட்டுத் தமது திருக்கரங்களினால் விபூதி பூசப் பெறும்பேறு அரசனுக்கு உடைமையாலும், வெப்பு நோயைப் "பையவே செல்க" என்று அருளிச்செய்தார்.

பாண்டிமா தேவியார் தமது பொற்பிற்
பயிலுநெடு மங்கலநாண் பாது காத்து
மாண்டகையார் குலச்சிறையா ரன்பி னாலு
மரசன்பா லபராத முறுத லாலு
மீண்டுசிவ நெறியடையும் விதியி னாலும்
வெண்ணீறு வெப்பகலப் புகலி வேந்தர்
தீண்டியிடப் பேறுடைய னாத லாலுந்
தீப்பிணியைப் பையவே செல்க வென்றார்.

—பெரியபுராணம்.

திருவாலவாய்—பண் - கௌசிகம்.

செய்ய னேதிரு வாலவாய் மேவிய
ஐய னேயஞ்ச லென்றருள் செய்யெனைப்
பொய்ய ராமம ணர்கொளு வுஞ்சுடர்
பைய வேசென்று பாண்டியற் காகவே.

அப்ப னாலவா யாதி யருளினால்
வெப்பந் தென்னவன் மேலுற மேதினிக்
கொப்ப ஞானசம் பந்த னுரைபத்தும்
செப்ப வல்லவர் தீதிலாச் செல்வரே.

மறுநாட் காலையில் பாண்டிமாதேவியார் மந்திரி மூலமாகச் சமணர்கள் அன்று இரவு செய்த கொடுஞ் செய்கையை அறிந்தார். பிள்ளையாரை இந்தக் கொடியவர்கள் இருக்கும் நாட்டுக்கு அழைத்த நாம் உயிர்விடுதல் வேண்டுமென மனமயங்கிப் பதைத்தார். பின்னர், திருமடத்தில் சமணர்கள் செய்த தீமை எப்படி முடியுமோ என்று எண்ணினார். அப்போது தீங்குண்டாகாமையை யறிந்து தெளிந்தார். அரசனுக்கு வெப்பு நோய் வந்ததை அறிந்து மங்கையர்க்கரசியார் பதைபதைத்து அரசனிடம் சென்றார். குலச்சிறையாரும் அரசன் பக்கத்தில் வந்தார்.

சுவாமிகளது திருவாக்கின்படி அக்கினியின் வெப்பமானது சுரநோயாகிப் பாண்டியனை வருத்தியது.

திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகள் திருவடிகளில் இருவரும் கண்ணீர் சொரிய விழுந்து வணங்கி அடியற்ற மரம்போல் கிடந்தார்கள். மறைவாழ வந்த பூம்புகலி அண்ணலார் அவர்களை இரண்டு திருக்கரங்களாலும் எடுத்தருளி "உங்களுக்கு ஏதும் தீங்குண்டோ?" என வினவினார். "சமணர்கள் செய்த கொடுந் தொழிலுக்கு அஞ்சினோம். அதனால் தேவரீர் திருமேனிக்கு ஒரு துன்பமும் இல்லை என்று கவலை தீர்ந்தோம். வஞ்சகராகிய சமணர் செய்த தீமையானது வெப்பு நோயாக அரசனைச் சார்ந்தது. சமணர்களால் அக்கொடிய நோய் தீர்ந்திலது. அவர்கள் செய்த பரிகாரங்களால் நோய் குறையாது வளர்ந்து கொண்டே இருக்கிறது. தேவரீர் அரசன் முன் எழுந்தருளிச் சமணரை வென்றருளினால், எங்கள் உயிரும் அரசனுயிரும் பிழைக்கும்" என்று வணங்கினார்கள். முத்தமிழ் விரகர் அவர்களை நோக்கி "நீர் ஒன்றும் அஞ்ச வேண்டாம். இன்று நீர் மகிழுமாறு யாவரும் காண அறிவில்லாத சமணர்களை வாதில் வென்று அரசனைத் திருநீறு அணியச்செய்வோம்" என்றருளினார். உடனே மங்கையர்க்கரசியாரும் மந்திரியாரும் கவலைக் கடலிலிருந்து நீங்கி முகமலர்ந்து "தென்னாடு செய்த தவத்தால் தேவரீர் முத்துச்சிவிகையில் எழுந்தருளப் பெற்றோம். இனி எப்பேறுதான் பெறமாட்டோம்" என்று தொழுதனர். பிள்ளையார் அடியார் கூட்டத்துடன் மடத்தினின்றும் திருக்கோயிலுட் சென்று சொக்கநாதப்பெருமானை வணங்கிப் பதிகம் பாடிச் சமணர்களை வாதில் வெல்லும்வண்ணம் "ஞால நின்புகழேயாக வேண்டும்" எனப் போற்றி இறைவர் திருவருள் பெற்று மகிழ்ந்து அடியார் சூழ, பாண்டிமாதேவி சிவிகையின் பின் செல்ல, அரசன் அரண்மனைக்கு வந்தார். மந்திரியார் முன்னரே சென்று பிள்ளையார் வருகையை அறிவிக்கப் பாண்டியன் முன் இருந்ததிலும் சிறிது நோய் நீங்கத் தமது முடியின் பக்கத்தில் பொன்மணிப்பீடம் பிள்ளையாருக்கு இடுவித்துப் பின்னரும் பிள்ளையாரை எதிர்கொள்ளும்படி மந்திரியாரை அனுப்பினான். சமணர்கள் அரசனை நோக்கி "உம்முடைய சமயத்தை நீரே நிலைநிறுத்த

வேண்டும். உம்முடைய நோயை அவரும் நாங்களும் தீர்க்க முயலும்போது அவர் தீர்த்தாலும் நாங்களும் தீர்த்தாகச் சொல்லவேண்டும்" என்றனர். பாண்டியன் அதுகேட்டுக் கைதவம் பேச இசைந்திலன். சமணர்கள் பாண்டியன் சொல்லியதைக் கேட்டு மனம் தளர்ந்து இருந்தார்கள். அப்போது மங்கையர்க்கரசியாரும் மந்திரியாரும் முன்செல்ல, பிள்ளையார் சிவிகையினின்றும் இறங்கி வருவதைப் பாண்டியன் கண்டான். பிள்ளையாரைக் கண்டவுடனே தன்னை மறந்து கையெடுத்து வணங்கிப் பக்கத்தில்இருக்கும் பொன்மணிப் பீடத்தைக் காட்டினான். பிள்ளையார் அதில் எழுந்தருளியிருந்தார். சமணர் எல்லோரும் அச்சம் கொண்டார்கள். பிள்ளையார் கிருபா நோக்கினால் அரசன் நோய் சிறிது நீங்கப்பெற்று அவர் பதியாதெனை விருப்புடன் கேட்டான். பிள்ளையார் "கழுமல நாங்கருதுமூரே" எனத் திருப்பதிகத்தினால் விடை கொடுத்தார்.

திருப்பிரமபுரம்—திருச்சக்கரமாற்று

பண் - காந்தாரம்.

பிரமனூர் வேணுபுரம் புகலி வெங்குருப் பெருநீர்த் தோணி
புரமன்னு பூந்தராய் பொன்னஞ் சிரபுரம் புறவஞ் சண்பை
அரன்மன்னு தண்காழி கொச்சைவய முள்ளிட்டங் காதி யாய
பரமனூர் பன்னிரண்டாய் நின்றதிருக் கழுமலநாம் பரவு மூரே.

பிரமபுரம் - பிரமதேவன் பூசித்த தலம்; வேணுபுரம் - இந்திரன் சூரபதுமனுக்குப் பயந்து மூங்கில் வடிவமாக இருந்து பூசித்த தலம்; புகலி - தேவர்கள் சூரபதுமனுக்குப் பயந்து வந்தடைந்த இடம்; வெங்குரு - அசுர குருவாகிய சுக்கிரன் பூசித்தருள் பெறறதலம்; தோணிபுரம் - கடையுகப் பிரளய காலத்தில் தோணிபோல் மிதந்த தலம்; பூந்தராய் - சங்கநிதி, பதுமநிதி என்னுமிரண்டும் பூசித்துத் தம்மை வேண்டி நிற்பார்க்கு வேண்டுவன ஈயும் வரத்தைப் பெற்ற தலம்; சிரபுரம் - தேவர்களுக்கு மறைந்திருந்து அமிர்தத்தை உண்ட இரண்டு அசுரரின் வெட்டுண்ட தலைகள் பூசித்து இராகு கேது என்னும் பதவியைப் பெற்ற தலம்; புறவம் - பிரசாபதி முனிவர் தமது சாபம் நீங்கும்படி புறவடிவத்தோடிருந்து பூசித்த தலம்; சண்பை - கோபால குமாரர்கள் சண்பைக் கதிர்களால் மடியச் செய்த ஆபத்திலிருந்து நீங்கும்படி பூசித்த தலம்; காழி - காளி என்னும்

சர்ப்பத்தால் பூசிக்கப்பட்ட தலம்; கொச்சைவயம் - பராசர முனிவர் மச்சகந்தியைச் சேர்ந்ததனால் உண்டான கெட்ட நாற்றம் நீங்கும்படி பூசித்த தலம்; கழுமலம் - உரோமசன்ம முனிவர் பூசித்துத் தமது மலங்கள் நீங்கப்பெற்ற இடம். சிவபெருமான் ஞானப்பாலைத் தமக்குக் கொடுத்த தலமாதலால், அதன் பெருமையை விளக்குமாறு பன்னிரண்டு காரணப்பெயர் சீர்காழிக்கு உண்டெனப் பதிகத்தால் எடுத்துக் கூறினார்.

"குருவி னுருவம் குறித்தவப் போதே
திரிமலந் தீர்ந்து சிவனவ னாமே"

—திருமந்திரம்.

என்றபடி பிள்ளையார் அருட் பார்வையினால் பாண்டியனது வெப்பு நோய் சிறிது நீங்கியதும் தன்னை அறியாது பிள்ளையாரை வணங்கி அவர் எழுந்தருளும் ஊர் யாதென வினவினான்.

சமணர்கள் பிள்ளையார் பொன்மணிப் பீடத்தில் வீற்றிருப்பதைக் கண்டு பொறாமை கொண்டார்கள். தங்கள் மனத்திலிருந்த அச்சத்தை மறைத்துக் கோபத்தைக் காட்டித் தமது சமயக்கொள்கையைக் கூறும் நூலினை எடுத்தோதி இரைந்தார்கள். பிள்ளையார் அவர்களைப் பார்த்து, "உங்கள் கொள்கையை உள்ளபடியே பேசுக" என்றார். அவர்கள் எல்லோரும் துள்ளி யெழுந்து கதறிப் பதறினர். மங்கையர்க்கரசியார் நடுநடுங்கி அரசனைப் பார்த்து "பிள்ளையார் இளமை வாய்ந்த பாலர். இவர்களோ பலர். உமது நோயை அவர் தீர்த்தபின் இவர்கள் வாது செய்யலாம்" என்றனர். பாண்டியன் "தன் நோயைத் தீர்ப்பதே வாது என்றும், அதனால் சமணரும் பிள்ளையாரும் நோயைத் தீர்த்து தமது தெய்வத் தன்மையைத் தெரிவிக்கலாம்" என்றான். அப்போது பிள்ளையார் "மானினேர் விழி மாதராய்" என்னும் திருப்பதிகம் பாடி மங்கையர்க்கரசியாரை அஞ்சவேண்டாம் என்றனர்.

பண் - கொல்லி.

மானினேர்விழி மாதராய் வழுதிக்குமா பெருந்தேவி கேள்
பானல் வாயொரு பால னீங்கிவ னென்று நீபரி வெய்திடேல்
ஆனை மாமலை யாதி யாய விடங்க ளிற்பல வல்லல்சேர்
ஈனர் கட்கெளி யேனலேன்திரு வால வாயர னிற்கவே.

எக்க ராமமண் கைய ருக்கெளி யேன லேன்றிரு வாலவாய்ச்
சொக்கனென்னு ளிருக்க வேதுளங் கும்மு டித்தென்னன் முன்னிவை
தக்க சீர்ப்புக லிக்கு மன்றமிழ் நாதன் ஞானசம் பந்தன்வாய்
ஒக்க வேயுரை செய்த பத்து முரைப்ப வர்க்கிட ரில்லையே.

பாண்டியன் தன் நோயைத் தெற்றெனத் தீர்த்தார் யாரோ அவரே வாதில் வென்றவராவர் என்றான். சமணர் தங்கள் பீலிகளினால் இடப்பக்கத்தைத் தடவ நோய் அதிகரித்தது. பாண்டியன் பொறுக்க முடியாது பிள்ளையாரைப் பார்த்தான். பிள்ளையார் அரசன் குறிப்பை அறிந்து அவன் பிணியைத் தீர்க்கவல்லது ஆலவாய்ப் பெருமான் திருநீறு எனக்கொண்டு திருநீற்றுப் பதிகம் பாடியருளித் தமது திருக்கரத்தால் விபூதியைப் பாண்டியனது வல்ப்பாகத்தில் பூசினார். உடனே வலப்பாகத்திலுள்ள வெப்பு நோய் நீங்கிக் குளிர்ந்தது. இடப்பாகத்து வெப்புநோய் இரட்டித்தது. அரசன் தன் உடம்பில் ஓர் பக்கத்தில் நரகத்துன்பமும், மற்றொருபக்கத்தில் வீட்டின்பமும், ஒரு பக்கத்தில் நஞ்சும், மற்றப்பக்கத்தில் அமிர்தமும் ஒரேகாலத்தில் இருக்கக் கண்டதாகக் கூறினான். திருநீற்று நெறிக்கும் சமணசமயத்துக்கும் உள்ள இயல்பைத் தன் உடம்பிலேயே அனுபவத்தில் பாண்டியன் கண்டனன்.

செருக்கு அழிந்து மனவாட்டத்தோடு நின்ற சமணரை அரசன் நோக்கி, "நீங்கள் தோற்றீர்கள்" எனக் கூறிப் பிள்ளையாரை மனமார வணங்கினான். பிள்ளையார் முன்போல விபூதிகொண்டு தடவப் பாண்டியன் வெப்பு நோய் முழுதும் நீங்கப்பெற்று உய்ந்தான்.

திருவாலவாய்—திருநீற்றுப் பதிகம்

பண்—காந்தாரம்

மந்திர மாவது நீறு வானவர் மேலது நீறு
சுந்தர மாவது நீறு துதிக்கப் படுவது நீறு
தந்திர மாவது நீறு சமயத்தி லுள்ளது நீறு
செந்துவர் வாயுமை பங்கன் றிரு வாலவா யான்றிரு நீறே.

ஆற்ற லடல்விடை யேறு மாலவா யான்றிரு நீற்றைப்
போற்றிப் புகலி நிலாவும் பூசுரன் ஞானசம் பந்தன்
தேற்றித் தென்னனுட லுற்ற தீப்பிணி யாயின தீரச்
சாற்றிய பாடல்கள் பத்தும் வல்லவர் நல்லவர் தாமே.

மங்கையர்க்கரசியாரும் மந்திரியாரும் பிள்ளையாருடைய திருவடிகளில் விழுந்து வணங்கினார்கள். "இன்று பெருமை பெற்றோம். அரசனும் பிறவா மேன்மை பெற்றான்" என்று சொல்லி மகிழ்ந்தனர். அரசன் பிள்ளையார் திருவடிகளை வணங்கி "யான் உய்ந்தேன்" என்றான்.

" அற்கா வமண்மொழிகேட் டல்லலுற்றான் மாறனில்லாள்
சொற்கேட்டு நோய்தீர்ந்தான் சோமேசா—தற்காக்கு
நல்வினைத்தி னாங்குந் துணையில்லை தீயினைத்தி
னல்லற் படுப்பதூஉ மில்"

என்றபடி, எல்லாச் சமயத்தவர்கட்கும் பொதுவான நீதியைச் செலுத்துதலே அரசன் கடனாகும். ஒரு சமயத்தவர் சார்பில் நின்று மற்றச் சமயத்தினருக்குத் தீங்கு விளைவித்தல் அரச நீதியாகாது. சிவனடியார்கள் இருந்த திருமடத்தில் நெருப்பு வைப்பதற்கு அரசன் காரணனாயிருந்தபடியால் அந்த நெருப்பை அரசன்பாற் செல்லப் பிள்ளையார் விடுத்தனர். இவ்வாறு செய்தது அரசன்மேற் கொண்ட கோபத்தினால் அல்ல; அரசன் நன்னெறியில் நின்று உய்ய வேண்டும் என்னும் பெருங் கருணையினாலேயாம். பாண்டியன் தன் தீட்பிணியை நீக்கியவர் பக்கம் சேர்வதாகக் கூறியபோது அவன் நன்னெறியை அடைந்தான்.

சமணர்கள் தங்கள் மந்திர விஞ்சை முற்றும் பயனில்லாமை கண்டு அஞ்சிப் பிள்ளையாரை வாதில் வெல்லல் கூடாதெனக் கொண்டு, அனல்வாதம் புனல்வாதங்களில் வெல்லலாமென்று துணிந்தனர். பிள்ளையார் அவர்களை நோக்கி, "உங்கள் சமய உண்மைகளைப் பற்றிப் பேசுங்கள்" என்றார். சமணர் பேச்சினால் வெல்வதை விட்டு எல்லோருங் காண உண்மையை நிறுத்தி வாதிடுவோம் என்றனர். அதைக் கேட்ட பாண்டியன் கோபங்கொண்டு "என் வெப்பு நோயைத் தீர்க்கமாட்டாத உங்களுக்கு என்ன வாதம்?" என்றான். அதற்குச் சமணர் இருதிறத்தாரும் தத்தம் சமயத்தின் மெய்ப்பொருளை எட்டில் எழுதி நெருப்பிலிட்டால், எரியாமலிருக்கும் ஏடு எதுவோ அத

ஞல் வெற்றி காணலாம் என்றனர். ஆகவே, பிள்ளை யார் சமணர் கருத்துக்கு இசைந்தார். பாண்டியன் கட்டளைப்படி அச்சபையின் முன் தீ மூட்டப்பட்டது. திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகள் சிவபெருமானே முழுமுதற் பொருள் என்று தாம் பாடிய தேவாரத் திருமுறையை எடுத்துத் தமது திருக்கரத்தால் கயிறு சாத்தி மறித்தார். அப்போது திருநள்ளாற்றுப் "போகமார்த்த பூண்முலையாள்" என்னும் திருப்பதிகம் கிடைத்தது. திருநள்ளாற்று இறைவரை வணங்கி அத்திருப்பதிகம் எழுதிய ஏட்டைக் கழற்றி யெடுத்தார். அதனால் நன்மை யுண்டாமென்ற குறிப்போடு "தளிரிள வளரொளி" என்னும் திருப்பதிகம் பாடிச் சிவபெருமானே மெய்ப்பொருள் என்று உணரவும், அவரடியார் மனம் மகிழ்ந்து கொண்டாடவும், சமணர் மனம் வேகவும் யாவருங் காணுமாறு ஏட்டை நெருப்பிலிட்டார்.

பிள்ளையார் திருவாய்மலர்ந்தருளும் திருப்பதிகங்களை அவ்வப்போது அடியார்கள் எழுதி வைத்தனர் என்பது அறியக்கிடக்கின்றது.

"மீட்டு லாங்குழல் வனமுலை மலைமகள் பாகத் தட்ட மூர்த்தியைப் பொருளென வுடைமையால்" தீயிலிட்ட ஏடு பச்சையாய் விளங்கியது. சமணர் தங்கள் சமயப் பொருளை எழுதிய ஏடு பிழைக்குமோ பிழைக்காதோ என்ற நடுக்கத்துடன் தீயில் இட்டார்கள். அது தீயிற்பட்ட பஞ்சுபோல் சாம்பலானது. சமணர் எல்லோரும் மனஞ் சோர்ந்து நின்றனர். பிள்ளையார் தாம் தீயிலிட்ட ஏட்டை எடுத்துக் காட்டினர். அது முன் இருந்ததிலும் பசுமையாயும் புதிதாயும் இருப்பதைச் சபையிலுள்ளோர் எல்லோரும் பார்த்து வியப்புற்றனர். முன்இருந்த முறைப்படி அந்த ஏட்டைக் கோத்தருளினார். அரசன் சமணரை நோக்கி "நீங்கள் இட்ட ஏட்டை எடுங்கள்" என்றான். சமணர்கள் நெருப்பருகில் போதலும் அது அவர்களைத் தாக்கியதால் திரும்பினர். அப்போது அரசன் தண்ணீரால் நெருப்பைத் தணிப்பித்தான். சமணர் சாம்பலோடு கரியைக் கண்டனரன்றி வேறு ஒன்றையும் கண்டிலர். அப்போது

அரசன் "பொய்யை மெய்யாக்க முயன்ற நீங்கள் என் சமுகத்திலிருந்து அகன்றுபோவீர்களாக. என் வெப்பு நோயைநீக்கமாட்டாது தோற்றீர்கள். இப்போது தீயிலிட்ட ஏடும் தப்பவில்லை என்றால் நீங்கள் தோற்கவில்லைபோலும்" என்றான். அரசன் இவ்வாறு இகழ்ந்து கூறியதை உணராத சமணர் "நாம் இரண்டுமுறை வாது செய்தோம். இன்னும் ஒரு முறை வாது செய்து வெற்றியடைந்தால் நாங்கள் உண்மை உடையவர்களே! ஆதலால் இன்னும் ஒருமுறை வாதுசெய்ய வேண்டும்" என்றனர். அரசன் அவர்கள் பேச்சுக்குஇசையாதுமறுத்தலும், பிள்ளையார் இனிச் செய்யப்போகும் வாதம் யாதென்று சமணரைக் கேட்டார். இருதிறத்தாரும் தம்தம் சமய உண்மை எழுதப்பெற்ற ஏட்டை ஓடும் ஆற்றிலிட்டால் எந்த ஏடு நீரோட்டத்துக்கு எதிரேறிச் செல்லுமோ, அதனால் மெய்ச் சமயம் இதுவென்று கொள்ளப்படும் என்றனர். பிள்ளையார் சமணர் கூற்றுக்கு இசைந்தார். அப்போது குலச்சிறை நாயனார் முன் வந்து புனல் வாதத்தில் சமணர்கள் தோற்றால் என்ன செய்வதென்றார். அதுகேட்ட சமணர்கள் கோபத்தோடு கூடிய பொறாமையினால் புனல் வாதத்தில் தாங்கள் தோற்றால் அரசன் தங்களைக் கழுவேற்றலாம் என்றனர். அவர்கள் சொன்ன வார்த்தையைக் கேட்ட அரசன் "நீங்கள் கோபத்தால் உங்களை மறந்து கூறினீர். வைகை ஆற்றில் ஏட்டை இடுதற்குப் போவோம் வாரும்" என்றான். அப்போது பிள்ளையார் பைம்பொற் பீடத்தினின்றும் இறங்கி முத்துச் சிவிகையில் ஏறிச் சென்றார். பாண்டியன் குதிரைமேலேறிச் சென்றான். சமணர்கள் மயக்க மேற்கொண்டு சென்றார்கள்.

பாண்டியன் அரண்மனையிலிருந்து பிள்ளையார் வைகைக்கரைக்குப் போகும்போது மதுராபுரியின் வீதியில் பிள்ளையாரைக் கண்டவர்கள் அவரைத் தொழுது அரசனது வெப்பு நோயைத் தீர்த்த பெரியவர் இவரே என்பார்கள்! பால்மணம் வீசும் பவளவாய்ப் பிள்ளையார் பாண்டிநாடு வாழ வந்தார் என்பார்கள்! சமணர்கள் தீயில் செய்த

வாதில் ஞானசம்பந்தருக்குத் தோற்றனர் என்பார்கள்! சிவ சின்னமாகிய திருநீறு உண்மையானது என்போர்கள்! முத்துச் சிவிகையில் பிள்ளையார் வருகின்ற அழகைப் பாருங்கள் என்பார்கள்! சிவபெருமானை அறியும் அறிவே அறிவென்பார்கள்! இனி விபூதி எங்கும் பிரகாசிக்குமென் பார்கள்! சமண முனிவர்கள் முகங்கள் வாடிப்போயின என்பார்கள்! தீயிலே தோற்றவர் நீரிலே வெல்வரோ என்பார்கள்! மந்திரியார் கழுக்கோல்களை எல்லாம் நிறுத் தினர் என்பார்கள்! வைகையாற்றில் இடும் ஏடு நீருடன் செல்லாது நிற்குமோ என்பார்கள்! நீடிய ஞானம் பெற் றோர் நிறுத்தவும் வல்லார் என்பார்கள். இப்படி இருபக்கத் திலும் உள்ளோர் சொல்லிக்கொண்டு சென்றார்கள்.

> " தென்றமிழ் விளங்க வந்த திருக்கழு மலத்தான் வந்தான்
> மன்றுளா ரளித்த ஞான வட்டில்வண் கையன் வந்தான்
> வென்றுல குய்ய மீள வைகையில் வெல்வான் வந்தான்
> என்றுபன் மணிச்சின் னங்க ளெண்டிசை நெருங்கி யேங்க."
>
> —பெரிய புராணம்.

வீரத்தியங்கள் முழங்க வெண்குடையின்கீழ் முத்துச் சிவிகையில் பிள்ளையார் வைகைக்கரையினைச் சேர்ந்தார். அரசனும் மங்கையர்க்கரசியாரும் மந்திரியாரும் சமணர் களும் வைகைக் கரைக்கு வந்தார்கள். பாண்டியன் பிள்ளை யாரையும் சமணர்களையும் நோக்கி "உங்கள் ஏடுகளை ஆற்றிலிடுக" என்றான். சமணர் "அத்திநாத்தி" என்று எழுதிய ஏட்டை நீரில் இட்டனர். அவ்வேடு சமணர்களை நட்டாற்றில் விட்டு விரைந்து கடலை நோக்கிச் சென்றது. சமணர்கள் தங்களுக்கு நாசகாலம் வந்துவிட்டதென்று அஞ்சி மன்னனிடம் வந்து "பிள்ளையார் இடும் ஏடு எதிர் போவதைப் பார்ப்போம்" என்றார்கள். சிவநெறியில் வசப்பட்ட பாண்டியன் பிள்ளையார் குறிப்பை நோக்கினான். திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் வேத முறைப்படி நடப்பது உலக இயல்பு என்பதையும், வேதசம்பந்தமா யுள்ள சைவசித்தாந்தமே உண்மையான சமயம் என்பதை யும் சமணர்கள் அறியாதவராயினும் பாண்டியனும் மற்றை

களும் கடவுள் உயிர்கட்குக் கருணைபுரியும் திறத்தையே குறிக்கும் என்றும், ஒன்பதாம் திருப்பாட்டில் இறைவரை வழிபட்டு விஷ்ணு சக்கரப்படையைப் பெற்றனர் என்றும், பத்தாம் திருப்பாட்டில் தேவர்களைக் காக்கும்பொருட்டு அவர்கள் வேண்டுகோளுக்கிரங்கி இறைவர் நஞ்சுண்டார் என்றும், பதினோராம் திருப்பாட்டில் இறைவர் செந்தமிழ்ச் சங்கத்தாபனம் செய்தனர் என்றும், கல்வியின் பயன் நற்றாள்தொழுதலே என்றும், பன்னிரண்டாம் பாசுரத்தில் திருப்பதிகத்தின் பயன் இது என்றும் குறிக்கப் பட்டுள்ளன.

அந்த ஏடு பிறவி என்னும் ஆற்றில் மாதவர் மனஞ் சென்றாற்போல, இதுவே மெய்ப்பொருள் எனக்காட்டி வைகையாற்றில் எதிரேறிச் சென்றது. பாண்டியன் அதிசயித்து நின்றான். சமணர் அஞ்சிப் பணிந்து நின்றனர். அந்த ஏட்டை எடுக்குமாறு குலச்சிறை நாயனார் குதிரை மேலேறிச் சென்றார். அதுகண்ட சம்பந்த சுவாமிகள் "வன்னியு மத்தமும்" என்றெடுத்துத் திருப்பதிகம் பாட, அந்த ஏடு திருவேடகம் என்னும் தலத்தில் தங்கியது. மந்திரியார் ஆற்றினுட் சென்று ஏட்டை எடுத்துத் தலை மிசை வைத்து இறைவரை வணங்கி மகிழ்ச்சியோடு வந்து பாண்டியன் முதலானவர்க்குக் காட்டிச் சுவாமிகளிடம் கொடுத்து வணங்கி நின்றார். அடியார்கள் எல்லாம் "அர கர" என முழங்கினர். "வாழ்க வந்தணர்" என்றெடுத்த திருப்பதிகத்தில் "வேந்தனும் ஓங்குக" என்னும் நிறை மொழியினால் அநபாய சோழனது செங்கோல்போலப் பாண்டியன் கூன் நிமிர்ந்தது.

எம்பிரான் சிவனே யெல்லாப் பொருளுமென் றெழுது மேட்டிற்
றம்பிரா னருளால் வேந்தன் றன்னைமுன் னோங்கப் பாட
வம்புய மலராள் மார்ப னநபாய னென்னுஞ் சீர்த்திச்
செம்பியன் செங்கோ லென்னத் தென்னன்கூ னிமிர்ந்த தன்றே.

—பெரியபுராணம்.

அரசன் மந்திரியாரை நோக்கி "வாதில் தோற்ற சமணர் முன்னரே பிள்ளையார்பால் அநியாயமாய்த் தீமை

செய்தமையினால், அவர்களைக் கழுவிலேற்றித் தண்டித்தல் முறையாகும்'' என்றான். ஞானமுண்ட பிள்ளையாரும் திருத்தொண்டர்களும் இருந்த மடத்தில் நெருப்பு வைத்த சமணர் கழுமரத்திலேறினர். சுவாமிகள் அவர்களிடத்தில் "இகலில ரெனினும்" சிவனடியார்கள் இருந்த மடத்தில் தீக்கொளுவிய 'இவர்களுக்குண்டான தண்டனையை யறியும் ஏனையோர்கள் இனிமேல் இத்தகைய குற்றம் செய்யாதொழுகும் வண்ணம் அவர்களைக் கழுவேற்றுமாறு பாண்டியன் செய்த கட்டளையை விலக்காதிருந்தனர்.

"முற்பகல் செய்யிற் பிற்பகல் விளையும்" என்றவாறு சமணர் தாம் செய்த தீவினையின் பயனாகிய துன்பத்தையடைந்தார்கள். பிள்ளையாரும் அடியார்களும் இருந்த திருமடத்தில் இரவில் நெருப்பு வைத்தல் எவ்வளவு கொடுந் தொழில்! நெருப்பில் செய்த வாதில் தோற்ற போது பாண்டியன் மூன்றாவது வாது தேவையில்லை என்றான். தாம் செய்த தீவினையினால் அதனை யுணராமல் மூன்றாவது புனல் வாது செய்ய முற்பட்டார்கள். "செற்றத்தால் உரைத்தீர், உங்கள் செய்கையை மறந்தீர்" என அரசன் கூறவுங் கேளாமல் அழுக்காறு காரணமாகத் தாம் பிடித்ததைச் சாதிக்கமுயன்றும் துன்பம் எய்தினர்.

"அன்பரைக்கண் டழுக்காறுஞ் சமணர்தம் வாயாற்
றுன்பமுற்றார் வெங்கழுவிற் சோமேசா—வன்பாம்
அழுக்கா றுடையார்க் கதுசாலு மொன்னார்
வழுக்கியுங் கேடீன் பது"

சைவர்களைக் கண்டாலும் தீட்டு, அவர்களைப்பற்றிக் கேட்டாலும் தீட்டு என மதித்த சமணர் சைவசமயிகளிடத்தில் எவ்வளவு வெறுப்பும் வன்கண்மையும் உடையவர்களாய் இருந்திருத்தல் வேண்டும்!

குற்றவாளிகளுக்குத் தண்டம் விதித்தல் செங்கோன் முறையாகும். சமணர் செய்த குற்றத்துக்காக அரசன் அவர்களைக் கழுவேற்றினான்; வாதில் தோற்றதனால் அன்று. கழுவேற்றுதல் அக்கால வழக்கம் போலும். சமணர்கள் பொதுவாகச் சைவ மன்னருக்குத் தீங்கு செய்தனர் என்பது திருவிளையாடற் புராணத்திலுள்ள சில சரித்திரங்களாலும் அறியப்படும். ஒரு உயிரையுங் கொல்லலாகாது என்னுங் கொள்கை யுடைய சமணர் பல அடியார்கள் இருந்த மடத்தில் தீ வைத்தனர். அதனால் அவர்கள் போலி ஒழுக்கமுடையவர் என்பது போதரும். மங்கையர்க்கரசியாரும் குலச்சிறை நாயனாரும் எய்திய மனக்கவலையே சமணரை அழித்தது.

பிள்ளையார் பாண்டியனுக்குத் திருநீறு கொடுக்க அவன் பணிந்து வாங்கித் தன் உடம்பு முழுவதும் அணிந்துகொண்டான். அதுகண்ட எல்லோரும் விபூதி பெற்று அணிந்து கொண்டார்கள். பாண்டி நாடு முழுவதும் திருநீற்றொளி பரவியது. சமணமத மொழிந்து சைவசமயம் பரந்தோங்கியது. பிள்ளையாரைப் பாண்டி நாட்டிலுள்ளவர்கள் வணங்கிப் பயன் பெற்றார்கள். பிள்ளையார் திருவாலவாயண்ணலை வணங்குதற்கு வைகைக்கரையினின்று சிவிகையேறிச் சென்றார். திருக்கோயில் வாசலில் சிவிகையிலிருந்து இறங்கித் திருக்கோயிலிற் புகுந்து "வீடலாலவாயிலாய்" என்னும் திருப்பதிகம் பாடிக் கண்களிலிருந்து ஆனந்தவெள்ளம் மெய்யெலாம் பொழிய வணங்கினார். பாண்டியன் தான் பிள்ளையாரால் சமணர் மயக்கத்தினின்று நீங்கித் திருவருள் பெற்ற பேற்றைப் புகழ்ந்து வணங்கினன். பிள்ளையார் திருமடத்தில் எழுந்தருளி இருந்தார். பாண்டி நாடு எங்கும் சிவநெறி பொலிந்தது. பிள்ளையார் அங்குத் தங்கியிருக்கும்போது சிவபாதவிருதயர் வந்தடைந்தார். பிள்ளையார் தாதையாருக்கு நல்வரவு கூறித் தமக்கு அறியாத பருவத்தில் சிவஞானப்பால் கொடுத்தாண்ட தோணியப்பரை நினைந்து புகலியின்மேல் "மண்ணினல்லவண்ணம்" என்னும் திருப்பதிகம் பாடித் துதித்தனர்.

பண் - கொல்லி.

மண்ணினல் லவண்ணம் வாழலாம் வைகலும்
எண்ணினல் லகதிக் கியாதுமோர் குறைவிலைக்
கண்ணினல் லஃதுறுங் கழுமல வளநகர்ப்
பெண்ணினல் லாளொடும் பெருந்தகை யிருந்ததே

போதையார் பொற்கிண்ணத் தடிசில்பொல் லாதெனத்
தாதையார் முனிவுறத் தானெனை யாண்டவன்
காதையார் குழையினன் கழுமல வளநகர்ப்
பேதையா ளவளொடும் பெருந்தகை யிருந்ததே.

கருந்தடந் தேன்மல்கு கழுமல வளநகர்ப்
பெருந்தடங் கொங்கையோ டிருந்தவெம் பிரான்றனை
அருந்தமிழ் ஞானசம் பந்தன செந்தமிழ்
விரும்புவா ரவர்கள்போய் விண்ணுல காள்வரே.

குழந்தைப் பருவத்தில் சிவஞானப்பாலைப் பொற்கிண்ணத்தில் அம்மையார் கொடுத்தனர் என்பதற்கு இத்தேவாரம் ஓர் அகச் சான்றாகும்.

பிள்ளையார் சிலநாட் சென்றபின் பாண்டிநாட்டிலுள்ள சேத்திரங்களைத் தொழப் பாண்டியனையும், பாண்டிமா தேவியையும், மந்திரியாரையும் அழைத்துக்கொண்டு திருப் பரங்குன்றம், திருஆப்பனூர், திருப்புத்தூர், திருப் பூவணம், திருக்கானப்பேர், திருச்சுழியல், திருக்குற் றாலம், திருக்குறும்பலா, திருநெல்வேலி முதலிய தலங் களை வணங்கிப் பதிகம் பாடித் திருவிராமேச்சரம் சென்று இராமநாதப் பெருமானை வணங்கித் திருப்பதிகம் பாடி யருளினார். அங்கிருந்து தானே ஈழநாட்டிலுள்ள திருக் கோணமலை, மாதோட்டத்துக்கு அருகேயிருக்கும் திருக் கேதீச்சரம் என்னும் தலங்களையும் திருப்பதிகத்தால் பாடித் துதித்தனர்.

திருக்கோணமாமலை—பண்புற நீர்மை.

நிரைகழ லரவஞ் சிலம்பொலி யலம்பு
நிமலர்நீ றணிதிரு மேனி
வரைகெழு மகளோர் பாகமாப் புணர்ந்த
வடிவினர் கொடியணி விடையர்
கரைகெழு சந்துங் காரகிற் பிளவு
மளப்பருங் கனமணி வரன்றிக்
குரை கடலோத நித்திலங் கொழிக்குங்
கோணமா மலையமர்ந் தாரே.

குற்ற மிலாதார் குரைகடல் சூழ்ந்த
கோணமா மலையமர்ந் தாரைக்
கற்றுணர் கேள்விக் காழியர் பெருமான்
கருத்துடை ஞானசம் பந்த
னுற்றசெந் தமிழார் மாலையீ ரைந்து
முரைப்பவர் கேட்பவ ருயர்ந்தோர்
சுற்றமு மாகித் தொல்வினை யடையார்
தோன்றுவர் வானிடைப் பொலிந்தே.

திருக்கேதீச்சரம்—பண் - நட்டராகம்.

விருது குன்றமா மேருவி னாண ரவாவன லெரியம்பாற்
பொருது மூவெயில் செற்றவன் பற்றிநின் றுறைபதி யெந்நாளுங்
கருது கின்றவூர் கனைகடற் கடிகமழ் பொழிலணி மாதோட்டங்
கருத நின்றகே தீச்சரங் கைதொழக் கடுவினை யடையாவே.

மாடெ லாமணை முரசெனக் கடலின தொலிகவர் மாதோட்டத்
தாட லேறுடை யண்ணல்கே தீச்சரத் தடிகளை யணிகாழி
நாடு ளார்க்கிறை ஞானசம் பந்தன்சொ னவின்றெழு பாமாலைப்
பாட லாயின பாடுமின் பத்தர்கள் பரகதி பெறலாமே.

திருவிராமேச்சரத்திலிருந்து புறப்பட்டுத் திருவாடானை, திருப்புனவாயில் முதலிய தலங்களை வணங்கி மந்திரியார் பதியாகிய மணமேற்குடி வந்தார். அப்பதியில் சில நாள் பணிந்திருந்து, காவிரி நாட்டுக்குச் செல்லத் திருவுளங் கொண்டார். தம்மைப் பிரிவாற்றாது தம்முடன் போவதற்கு ஒருப்பட்ட பாண்டியராசனையும், பாண்டிமாதேவியையும், மந்திரியாரையும் சைவசமய பரிபாலனஞ் செய்துகொண்டு அங்கிருக்கும்படி பணித்தருளினார். அவர்கள் அக் கட்டளையை மறுக்க அஞ்சிப் பிள்ளையாரைத் தொழுது நின்றார்கள். ஞாலமுய்ய அவதாரஞ் செய்த பிள்ளையார் அவர்களுக்கு விடை கொடுத்துப் பாண்டிநாட்டை விட்டுத் தொண்டர்குழாத்துடன் திருக்களர், திருப்பாதாளீச்சரம் முதலிய சேத்திரங்களை வணங்கி முள்ளிவாய்க்கரை சேர்ந்தார். அங்கே குடமுருட்டியாறு பிரவாகமாகப் பாய்வதனால் ஓடம் செலுத்துவோர் இல்லாமையை யறிந்து கட்டியிருந்த ஓடங்களைப் பிள்ளையார் அவிழ்த்து அடியார்களை அவற்றில் ஏற்றித் தாம் திருவாய் மலர்ந்தருளும் தமிழ் வேதமே கோலாகக்கொண்டு ஓடத்தில் நின்றுகொண்டு "கொட்டமே கமழும்" என்னும் முதலையுடைய திருப்பதிகம் பாடியருளினார். சிவபெருமானது கிருபையால் ஓடங்கள் அக்கரைக்குச் சென்றன. அடியாருடன் அங்கு இறங்கித் திருக்கொள்ளம்பூதூருக்குச் சென்று "ஆற்றின்கண் ஓடமுய்க்குந் தன்மையால் அருள் தந்த தலைவர்" என்று வணங்கினார்.

திருக்கொள்ளம்பூதூர்.

சீர்டிமேல்வைப்பு—பண் - காந்தாரபஞ்சமம்.

கொட்ட மேகம ழுங்கொள்ளம் பூதூர்
நட்ட மாடிய நம்பனை யுள்கச்
செல்ல வுந்துக சிந்தை யார்தொழ
நல்கு மாறரு ணம்பனே,

கொன்றை சேர்சடை யான்கொள்ளம் பூதூர்
நன்று காழியுண் ஞானசம் பந்தன்
இன்றுசொன் மாலைகொண் டேத்தவல் லார்போய்
என்றும் வானவ ரோடிருப் பாரே.

பிள்ளையார் அப்பதிக்கு விரைந்து போதற்குச் சிவபெருமானையே வள்ளங்களைச் செலுத்தும்படி தமது பதிகத்தில் வேண்டிக்கொண்டனர். ஓடங்களைச் செல்லச் செய்தது தம் பெருமையைக் காட்ட அன்று. ஓடம் செல்லும்படி செய்தற்காகச் சிவபெருமானைத் தாழ்ந்து வணங்கினர்.

> நீணிலைக்கோ புரமதனை யிறைஞ்சிப் புக்கு
> நிகரிலாத் தொண்டருட னெருங்கச் சென்று
> வாணிலவு கோயிலினை வலங்கொண் டெய்தி
> மதிச்சடையார் திருமுன்பு வணங்கி நின்று
> தாணுவே யாற்றின்க ணோட முய்க்குந்
> தன்மையா லருடந்த தலைவா நாகப்
> பூணினாய் களிற்றுரிவை போர்த்த முக்கட்
> புனிதனே யெனப்பணிந்து போற்றி செய்தார்.
>
> —பெரியபுராணம்.

அங்கிருந்து புறப்பட்டுப் பல சேத்திரங்களுக்குஞ் சென்று பாடித் துதித்து எரியில் வேவாது நின்ற பதிகம் பாடப்பெற்ற திருநள்ளாற்றினை யடைந்து "பாடகமெல்லடி" என்னும் பதிகம் பாடி,

> "தென்னவர்கோன் முன்னமணர் செய்த வாதிற்
> றீயின்க ணிடுமேடு பச்சை யாக்கி
> யென்னுள்ளத் துணையாகி யால வாயி லமர்ந்திருந்த
> வாறென்கொ லெந்தாயென்று."

கண்களிலிருந்து நீர் சொரிய வணங்கினார். அங்கிருந்து புறப்பட்டுத் திருத்தெளிச்சேரி என்னும் சேத்திரத்துக்கு வந்து போதிமங்கை என்னும் பவுத்தநாட்டுக்குச் சென்றார். அப்பதியில் அடியார்கள் சங்கு தாரைகள் ஊதிக் கடல் ஒலிபோல் ஆர்ப்பரித்தார்கள். முத்துச் சின்னங்கள் "பரசமயகோளரி" வந்தாரென்று முழங்கின. இதைக் கண்ட பவுத்தர்கள் பொறாமை கொண்டு புத்தநந்தி முதலிய குருமாருக்கு அறிவித்தனர். புத்தநந்தி கோபித்தெழுந்து தன் தோர் குழாத்துடன் பிள்ளையார் தொண்டரிடஞ்

சென்று தன்னை வாதில் வென்றன்றோ வெற்றிச்சின்னங்கள் ஊதவேண்டும் என்று தடுத்தான். அடியவர்கள் இதனைப் பிள்ளையாருக்கு அறிவித்தார்கள். பிள்ளையார் அவர் கொள்கைகள் பொய் என்பதைக் காட்டி வெல்ல முற்பட்டார். அப்போது திருமுறைப்பதிகம் எழுதும் அன்பர் ஒருவர் பிள்ளையார் திருவாக்கினாலே புத்தனைச் சபித்தனர். உடனே இடி வீழ்ந்து புத்தனைத் தலைவேறு உடல் வேறு படச் செய்தது.

> " அத்திரவாக்காற் புத்தன் சென்னி யறுத்தார் சண்பைச்
> சுத்தனார் தம்மன்பர் சோமேசா—நித்த
> நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
> மறைமொழி காட்டி விடும். "

அதுகண்ட புத்தர்கள் எல்லோரும் அஞ்சியோடினர். இச்செய்தியை அடியவர்கள் பிள்ளையாருக்கு அறிவித்தனர். பிள்ளையார் "விதி அதுவேயாம்" என்று கூறி எல்லோரையும் "அரகர" என்று முழக்கம் செய்யும்படி பணித்தனர். பின்னர், புத்தர் எல்லோரும் சேர்ந்து சாரிபுத்தனை முதல்வனாகக்கொண்டு மந்திரவாதமின்றித் தர்க்கவாதம் செய்ய வந்தார்கள். அப்போது பிள்ளையாரும் மன மகிழ்ந்து சிவிகையினின்று இறங்கி அடியாருடன் ஓர் மடத்தில் எழுந்தருளிப் புத்தரைக் கூவி அழைத்தார். அவர்கள் வந்து திருமுறை எழுதும் அன்பருடன் வாதுசெய்து தோற்றுப் பிள்ளையாரை வணங்கிச் சைவசமயிகளாயினர். பின்னர், பிள்ளையார் திருக்கடவூர் வந்து வணங்கி அங்கே தங்கியிருக்கும் நாளில் அப்பர் சுவாமிகள் எந்த ஊரிலிருக்கின்றார் என்று வினவினர். அவர் திருப்பூந்துருத்தியில் இருப்பதாக அறிந்து அவரைக் காணவிரும்பி அங்கிருந்து புறப்பட்டுப் பூந்துருத்திக்குச் சென்றார். திருநாவுக்கரசு சுவாமிகள் பிள்ளையார் வரவைக்கேட்டு அவரை எதிர் கொண்டு அடியார் கூட்டத்தோடு சென்று அவரது முத்துச் சிவிகையைத் தாங்கினர். அப்போது பிள்ளையார் புந்தியினில் கலக்கம் நிகழ்ந்திட "அப்பர் எங்குற்றார்?" என்று வினவினர். அவர் "தமது சிவிகையைத் தாங்கும் பெறும் பேறு பெற்று இங்குற்றேன்" என்றார். உடனே பிள்ளையார்

அச்சம் கொண்டு முத்துச் சிவிகையினின்றும் இறங்கி "நீர் இவ்வாறு செய்யலாமோ?" என்று அவரை வணங்க, அப்பரும் பிள்ளையாரை வணங்கினர். அடியார்கள் "அர கர!" என முழக்கஞ் செய்தனர். பரமாசாரியர் இருவரும் சிவபெருமானை வணங்கி அங்கு வீற்றிருக்கும்போது பிள்ளையார் மறைக்காட்டை விட்டுப் பிரிந்தபின் நிகழ்ந்தவைகளையும், மங்கையர்க்கரசியார் குலச்சிறை நாயனார் தொண்டின் சிறப்பினையும், பாண்டிநாட்டில் சைவ நெறிவளரத் தாம் புரிந்த அருஞ் செயல்களையும் எடுத்துக் கூறினார். அப்பர் சுவாமிகள் இவ்வரலாறுகளையெல்லாம் கேட்டு மகிழ்ந்தார். பின்னர், அப்பர் சுவாமிகள் மதுரைக்குப் புறப்பட்டார். பிள்ளையார் திருநெய்த்தானம், திருவையாறு, திருப்பழனம் முதலிய தலங்களை வணங்கிச் சீர்காழிக்கு வந்தனர். அங்குள்ள சனங்கள் எதிர்கொள்ளச் சிவிகையினின்றும் இறங்கித் திருக்கோபுரத்தை வணங்கித் திருக்கோயில் வாயிலில் விழுந்து நமஸ்கரித்து எழுந்து வலம்வந்து தோணியப்பரைத்தொழுது ஆனந்தக் கண்ணீர் சொரியத் திருப்பதிகம் பாடினர். மதுரையில் தாம் ஆற்றிலிட்ட ஏடு நீரைக் கிழித்துக்கொண்டு எதிர் சென்றதை வைத்துப் பாடினர். பின்னர், பிள்ளையார் தமது மாளிகைக்குச் செல்ல, அவர் தாயார் வந்து மணிவிளக்கெடுத்து வணங்கினர். பிறகு திருநீலகண்ட யாழ்ப்பாணருக்கு விடை கொடுத்து அனுப்பிவிட்டுத் தமது மாளிகையில் சில்நாள் தங்கினர்.

பிள்ளையார் தொண்டைமண்டலம் செல்ல விரும்பி அடியார் கூட்டத்தோடு புறப்பட்டார். அப்போது சிவபாதவிருதயரும் அவருடன் தொடர்ந்து செல்ல விரும்பினார். பிள்ளையார் அவரைச் சீர்காழியிலேயே அருமறை வேள்வியைச் செய்துகொண்டு சடைமுடியார் தம்மைத் தொழுதிருக்கச் செய்து எல்லோருக்கும் விடைகொடுத்துத் தில்லை வந்தடைந்து திருநடனங்கண்டு பணிந்தேத்தினார். பின்னர்த் திருத்தினைநகர், திருமாணிகுழி, திருப்பாதிரிப் புலியூர், திருவடுகூர், திருவக்கரை, திருவிரும்பைமாகாளம், திருவதிகைத் திருவீரட்டானம், திருவாமாத்தூர், திருக்

கோவலூர், அறையணிநல்லூர் முதலிய சேத்திரங்களை வணங்கிப் பாமாலை சாத்தித் துதித்துத் திருவண்ணாமலைக்கு வந்தார். அத்தலமானது சிவபெருமான் திருவடிவமாகத் தோன்றவும் மிகுந்த அன்போடு "உண்ணாமுலையுமையாள்" என்னும் பதிகம் பாடினார்.

திருவண்ணாமலை—பண்—நட்டபாடை.

உண்ணா முலையுமையா ளொடுமுடனா கியவொருவன்
பெண்ணா கியபெருமான் மலைதிருமா மணிதிகழ
மண்ணார்ந் தனவருவித் திரண்மழலைம் முழவதிரும்
அண்ணா மலைதொழுவார் வினைவழுவாவண மறுமே.

வெம்புந் தியகதிரோ னொளிவிலகும் விரிசாரல்
அம்புந்தி மூவெயிலெய்தவ னண்ணா மலையதனைக்
கொம்புந் துவகுயிலாலுவ குளிர்காழி யுண்ஞான
சம்பந்தன தமிழ்வல் லவரடிபே ணுதல்தவமே.

பிரமா விட்டுணு அடிமுடி தேடினபோது சிவபெருமான் அக்கினிப் பிழம்பாக நின்ற தலம் திருவண்ணாமலை. அம்மலை பிள்ளையாருக்குச் சிவபெருமான் திருவுருவமாகத் தோன்றியது. திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் முதற் பாசுரத்தில் "அண்ணாமலை தொழுவார்" என்றெடுத்து அம்மலையைக் கடவுளாகப் பாவித்துப் பாடினர்.

பின்னர், பேரன்புடன் ஆனந்தக்கண்ணீர் சொரியச் சிவபெருமானை வணங்கி அத்தலத்திலேயே சிலநாள் வைகினர். இருக்கும் நாளில் "பூவார் மலர்" என்னும் பதிகம் பாடினர்.

திருவண்ணாமலை—பண் - தக்கேசி.

பூவார்மலர்கொண் டடியார்தொழுவார் புகழ்வார்வானோர்கள்
மூவார்புரங்க ளெரித்தவன்று மூவர்க்கருள்செய்தார்
தூமாமழைநின் றதிரவெருவித் தொறுவி னிரையோடும்
ஆமாம்பிணைவந் தணையுஞ்சார லண்ணாமலையாரே.

அல்லாடரவ மியங்குசார லண்ணாமலையாரை
நல்லார்பரவப் படுவான்காழி ஞானசம்பந்தன்
சொல்லான்மலிந்த பாடலான பத்துமிவைகற்று
வல்லாரெல்லாம் வானோர்வணங்க மன்னிவாழ்வாரே.

பின்னர், திருவோத்தூர் சென்று சிவபெருமானை வணங்கிச் சிலநாள் அங்குத் தங்கினர். அப்பதியில் சிவனடி

யார் ஒருவர் விதையிட்டு வளர்த்த பனைகள் ஆண்பனைக ளாய்க் காயாமல் இருந்தன. அவைகளைக் காய்க்கச் செய்தல் கூடுமோ எனச் சமணர்கள் அவ்வடியாரை இடித்துப் பேசி நகைத்தனர். இதனை அவ்வடியவர் பிள்ளையாருக்கு அறிவித்தார். பிள்ளையார் அவ்வடியவர்க்கு அன்பு செய்து கோயிலுட்புகுந்து பாம்பொடு திங்கள் பகை தீர்த்தாண்ட சிவபெருமானை வணங்கிப் பதிகம் பாடினார். அப்போது ஆண்பனைகளெல்லாம் குலைகள் நிறைந்த பெண்பனைகளாக மாறின. இதைக்கண்ட எல்லோரும் அதிசயித்தனர். அவ்வடியாரைப் பரிகாசஞ்செய்த சமணர்களுட் சிலர் நாட்டை விட்டோடினர். ஏனையோர் சைவநெறிபோற்றி னர். பிள்ளையார் திருவாக்கினால் அப்பனைகள் எல்லாம் தங்காலத்தைக் கழித்துப் பிறவியை ஒழித்துச் சிவகதி பெற்றன.

திருவோத்தூர்—பண் - பழந்தக்கராகம்.

ஆண்பனை பெண்பனையான திருப்பதிகம்.

பூத்தேர்ந்தாயன கொண்டுநின் பொன்னடி
ஏத்தாதாரில்லை யெண்ணுங்கால்
ஓத்தூர்மேய வொளிமழு வாளங்கைக்
கூத்தீரும்ம குணங்களே.

குரும்பையாண் பனையீன்குலை யோத்தூர்
அரும்பு கொன்றை யடிகளைப்
பெரும் புகலியுண் ஞானசம்பந்தன் சொல்
விரும்புவார் வினைவீடே.

ஞானிகள் ஒரு பொருளை இன்னொரு பொருளாக மாற்ற வேண்டுமென நினைந்து சொன்னால் அப்படியேயாகும் என்பது இதனால் அறியலாம்.

ஓரறிவுயிர்களுக்கும் முத்தி கொடுக்கும் வல்லமையோடு திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் விளங்கினாரென்பது இதனால் தெளியப்படும். நாயனார் திருவாக்கினால் பனைகள் மும்மலங்களினின்று நீங்கின. இதுபோலவே உமாபதி சிவாசாரியாரும் முள்ளிச் செடிக்கு முத்தி கொடுத்தருளினார் என்பதை அவர் சரித்திரத்தால் அறியலாம்.

அங்கிருந்து புறப்பட்டுத் திருமாகறல், திருக்குரங்கணின்முட்டம் முதலிய தலங்களையும் வணங்கி, காமாட்சி

அம்மையாரால் பூசிக்கப்பட்ட ஸ்ரீகாஞ்சீபுரம் வந்தனர். அப்பதியிலுள்ளோர் சகல மங்கலங்களுடன் பிள்ளையாரை எதிர்கொண்டனர். பிள்ளையார் சிவிகையினின்றும் இறங்கி இருகைகளும் சென்னிமேல் குவியக் கோயிலை வலம்வந்து உட்சென்று உருகிய அன்பு உள்ளலைப்ப, உமையம்மையார் தழுவக்குழைந்த பிரானைப் பலமுறை பணிந்தெழுந்து திருப்பதிகங்கள் பாடிப் போற்றினர்.

மருவியவே ழிசைபொழிய மனம்பொழியும் பேரன்பாற்
பெருகியகண் மழைபொழியப் பெரும்புகலிப் பெருந்தகையா
ருருகியவன் புள்ளலைப்ப வுமைதழுவக் குழைந்தவரைப்
பருகியமெய் யுணர்வினொடும் பரவியே புறத்தணைந்தார்.

—பெரியபுராணம்.

காஞ்சீபுரத்திலுள்ள மற்றைய தலங்கட்குச் சென்று வணங்கினர். பின்னர், அங்கிருந்து புறப்பட்டுத் திருமாற்பேறு, திருவல்லம், திருவிலம்பையங்கோட்டூர், திருவிற்கோலம், திருவூறல், திருத்தக்கோலம் முதலிய தலங்களை வணங்கிப் பாடிப் பழையனூரைச் சேர்ந்த திருவாலங்காட்டுக்குச் சமீபத்தில் வந்தனர். அது காரைக்காலம்மையார் தலையால் நடந்தடைந்த திவ்விய தலமாதலால் அச்சேத்திரத்தை மிதிக்க அஞ்சி வேறோர் இடத்தில் தங்கி அன்றிரவு துயில் கொண்டார். அப்போது திருவாலங்காட்டில் எழுந்தருளும் சிவபெருமான் அவருக்குக் கனவில் தோன்றி, "என்னைப் பாட மறந்தனையோ?" என்றனர். பிள்ளையார் விழித்தெழுந்து சிவபெருமான் திருவருளைப் போற்றி, "துஞ்சவருவாரும்" என்னும் பதிகம் பாடித் தொண்டருடன் திருவாலங்காட்டு அம்மையப்பரைத் தொழுதனர்.

பின்னர்த் திருப்பாசூர், திருவெண்பாக்கம், திருக்காரிகரை முதலிய சேத்திரங்களை வணங்கித் திருப்பதிகங்கள் பாடித் திருக்காளத்திமலைக்கு எழுந்தருளினர். அப்பதியிலுள்ள தொண்டர்குழாம் எதிர்கொள்ளச் சிவிகையினின்றும் இறங்கித் திருக்காளத்திமலை ஈதுவெனக் கேட்டறிந்து பூமியில் விழுந்து வணங்கியெழுந்து "வானவர்கள் தான

வர்கள்" என்னும் திருப்பதிகம் பாடினர். பின்பு பொன்முகலியாற்றை யடைந்து திருமலையை வணங்கிக்கொண்டு ஏறித் திருக்கோயிலை வலம்வந்து வணங்கி எழுந்தபோது கும்பிட்ட பயன் காண்பார்போல் கண்ணப்ப நாயனரைக் கண்டு விழுந்து இறைஞ்சினர்.

உள்ளத்தில் எழுகின்ற அன்பின் வடிவத்தையும் அவ்வன்பாகிய இறைவரையும் உடன்கண்ட விருப்பால் பிள்ளையார் பல முறையும் விழுந்து வணங்கினர்.

உள்ளத்திற் றெளிகின்ற வன்பின் மெய்ம்மை
யுருவினையு மவ்வன்பி னுள்ளேமன்னும்
வெள்ளச் செஞ்சடைக் கற்றை நெற்றிச் செங்கண்
விமலரையு முடன்கண்ட விருப்பும்பொங்கிப்
பள்ளத்தி விழிபுனல்போற் பரந்து செல்லப்
பைம்பொன்மலை வல்லிபரிந் தளித்தசெம்பொன்
வள்ளத்தில் ஞானவா ரமுதமுண்டார்
மகிழ்ந்தெழுந்து பலமுறையும் வணங்கிநின்றார்.

—பெரிய புராணம்.

பிள்ளையார் பேரன்போடு கண்ணப்பரை வணங்கியது கண்ணப்பர் அன்பு உருவம் என்பதையும், பிள்ளையார் தற்போதமற்றவர் என்பதையும் குறிக்கும்.

திருக்காளத்தி - திருவிராகம் — பண் - சாதாரி.

வானவர்க டானவர்கள் வாதைபட வந்ததொரு மாகடல்விடம்
தானமுது செய்தருள் புரிந்தசிவன் மேவுமலை தன்னைவினவில்
ஏனமின மானினொடு கிள்ளைதினை கொள்ளவெழி லார்கவணினாற்
கானவர்த மாமகளிர் கனகமணி யிலகு காளத்திமலையே.

வேயனைய தோளுமையோர் பாகமது வாகவிடை யேறிசடைமேல்
தூயமதி சூடிசுடுகாடி னடமாடிமலை தன்னை வினவில்
வாய்கலச மாகவழி பாடுசெய்யும் வேடன்மல ராகுநயனம்
காய்கணையி னாலிடந் தீசனடி கூடு காளத்திமலையே.

காடதிட மாகநட மாடுசிவன் மேவுகாளத்திமலையை
மாடமொடு மாளிகைக ணீடுவளர் கொச்சைவய மன்னுதலைவன்
நாடுமலி நீடுபுகழ் ஞானசம்பந்தனுரை நல்லதமிழின்
பாடலொடு பாடுமிசை வல்லவர்க ணல்லர்பர லோகமெளிதே.

பிள்ளையார் திருக்காளத்திமலை அடிவாரத்திலுள்ள ஓர் மடத்தில் சிலநாள் தங்கினர். அப்பதிக்கு வடக்கேயுள்ள

நாடுகளில் தமிழ் வழக்கின்மையால், சீகாளத்தியிலிருந்தே வடக்கேயுள்ள வடகயிலை, திருக்கேதாரம், திருக்கோகர்ணம், திருப்பருப்பதம், இந்திரநீலப்பருப்பதம் முதலிய தலங்களைப் பாடி வணங்கினார். அங்கிருந்து புறப்பட்டுத் திருவேற்காடு, திருவலிதாயம் முதலிய தலங்களையும் பாடி வணங்கித் திருவொற்றியூர் வந்து சிவபெருமானை வழிபட்டு அங்கு எழுந்தருளியிருந்தார். நிற்க.

திருமயிலாப்பூரில் வைசியர் குலத்தில் சிவநேசர் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் பெரும் செல்வந்தர். சிவபத்தியிலும் அடியார் பத்தியிலும் சிறந்தவர். சிவனடியாருக்கு அன்பால் பூசனைகள் செய்பவர். பரசமயங்களை ஒழியச் செய்யும் சீலமுடையவர். திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளிடத்தில் தலையன்பு உடையவர். அவரது அருட்டிறங்களைக் கேட்டும், அவர் பெருமையைப் பேசிக் கொண்டாடியும் வந்தார். அரிய தவஞ்செய்து ஒரு பெண்மகவைப் பெற்றெடுத்தார். அப்பெண் அழகில் பூவினுள் என வருதலில், "பூம்பாவை" எனப் பேரிடப்பெற்றாள். திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் திருவருட்டிறமையைக் கேட்டு மகிழ்ந்து அவரைத் திசைநோக்கி விழுந்து வணங்கி அப்பெண்ணையும், தன்னையும், தன் திரவியங்கள் யாவையும் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளுக்கே கொடுத்துவிட்டதாகச் சொல்லிச் சிவநேசர் ஆனந்தப்பட்டார். ஒரு நாள் பூம்பாவை தன் தாதிகளோடு சென்று மலர் பறிக்கும் போது பாம்பினால் கடிக்கப்பட்டு விடம் மணிமந்திரம் ஔவுடதங்களால் தீராது இறந்தாள். அப்போது சிவநேசரும் சுற்றத்தாரும் துக்க சாகரத்தில் வீழ்ந்தனர். சிவநேசர் பின் சற்றுத் தெளிவடைந்து அப்பெண்ணைத் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளுக்குரியாளென நியமித்தமையால் உடலைத் தகனஞ் செய்து சாம்பலையும், அத்திகளையும் குடத்திலிட்டுக் கன்னிமாடத்தில் சேமித்து வைத்து, திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளிடம் ஒப்படைக்கும்வரையும் வஸ்திரஞ்சாத்தி ஆபரணங்களணிந்து நாள்தோறும் மாலை, சந்தனம், போனகம், விளக்கு முதலியன கொண்டு

பூசித்துவந்தார். அந்நாளில் பிள்ளையார் திருவொற்றியூரில் வந்திருப்பதைச் சிவநேசர் கேட்டுத் திருவொற்றியூர் வரை நடைப்பந்தலிட்டு கமுகு, கொடி, மாலை, வாழை தோரணம் முதலியவைகளால் அலங்கரித்து அடியார் கூட்டத்தோடு பிள்ளையாரை வணங்கத் திருவொற்றியூருக்குப் புறப்பட்டார். பிள்ளையார் அப்போது மயிலாப்பூரை நோக்கி வந்தார். பிள்ளையாரையும் அடியார்களையும் தூரத்தே கண்டவுடனே சிவநேசர் கீழே விழுந்து வணங்கினார். பிள்ளையாரும் சிவிகையினின்று இறங்கி சிவநேசர் செய்தி யெல்லாம் கேட்டுத் திருமயிலாப்பூரை யடைந்து திருக்கோயிலுட் சென்று பேரன்போடு வணங்கினார். சிவநேசர் கருத்து நிறைவேறவும், சமணபுத்த சமயத்தவர்கள் தருக்கொழியவும், திருஞானசம்பந்தப் பிள்ளையார் கபாலீச்சரத்துக்கு எழுந்தருளி வணங்கிப் புறம்போந்து சிவநேசரிடமிருந்த இறந்த பெண்ணின் அஸ்திகள் நிறைந்த குடத்தைத் தருவித்து அதைக் கபாலீச்சுரர் சந்நிதானத்திற்கு நேரே வைக்கச் செய்து, தாம் குடத்தினருகில் வந்து "பூம்பாவாய்!" என்றழைத்து, "மக்கள் எய்தும் பயன் சிவ தொண்டர்களைத் திருவமுது செய்வித்தலும், சிவபெருமானுடைய திருவிழாவைக் கண்டு இன்புறுதலும் உண்மையாயின், நீ இவ்வுலகில் தோற்றுவாய்" என்று கூறி, "மட்டிட்ட புன்னை" என்னும் திருப்பதிகம் பாடினர்.

மண்ணி னிற்பிறந் தார்பெறும் பயன்மதி சூடு
மண்ண லாரடி யார்தமை யமுதுசெய் வித்தல்
கண்ணி னலவர் நல்விழாப் பொலிவுகண் டார்த
லுண்மை யாமெனி னுலகர்முன் வருகென வுரைப்பார்.

—பெரியபுராணம்.

முதலாம் திருப்பாட்டிலே உருவம்பெற்று, மற்றைய எட்டுத் திருப்பாட்டுகளால் பன்னிரண்டு வயதுடைய கன்னிப்பருவம் அடைந்து, பத்தாந் திருப்பாட்டினால் தாமரைப்பூவிலிருந்து திருமகள் தோன்றினாற்போலக் குடமுடைந்து பூம்பாவை தோன்றினாள்.

அப்போது தொண்டர்கள் தொழுதார்த்தனர். புறச்சமயத்தவர் அதிசயித்தார். சமணர் தள்ளாடி விழுந்

தனர். தேவரும் முனிவரும் புட்பமாரி பொழிந்தனர். பூம்பாவை மிகுந்த அழகும் ஒளியும் விளங்க நின்றாள். பிரமன் தான் படைத்த திலோத்தமையின் அழகு வெள்ளத்தை நான்கு முகத்தினாலும் இச்சையோடு பார்த்தான். திலோத்தமையினும் அழகிற் சிறந்து அழகுக்கோர் அழகாய் விளங்கிய பூம்பாவையிடத்துப் பதினாறு வயசுடைய புகலிமன்னர் கடவுளுடைய கருணைவெள்ளத்தை ஆயிரம் முகத்தால் விளங்கக் கண்டனர்.

எண்ணிலாண் டெய்தும்வேதாப் படைத்தவ ளெழிலின்வெள்ள
நண்ணுநான் முகத்தாற்கண்டா னவளினு நல்லாடன்பாற்
புண்ணியப் பதினாறாண்டு பேர்பெறும் புகலிவேந்தர்
கண்ணுதல் கருணைவெள்ள மாயிர முகத்தாற்கண்டார்.

—பெரிய புராணம்.

வயசினால் முதிர்ந்த பிரமன் திலோத்தமையைக் காமவேட்கையோடு பார்த்தான். பதினாறு வயசுள்ள பிள்ளையார் திலோத்தமையின் அழகிலும் பார்க்கப் பன்மடங்கு அழகு நிறைந்த பூம்பாவையிடத்தில் கடவுளது கருணை வெள்ளத்தைக் கண்டார். ஆதலால், காமத்தினால் மயங்கிய பிரமனிலும் காமம் வெகுளி மயக்கங்களை வென்ற பிள்ளையார் பரமஞானி என்றெடுத்துச் சேக்கிழார் புகழ்ந்தார்.

திருமயிலாப்பூர்—பூம்பாவைத் திருப்பதிகம் - பண் - சீகாமரம்.

மட்டிட்ட புன்னையங் கானன் மடமயிலைக்
கட்டிட்டங் கொண்டான் கபாலீச்சர மமர்ந்தான்
ஒட்டிட்ட பண்பி னுருத்திர பல்கணத்தார்க்
கட்டிட்டல் காணாதே போதியோ பூம்பாவாய்.

உரிஞ்சாய வாழ்க்கை யமணுடையைப் போர்க்கும்
இருஞ்சாக் கியர்க ளெடுத்துரைப்ப நாட்டில்
கருஞ்சோலை சூழ்ந்த கபாலீச்சர மமர்ந்தான்
பெருஞ்சாந்தி காணாதே போதியோ பூம்பாவாய்.

கானமர் சோலைக் கபாலீச்சர மமர்ந்தான்
தேனமர் பூம்பாவைப் பாட்டாகச் செந்தமிழான்
ஞானசம் பந்த னலம்புகழ்ந்த பத்தும்வலார்
வானசம் பந்தத் தவரோடும் வாழ்வாரே.

சிவநேசர் பிள்ளையார் திருவடியில் வீழ்ந்து வணங்கினார். பூம்பாவையும் பிள்ளையாரை வணங்கினள். சிவ

நேசர் தனது புதல்வியைப் பிள்ளையார் திருமணஞ் செய்ய வேண்டும் என்று விண்ணப்பித்தார். பிள்ளையார் விடத்தினல் இறந்த மகளை மீட்டும் சிவபெருமான் திருவருளினல் தாம் பிறப்பித்தமையால் தமக்குப் புதல்வியாகும் அப் பெண்ணை மணத்தல் தகாதென்பதைச் சிவநேசருக்கும் அவர் சுற்றத்தாருக்கும் அறிவுறுத்தினர். பின்னர், சிவ நேசர் அப்பெண்ணைக் கன்னிமாடத்தில் வைத்தார். பூம் பாவையும் சிவகதி யுற்ருள்.

நல்ல மக்கட்குத் தீங்கு நேரிடுவது அவர்கள் முற்பிறப்பில் செய்த வினைப்பயனே என்பது இப்பூம்பாவையின் சரிதத்தால் அறியலாம். பிள்ளையார் உலக வாழ்வைத் துறந்து ஒப்பற்ற நிலையில் நின்றமையால் பூம்பாவையை மணம் செய்ய உடன்படவில்லை. இதனல் பிள்ளையாருக்கு இருடிகளாயினும் தேவராயினும் ஒப்பாகார் என்பது போதரும். பூம்பாவை தமக்கு மகள் முறை என்று மணஞ் செய்ய மறுத்தார். பிரமாவோ தாம் படைத்த திலோத்தமையினிடம் ஆசை வைத்தார்.

பிள்ளையார் திருக்கோயிலுட் சென்று திருவருளைத் துதித்துப் பாடிப் பணிந்து எழுந்து புறம்போந்து திரு மயிலையில் எழுந்தருளியிருந்தார். சிலநாள் கழிந்தபின் சிவநேசருக்கும் அடியார்களுக்கும் விடைகொடுத்தருளிப் புறப்பட்டுத் திருவான்மியூர், திருவிடைச்சுரம் முதலிய சேத்திரங்களை வணங்கிப் பாடித் திருக்கழுக்குன்றம் வந்து சேர்ந்தார். சிவிகையை விட்டிறங்கித் திருமலையை வலம் வந்து சிவபெருமானைப் பணிந்து பாடி மற்றைய சேத்திரங் களையும் வணங்கித் தில்லைமூதூரை யடைந்தார். தில்லை வாழந்தணரும் அடியார்களும் மிக அலங்காரத்துடன் எதிர் கொண்டு அழைத்தனர். நடராசமூர்த்தியைத் தொழுது அளவிலாப் பேரின்பத்தில் திளைத்திருந்தார். பிள்ளையார் சிதம்பரம் வந்தாரென்று கேட்ட சிவபாத விருதயரும் மற்றும் சீர்காழித் தொண்டர்களும் தில்லைக்கு வந்தார்கள். பிள்ளையார் சபாநாதரைத் தொழுது அவர்களுடன் சீர் காழிக்கு வந்து ஆனந்தக் கண்ணீர் பொழியத் தோணியப் பரை வணங்கித் தமது மாளிகையில் தங்கினர். அப்போது பிள்ளையாரைக்கண்டு மகிழ முருகநாயனர், திருநீலநக்க

நாயனுர் முதலிய தொண்டர்கள் சீர்காழிக்கு வந்தனர். சிவபாதவிருதயரும், சுற்றத்தாரும், தொண்டர்களும் வேத முறைப்படி ஒரு கன்னியைத் திருமணம் செய்யவேண்டும் என்று பிரார்த்தித்தனர். பிள்ளையார் மணஞ் செய்ய மறுத்தார். மறையவர்கள் பணிந்து இறைஞ்சி நின்று "இப்பூமியின்கண் வேத வழக்கத்தைத் தேவரீர் நிலைநிறுத்த வந்தமையால், வேதமுறைப்படி திருமணம் செய்யவேண்டும்" என்று விண்ணப்பஞ் செய்தனர். பிள்ளையார் அவர்கள் வேண்டுகோளுக்கு இசைந்தார். புகலி மன்னர் திருமணம் செய்வதற்கு உடன்பட்டதும் தாதையாரும், சுற்றத்தாரும், மறையவரும் திருவருளை வியந்து மனம் களித்தனர். சிவ பாதவிருதயரும் மறையவர்களும் திருப்பெருமணத்தில் நம்பாண்டார் நம்பி என்பவருடைய மகளைப் பிள்ளை யார் கைப்பிடிக்கத் தகும் என்றெண்ணி நம்பாண்டார் நம்பியிடம் போய் மணம் பேசினுர்கள். அவர் மிகமகிழ்ந்து "அம்மை திருமுலைப்பாலுண்ட பிள்ளையாருக்கு எமது புதல்வியை விவாகம் செய்து கொடுக்க என்ன தவம் செய் தோம்" என்று போற்றி இசைந்தார். பிள்ளையாருக்கு இதனை அறிவித்து, திருமணத்துக்கு வேண்டிய முயற்சி களைச் செய்தனர். சீர்காழியையும் திருநல்லூர்ப் பெரு மணத்தையும் அலங்கரித்தார்கள். திருமணத் தினத்துக்கு முந்திய நாளில் திருக்காப்பு அணிவித்து ஊர்வலம் செய் தனர். திருமண நாளில் தோணியப்பரை வணங்கி முத்துச் சிவிகைமேல் ஏறி பிள்ளையார் திருமணத்துக்குச் எழுந் தருளினர். அப்போது சகல வாத்தியங்களும் ஒலித்தன. மறையோர் வேதம் ஓதினர். அடியார்கள் கூட்டம் கூட்ட மாகச் சென்றனர். தேவர்கள் தங்கள் விமானங்களிலேறி ஆகாயத்தில் திருமணங் காண நிறைந்தனர். பிள்ளையார் திருநல்லூர்ப் பெருமணத்தை யடைந்து திருக்கோயிலுட் சென்று சுவாமியை வணங்கிப் புறம்போந்து ஓர் திருமடத் தில் தங்கினுர். வேதியர் வேண்டுகோளின்படி திருமணக் கோலம் கொண்டார். பல்வகை ஆடை ஆபரணங்களை மறையோர் அணிந்து தெய்வக்கோலஞ் செய்யப் பிள்ளை யார் திருவடையாள மாலையைத் தமது திருக்கரங்களினுல்

எடுத்துப் பூண்டார். ஐந்தெழுத்தோதி, திருவெண்ணீறு சாத்தி, சிவபெருமானை வணங்கி முத்துச்சிவிகையின்மேல் ஏறினார். எட்டுத் திக்குகளிலும் மங்கல வாத்தியங்கள் முழங்கின. தேவர்கள் கற்பகப் பூமாரி பொழிந்தனர். முனிவரும் மறையவரும் வேதமொழிகளால் வாழ்த்தினர். திருச்சின்னங்கள் அவர் திருநாமத்தை ஓதத் திருமணப் பந்தலை அடைந்து, "தூமலர் தவிசின்மீது" எழுந்தருளினார். வேத முறைப்படி எல்லாச் சடங்களும் நடைபெற்றன. பிள்ளையார் வேதமுறைப்படி வேட்டு ஓமாக்கினியை வலம் வரும் போது மணமகள் கையைப் பிடித்துக்கொண்டு அக்கினி மூர்த்தியானவர் சிவபெருமானே எனக் கருதி இறைவர் திருவடியை மணமகளுடன் சேர்வேன் என்னும் ஆதரவு பொங்கச் சுற்றத்தாரும் அடியார் கூட்டமும் சூழ்ந்துவரத் திருப்பெருமணம் என்னும் திருக்கோயிலை யடைந்து "கல்லூர்ப்பெருமணம்" என்னும் பாமாலையைச் சாத்தினார்.

திருநல்லூர்ப் பெருமணம்—பண் - அந்தாளிக் குறிஞ்சி.

கல்லூர்ப் பெருமணம் வேண்டா கழுமலம்
பல்லூர்ப் பெருமணம் பாட்டு மெய்யாய்த்தில
சொல்லூர்ப் பெருமணஞ் சூடலரே தொண்டர்
நல்லூர்ப் பெருமண மேய நம்பானே.

நறும்பொழிற் காழியுண் ஞானசம் பந்தன்
பெறும்பத நல்லூர்ப் பெரு மணத்தானை
உறும்பொருளாற் சொன்ன வொண்டமிழ் வல்லார்க்
கறும்பழி பாவ மவல மிலரே.

சிவபெருமான் திருவருள் பாலித்து "நீயும் உன் பத்தினியும் உன் திருமணத்துக்கு வந்த எல்லோரும் எம்பால் வந்து சேர்க" என்று திருவாய் மலர்ந்தருளினார். சிவலிங்கத்திலிருந்து சோதி தோன்றிக் கோயிலை உள்ளடக்கிச் சோதிலிங்கமாய் ஒரு வாசலைக் காட்டியது. திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் சோதிவடிவாய் நின்ற கடவுளை வணங்கித் துதித்து நமச்சிவாயப்பதிகம் பாடியருளினார்.

நமச்சிவாயத் திருப்பதிகம்—பண் - கௌசிகம்.

காத லாகிக் கசிந்துகண் ணீர்மல்கி
ஓது வார்தமை நன்னெறிக் குய்ப்பது
வேத நான்கினு மெய்ப்பொரு ளாவது
நாத னாம நமச்சி வாயவே.

நந்தி நாம நமச்சிவா யவெனும்
சந்தை யாற்றமிழ் ஞானசம் பந்தன்சொல்
சிந்தை யான்மகிழ்ந் தேத்தவல் லாரெலாம்
பந்த பாசு மறுக்கவல் லார்களே.

அங்குள்ள எல்லோருக்கும் பிறவி நோய் தீரும்படி அச்சோதியில் புகுமாறு பிள்ளையார் பணித்தனர். அங்கு வந்து கூடிய யாவரும் புகுந்தபின் நாயனுர் காதலியைக் கைப்பற்றிக்கொண்டு பரஞ்சோதியுட் புகுந்து சிவத்தோடு இரண்டறக் கலந்து முடிவு காண்கிலாப் பேரின்பமுற்றுர். உடனே சோதியும் ஒடுங்கி முன்போலத் திருக்கோயிலாய் விளங்கியது. சோதியுட் புகாமல் தூரத்தே நின்ற விண்ணவர்களும் முனிவர்களும் இந்த அற்புதங்கண்டு புகழ்ந்து போற்றினர். தூரத்தே நின்ற சிலருக்கு அப்பேறு வாய்க்கவில்லை. அதனை இழந்து வருந்தினர்கள்.

ஏர்மண நல்லூர்ச்சுடருள் யாருமணுகச் சிலர்தாந்
தூரநெறி நின்றயர்ந்தார் சோமேசா—வோரில்
தவமுந் தவமுடையார்க் காகு மவமதனை
யஃதிலார் மேற்கொள் வது.

"கொள்ளைகொள்ள வீடுதவிக் கூற்றைப் பிடர்பிடித்துத் தள்ளுந் திருஞான சம்பந்தா" என்று போற்றினர் சிவப்பிரகாசரும்.

திருஞானசம்பந்தமூர்த்தி நாயனுர் மூன்று வயதில் சிவபெருமானையும், பராசத்தியையும் நேரே கண்டு ஞானப்பால் உண்டு எல்லாக் கலைகளையும் ஓதா துணர்ந்து சிவஞானமும் சிவானுபவமும் பெற்றுத் தாம் பாடிய தேவாரப் பதிகங்களால் பதி, பசு, பாசங்களின் தன்மைகளை விளக்கிக்காட்டிப் பேரன்போடு இறைவர் திருவருள் வழிநின்று இவ்வுலகின்கண் சிவநெறி வளர்த்த பரமாசாரியராவர். அடியார்களுக்கு இறைவர் தாமே வேண்டிய வரங்களைக் கொடுத்தருள்வர் என்பது பிள்ளையார் வேண்டாதிருக்கவும் சிவபெருமான் திருக்கோலக்காவில் ஐந்தெழுத்துப் பொறிக்கப்பட்ட பொற்றுளமும், திருவரத்துறையில் முத்துச்சிவிகையும், திருப்பட்டீச்சரத்தில் முத்துப்பந்தரும் கொடுத்தருளியதனுல் அறியப்படும். திருவாவடு

துறையில் தந்தையாராகும் சிவபாதவிருதயர் யாகம்செய்யப் பொருளை விரும்பியபோது இறைவரிடம் ஆயிரம் பொன்வாங்கிக்கொடுத்ததும், திருமருகலில் பாம்பு கடித்திறந்த வணிகனை அவனுடன் வந்த பெண்ணின் வேண்டுதலுக்கிரங்கி அவள்பால் கருணைகொண்டு உயிர்பிழைக்கச்செய்து இருவர்க்கும் மணஞ்செய்து வைத்ததும், தம்மை அன்போடு அடைந்தவர்கட்கு இம்மையில் போகங்களும் மறுமையில் முத்தியுங் கொடுத்தருளியதும், திருவீழிமிழலையில் அடியார் திருவமுது செய்தற்காக இறைவரிடம் படிக்காசு பெற்றதும், திருமறைக்காட்டில் திருக்கதவு அடைக்கப் பாடியதும், பாண்டிநாட்டில் சமணர்களோடு வாதம் செய்து பாண்டியனுடைய வெப்பு நோயைத் தீர்த்ததும், நெருப்பிலிட்ட ஏட்டைப் பச்சையாக எடுத்ததும், வைகையிலிட்ட ஏட்டை ஆற்றின் எதிரே ஓடச்செய்து சமணரை வென்று அதனால் சிவநெறியைப் பாண்டிநாட்டில் நிலைநிறுத்தியதும், புத்தரை வாதில் வென்றதும், திருக்கொள்ளம்பூதூரில் ஓடக்காரர் இல்லாது ஓடங்களைச் செலுத்தச் செய்ததும், திருவோத்தூரில் சிவனடியார் பொருட்டு ஆண்பனைகளைப் பெண்பனைகளாக்கிக் காய்க்கச் செய்ததும், திருமயிலையில் சிவநேசர் பொருட்டு எலும்பைப் பெண்ணாக்கியதும், ஆச்சாபுரத்தில் தமது திருமணத்திற்கு வந்தவர்கட்கும் சேவித்தவர்கட்கும் அவரவர் தவத்துக்கேற்றபடி முத்தியின்பங் கொடுத்தருளியதுமாகிய இன்னோரன்ன அற்புதங்களெல்லாம் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் தெய்வ ஆற்றலை விளக்கப்போந்த சான்றுகளாகும். சம்பந்தர் சிவபெருமானின் ஒளியாய்த் திகழ்ந்து பஞ்சகிருத்தியஞ் செய்தவரென்பது பின்வரும் பாடல்களால் அறியலாம். இத்துணைச் சிறப்புடைய சம்பந்தமூர்த்திகளை வழிபட்டு, உலகம் உய்யும்வண்ணம் அவர் திருவாய் மலர்ந்தருளிய தமிழ் வேதத்தை நாமெல்லாம் அன்புடன் ஓதி இம்மையிலும் மறுமையிலும் இன்பங்களைப் பெற்றுய்வோமாக.

கானலில் விரைமலர் விம்மு காழியான்
வானவன் கருக்குடி மைந்தன் தன்னொளி
யானமெய்ஞ் ஞானசம் பந்தன் சொல்லிய
ஊனமில் மொழிவலார்க் குயரு மின்பமே.

—கருக்குடித் தேவாரம்.

தவந்த வென்பினைப் பெண்ணெனப் படைத்துஞ்சார் மழவ
னுவந்த பெண்ணுயி ரளித்துமொட் டாதெதிர்புத்த
னிவந்த சென்னியை யுருட்டியு முத்தொழி னிறுவிப்
பவந் தடுத்துயிர்க் கருளுஞ்சொற் பனவனைப் பணிவாம்.

—பேரூர்ப்புராணம்.

திருஞானசம்பந்தர் திருவடி வாழ்க.

# ஏயர்கோன் கலிக்காம நாயனார்

ஏதமில்வே ளாளர்பெரு மங்க லத்து
  ளேயர்கோன் கலிக்காம ரிறையை நேரே
தூதுகொளு மவனாகி லென்னா மென்னாந்
  துணிவினர்பா லிறைவனருஞ் சூலை யேவி
வேதனைவன் றொண்டன்வரி னீங்கு மென்ன
  வெகுண்டுடல்வாள் கொடுதுறந்து மேயு நாவற்
போதகமு முடலிகழ வெழுந்து தாழ்ந்து
  போற்றியது விலக்கியருள் பொருந்தி னாரே.

சோழநாட்டிலே திருப்பெருமங்கலம் என்னும் பதியில் மெய்ந்நெறி நிற்கும் வேளாளர் குலத்தில் கலிக்காம நாயனார் அவதரித்தார். இவர் சிவனடியார்களுக்கு வேண்டிய பணிகளைச் செய்துவந்தார். திருப்புன்கூர் என்னும் சேத்திரத்தில் பல திருப்பணிகளைச் செய்தவர். அடியார் பத்தியே செல்வமாகக் கொண்டவர்.

திருக்கோயிலில் திருத்தொண்டு செய்தல் சிவபுண்ணியம் என்பதைக் குங்குலியக்கலய நாயனார் முருக நாயனார் சரித்திரங்களிலும் அடியார்களுக்குத் தொண்டுசெய்வது பெரிய புண்ணியம் என்பதை இளையான்குடிமாற நாயனார், இயற்பகை நாயனார், அமர்நீதி நாயனார் சரித்திரங்களிலும் கண்டு தெளியலாம்.

சுந்தரமூர்த்தி நாயனார் தியாகராசப் பெருமானைப் பரவையாரிடம் தூதுபோக அனுப்பியதைக் கலிக்காம நாயனார் கேட்டுக் கோபங்கொண்டார். சுவாமி தூது செல்லத்தக்க பெரும் பேற்றைச் சுந்தரர் பெற்றனர் என்று ஏயர்கோன் அதிசயத்தாரெனினும், இவ்வாறு செய்தல் தகாதெனக்கொண்டு அஞ்சி வருந்தினர்.

“ இம்பரின் மிக்க வார்த்தை யேயர்கோ னார்தாங் கேட்டு
  வெம்பினா ரதிச யித்தார் வெருவினார் விளம்ப லுற்றார் ”

—பெரியபுராணம்.

பரவையாரிடம் வைத்த காதலினால் பாத தாமரைகள் வருந்தச் சிவபெருமானைத் தூதாக அனுப்பிய சுந்தரனைக் கண்டால் விடுவேனா என்று கலிக்காம நாயனார் கோபங் கொண்டிருந்தார்.

" தேசிகனை யேவற்க தேசிகன்தன் காரியத்து
ஈசன் பணிதன் னிலும் "

என்பது சைவசமய நெறி.

சுந்தரமூர்த்தி நாயனுர் சுவாமியைத் தூது போக்கியது குற்ற மாகாது. இது பசுகரணம் நீங்கப்பெற்று நடந்த செயலாகும்.

"பற்றுக பற்றற்ருன் பற்றினையப் பற்றை
பற்றுக பற்று விடற்கு"

என்றபடி சுந்தரமூர்த்திகள் உலகவாழ்விற்கு ஓர் உதாரணமாக வாழ்ந்தனர் என்க.

ஏயர்கோன் கலிக்காம நாயனுர் தம்பால் கோபங் கொண்டிருப்பதைக் கேட்ட சுந்தரமூர்த்தி சுவாமிகள் தாம் செய்தது குற்றமென்று சிவபெருமானிடம் விண்ணப்பஞ் செய்தார். சிவபெருமான் இருவரையும் நண்பராக்கத் திருவுளங்கொண்டு ஏயர்கோன் கலிக்காம நாயனுருக்குக் கொடிய சூலை நோயை விடுத்தார். கலிக்காமர் துன்பம் பொறுக்கமாட்டாது சிவபிரானை நினைந்து வேண்டினர். சிவ பெருமான் கலிக்காமரிடம் சென்று "வன்றொண்டனு லன்றி உன் நோய் தீராது" என்றருள் செய்தார்.

ஏயர்கோன் பெருமானை நோக்கி "தேவரீரை மெய்க் கடவுளெனக் கொண்டு வழிவழியாகத் தொண்டு செய்து வந்த மரபிலுள்ள அடியவனுகிய என்னை வருத்துகின்ற நோயைப் புதிதாய் ஆட்கொள்ளப்பட்ட ஒருவனே தீர்க்க வேண்டும்? அவன் வந்து தீர்ப்பதிலும் இந்நோய் தீரா திருப்பதே நலம். சுவாமி செய்யும் திருவிளையாட்டை அறிந்தார் யார்?" என்றுர். அது கேட்ட சுவாமி மறைந் தருளினுர். பின்னர், சுவாமி சுந்தரரிடஞ் சென்று "நாம் ஏவியபடி ஏயர்கோனை வருத்துகின்ற நோயை நீ போய்த் தீர்ப்பாயாக" என்று கட்டளை யிட்டார். சுந்தரமூர்த்தி சுவாமிகள் மகிழ்ந்து இறைவரைப் போற்றி அவர் கட்டளை யின்படி கலிக்காமனுர் சூலைநோயைத் தீர்க்கப் புறப்பட்டுச் சென்றுர். செல்லும்போது தாம் சிவபெருமான் கட்ட ளைப்படி சூலை நோயைத் தீர்க்க வருவதாக ஏயர்கோனுக் குச் செய்தி சொல்லியனுப்பினர். சூலை நோயினுல் வருந்து

கின்ற கலிக்காம நாயனார் தமது நோய் தீர்க்கச் சுந்தர மூர்த்தி சுவாமிகள் வருதலைக் கேட்டு மிக வருந்தி அவர் வருமுன் உயிர்விடக் கருதி உடைவாளை உருவி வயிற்றைக் கீறிச் சூலை நோயையும் உயிரையும் ஒருமிக்கப் போக்கிக் கொண்டார்.

சுந்தரமூர்த்தி நாயனார் சுவாமியைத் தூதாக அனுப்பியது குற்றம் என்றும், அவ்வாறு செய்தவர் வந்து தன் நோயைத் தீர்ப்பதிலும் தான் உயிர்விடுதல் உத்தமம் என்றும், அவரை நேரே காண்பது கூடாதென்றும் கொண்ட உறுதிப்பாட்டினால் ஏயர்கோன் உயிர் துறந்தார். இந்நாயனார் சிவபத்தியின் முதிர்ச்சி இதனால் காணப் படும்.

> நோக்குறு நுதலோ னின்னிடை விருப்பா
> ஞூற்பக வன்ன நுண் மருங்குல்
> வார்க்குவி முலைமென் மகளிர்தம் புலவி
> மாற்றுவான் சென்றன னென்றூற்
> கோக்கலிக் காமன் வயிற்றிடைக் குத்திக்
> கொண்டதே துக்குநீ புகலாய்
> காக்கரு மதலை விழுங்கிய முதலை
> ஈன்றிடத் தோன்றுநா வலனே.

என்பது நால்வர் நான்மணிமாலை

கற்பிற்சிறந்த ஏயர்கோன் மனைவியார் கணவனோடு தாமும் உயிர் துறக்க முயன்றார். அப்போது சுந்தரமூர்த்தி நாயனார் எழுந்தருளி வந்தாரெனக் கேட்டுத் தமது நாயகன் இறந்த கவலையை மறைத்து, வீட்டை அலங்கரித்து அவரை எதிர்கொள்ளும்படி தமது சுற்றத்தாரை அனுப்பினார். அவர்கள் போய் எதிர்கொண்டழைத்து வந்து மலர்த் தவிசின்மேலேற்றிப் பாதபூசை முதலான அருச்சனைகளைச் செய்தனர். அவர்கள் செய்த உபசாரங்களைக்கண்டு மகிழ்ந்து சுந்தரமூர்த்தி சுவாமிகள் கலிக்காம நாயனாருக்குச் சூலை நோயைத் தீர்க்கவேண்டும் என்றார். ஏயர்கோன் மனைவியார் சொற்படி பணியாளர் நாயனார் சுகமாய்ப் பள்ளியறையில் நித்திரை செய்கின்றார் என்று தெரிவித்தனர். சுந்தரமூர்த்திகள் அது கேட்டும் தாம் அவரை நேரே காணவேண்டுமென்றார். உடனே அவர்கள் கலிக்காமரைக் காட்டினர். ஏயர்கோன் இரத்தஞ் சொரியக் குடல்சரிந்து

இறந்து கிடப்பதைக் கண்டு சுந்தரமூர்த்தி சுவாமிகள் தாமும் அவ்வாறு உயிர் விடுதல் நன்றென மொழிந்து உடைவாளை எடுத்தார். உடனே சிவபெருமான் அருளினால் ஏயர்கோன் உயிர்பெற்று எழுந்து சுந்தரர் கைவாளைப் பிடித்தனர். சுந்தரமூர்த்தி சுவாமிகள் ஏயர்கோனை வணங்க, ஏயர்கோன் சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவடிகளை வணங்கி இருவரும் நண்பர்களாகிச் சிவபெருமானது திருவருளைத் துதித்தனர். நாயனார் இருவரும் திருப்புன்கூர்ச் சென்று சுவாமியை வணங்கிப் போற்றினர். சிலநாட் சென்றபின் திருவாரூர் வந்து வன்மீகத் தியாகராசரை வணங்கினார்கள். கலிக்காம நாயனார் சிலகாலம் திருவாரூரி லிருந்து சுந்தரமூர்த்தி சுவாமிகளிடம் விடைபெற்று மீண்டும் தமது பதி வந்து திருத்தொண்டு செய்து சிறப்பினோடு சிவபெருமான் திருவடி சேர்ந்தார்.

தன் கணவன் இறந்து கிடந்தபோது சுந்தரமூர்த்திகளுக்கு அதனை மறைத்து அவரை எதிர்கொண்டு உபசரித்தலை மேலாகக் கொண்ட கலிக்காமனார் மனைவியாரது அடியார் பத்தியின் மாண்பு இவ்வளவென்று கூறுதல் கூடுமோ? ஏயர்கோன் இறந்ததற்குத் தாமே காரணம் என்ற கவலையினால் அதற்குப் பரிகாரம் செய்ய எண்ணாமல் நம்பியாரூரர் தம் உயிர் நீக்கத் துணிந்தார். அப்போது

" எண்ணிய வெண்ணியாங் கெய்துப எண்ணியார்
திண்ணிய ராகப் பெறின் "

என்றபடி, திருவருளினால் ஏயர்கோன் உயிர்பெற்றெழுந்தார்.

எத்திறமு மேயர்கோ னட்பாமா றெண்ணினரே
சுத்தநெறி யாரூரர் சோமேசா—வைத்த
அரியவற்று ளெல்லா மரிதே பெரியாரைப்
பேணித் தமராக் கொளல்

என்னும் முதுமொழி வெண்பா சுந்தரரின் அடியார் பக்தியைக் காட்டும். இந்நாயனார் மானக்கஞ்சாற நாயனாரின் மருகராவர். இவர் சரித்திரத்தால் சிவபிரானும் சுந்தரரும் வேறல்லரென்பது புலனாகும்.

# திருமூல நாயனர்

கயிலாயத் தொருசித்தர் பொதியிற் சேர்வார்
காவிரிசூழ் சாத்தனூர் கருது மூலன்
பயிலாநோ யுடன்வீயத் துயர நீடும்
பசுக்களைக்கண் டவனுடலிற் பாய்ந்து போத
வயலாகப் பண்டையுட லருளான் மேவி
யாவடுதண் டுறையாண்டுக் கொருபா வாகக்
குயிலாரு மரசடியி லிருந்து கூறிக்
கோதிலா வடகயிலை குறுகி னாரே.

திருமூலநாயனர் திருக்கயிலாயமலையில் நந்தி பெம்பெருமான் திருவருள்பெற்ற நான்மறை யோகிகளுள் ஒருவர். அணிமா, மகிமா, இலகிமா, கரிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம் என்று சொல்லப்படும் எண்வகைச் சித்திகளையும் பெற்றசிவயோகியார். அகத்திய முனிவர்பாற்கொண்ட கேண்மையினல் அவருடன் சில காலம் வசிப்பதற்கு விரும்பித் திருக்கைலாசத்தை விட்டுப் பொதியமலைக்குப் புறப்பட்டு வந்தார். வரும்வழியில் திருக்கேதாரம், நேபாளம், அவிமுத்தம் (காசி), ஸ்ரீசயிலம், திருக்காளத்தி, திருவாலங்காடு, காஞ்சீபுரம், திருவதிகை முதலிய தலங்களை வணங்கிச் சிதம்பரம் வந்து ஐந்தொழிற் பெருங்கூத்தனர் திருவடிகளை வணங்கிச் சிலநாள் அப்பதியில் தங்கினர்.

பின்னர், காவிரியாற்றைக் கடந்தேறித் திருவாவடுதுறையை அடைந்து அத்தல நாயகரை வணங்கி அங்கே வைகினர். ஒருநாள் அங்கிருந்து செல்லும்போது பொன்னியாற்றின் கரையிலுள்ள ஒரு காட்டில் பசுக்கள் கூடிநின்று புலம்புவதை எதிரே கண்டார். அவைகளை மேய்க்கின்ற மூலன் என்னும் இடையன் அங்கே இறந்து கிடந்தான். பசுக்கள் அவன் உடலை மோந்து கதறியழுது நின்றன. மூலன் உயிர்பெற்றெழுந்தாலன்றிப் பசுக்கள் துயரம் நீங்காதென்று கண்டுத் தமது உடம்பைக் காவல் செய்து, தம் உயிரை அவனுடம்பிற் புகுத்தித் திருமூலராய் எழுந்தார். அதுகண்ட பசுக்களெல்லாம் கவலை தீர்ந்து

களிப்படைந்து மேயத்தொடங்கின. திருமூலர் அப்பசுக் களை நன்றாக மேய்த்தார். சாயங்காலம் பசுக்கள் சாத்த னூருக்குச் செல்லத் தாமும் அவைகள் பின்சென்று பார்த்து நின்றார்.

பசுக்களை அடியாமல் அன்போடு மேய்த்துக் காலம் தவறாமல் புல் தண்ணீர் முதலியன கொடுத்துச் சாலைகளில் கட்டித் தூபம் தீபங்காட்டுதலும் அவைகள் வசிக்கும் சாலைகளைச் சுத்தமாகவைத்து மழையிலும், கடும் வெய்யிலிலும் அவைகளைப் போகவிடாது பாது காத்து வருதலும் பெரும் புண்ணியமாகும். பசுக்களை ஓம்புதல் புண்ணியம் என்பதைச் சண்டேசுரநாயனார் சரிதத்தால் அறியலாம்.

மூலன் இறந்ததை யறியாத அவன் மனைவி அவனைத் தேடினாள். அவனுடம்பிற் பிரவேசித்து நிற்கும் யோகி யாரைக் கண்டு அவனுக்கேதும் வருத்தமுண்டோ என்று தொட்டுப்பார்க்கப் போனாள். அவர் உடன்படாதது கண்டு "என் இப்படி இருக்கின்றீர்?" என்றாள். அவர் "நமக்கும் உனக்கும் சம்பந்தமில்லை" என்றார். அவர் ஒரு பொதுமடத்தில் இராத்தங்கினார். மூலன் மனைவி அன்றிரவு நித்திரையின்றிக் கவலையோடிருந்தாள். மறு நாள் அவள் அவ்வூரில் கற்றறிந்த பெரியோரிடம் சென்று முறையிட்டாள். அவர்கள் வந்து அவரைக் கண்டபோது, 'யான்' 'எனது' என்னும் இருவகைப் பற்றுக்களும், காமம் முதலிய குற்றங்களும் நீங்கப்பெற்று அவர் சிவயோகத்தி லிருக்கின்றனர் என்றறிந்து அவளை அழைத்துக்கொண்டு வீடுபோய்ச் சேர்ந்தனர்.

சிவயோகத்திலிருந்த யோகியார் எழுந்து பசுக்கள் வந்தவழியே போய்த் தாம் காவல் செய்துவைத்த இடத் தில் தம் உடம்பைக் காணாமல் ஞானஉணர்வினால் ஆராய்ந் தார். சிவபெருமான் அருளிச்செய்த சைவாகமங்கள் இருபத்தெட்டின் உண்மைப்பொருள்கள் எல்லாம் தமிழுலகத்துக்கு உபயோகப்படும்வண்ணம் தமிழில் திரு மந்திர நூல் இயற்றுவிக்கும்பொருட்டுத் தம்முடைய உட லைச் சிவபெருமான் மறைத்தருளினரென்று உணர்ந்தார். அங்கிருந்து திருவாவடுதுறையை அடைந்து சிவபெருமானை வணங்கினார். அத்திருக்கோயிலின் மேற்றிசையில் அரசமர

நிழலிலிருந்து சிவயோகம் தலைநின்று சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய நான்கு பாதங்களையும் நன்கு தெளிவிக்கும் திருமந்திரம் என்னும் நூலை ஓதியருளினார். ஆண்டுக்கொரு திருப்பாட்டாகப் பாடப்பெற்ற இத்திருமுறை மூவாயிரம் பாடல்கள் கொண்டது. எனவே, இந்நூல் தந்தருளிய திருமூலநாயனார் இம்மண்ணுலகில் மூவாயிரம் வருடம் சிவயோகத் தமர்ந்து அப்பால் திருக்கயிலையை அணைந்து பின் சிவபெருமான் திருவடிகளை அடைந்தார்.

திருமந்திரமாலை

ஒன்றவன் றானே யிரண்டவ னின்னரு
ணின்றனன் மூன்றினு ணான்குணர்ந் தானைந்து
வென்றன னாறு விரித்தன னேழும்பர்ச்
சென்றவன் றானிருந் தானுணர்ந் தெட்டே.

நீரு நிலனும் விசும்பங்கி மாருத
தூரு முடம்புறு சோதியு மாயுளன்
பேரும் பராபரன் பிஞ்ஞக னெம்மிறை
யூருஞ் சகல னுலப்பிலி தானே.

திருமூலர் திருமந்திரம் நம்பியாண்டார் நம்பியால் பத்தாந் திருமுறையாக வகுக்கப்பட்டுளது. இந்நூல் தமிழ் வேதாகமங்களில் ஒன்றாய் நிலவும் பெருமையுடைத்து.

# தண்டியடிகள் நாயனர்

*திருவாரூர் வருந்தண்டி யடிகள் காட்சி*
*சேரா தார் குளந்தொட்டற் கமணர் சீறிக்*
*குருடாநீ முன்செவிடுங் கூடிற் றென்று*
*குறித்தறியைப் பறித்தெறியக் கொதித்துத் தங்க*
*ணருளாலே விழித்தெவரு மந்த ராக*
*வமணர்கலக் கம்பலகண் டவர்கள் பாழிப்*
*பருவான கற்பறித்தா விக்கரையுங் கட்டிப்*
*பரனருளா லமருலகம் பற்றி னாரே.*

திருவாரூரில் பிறத்தல் விசேடம் என்பது ஆன்றோர் கூற்று. தண்டியடிகளுயனார் அப்பதியில் பிறந்த பேற்றை யுடையவர். இவர் பிறவிக் குருடராயிருந்தமையால் சிவ பெருமானை முகக்கண்ணால் கண்டு களிக்கப்பெறாது, அகக் கண்ணால் உணர்ந்து வழிபட்டு வந்தார். தியாகராசப் பெருமானிடத்தில் பேரன்புள்ளவர். திருத்தொண்டு செய்வதில் சிறந்தவர். ஐந்தெழுத்தை எப்போதும் ஓதும் இயல்புடையவர். கமலாலய தீர்த்தக்கரையில் சமணர் மடங்கள் நெருங்கினமையால் திருக்குளம் குறைந்து போவதை யறிந்து அதனை அகலமாகத் தோண்ட விரும்பி னார். கண்ணில்லாதவராகையால் வழியறிந்துகொள்வதற் காகக் குளம் தோண்டுமிடத்தில் ஒரு தறியும், மண்கொட்டு தற்குரிய இடத்தில் மற்றொரு தறியும் நாட்டி, இரண்டு தறி களையும் கயிற்றினாலிசையக் கட்டினார். மண்ணை வெட்டி எடுத்துக்கொண்டு கயிற்றைப் பிடித்துக் கரையேறிக் கொட்டுவதும், பின் இறங்குவதுமாய் ஐந்தெழுத்தோதிக் கொண்டு திருத்தொண்டு செய்தார்.

சிவபெருமானிடத்தில் அன்பில்லாது செய்யும் கருமங்கள் வீண் செயலாகும். "ஓது மெழுத்தஞ் சுடனுய்ப்பார்" என்றபடி ஸ்ரீ பஞ்சாட்சரத்தைப் பேரன்போடு ஓதுவோர் மும்மலங்களி லிருந்து நீங்கி முத்திபெறுவர். இதற்குப் பிரமாணம் மூவர் பாடி யருளிய பஞ்சாட்சரப் பதிகங்களிற் கண்டுகொள்க.

இப்படித் தினந்தோறும் மிகுந்த விருப்பத்துடன் திருக்குளம் கல்லுவதைக் கண்ட சமணர்கள் பொறாமையி

னால் அவரை நோக்கி "தண்டியே! நீ மண்ணை வெட்டினால் பிராணிகள் இறந்துபோம். அவைகளை வருத்தவேண்டாம்" என்றனர். அதுகேட்ட நாயனார் "திருவிலிகாள்! இது சிவபெருமானை நோக்கிச் செய்யும் குற்றமில்லாத அறம் என்பதை நீங்கள் அறியமாட்டீர்கள்" என்றார்.

"பூசு நீறு சாந்தமெனப் புனைந்த பிரானுக் கானபணி
ஆசிலா நல்லற மாவ தறியவருமோ வுமக் கென்றார்."

—பெரியபுராணம்.

சிவனடியார்கள் தொண்டு செய்யும்போது குற்றங்கள் வரினும் அவை புண்ணியமாய் முடியும்.

அரனடிக் கன்பர் செய்யும் பாவமு மறம தாகும்
பரனடிக் கன்பி லாதார் புண்ணியம் பாவ மாகும்
வரமுடைத் தக்கன் செய்த மாவேள்வி தீமை யாகி
நரரினிற் பாலன் செய்த பாதக நன்மை யாய்த்தே.

என்பது சிவஞான சித்தியார்.

சமணர்கள் அவரை நோக்கி "நாங்கள் சொல்லும் அறங்களை நீ கேளாய், செவியும் இழந்தனைகொல்?" என்றனர். தண்டியடிகள் "மந்தபுத்தியும், குருட்டுக்கண்ணும், செவிட்டுக்காதும் உங்களுக்கேயுள்ளன. நமது கடவுளின் கிருபையால், உங்கள் கண்கள் குருடாகி என் கண் உலகெல்லாம் காணக்கூடுமானால் நீங்கள் என்ன செய்வீர்கள்?" என்றார். அப்படி நிகழ்ந்தால் அவர்கள் அந்த ஊரை விட்டுப் போய்விடுவதாகக்கூறி அவர் நட்ட தறியையும், மண்வெட்டி கூடையையும் பறித்து வீசி எறிந்தனர்.

இப்படிச் சமணர் செய்த கொடுமையினால் தண்டியடிகள் மிகவும் வெகுண்டு சிவபெருபெருமான் பூங்கோயில் முன் சென்று "பெருமானே! இன்று சமணர் நம்மை அவமானம் செய்தார்கள்! அதனால் வருந்துகின்றேன்! தேவரீர் நமது துன்பத்தை நீக்கியருள வேண்டு"மென்று முறையிட்டு வணங்கித் திருமடத்துக்குச் சென்று மனம் வருந்தி அழுதார். அன்றிரவு நித்திரை செய்யும்போது எல்லா உலகங்களுக்கும் ஆதிகாரண முதல்வராகிய சிவபெருமான்

கனவில் தோன்றி "அன்பனே! கவலையொழிக! நாளைக்கு நீ கண்ணைப் பெற்றுச் சமணர் கண் குருடாவதைக் காண்பாய்!" என்றருளிச் செய்து மறைந்தார். அன்றிரவு சுவாமி சோழராசனுக்குக் கனவில் தோன்றி நாயனாருக்கும், சமணர்களுக்கும் நடந்தவைகளைக் கூறி "அந்த வழக்கை நீயே தீர்க்கவேண்டும்" என்றருளிச் செய்தார்.

> நெஞ்சின் மருவுங் கவலையினை யொழிநீ நின்கண் விழித்தந்த
> வஞ்ச சமணர் தங்கண்கண் மறையு மாறு காண்கின்றா
> யஞ்ச வேண்டா வென்றருளி யவர்பா னீங்கி யவ்விரவே
> துஞ்சு மிருளி னரசன்பாற் றோன்றிக் கனவி லருள்புரிவார்.

> தண்டி நமக்குக் குளங்கல்லக் கண்ட வமணர் தரியாராய்
> மிண்டு செய்து பணிவிலக்க வெகுண்டா னவன்பா னீமேவிக்
> கொண்ட குறிப்பா லவன்கருத்தை முடிப்பா யென்று [கொளவருளித்
> தொண்ட ரிடுக்க ணீங்கவெழுந் தருளி னாரத் தொழிலுவப்பார்.
>
> —பெரியபுராணம்.

மறுநாள் காலையில் சோழராசன் தண்டியடிகள் நாயனாரிடஞ் சென்று தாம் கண்ட கனவை விளம்பினான். தண்டியடிகள் சுவாமி தமக்குக் கனவில் கூறியருளியதை நினைந்து சமணர்களுக்கும் தமக்கும் நிகழ்ந்த வழக்கைத் தெரிவித்தார். அப்பொழுது அரசன் சமணர்களை அழைத்து விசாரணை செய்தான். சமணர்கள் தண்டியடிகளோடு பேசியவைகளை ஒப்புக்கொண்டனர். தண்டியடிகள் முன் போக, அரசன் பின் சென்று குளக்கரையில் நின்று தண்டியடிகளை நோக்கி "தவத்தின் மிக்க பெருந்தகையே! நீர் சிவபெருமானுடைய திருவருளால் கண் பெறுதலைக் காட்டும்" என்றான். உடனே அவர் சிவபெருமானே மெய்க்கடவுள் என்பதும், நான் அவர்க்கு மெய்யன்பன் என்பதும் உண்மையானால் என் கண் திறக்கப்படும் என்றும், திருவாரூரிலுள்ள சமணர்கள் எல்லாம் இவ்வரசன் முன் தங்கள் கண்களை இழப்பார்கள் என்றும் ஐந்தெழுத்தோதிக்கொண்டு திருக்குளத்தில் மூழ்கிக் கண் பெற்றெழுந்தார். அப்பொழுதே சமணர்கள் தங்கள் கண்களை இழந்தனர்.

ஏய்ந்த வடிமை சிவனுக்கியா னென்னி லின்றென் கண்பெற்று
வேந்த னெதிரே திருவாரூர் விரவுஞ் சமணர் கண்ணிழப்பா
ராய்ந்த பொருளுஞ் சிவபதமே யாவதென்றே யஞ்செழுத்தை
வாய்ந்த தொண்ட ரெடுத்தோதி மணிநீர் வாவி மூழ்கினார்.

—பெரியபுராணம்.

அதுகண்ட அரசன் சமணர்களை அந்த ஊரைவிட்டுத் துரத்தித் திருக்குளத்தைத் திருத்தமுற அமைத்து, தண்டியடிகளை வணங்கித் தன் மாளிகைபோய்ச் சேர்ந்தான். நாயனார் திருத்தொண்டுகளைச்செய்து அஞ்செழுத்தோதிச் சிவபெருமானுடைய திருவடி நிழலை அடைந்தார்.

அடியார்கள் தீய செயல் கண்டு கோபங்கொள்வது இயல்பு. வேண்டுவார் வேண்டுவதை ஈயும் கடவுள் மெய்யடியார் விரும்பியதைக் கொடுப்பர்.

சமணர்கள் மெய்யன்பினராகிய தண்டியடிகளைப் பேணாது அவருக்குச் செய்த கொடுஞ் செயல்களே அவர்களுக்குத் தீமையாய் முடிந்தன. "பெரியாரைத் துணைக்கொள்" என்னும் நீதிக்கு மாறாகச் சமணர்கள் நடந்தனர்.

"தண்டி யடிகளிரு தாளிணை பேணாதழிந்தார்
தொண்டராம் பேய்ச்சமணர் சோமேசா—மிண்டுஞ்
சிறியா ருணர்ச்சியு ளில்லைப் பெரியாரைப்
பேணிக்கொள் வேமென்னு நோக்கு"

என்னும் முதுமொழி வெண்பாவும் இதனை உணர்த்தும்.

திருக்கோயிலில் திருத்தொண்டு செய்தலும், திருக்குளம் அமைத்தலும் சிறந்த சிவபுண்ணியம் என்பது இந் நாயனாருக்குச் சோழராசன் முன்னிலையில் சிவபெருமான் அனுக்கிரகம் செய்ததனால் தெளிவுறும்.

# மூர்க்க நாயனார்

தொண்டைவள நாட்டுவளர் வேற்காட் டூர்வாழ்
தொல்லுழவர் நற்சூதர் சூது வென்று
கொண்டபொருள் கொண்டன்பர்க் கமுத ளிக்குங்
கொள்கையினார் திருக்குடந்தை குறுகி யுள்ளார்
விண்டிசைவு குழறுமொழி வீணர் மாள
வெகுண்டிடலான் மூர்க்கரென விளம்பு நாம
மெண்டிசையு மிகவுடையா ரண்டர் போற்று
மேழுலகு முடனாளு மியல்பி னாரே.

மூர்க்க நாயனார் தொண்டை மண்டலத்தில் திருவேற்காடு என்னும் தலத்தில் பரம்பரையாய் நிலைபெற்ற வேளாண் மரபினர்க்கு நாயகமாய் விளங்கியவர். சிவபெருமானிடத்தில் பேரன்புள்ளவர். அடியார்களை அமுது செய்வித்துப் பின் தாம் உண்ணும் இயல்புடையவர். அடியாருக்கு வேண்டியன தம்மால் இயன்ற அளவு கொடுத்து மகிழ்பவர்.

தூய வடிசி னெய்கன்னல் சுவையின் கறிக ளவையமைத்து
மேய வடியார் தமைப்போற்றி விருப்பா லமுது செய்வித்தே
யாய பொருளு மவர்வேண்டும் படியா லுதவி யன்புமிக
வேயு மாறு நாடோறு மினைய பணிசெய் தின்புற்றார்.

—பெரியபுராணம்.

அடியார் பூசையின் பெருமையை இளையான்குடிமாற நாயனார் சரித்திரத்தால் அறியலாம்.

இந்நாயனார் அன்போடு அடியார் பூசைசெய்து வரும் நாளில் மேலும்மேலும் அடியார்கள் தினந்தோறும் பெருகி வந்தமையால் தம்மிடத்திலுள்ள பசு,எருமை,நிலம் முதலியவைகளை விற்று அவர்களுக்கு அமுது செய்துவந்தார். அப்படிச் செய்தற்கும் வேண்டும் பொருளில்லாமையால் கவலையுற்றார். பிறகு, தாம் கற்றுக்கொண்ட சூதினால் பொருள் தேடி அடியார் பூசைசெய்ய எண்ணினார்.

சூதாடுவோர் அவ்வூரில் இல்லாமையால் அங்கிருந்து புறப்பட்டுப் பிற தலங்களில் இறைவரை வழிபடுவதோடு

சூதாட்டத்தினல் வரும் பொருளைக்கொண்டு தமது திருத் தொண்டைச் செய்து கும்பகோணத்துக்கு வந்தார். அங்கே சூதினல் வென்ற பொருளைக்கொண்டு சிவனடியார்களுக்கு அமுதுபடைத்துத் தாம் கடைப்பந்தியி லிருந்து போசனஞ் செய்வார். சூதிலே மறுத்தவர்களைச் சுரிகையினல் குத்தி "நற்சூதர் மூர்க்கர்" என்னும் பெயர் பெற்ருர். சூதில் வென்ற பொருள்களை அமுது செய் வோர் கொள்ளத் தாம் அவைகளைத் தீண்டாது அடியார் பூசையை என்றும் அன்போடு செய்வித்துச் சிவபிரான் திருவடிகளை யடைந்தார்.

சூதினில்வென் றெய்துபொரு ளுரிசற்ற நல்லுணர்விற்
றீதகல வமுதாக்கு வார்கொள்ளத் தாந்தீண்டார்
காதலுட னடியார்க ளமுதுசெயக் கடைப்பந்தி
யேதமிலா வகைதாமு மமுதுசெய்தங் கிருக்குநாள்.

—பெரியபுராணம்

சூதாடுவது குற்றம்; அது பெரும் பாதகங்களில் ஒன்று. "சூதும் வாதும் வேதனை செய்யும்." "சூது விரும்பேல்." தமக்காகப் பொருளையீட்டுதற்கு எண்ணுது தாம் செய்த திருத்தொண்டைக் குறைவுபடாமல் செய்ய எண்ணினமையாலும், தாம் சூதில் பெற்ற பொருள்கொண்டு அடியார்க்கு அமுதுபடைப்பித்துத் தாம் கடைப்பந்தியிலிருந்து போசனம் செய்தமையாலும், புண்ணியம் செய்யும் நோக்கத்தால் சூதாடி வென்ற பொருளைத் தீயவழியிற் செலவிடாமல் திருத்தொண்டு செய்வதில் செலவிட்டமையாலும், சரி பிழை என்பதை மறந்து அடியார் பத்தியில் வசப்பட்டு அவர் களுக்கு அமுது கொடுக்கவேண்டும் என்னும் உறுதிப் பாட்டினலும் ஏவப்பட்டுச் சூதாடியது குற்றமாகாது புண்ணியமாய் முடிந்தது என்றுணர்க.

முற்பணயத்தாற் பின்னு மூண்டிழந்தார் சூதரொடு
சொற்படுஞ் சூதாடினேர் சோமேசா—அற்பமாம்
ஒன்றெய்தி நூறிழக்கும் சூதர்க்கு முண்டாங்கொல்
நன்றெய்தி வாழ்வதோ ராறு.

# சோமாசிமாற நாயனர்

அம்பர்நக ரந்தணர்சோ மாசி மாற
ரன்பர்களாம் யாவர்க்கும் மன்பினமு தளிப்பா
ரும்பர்நிகழ் வகையாகப் பலவுஞ் செய்யு
முண்மையினு ரைந்தெழுத்து மோவா நாவார்
நம்பர்திகழ் திருவாரூர் நயந்து போற்று
நாவலர்கோ னடிபரவு நன்மை யாலே
யிம்பர்தொழ வும்பர்பணிந் தேத்த மேலை
யேழுலகு முடனுளு மியல்பி னரே.

சோமாசிமாற நாயனர் சோழநாட்டிலே திருவம்பர் என்னும் சேத்திரத்தில் மறையவர் குலத்தில் தோன்றியவர். எக்குலத்தாராயினும் கங்கைவார்சடைக் கரந்தார்க்கு அன்பராகில் அவர்களே மேலோர் என்று கொள்ளும் பேரறிவினை உடையவர். சிவதொண்டர்கள் தமது வீட்டுக்கு வந்தால் அவர்களைப் பணிந்து அமுது செய்விக்கும் பண்பின் மிக்கவர். ஐந்தெழுத்தை அன்புடன் ஓதும் நியமமுடையவர். பயன் கருதாது வேதவிதிப்படி சிவ பெருமானை முதல்வராகக்கொண்டு யாகங்களைச் செய்து வந்தார். அவர் திருவாரூருக்குச் சென்று சுந்தரமூர்த்தி சுவாமிகளின் பாதம் தொழுது அப்பரமாசாரியாரின் திருவருளைப் பெற்று சிவனடி சேர்ந்தார்.

நம்பியாரூரர் நாமம் புகன்ற நன்மையினுல் நல்ல பேறுகளைப் பெற்ற பெருமிழலைக் குறும்ப நாயனரைப்போல, சோமாசிமாற நாயனரும் சுந்தரமூர்த்திசுவாமிகள்பால் வைத்த குருபத்தியின் முதிர்ச்சியினுலும் அடியார் பத்தியினுலும் முத்திபெற்றுர் என்க. இவர் செய்த சோமயாகத்தில் இறைவன் பள்ளனுக எழுந்தருளியதாகத் தலபுராணங் கூறும்.

# சாக்கிய நாயனர்

*சங்கமங்கை வரும்வேளாண் டலைவர் காஞ்சிச்*
*சாக்கியரோ டியைந்தவர்தந் தவறுஞ் சைவத்*
*துங்கமலி பொருளுமுணர்ந் தந்த வேடந்*
*துறவாதே சிவலிங்கந் தொழுவோர் கண்டோ*
*ரங்கன்மலர் திருமேனி யழுந்தச் சாத்தி*
*யமருநாண் மறந்தொருநா ளருந்தா தோடிச்*
*செங்கலெறிந் திடுமளவின் மகிழ்ந்த நாதன்*
*றிருவருளா லமருலகஞ் சேர்ந்து ளாரே.*

திருச்சங்கமங்கையிலே மெய்ந்நெறி பேணும் வேளாளர் குலத்தில் சாக்கிய நாயனர் பிறந்தார். முத்திநெறியைக் காட்டும் மார்க்கத்தை நாடினர். அந்நாளில் காஞ்சீபுரம்போய்ப் பௌத்தர் சமயத்தில் சேர்ந்து பிறவியை ஒழிக்கும் வழியைத் தேடினர். பல சமய நூல்களையும் கற்று ஆராய்ந்தார். சிவபெருமான் திருவருள்கூடச் சிவநெறியே மெய்ந்நெறியென்று உணர்ந்தார்.

*அந்நிலைமைச் சாக்கியர்த மருங்கலைநூ லோதியது*
*தன்னிலையும் புறச்சமயச் சார்புகளும் பொருளல்ல*
*வென்னுமது தெளிந்தீச ரருள்கூட வீறில்சிவ*
*நன்னெறியே பொருளாவ தெனவுணர்வு நாட்டுவார்.*

—பெரியபுராணம்.

பலவுயிர்கள்மேல் அன்புடையராயிருந்தும் சிவபெருமானது திருவருளைப் பெருமையால் பௌத்த சமயத்தில் சேர்ந்து தத்துவ ஞானத்தை ஆராய்வாராயினர். எவ்விதக் கலைகளைக் கற்றாலும் திருவருளில்லாதவழிச் சைவசமயஞ் சார்ந்து நிற்றல் அரிதாம்.

*உயிரா வணமிருந் துற்று நோக்கி*
*யுள்ளக் கிழியி னுருவெழுதி*
*யுயிரா வணஞ் செய்திட் டுன்கைத் தந்தா*
*லுணரப்படுவாரோ டொட்டி வாழ்தி*
*யயிரா வணமேறா தானே றேறி யமரர்நா*
*டாளாதே யாரூ ராண்ட*
*வயிரா வணமே யென்னம்மா னேநின்*
*னருட்கண்ணா னேக்காதா ரல்லா தாரே.*

—தேவாரம்.

சிவபெருமான் திருவருள் கொண்டு சைவசித்தாந்த சமயமே மெய்ச்சமயம் என்று அறிந்து ஞானங் கைகூடப் பெற்றார்.

பிரானரு ளுண்டெனி லுண்டுநற் செல்வம்
பிரானரு ளுண்டெனி லுண்டுநன் ஞானம்
பிரானரு ளிற்பெருந் தன்மையு முண்டு
பிரானரு ளாற்பெருந் தெய்வமு மாமே.

—திருமந்திரம்

சிவபெருமானை மறவாமலிருப்பதே உறுதிப்பொருளெனக்கொண்ட சாக்கிய நாயனார், தாம் முன்கொண்ட பௌத்த வேடத்தை நீக்காது என்றும் சிவத்தைத் தியானித்து வந்தார்.

எந்நிலையி னின்றாலு மெக்கோலங் கொண்டாலு
மன்னியசீர்ச் சங்கரன்றா ண் மறவாமை பொருளென்றே
துன்னியவே டந்தன்னைத் துறவாதே தூயசிவந்
தன்னைமிகு மன்பினான் மறவாமை தலைநிற்பார்

—பெரியபுராணம்

உள்ளன்பில் மேற்பட்டவராகிய சாக்கிய நாயனார் அருவம், உருவமாகிய இரண்டு வடிவங்களுக்கும் அறிகுறியாய் விளங்குவது சிவலிங்கம் என்றுணர்ந்து சிவலிங்க தரிசனம் பண்ணிப் போசனஞ் செய்யவேண்டுமென்னும் நியமங்கொண்டார். ஒருநாள் சிவலிங்கம் ஒன்றைக் கண்டு ஆனந்த மிகுதியினால் இன்னது செய்யவேண்டு மென்பது தெரியாமல் பக்கத்திலிருந்த ஒரு சிறு கல்லை எடுத்துச் சிவலிங்கப்பெருமான் திருமேனியின்மீது எறிந்தார். குழந்தைகளுடைய அடாத செயலைக் கண்டு பெற்றோர் மகிழ்ந்துகொள்வர். அதுபோல இந்நாயனார் செயலை இறைவர் உவந்து ஏற்றுக்கொண்டார். தாம் கல்லெறிந்தது திருவருட் சம்மதமெனக் கருதி மற்ற நாளும் நியமப்படி சென்று கல்லை எறிந்தார். இப்படியே தினந்தோறும் சிவலிங்கப்பெருமான்மேல் கல்லெறிதலைத் தொண்டாகக் கொண்டார்.

இந்நாயனாரின் அன்புமயமான செயலானது கண்ணப்ப நாயனாரது செருப்படி சிவலிங்கத்தின் முடியின்மேல் பொருந்திய

தன்மைபோலிருந்தது. அன்பிற்சிறந்த இச்செயலை உணராதார் கல்லும் செருப்புமென்று பழிப்பர். உண்மையை அறிந்தோர் அன்பு மிக்க வாசமலர் என்பர்.

ஒருநாள் கல்லாலெறியுந் தொண்டு செய்யமறந்து போசனம் பண்ணத் தொடங்கியபொழுது கல்லெறியாமல் சிவபெருமானை மறந்துவிட்டேனே என்று போசனஞ் செய்யாதெழுந்து கல்லெறிய விரைந்து ஓடினார். அப்போது சிவபெருமான் காட்சிகொடுத்தருள முத்தியடைந்தார்.

உள்ளன்புள்ளவர் எந்த வேடத்தோடிருந்தாலும் அவர் சிவத்தோடு ஐக்கியப்பட்டு முத்திபெறுவர். உள்ளன்பில்லாதவர் சிவ வேடம் தரித்தாலும், முத்திநாதன் அதிசூரன் என்போர் நரகத்தைப் பெற்றதுபோல நற்கதி பெறார்.

> " காடே திரிந்தென்ன காற்றே புசித்தென்னகந்தை சுற்றி
> யோடே யெடுத்தென்ன உள்ளன்பில்லாதார் —"

என்றார் பட்டினத்தடிகளும்.

நாயனாரைப்பற்றிய பாக்களிற் சில:—

> புத்தன் மறவாதோடி யெறிசல்லி புதுமலர்க ளாக்கினான்காண்
>
> —அப்பர் திருத்தாண்டகம்

> கல்லினா லெறிந்து கஞ்சி தாமுணுஞ் சாக்கியனார்
> நெல்லினார் சோறு ணாமே நீள்விசும் பாள வைத்தார்
> எல்லியாங் கெரிகை யேந்தி யெழிறிகழ் நட்ட மாடிக்
> கொல்லியாம் பண்ணு கந்தார் குறுக்கைவீ ரட்ட னாரே.
>
> —திருக்குறுக்கை வீரட்டத் தேவாரம்

> அறுசமயத்திற் கடந்த சைவத்தி னன்றிவீ டிலதெனத் தெளிந்து
> பிறரறியாது தொன்மைபோலிருந்து பிஞ்சகன்மீது கன்மலரால்
> எறிதருதோ ரன்பர்தங் கலிங்க மெழிலிக ணனைத்தலுஞ் சிரத்தை
> முறைபுரி சிலைமேன் மோதினோர்முதலோர்முத்திபெற்
> [றுடைய தம்மூர்.
>
> —கந்தபுராணம்

# சிறப்புலி நாயனர்

திருவாக்கூ ரருமறையோ ருலக மேத்துஞ்
சிறப்புலியார் மறப்புலியா ருரிமேற் செங்க
ணரவார்த்தார் வருமேற்ருர்க் கன்ப ராஞர்க்
கமுதளிப்பா ரொளிவெண்ணீ றணிந்த மார்பர்
பெருவாக்கான் மறைபரவி யாகம் போற்றும்
பெற்றியிஞ ரைந்தெழுத்தும் பிறழா தோதிக்
கருவாக்சா விறைவன்ரு ளிணைகள் சேர்ந்த
கருத்திஞ ரெனையாவுந் திருத்தி ஞரே.

சிறப்புலி நாயஞர் சோழநாட்டிலுள்ள திருவாக்கூர் என்னும் தலத்தில் மறையவர் குலத்தில் பிறந்தார். அவர் சிவபெருமானிடத்தில் பேரன்புடையவர். சிவனடியாரைக் கண்டவுடனே வணங்கி இனிய மொழிகள் கூறி, வீட்டுக்கு அழைத்துக்கொண்டு சென்று அமுதுபடைத்து, வேண்டிய பொருள்களும் கொடுத்துவந்தார். ஐந்தெழுத்தை மறவாத சிந்தையோடு என்றும் ஓதும் நியமமுடைய இந்நாயஞர் சிவதருமமாகிய வேள்விகளும், அடியார் பணிகளும் செய்து இறைவன் திருவடிகளை யடைந்தார்.

இவர் "சீர்கொண்ட புகழ் வள்ளல்" என்று சுந்தரரால் பாராட்டப்பட்டவர்.

# சிறுத்தொண்ட நாயனார்

பல்குமருத் துவரதிபர் செங்காட்டங் குடிவாழ்
படைத்தலைவ ரமுதளிக்கும் பரஞ்சோதி யார்மெய்ச்
செல்வமிகு சிறுத்தொண்டர் காழி நாடன்
திருவருள்சேர்ந் தவர்வளருஞ் சீராளன் றன்னை
நல்குதிரு வெண்காட்டு நங்கைசமைத் திடப்பின்
னன்மதிச்சந் தனத்தாதி தலைக்கறியிட் டுதவப்
புல்கவரும் வயிரவர்தா மகிழ்ந்துமக வருளப்
போற்றியவர் சிவனருளே பொருந்தி னாரே.

சிறுத்தொண்ட நாயனார் திருச்செங்காட்டங்குடி என்னும்சிறந்த சேத்திரத்தில் மாமாத்தியர் குலத்தில் அவதரித்தார். இவர் பெயர் பரஞ்சோதியார். இவர் வேதாகமங்களையும் ஆயுள்வேதம், தனுர்வேதமாகிய கலைகளையும் கற்று,. குதிரையேற்றம், யானையேற்றம் என்னும் வீரச் செயல்களில் வல்லராய் விளங்கினார். சிவபெருமானை என்றும் தியானித்து வழிபடுதலே உறுதி என்றுணர்ந்த மெய்யன்பர். அடியார்களுக்குத் தொண்டு செய்பவர். சோழராசனுக்குச் சேனாதிபதியாயிருந்து பகைவரை வென்று பலவகைத் திரவியங்களையும் கொண்டுவந்து அரசனிடம் சேர்த்தனர்.

ஒருசமயம் வடதேசத்துள்ள வாதாவி என்னும் பழைய நகருக்குப்போய் அங்குள்ள அரசனை வென்று ஏராளமான மணி, பொன், யானை, குதிரை முதலியவைகளைக் கொண்டுவந்து தமது அரசனுக்குக் கொடுத்தார். அரசன் இவருடைய போர்த்திறமையைக் கண்டு அதிசயித்து இவரைப் புகழ்ந்தான். மந்திரிமார் சோழனை நோக்கி "அரசனே! சிவபெருமானுக்குத் தொண்டு செய்யும் தவ வலிமையுடைய இவருக்கு ஒப்பாக இவ்வுலகில் ஒருவருமில்லை" என்றார்கள். சிவதொண்டர் என்பதைக் கேட்ட அரசன் அஞ்சி அவரை வணங்கி அதிக திரவியங்களைக் கொடுத்து அவர் விருப்பத்துக்குத் திருத்தொண்டு செய்திருக்க விடைகொடுத்தனுப்பினான். அன்றுமுதல் பரஞ்சோதியார் திருச்செங்காட்டங்குடி

சென்று தமது மனைவியாராகிய வெண்காட்டுநங்கையாருடன் இல்லறம் வழுவாது நடத்திவந்தார். அடியார்களைத் திருவமுது செய்வித்து அவர்கள் முன்னே தம்மைச் சிறியராக மதித்து மிகப் பணிந்து நடந்தமையால் 'சிறுத்தொண்டர்' என்னும் பெயர் பெற்றார். கங்கைவார் சடைக்கரந்தார் திருவருளால் ஒரு ஆண்மகவைப் பெற்றெடுத்தார். அப்பிள்ளையின் பெயர் சீராளதேவன். குழந்தைக்குரிய சடங்குகளை முறைப்படி செய்து பருவம் வந்ததும் கல்விகற்கப் பள்ளிக்கு அனுப்பினார்.

திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் திருச்செங்காட்டங்குடிக்கு எழுந்தருளி வந்தபோது அப்பரமாசாரியரைச் சிறுத்தொண்டர் தமது மாளிகைக்கு அழைத்துக் கொண்டுபோய் உபசரிக்கும் பெரும்பேறு பெற்றதோடு, அவர் திருப்பதிகத்தில் வைத்துச் சிறப்பித்துப் பாடத் தக்க பெருமையும் பெற்றார்.

> பைங்கோட்டு மலர்ப்புன்னைப் பறவைகாள் பயப்பூரச்
> சங்காட்டந் தவிர்த்தென்னைத் தவிராநோய் தந்தானே
> செங்காட்டங் குடிமேய சிறுத்தொண்டன் பணிசெய்ய
> வெங்காட்டு ளனலேந்தி விளையாடும் பெருமானே.
>
> —தேவாரம்.

ஒருநாள் நாயனார் அமுது செய்வித்தற்கு அடியார் ஒருவரையுங் காணாது தேடிச் சென்றார். அப்போது சிவபெருமான் வைரவ வேடந்தாங்கி நாயனார் பேரன்பை நுகரத் திருவுளங்கொண்டு அவர் இல்லத்துக்கு எழுந்தருளி "அடியார்களுக்கு எந்நாளும் அமுதுகொடுக்கும் சிறுத்தொண்டர் இங்கே இருக்கின்றாரோ?" என்று கேட்டார். சந்தனமங்கையார் வைரவருடைய திருவடிகளை வணங்கி, "நாயனார் அடியார்களைத் தேடிப் போயிருக்கின்றார்; சுவாமி வீட்டுக்குள்ளே எழுந்தருளுவீர்" என்று வேண்டினார். வைரவர் "நாம் பெண்கள் உள்ள இடத்தில் தனியே புகோம்" என்றார். அதுகேட்ட வெண்காட்டு நங்கையார், "எமது நாயகர் எப்பொழுதும் அம்பலக் கூத்தன் அடியவர்க்கு அமுது அளிப்பவர். இற்றைத்தினம் அடியாரைக் காணாது தேடிச் சென்றார். இச்சமயம்

தேவரீரை அவர் கண்டால் பெரும்பேறென வியந்து வியந்து கொண்டாடி மகிழ்வர். இனிமேல் தாமதமின்றி வந்துவிடுவர். சுவாமி வீட்டில் எழுந்தருளுவீராக" என்று விண்ணப்பஞ் செய்தார். அதுகேட்ட அடியவர் மனையறம்பேணும் அம்மங்கையாரை நோக்கி "நாம் வட தேசத்திலிருந்து சிறுத்தொண்டரைக் காணவந்தோம். அவரில்லாத சமயத்தில் நாம் இங்கே தங்கமாட்டோம். கணபதீச்சரத்திலுள்ள திருவாத்திமரத்தின்கீழிருப்போம். சிறுத்தொண்டர் வந்தவுடனே அவருக்குத் தெரிவிக்கவும்" என்று கூறிப் போயினர். சிவனடியார் ஒருவரையும் காணாது சிறுத்தொண்டர் மனக்கவலையோடு வீடுவந்து சேர்ந்தார். மனைவியார் அதுகண்டு "வடதேசத்திலிருந்து அடியவர் ஒருவர் இங்கே வந்தார். தாங்களில்லாதபடியால் வீட்டில் தங்க உடன்படாமல் கணபதீச்சரத்திலிருப்ப தாகச் சொல்லிப்போயினர்" என்றார். அதுகேட்ட நாயனார் விரைந்து சென்று சிவனடியவர் திருவடிகளை வணங்கி நின்றார். "சிறுத்தொண்டர் நீரோ" என்று வைரவர் கேட்டார். "அடியார்கள் என்னைச் சிறுத் தொண்டர் என்றழைப்பார்கள். இன்றையதினம் அடியார் களைத் தேடியுங் காணமல் சுவாமியைக் கண்டது யான் செய்த தவமே! ஆதலால், இப்போது வீட்டுக்கு எழுந்தருளி வந்து அமுது செய்யவேண்டும்" என்றார். அப்போது வைரவர் "நாம் உத்தரதேசத்திலிருந்து உம்மைக் காண வந்தோம். நமக்கு அமுது கொடுக்க உம்மால் கூடுமோ" என்றார். "சுவாமி எவ்வாறு அமுது செய்வது என் றருளிச் செய்யும்" என்றார் நாயனார். "நாம் உண்பது ஆறுமாசத்துக்கு ஒருமுறை. அதுவும் பசுவைக் கொன்று உண்போம். அதற்குரிய நாளும் இன்றையதினமே" என்றார் வைரவர். "என்னிடத்தில் ஆடு, மாடு, எருமை ஆகிய மூன்றும் உள்ளன" என்றார் நாயனார். "நாம் உண்பது நரபசு. அதுவும் ஐந்து வயதுடையதாய், தேகத்தில் பழுதொன்றுமில்லாததாய், ஒரு குடிக்குரிய ஒரு சிறுவனாய் இருத்தல்வேண்டும். அப்பிள்ளையைத் தாய் பிடிக்கத் தகப்பன் மனமகிழ்ச்சியோடு அரிந்து சமைத்

தால் அமுது செய்வேன்'' என்றார் வைரவர். அதுகேட்ட சிறுத்தொண்டர் "எம்பெருமான் அமுதுசெய்யப்பெறின், அடியேன் அவ்வாறு செய்தல் அரிதன்று!'' எனக்கூறி வைரவர் உத்தரவு பெற்று மகிழ்வுடன் வீட்டுக்கு விரைந்து சென்றார். சிறுத்தொண்டர் வரவை நோக்கிநின்ற அவர் மனைவியார் தமது நாயகர் மலர்ந்த முகத்தோடு வருதலைக் கண்டு வைரவர் செயலைக் கேட்டார்.

> அன்பின் மிக்க பெருங்கற்பி னணங்கு திருவெண் காட்டம்மை
> முன்பு வந்து சிறுத்தொண்டர் வரவுநோக்கி முன்னின்றே
> யின்பம் பெருக மலர்ந்தமுகங் கண்டு பாத மிசையிறைஞ்சிப்
> பின்பு கணவர் முகநோக்கிப் பெருகுந் தவத்தோர் செயல்வினவ.
>
> —பெரிய புராணம்

கொடை வள்ளலாகிய சிறுத்தொண்டர் மனைவியாரை நோக்கி "இன்ன இன்ன இலட்சணமுள்ள சிறுபிள்ளையை இன்ன முறைப்படி சமைத்துக் கொடுத்தால் அமுது செய்தற்கு அடியவர் இசைந்தார்'' என்றார். அதுகேட்ட மனைவியார் "எவ்வளவு திரவியங்களைக் கொடுத்தாலும் இப்படிப்பட்ட சிறுவனை ஒருவர் கொடுப்பரோ?'' என்றார். யாராவது ஒருவர் தம் பிள்ளையைக் கொடுத்தாலும், நேர் நின்று விருப்போடு அரிந்துகொடுக்க உடன்படமாட்டார். ஆகையால், நாம் உய்யும் வண்ணம் நீர் பெற்ற சீராளனை அழைப்போம்!'' என்றார் சிறுத்தொண்ட நாயனார். தமது நாயகன் கருத்துக்கு இசைந்து நடப்பவராகிய திருவெண்காட்டு நங்கையார் சிவனடியார் தம் பிள்ளையை உண்டு மகிழ்வதைக் கண்டு திருப்தியடைதலே தக்கது என்று நினைந்து பள்ளிக்கூடத்திலிருந்து பிள்ளையை அழைத்துவருமாறு கூறினார்.

> என்று கணவர் கூறுதலு மதனுக் கிசைந்தெம் பிரான்றொண்ட
> ரின்று தாழா தமுதுசெய்யப் பெற்றிங் கவர்த மலர்ந்தமுக
> நன்று காண்ப தெனநயந்து நம்மைக் காக்க வருமணியைச்
> சென்று பள்ளி யினிற்கொண்டு வாரு மென்றார் திருவனையார்.
>
> —பெரிய புராணம்

நாயனார் பாடசாலைக்குச் சென்று பிள்ளையை அழைத்து வந்து தாயிடங் கொடுத்தார். மனைவியார்

பிள்ளையை நீராட்டி வைரவர் கூறியபடி மகிழ்வுடனறுத்து அறுசுவையோடு கூடிய கறிகளும் அமுதும் பாகம்பண்ணினார். சமையலானவுடனே நாயனார் வைரவரிடஞ் சென்று வணங்கியழைக்கவும் சுவாமி மாளிகைக்கு எழுந்தருளினார். நாயனார் அலங்கரிக்கப்பெற்ற ஒரு தவிசின்மேல் அவரை அமரச்செய்து, அவர் திருவடிகளை விளக்கி, மலர், தூப தீபங்கள் கொண்டு பூசித்து வணங்கி நின்று போனகமும் கறியும் படைக்கும் முறை எப்படியென்று கேட்டார். வைரவர் "அன்னமுடன் கறிகளை யெல்லாம் சமமாகப் படைக்க" என்றார். திருவெண்காட்டு நங்கையார் அன்னமும் கறியமுதும் வைரவர் சொல்லியவாறு படைத்தார். அப்போது வைரவனார் "நாம் சொல்லியபடி எல்லா உறுப்புக் கறிகளும் படைத்தீர்களோ?" என்று கேட்டார். அம்மையார் "தலைக்கறி திருவமுதுக்கு ஆகாதென்று நீக்கி வைத்தோம்!" என்றார். வைரவர் அதுவும் தாம் உண்பது என்றார். நாயனாரும், மனைவியாரும் மனங் கலங்கி நிற்க, அதுகண்ட தாதியாராகிய சந்தன நங்கையார் "அடியவர் அமுது செய்யும்போது ஒருசமயம் தலையைப் பற்றிக் கேட்கக்கூடும் என்று எண்ணி அதையும் சமைத்து வைத்திருக்கின்றேன்" என்று கூறி எடுத்துக் கொடுக்க, முகமலர்ந்து தலைக்கறியையும் படைத்தனர். அப்பொழுது, வைரவர் சிறுத்தொண்டரை நோக்கி "நாம் சிவனடியாரோடு போசனஞ் செய்வதன்றித் தனியே உண்பதில்லை. ஆகையால் சிவனடியொராருவரை அழைத்து வாரும்" என்றார். அதுகேட்டுச் சிறுத்தொண்டர் சிந்தை கலங்கி வெளியே சென்று அடியாரைத் தேடி ஒருவரையுங் காணாமல் கவலையோடு வந்து "சுவாமி அடியாரைக் கண்டிலேன். அடியேனும் அடியாரைக் கண்டுதான் திருநீறு இடுகின்றவன்" என்று கூறி வணங்கினார்.

அகத்தின் புறத்துப் போயருளா<br>
லெங்குங்காணா ரழிந்தணைந்து<br>
முகத்தில் வாட்ட மிகப்பெருகப்<br>
பணிந்து முதல்வர்க் குரைசெய்வா

ரிகத்தும் பரத்து மினியாரைக்
காணேன் யானுந் திருநீறு
சகத்தி லிடுவார் தம்மைக்கண்டே யிடுவே
னென்று தாழ்ந்திறைஞ்ச. —பெரிய புராணம்

சிவனடியார் பக்குவமுடைய உயிர்களுக்கு மலங்களை நீக்கி என்றும் இன்பம் எய்தச் செய்யவல்ல பெரியோராதலால் அவரை இகத்தும் பரத்தும் இனியாரென்றார்.

இயங்கு முலகினி லீச னடியார்
மயங்கா வழிசெல்வர் வானுல காள்வர்
புயங்களு மெண்டிசை போதுபா தாள
மயங்காப் பகிரண்ட மாமுடி தானே.

மேலுணர் வான்மிகு ஞாலம் படைத்தவன்
வேலுணர் வான்மிகு ஞாலங் கடந்தவன்
மேலுணர் வார்மிகு ஞாலத் தமரர்கள்
மேலுணர் வார்சிவன் மெய்யடி யார்களே.

—திருமந்திரம்

எனைத்துயிர்க்கு முறுதியிக பரமென்ப
வவைகொடுப்பா னெல்லாந் தானு
யனைத்துயிர்க்கு முயிராகு மரனென்ப
வவனறிவார்க் கங்கம் வாக்கு
மனத்துறுமெய்ப் பத்திவழி வருமென்ப
வப்பத்தி வழிநிற் பார்க்கு
வினைத்துயர்தீர்த் திடவெடுத்த வடிவென்ப
தவனடியார் வேட மன்றே

—திருவிளையாடற் புராணம்

விபூதி பூசும் அன்பர்களைக் காணவில்லை என்று துக்கப்பட்ட நாயனாரை வைரவர் பார்த்து "உம்மைப் போல் விபூதிதரிப்பவருளரோ? இல்லையே! ஆகையால் நீரே எம்மோடிருப்பீர்!" என்று கூறித் தமக்குப்போல நாயனருக்கும் அமுது படைக்கும்படி திருவெண்காட்டு நங்கையாரை நோக்கிக் கட்டளையிட்டார். அப்படியே வெண்காட்டு நங்கையார் அமுதுபடைத்தார். சுவாமியை அமுது செய்விக்கும் நோக்கத்தோடு நாயனர் உண்ணத் தொடங்கவும், வைரவர் அவரைத் தடைசெய்து "ஆறுமாசத்துக்கு ஒருமுறை உண்ணுகின்ற நாம் உண்பதன் முன்னம் நாள்தோறும் புசிக்கின்ற நீர் முதலில் புசிக்கத் தொடங்குவது

எங்ஙனம்? உம்மோடு போசனம் பண்ணப் புதல்வனிருந்தால் அழையும்!'' என்றார். நாயனார் “அவன் இப்போது உதவான்!'' என்றார். வைரவர் “அவன் வந்தாலன்றி நாம் உண்ணோம்!'' என்றார். சிறுத்தொண்ட நாயனார் தம் மனைவியாரோடு வெளியே சென்று வைரவர் கட்டளைப்படி புதல்வனை அழைத்தார்.

> “பிள்ளையுடனுண்ணப் பேசியழைத் தாரன்பு
> துள்ளுசிறுத் தொண்டர் சோமேசா—வுள்ளுங்கால்
> பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
> நன்மை பயக்கு மெனின்”

மனைவியாரும் “செய்யமணியே! சீராளா! நாம் உய்யுமாறு சிவனடியார் தம்மோடு போசனஞ் செய்ய அழைக்கின்றார்; வருவாய்!'' என்று ஓலமிட்டார். சிவபெருமான் அருளால் பள்ளியிலிருந்தோடி வருவான்போல வந்த புதல்வனை எடுத்து அணைத்துத் தன் கணவனார் கையில் கொடுக்க, நாயனார் திருவருளினால் வைரவர் திருவமுது செய்யும் பேறு பெற்றோம் என்று மகிழ்ந்து உள்ளே வந்தார். நாயனார் வைரவரைக் காணாது என் செய்வதென்று தெரியாது வீழ்ந்தார்! கறியமுதும் கலத்தில் இல்லாது ஒழிந்தது! வைரவர் எங்குச் சென்றாரென்று பார்க்க வெளியே வந்தார்! சிவபெருமான் சோமாஸ்கந்தமூர்த்தியாய் இடபவாகனத்தில் தோன்றியருளினர். அவ்வற்புதக் காட்சியை நாயனாரும், மனைவியாரும், மைந்தரும், தாதியாரும் கண்டு பரவசமாய் மனங்கசிந்துருக விழுந்து வணங்கி நின்றார்கள். சிவபெருமான் அவர்கள் நால்வரும் என்றும் பேரின்பம் நுகர்ந்து கொண்டிருக்க அருள் புரிந்தார்.

இறைவன் அவரவர் முன் செய்த வினைக்கேற்றபடி நின்று அனுக்கிரகம் செய்வர். திருஞானசம்பந்தர் “அம்மே! அப்பா!” என்றழைத்தபோது அவருக்குச் சிவஞானப்பால் கொடுத்தாட் கொண்டார். அந்தணனுக்கு அடிமையாகவேண்டும் என்று கட்டளை செய்து சுந்தரமூர்த்தியை ஆட்கொண்டார். கொடிய சூலை நோயைக் கொடுத்து அப்பமூர்த்திகளை ஆட்கொண்டார். கண்ணப்ப நாயனார் கொடுத்த மாமிச நிவேதனத்தையும் கண்ணையும் ஏற்று, அவருக்கு

முத்தியின்பங் கொடுத்தருளினார். இறைவன் திருவடிகளை என்றும் தம் மனத்தில் வைத்து போர்முனையில் எதிர்த்த பகைவர்களைக் கொல்லுதலைத் தமது உரிமைத் தொழிலாகக்கொண்ட நாயனாரிடம் அவர் பிள்ளைக் கறியைப் பெறுவார்போல நடித்துக்காட்டி அவருக்கு அழியாப் பேரின்பங் கொடுத்தனர். வைரவர் வேடங்கொண்டு வந்த சிவபெருமான் சிறுத்தொண்டரை நோக்கி "உம்மைப்போல திருநீறு தரிப்பாருண்டோ?" என்று திருவாய்மலர்ந்தருளியதனால் இந் நாயனார் பெருமை தெளியப்படும்.

குற்றமற்ற நன்மையைத்தரின் பொய்ம்மையும் வாய்மையை ஒக்கும்.

பண்டுநின் கொழுநன் தந்தையுந் தாயும்
பயந்ததன் னருமருந் தன்ன
பாலனைக் கொன்று சமைத்திடக் கொள்ளும்
பாதக மொன்றுளங் கொண்டு
தொண்டர்தம் மனையிற் செல்வனென் றெழுநின்
சுதனழப் பொறுதுநின் முலைப்பால்
சுரந்தமு தூட்டு மன்னைநீ யாவாய்
தொழுது போய்ப் பிரித்திலை யென்னே.

—பெரியநாயகியம்மை விருத்தம்

தான்பெறு மழலை மொழிமகன் தன்னைத்
தன்கையா லுளங்களித் தரிந்து
சமைத்துல கறிய விடுபெருந் தொண்டன்
றனைச்சிறுத் தொண்டனென் றவன்சேய்
ஊன்பெறு நீயே யுரைத்தனை யென்றா
லுரிமையோர்சற்று மிலாதேன்
உன்திருத் தொண்ட னென்றிருப் பதனுக்
குன்னுதல் பெரும் பிழையன்றோ.

—நெடுங்கழி நெடில்

என்னும் சிவப்பிரகாசர் பாடல்கள் நாயனாரின் அன்பின் பெருக்கைக் காட்டுவன.

"வாளான் மகவரிந் தூட்ட வல்லேனல்லன்" என்று கூறினார் முற்றத்துறந்த பட்டினத்தடிகளும்.

# சேரமான் பெருமாணாயனார்

காவலர்ம கோதையார் கொடுங்கோ ளூர்க்கோக்
கழறியவை யறிந்தகோச் சிலம்போசைக் கருத்தார்,
நாவலர்கோ னண்பரடிச் சேர னென்றே
நவின்றுவரும் வண்ணனை நயந்த கோநற்
பாவலர்கோப் பாணபத் திரனல் வாய்ந்த
பரமர்திரு முகம்வாங்கிப் பணிகோ வெற்பின்,
மேவியகோ வானைக்குக் குதிரை வைத்த
வீரர்கோ வெனையாளுஞ் சேரர் கோவே.

சேரநாட்டிலுள்ள கொடுங்கோளூரிலே வளங்கள் மிக்க மகோதை யென்னும் நகரிலே சேரமன்னர் மரபில் பெருமாக்கோதையார் என்பவர் பிறந்தார். சைவத்திரு நெறி தழைக்கத் தோன்றிய இந்நாயனார் சிவன் கழல் பேணும் கருத்துடையராய் அரச வாழ்க்கையோடு கூடிய உலக இன்பங்கள் உறுதியல்ல என்றுணர்ந்தார். திருவஞ்சைக்களம் சென்று நந்தவனம் அமைத்துப் பூக்களைக் கொய்து சிவபெருமானுக்குச் சாத்துமாலை தொடுத்தல், திருக்கோயிலில் திருவலகிடுதல் முதலிய திருப்பணிகளைச் செய்து, மிகுந்த பக்தியோடு பெருமானைப் பாடி வழிபட்டு வந்தார்.

உலகி னியல்பு மரசியல்பு முறுதி யல்ல வெனவுணர்வார்
புலரியெழுந்து புனல்மூழ்கிப் புனித வெண்ணீற் றினுமூழ்கி
நிலவு திருநந் தனவனத்து நீடும்பணிகள் பலசெய்து
மலரு முகையுங் கொணர்ந்துதிரு மாலை சாத்த மகிழ்ந்தமைத்து,

திருமஞ் சனமுங் கொணர்ந்துதிரு வலகு மிட்டுத் திருமெழுக்கு
வருமண் புடனின் புறச்சாத்தி மற்றுமுள்ள திருப்பணிகள்
பெருமை பிறங்கச் செய்தமைத்துப பேணும்விருப்பிற் றிருப்பாட்டு
மொருமை நெறியி னுணர்வுவர வோதிப்பணிந்தே யொழுகுநாள்.

—பெரியபுராணம்

உலகில் எவரும் விரும்பக்கூடிய இராசரீக வாழ்வைக் குறியாத சிவபெருமானிடங்கொண்ட அன்பு மிகுதியால் திருக்கோயில் சென்று தம் கையினால் திருத்தொண்டுகளைச் செய்த இந்நாயனார் பெருந்தன்மை இவ்வளவென மதிக்கக்கூடியது தொன்றன்று. திருக்

கோயில்களில் திருவலகிடுதல், திருமெழுக்கிடுதல், சிவபெருமானைப் புகழ்ந்து பாடுதல், ஐந்தெழுத்தோதுதல் சிறந்த புண்ணியமாம்.

நிலைபெறுமா றெண்ணுதியேல் நெஞ்சே நீவா
　　நித்தலு மெம்பிரானுடைய கோயில் புக்குப்
புலர்வதன்மு னலகிட்டு மெழுக்கு மிட்டுப்
　　பூமாலை புனைந்தேந்திப் புகழ்ந்து பாடித்
தலையாரக் கும்பிட்டுக் கூத்து மாடிச்
　　சங்கரா சயபோற்றி போற்றி யென்று
மலைபுனல்சேர் செஞ்சடையெம் மாதீ யென்று
　　மாரூரா வென்றென்றே யலறா நில்லே.

பூக்கைக் கொண்டரன் பொன்னடி போற்றிலார்
நாக்கைக் கொண்டர னாம நவில்கிலா
ராக்கைக் கேயிரை தேடி யலமந்து
காக்கைக் கேயிரை யாகிக் கழிவரே—

—தேவாரம்

இவ்வாறு இவர் தொண்டு செய்துவரும் நாளில், செங்கோற் பொறையன் என்னும் சேர தேசத்து அரசன் இராச்சியபரிபாலனம் பண்ணுவதை விட்டுத் தவஞ்செய்ய விரும்பிக் காட்டுக்குச் சென்றான். நாடாள வேறு அரசன் இல்லாமையால், மந்திரிமார் திருவஞ்சைக்களத்தில் திருத்தொண்டுசெய்யும், பெருமாக் கோதையாரிடஞ் சென்று இராச மகுடத்தை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று வணங்கி நின்றனர். அரசனாகில் திருத்தொண்டுக்கு இடையூறு வரக்கூடும். அப்படித் தொண்டுக்கும் பங்கம் வாராமல் அரசு செய்யத் திருவருளுண்டேல், மகுடந்தரித்துக் கொள்ளுவதாக நினைந்து, திருக்கோயிலுட்சென்று சிவபெருமானை வணங்கினார். அரசற்குரிய ஈகை முதலிய குணங்களோடு இராச்சியம் நடத்தும் திறமையும், விலங்கு முதலிய அஃறிணைப் பொருள்களும் மக்கள் முதலிய உயர்திணைப் பொருள்களும் வசனிப்பவைகளை அறிந்துகொள்ளும் உணர்ச்சியும், படை வாகனம் முதலிய விருதுகளும் பெற்றார்.

“ மேவுமுரிமை யரசளித்தே விரும்பு காதல் வழிபாடும்
　யாவும் யாரும் கழறினவு மறியு முணர்வு மீறில்லாத்

> தாவில் விறலுந் தண்டாத கொடையும் படைவா கனமுதலாங்
> காவல் மன்னர்க் குரியனவு மெல்லாங் கைவந் துறப்பெற்றார்.
>
> —பெரியபுராணம்

இவைகளைப் பெற்று வணங்கிப் புறம்போந்து, இறைவன் ஆஞ்ஞையினால் இராச மகுடம்தரிக்க உடன்பட்டார். மந்திரிமார் மகிழ்ந்து அவரைப் பணிந்து போற்றினார். அரசர் நல்ல தினத்தில் முடிசூடப் பெற்றுத் தம் பெருமான் திருக்கோயிலை வலம்வந்து வணங்கிப் பட்டத்து யானைமேலேறி. கொற்றக்குடை நிழற்ற சாமரைவீச நகர வலம் வந்தார். அப்போது வழியில் உவர்மண் சுமந்து வந்த வண்ணான் ஒருவனைக் கண்டார். மழையில் நனைந் தொழுகிய உவர்மண் அவன் உடம்பெல்லாம் பரவிக் காய்ந்து வெண்மையடைந்திருந்தது. அரசர் அவனைச் சிவனடியாரெனக் கருதி யானையை விட்டிறங்கி அவனை வணங்கினார். உடனே வண்ணான் மனம் கலங்கிக் கீழே விழுந்து வணங்கிச் "சுவாமீ! அடியேன் அடிவண்ணான்" என்றான். அதுகண்ட சேரர் பெருமான், "அடிச்சேரன் அடியேன்; திருநீற்று வேடத்தை நினைப்பித்தீர்; வருந்தாது செல்லும்" என்று கூறி யானைமேலேறி அரண்மனை சேர்ந்து, சிம்மாசனத்தில் சகல இராச வைபவங்களோடும் வீற்றிருந்தார். அன்றுமுதல் வேற்றரசரைப் போரில் வென்று, சைவநெறி தழைத்தோங்கவும், திருநீற்றொளி விளங்கவும் அரசுபுரிந்தார்.

> உலகு புரக்குங் கொடைவளவ ருரிமைச் செழிய ருடன்கூட
> நிலவு பெருமுக் கோக்களாய் நீதி மனுநூ னெறிநடத்தி
> யலகி லரசர் திறைகொணர வகத்தும் புறத்தும் பகையறுத்து
> மலருந் திருநீற் றொளிவளர மறைகள் வளர மண்ணளிப்பார்.
>
> —பெரியபுராணம்

மிக்க வலிமையும் அதிகாரமுமுடைய அரசனாயிருந்தும் 'யான்' 'எனது' என்னும் செருக்கின்றிச் சிவனடியார்கள் எக்குலத்தவராயினும் அவர்களைச் சிவமாக நினைந்து வழிபடும் இயல்புடையவராய், விபூதி உருத்திராட்சம் ஆகிய சிவசின்னங்களைப் பயபக்தியோடு பேணி வந்தார். அது, உவர்மண்ணினால் மேனி வெண்மை பெற்றிருந்த வண்ணானைத் தூரத்திலே கண்டு யானையை விட்டிறங்கி அவனை வணங்கியதோடு நில்லாது அவனுக்குத் தாம் அடிச்சேரன்

எனப் பணிந்தமையினுலும் காணலாம். இவர் மனுநீதியோடு அரசு செலுத்திச் சைவநெறி வளர்த்தனர் என்பதுணர்த்த, "மலரும் திருநீற் றொளிவளர" என்ருர் சேக்கிழார்.

சேரர்பெருமான் தாம் அரசாளும் நாளில் நடேசப் பெருமான் திருவடிகளை அன்போடு வழிபாடு செய்து வந்தார்.

நீடு முரிமைப் பேரரசா ளிகழும் பயனும் நிறை தவமும்
தேடும் பொருளும் பெருந்துணையுந் தில்லைத் திருச்சிற் றம்பலத்துள்
ஆடுங்கழலே யெனத்தெளிந்த வறிவா லெடுத்த திருப்பாதங்
கூடு மன்பி லருச்சனைமேற் கொண்டார் சேரர் குலப்பெருமாள்.

—பெரியபுராணம்

பூசை முடிவில் அவருக்குத் தமது சிலம்பொலி கேட்கும் வண்ணம் நடராசமூர்த்தி அருள் செய்தார். இவர் அடியவர்க்கும் வறியவர்க்கும் வேண்டியபடி பொன் முதலான பொருள்களை யெல்லாம் மழைபொழிந்தாற் போலக் கொடுத்துப் பல வேள்விகளைச்செய்து செங்கோன் முறை தவருது நடாத்திவந்தார்.

அந்நாளில் மதுரை சோமசுந்தரக்கடவுள் பாண பத்திரர்க்குப் பெருநிதிக்குவியல் கொடுத்தருளத் திருவுளங்கொண்டார். சோமசுந்தரக்கடவுள் பாணபத்திரர்க்குக் கனவில் தோன்றி "எமது அன்பனுகும் சேரன் உனக்கு வேண்டுவனவெல்லாம் கொடுப்பான். எமது ஓலைகொண்டு சென்று மீள்க" எனக் கூறித் திருப்பாசுரத்தைக் கொடுத்தருளினுர். பாணபத்திரர் அப்பாசுரத்தைச் சிரமேற்கொண்டு உடனே புறப்பட்டுச் சென்று சேரர் பெருமானிடம் கொடுத்து வணங்கினுர். சேரர் அப்பாசுரத்தைப் பலமுறை வணங்கி ஆனந்தக்கூத்தாடினுர். கண்ணீர் சொரியப் பாணபத்திரரைப் பலகால் பூமியில் விழுந்து வணங்கி, உம்பர்பெருமானின் அருளை வியந்து போற்றினுர். தமது மாளிகையிலுள்ள திரவியங்கள், நவரத்தினங்கள், ஆபரணங்கள் பட்டுப் பீதாம்பரங்களை யெல்லாம் சுமையாட்களின்மேல் ஏற்றுவித்து, நால்வகைப் படைகளோடு இராச்சியபாரத்தையும் கைக்கொள்ளும்படி

வேண்டினார். பாணபத்திரர் ஆலவாய்ப்பெருமான் பணித்தருளியவாறு, தமக்கு வேண்டியவைகளைமட்டும் ஏற்றுக்கொண்டு சேரபிரானை வணங்கி அரசியலைக்கொண்டு நடத்தும்படி கூறி, விடைபெற்று யானைமீதேறி மதுரைக்குச் சென்றார். சகல பிராணிகளின் வசனிப்புகளையறியும் பேற்றையுடைய சேரமான்பெருமாணாயனார், உயிர்களுக்கு ஒரு துன்பமுமில்லாது, கொலை களவு முதலிய தீமைகளை நீக்கி அரசியற்றிவருமோர் நாளில், தமது அருச்சனை வழிபாட்டின் முடிவில் வழக்கம்போல் நடராசப்பெருமானது சிலம்போசை கேளாதிருக்க மயக்கங்கொண்டு, "யான் என்ன தவறுபுரிந்தேன்? இவ்வுடம்பெடுத்ததனால் இனியடையும் பயன் யாது?" என்று தம் உடைவாளையுருவித் தமது மார்பில் நாட்ட, நடேசப்பெருமான் விரைந்து சிலம்பினோசையைக் கேட்பித்தருளினார்.

அப்போது சேரமான்பெருமாள் இருகரங்களையுந் தலைமேற்குவித்து வணங்கி, "பெருமானே! சிலம்பின் ஓசையை முன்னே செய்யாத காரணமென்ன?" என்றார். அம்பலக்கூத்தன் சுந்தரமூர்த்தி சுவாமிகளை நினைப்பிப்பதற்கு, அசரீரி வாக்காக, வன்றொண்டனாகிய சுந்தரன் கனகசபையிற் பாடிய பாடலைக் கேட்டிருந்தமையாற் றாழ்ந்தது என்றார்.

மதுரைச் சொக்கநாத ரருளிச்செய்த திருமுகப் பாசுரம்.

திருச்சிற்றம்பலம்

மதிமலி புரிசை மாடக் கூடற்
பதிமிசை நிலவு பானிற வரிச்சிற
கன்னம் பயில்பொழி லால வாயின்
மன்னிய சிவன்யான் மொழிதரு மாற்றம்
பருவக் கொண்மூப் படியெனப் பாவலர்க்
குரிமையி னுரிமையி னுதவி யொளிதிகழ்
குருமா மதிபுரை குலவிய குடைக்கீழ்ச்
செருமா வுகைக்குஞ் சேரலன் காண்க
பண்பா லியாழ்பயில் பாண பத்திரன்
தன்போ லென்பா லன்பன் றன்பாற்
காண்பது கருதிப் போந்தனன்
மாண்பொருள் கொடுத்து வரவிடுப் பதுவே.

சோமசுந்தரக் கடவுளாலனுப்பப்பட்ட பாணபத்திரர்க்குத் தமது திரவிய முழுதையுங் கொடுத்தபின் அரசையுங் கைக்கொள் ளும்படி கேட்டதனுலும், தமதுடைவாளை மார்பில் நாட்டினவுடனே சிவ பெருமான் சிலம்பினேசையைக் கேட்பித்தமையாலும், சேரர்பெரு மான் இராசவாழ்விற் சிறிதேனும் விருப்பமில்லாது சிவபெருமா னிடம் எவ்வளவு முறுகித்தடித்த அன்புடையவராய் இருந்தாரென் பது நன்கு தெளிவுறும்.

"உடம்பினைப் பெற்ற பயனுவ தெல்லாம்
உடம்பினில் உத்தமனைக் காண்"
—ஔவையார் குறள்

சேரர்பெருமான் புலியூர்ப் பொன்னம்பலம் சென்று நடராசமூர்த்தியை வணங்கவும், வன்றொண்டரைக் காண வும் விரும்பிச் சேனைகளோடு திருவஞ்சைக்களத்தில் இறை வரை வணங்கிப் புறப்பட்டுச் சிதம்பரத்துக்கு வந்து நடராச மூர்த்தியைத் தொழுது ஆனந்தக்கடலுள் திளைத்துப் பொன்வண்ணத்தந்தாதியைப் பொன்னம்பலத்தின் முன் னின்று பாடியருளினர்.

பொன்வண்ணத்தந்தாதி.

திருச்சிற்றம்பலம்

பொன்வண்ண மெவ்வண்ண மவ்வண்ணமேனி பொலிந்திலங்கு
மின்வண்ண மெவ்வண்ண மவ்வண்ணம் வீழ்சடை வெள்ளிக்குன்றந்
தன்வண்ண மெவ்வண்ண மவ்வண்ண மால்விடை தன்னைக்கண்ட
என்வண்ண மெவ்வண்ண மவ்வண்ண மாகிய வீசனுக்கே.

மாயனன் மாமணி கண்டன் வளர்சடை யாற்கடிமை
யாயின தொண்டர் துறக்கம் பெறுவது சொல்லுடைத்தே
காய்சின வானை வளருங் கனக மலையருகே
போயின காக்கையு மன்றே படைத்தது பொன்வண்ணமே.

அப்போது நடராசமூர்த்தி தம்முடைய குஞ்சித பாதத்தின் திருச்சிலம்போசையைக் கேட்பித்தார். சேரர்பெருமான் கும்பிட்டு நடராசமூர்த்தியின் விடை பெற்று மெய்ஞ்ஞானத் திருவெல்லையை வணங்கிச்சென்று, சீர்காழி முதலிய சேத்திரங்களை வணங்கித் திருவாரூரை யடைந்தார். சுந்தரமூர்த்தி நாயனர் சேரர்பெருமானைச் சிறப்பாக வரவேற்றார். இருவரும் ஒருவரையொருவர்

வணங்கி அளவளாவிக் கலந்து மகிழ்ந்தனர். சேரர் பெருமான் வீதிவிடங்கப்பெருமானை வணங்கி மும்மணிக் கோவை பாடித் துதித்தார்.

திருவாரூர் மும்மணிக்கோவை

நேரிசையாசிரியப்பா.

திருச்சிற்றம்பலம்

விரிகடல் பருகி யளறுபட் டன்ன
கருநிற மேகங் கன்முக டேறி
நுண்டுளி பொழிய நோக்கி யொண்டொடி
பொலங்குழை மின்னப் புருவ வில்லிட்
டிலங்கெழிற் செவ்வாய் கோபமூர்தரக்
கைத்தல மென்னுங் காந்தண் மலர
முத்திலங் கெயிறெனு முல்லை யரும்பக்
குழலுஞ் சுணங்குங் கொன்றை காட்ட
வெழிலுடைச் சாய லிளமயில் படைப்ப
வுண்ணிறை யுயிர்ப்பெனு மூதை யூர்தரக்
கண்ணீர்ப் பெருமழை பொழிதலி னொண்ணிறத்
தஞ்சனக் கொழுஞ்சே றலம்பி யெஞ்சா
மணியும் பொன்னும் மாசற வயிரமும்
அணிகிள ரகிலு மாரமு முரிஞ்சிக்
கொங்கை யென்னுங் குவட்டிடை யிழிதரப்
பொங்கு புயல்காட் டியோளே கங்கை
வருவிசை தவிர்த்த வார்சடைக் கடவு
ளரிவை பாகத் தண்ண லாரூர்
எல்லையி லிரும்பலி சொரியுங்
கல்லோ சென்ற காதலர் மனமே.

இரு நாயன்மாரும் பரவையார் மாளிகையிற் சில காலம் தங்கினர். பின்னர், கீழ்வேளூர் முதலிய சேத்திரங்களை வணங்கி வேதாரணியம் வந்து வணங்கினார்கள். சேரர்பெருமான் திருவந்தாதி பாடித் துதித்தனர். அவ்விடமிருந்து புறப்பட்டு மற்றைய பதிகளையும் வணங்கி மதுரை முதலிய சேத்திரங்களுக்குச் சென்று வணங்கி, மறுபடியும் திருவாரூருக்கு வந்து சிவபெருமானை வணங்கிக்கொண்டு பரவையார் மாளிகையிற் றங்கியிருந்தனர். சிலநாள் கழித்தபின் சேரர்பெருமான் தமது நாட்டுக்குச் செல்ல விரும்பிச் சுந்தரமூர்த்தி சுவாமிகளையும் அழைத்துக்

கொண்டு, திருவஞ்சைக்களம் சென்று சிவபெருமானை வணங்கி அரண்மனைக்குச் சகல அரச ஆடம்பரங்களுடன் வந்தார். சுந்தரமூர்த்திசுவாமிகளைச் சிங்காசனத்திலிருத்திப் பாதபூசை செய்தார். இருவரும் திருவமுதுண்டு இராச வைபோகங்களுடன் ஒருவரோடொருவர் கலந்திருந்தனர்.

அடியார்களுக்குள் அக்காலத்தில் சாதிபேதமிருந்ததில்லை. சுந்தரர் ஆதிசைவமறையவர். சேரர் பெருமானோ அரசகுலத்தினர். ஆயினும், இருவரும் ஒருமித்துத் திருவமுதருந்தினர். அக்காலத்தில் சைவநெறியை முறைப்படி அனுசரித்து வந்தனர். நெறிமுறை தவறியவர் இழிகுலத்தவரென எண்ணப்பட்டனர்போலும். பரம ஞானிகளுக்குச் சாதி குலம் பிறப்பு முதலிய பேதங்களில்லை.

சுந்தரமூர்த்தி நாயனார் திருவாரூருக்குச் செல்லப் புறப்பட்டார். அவர் செல்வதைத் தடுக்கமுடியாதவராய்ப் பொக்கிஷசாலையிலிருந்த திரவியங்களையெல்லாஞ் சுமையாட்கள்மேலேற்றி அவரோடு அனுப்பிவிட்டுத் தமது தோழரிடம் விடைபெற்று அரசுபுரிந்திருந்தார்.

சிலகாலத்தின்பின் சுந்தரமூர்த்திநாயனார் சேரர் பெருமானைக் காணவிரும்பி எழுந்தருளினர். சேரர்பெருமான் தமது பட்டணத்தை யலங்கரித்து அரசவரிசைகளுடன் நம்பியாரூரை எதிர்கொண்டு வணங்கி யழைத்து வந்து சிம்மாசனத்திலிருத்தி உபசரித்து விருந்தளித்து இருவருமாக இராசமாளிகையில் அமர்ந்திருந்தனர்.

ஒருநாள் சுந்தரமூர்த்தி நாயனார் திருவஞ்சைக்களஞ் சென்று வணங்கும்போது சிவபெருமான் கட்டளைப்படி தேவர்கள் கொண்டுவந்த வெள்ளையானையூர்ந்து திருக்கயிலாய மலைக்கு ஆரோகணித்தருளினார். அச்சமயம் தமது தோழர் சேரர்பெருமானை நினைந்து சென்றார். அப்போது நீராடிக்கொண்டிருந்த சேரமான் பெருமாணயனர், அவர் குறிப்பறிந்து உடனே குதிரையிலேறி அதன் செவியில் திருவைந்தெழுத்தை ஓதினர். அக் குதிரை ஆகாயத்தில் பாய்ந்து சுந்தரமூர்த்தி சுவாமிகள் ஏறிச் செல்லும் வெள்ளையானையை வலம்வந்து முன்னதாகச் சென்றது. சேரர்பெருமானுடைய மந்திரி, சேனைவீரர்

குதிரையிற்செல்லுந் தங்கள் முதல்வனைப்பார்த்து, தங்கள் உடைவாட்களையுருவி, தங்கள் தேகங்களை முதிர்ந்த அன்பினால் குத்தி வீழ்த்தி, வீரயாக்கை பெற்றுச் சேரர்பெருமானைச் சேவித்துக்கொண்டு சென்றார்கள்.

சேரர்பெருமான் திருக்கயிலாய மலைக்குச் சென்றபோது திருவணுக்கன்றிருவாயிலில் தடைபட்டு நின்று திருஆதியுலாப் பாடினர்.

திருஆதியுலா.

திருமாலு நான்முகனுந் தேர்ந்துணரா தன்றங்
கருமா லுறவழலாய் நின்ற—பெருமான்
..................................................
காரேறு கொன்றையந்தார்க் காவாலி கட்டங்க
னாரேற் போந்த துலா

சுந்தரமூர்த்தி நாயனார் யாதொரு தடையுமின்றித் திருமுன்சென்று சிவபெருமானை வணங்கிச் "சேரமான் பெருமாளுயனார் திருவணுக்கன்றிருவாயிலில் தடைபட்டு நிற்கின்றனர்" என்றார். சிவபெருமான் சேரர்பெருமானைத் தமக்கு முன்னழைப்பித்து, "இங்கு நாமழையாதிருக்க நீ வந்ததேன்" என்று வினவினர். அதற்கு விடையாக "நான் சுந்தரமூர்த்தி நாயனார் திருவடிகளைத் துதித்து வந்தேன்" என்றார். அதன்பின் தாம் திருவணுக்கன்றிருவாயிலிற் பாடிய திருவுலாவைப்பாடி இறைவர் திருவருளைப் பெற்று சிவகணநாதரானார்.

இவர் கயிலைக்குச் சென்றதைப்பற்றி சிவப்பிரகாசர் பாடியுள்ள அருமையான செய்யுள் இங்கே சிந்திக்கத்தக்கது.

பாவாய்ப் பொழிந்த வானமுதப் பவளத் திருவாய் நம்பிநீ
சேவாய்ப் பொருதுந் தருமமுடைத் தேவன் மலைக்குப் போம்பொழுது
காவாய்ப் பயந்த தடக்கைமலர்க் கழறிற் றறிவார் கடாவிவரும்
மாவாய்ப் பிறக்கக் கிடையாதே மாவாய்ப் பிறக்குந் திருமாற்கே.

# கணநாத நாயனர்

கந்தமலி வயற்காழி மறையோ ரேத்துங்
கணநாதர் திருத்தோணிக் கடவு ளார்க்கு
நந்தவனம் பலவமைத்து மலருங் கொய்து
நற்றாமஞ் சொற்றாம நயந்து சாத்தி
வந்தவரைத் தொண்டாக்கிப் பணிகள் பூட்டி
வாதுசெய்த வாரணத்தை மகிழ்ந்து வாழ்த்திப்
புந்திமகிழ்ந் தரனருளாற் கயிலை மேவிப்
பொருவில்கணத் தவர்காவல் பொருந்தி னாரே.

கணநாத நாயனார் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் திருவவதாரஞ்செய்த சீர்காழிப்பதியில் மறையவர் குலத்திற் பிறந்தவர். தோணியப்பருக்கு என்றும் நற்றிருப்பணி செய்துவந்தார். திருப்பள்ளித்தாமங் கொய்பவர், நந்தவனத்திற் பணிசெய்பவர், திருமாலை தொடுப்பவர், திருவிளக்கெரிப்பவர், திருமுறை யெழுதுபவர், திருமுறை வாசிப்பவர் முதலியோருக்கு, அவரவர் செய்யுந் திருத்தொண்டைப் பயில்வித்து, அவர்கள் குறைகளை யெல்லாம் முடித்துத் தொண்டராக்கி வந்தார். மனையறம்புரிந்து அடியவர்களை வழிபடுபவர் தம்மையடைந்த ஆன்மாக்களை ஈடேற்ற அவதரித்த திருஞானசம்பந்த சுவாமிகளை உபாசனா மூர்த்தியாகக்கொண்டு அவருடைய திருவடிகளை எப்போதும் அருச்சித்து, இறைவர் திருவடிநிழலையடைந்தார்.

சிவனடியார்களுக்கு நேரிடும் குறைகளை நீக்கி அவரவர் செய்யுந் திருத்தொண்டில் நிற்கச் செய்தல் பெரும் புண்ணியமாம்.

"சிவநேசர் பாதம் வணங்கிச் சிறக்க
வவரேவல் செய்க வறிந்து" —சைவசமயநெறி.

பெருமிழலைக் குறும்ப நாயனார் சுந்தரமூர்த்தி நாயனாரை உபாசனா மூர்த்தியாகக் கொண்டவர். கணநாத நாயனாரோ திருஞான சம்பந்தமூர்த்தி நாயனாரை உபாசனா மூர்த்தியாகக்கொண்டு அருச்சித்தவர்.

சிவனே சிவஞானி யாதலாற் சுத்த
சிவனே யெனவடி சேரவல் லார்க்கு
நவமான தத்துவ நன்முத்தி நண்ணும்
பவமான தின்றிப் பரலோக மாமே. —திருமந்திரம்.

சிந்தனை செய்க சிவனிவனே யென்றுளத்துட்
பந்தமறப் பாலனைப் பரிந்து. —சைவசமயநெறி.

# கூற்றுவ நாயனார்

குன்றாத புகழாளர் களந்தை வேந்தர்
கூற்றுவனார் மாற்றலர்மண் கொண்டு சூடப்
பொன்றாழு முடிவேண்டப் புலியூர் வாழும்
பூசுரர்கள் கொடாதகலப் புனித னீந்த
மன்றாடுந் திருவடியே முடியாச் சூடி
மாநிலங்காத் திறைவனுறை மாடக் கோயிற்
சென்றாசை யுடன்வணங்கிப் பணிகள் செய்து
திருவருளா லமருலகஞ் சேர்ந்து ளாரே.

கூற்றுவ நாயனார் களந்தை யென்னும் பதியைச் சேர்ந்த குறுநில மன்னர். ஐந்தெழுத்தை ஓதும் நலம் மிக்கார். சிவனடியாரிடத்தில் மிக அன்புள்ளவர். களந்தையிலரசாண்டு வருங்காலத்தில் சிவபெருமான் திருவருளால், இரத கஜ துரக பதாதியெனும் நால்வகைச் சேனைகளையும் பெற்ற வீரச் செருக்குடையவர். அநேக அரசர்களைப் போர்முனையில் வென்று, பல நாடுகளையும் கவர்ந்து கூற்றுவநாயனார் என்னுந் திருநாமத்தைப் பெற்றார்.

கூற்றுவர் மூவேந்தர் நிலமுங்கைக் கொண்டாரே
தோற்றுந் தாளாண்மையினாற் சோமேசா—சாற்று
முயற்சி திருவினையாக்கு முயற் றின்மை
யின்மை புகுத்தி விடும் —முதுமொழி வெண்பா.

இவர் சகல வல்லமையோடு அரசு புரிந்தாலும் க்ஷத்திரியருக்குரிய முடியின்மையால், தாமும் அவர்கள்போல மகுடந்தரிக்க விரும்பித் தில்லைவாழந்தணர்களிடஞ் சென்று தமக்கு முடிசூட்டும்படி வேண்டினர். அவர்கள் சோழ தேசத் தரசர்களுக்கன்றி மற்றையவர்களுக்குத் தாங்கள் முடிசூட்டுவதில்லையென்று மறுத்தனர். அவ்விடத்திலிருந்தால் அவ்வரசன் தங்களைத் துன்பப் படுத்துவானென நினைந்து, அந்தணர் சேரநாட்டை யடைந்தனர். சேர நாட்டுக்குச் செல்லும்போது தங்களுள் ஒரு குடியைத் தங்கள் உரிமை முடியைக் காக்கும்படி இருத்திச் சென்றனர். தமக்கு அஞ்சித் தில்லைவாழந்தணர்கள் சேரநாடு சென்றார்கள் என்றறிந்து மனம் வருந்தி, நாயனார் நடராச

மூர்த்தியை வணங்கினார். "பெருமானே! தேவரீருடைய மலரடியை எனக்கு முடியாகச் சூட்டியருளவேண்டும்" என்று சிந்தித்துக்கொண்டு நித்திரை செய்தார். அம்பலக் கூத்தர் அன்றிரவு கனவில் தோன்றித் தமது பாத மலரை முடியாகச் சூட்டியருளினார். கூற்றுவ நாயனார் மனமகிழ்ந்து சிவபெருமான் திருக்கோயில்கள்தோறுஞ் சென்று பெரும் பூசனைகளைச் சிறப்பாக நடப்பித்தார். திருப்பணிகள் பலபுரிந்து நடுவுநிலைமை தவறாது அரசாண்டு சிவபெருமானது திருவடிகளை யடைந்தார்.

அம்பொனீடு மம்பலத்து ளாராவமுதத் திருநடஞ்செய்
தம்பிரானார் புவியின்மகிழ் கோயிலெல்லாந் தனித்தனியே
யிம்பர் ஞாலங் களிகூரவெய்தும் பெரும்பூசனையியற்றி
யும்பர்மகிழ வரசளித்தேயுமையாள் கணவனடி சேர்ந்தார்.

—பெரிய புராணம்.

"அரசனெவ்வழி குடிகளவ்வழி." அரசன் சைவாகம நெறி தவறாதொழுகுவானாயின் அவன் கீழ்க் குடிகளும் அவனுடைய ஆணைக்கு அஞ்சிநின்று பத்தியோடு அவனைப்போல் நல்வழியில் நடந்து இம்மை மறுமைப் பயன்களைப் பெறுவர். மெய்ஞ்ஞான வுணர்வுள்ள அரசர் உலகமுழுவதையும் ஆண்டாலும், அதனைப் பெரும் பொருளாகக் கருதாது சிவபெருமான் கிருபையையே பொருளாகமதித்துத் திருத்தொண்டு செய்வர்.

அருடரு சீர்த்தில்லை யம்பலத் தான்ற னருளினன்றிப்
பொருடரு வானத் தரசாத லிற்புழு வாதனன்றுஞ்
சுருடரு செஞ்சடை யோனரு ளேற்றுற விக்குநன்று
மிருடரு கீழேழ் நரகத்து வீழு மிருஞ்சிறையே—

—கோயிற்றிருப் பண்ணியர் விருத்தம்.

கூற்றுவ நாயனார் பெருந்தன்மையுடையவராதலால் நடராச மூர்த்தி தமது திருவடிகளை அவர் சிரசின்மேல் சூட்டியருளினார்.

# பொய்யடிமையில்லாத புலவர்

பொய்யறியாக் கபிலரொடு பரண ராதிப்
புலவோர்பொற் பார்கலைகள் பொருந்த வோதிச்
செய்யுளிடை வளராசு மதுர நல்ல
சித்திரம்வித் தாரமெனத் தெரிக்குஞ் செம்மை
மெய்யுடைய தொடைகளெல்லா மன்று ளீடன்
மேவியகோ னிருதாளில் விரவச் சாத்திக்
கையுடையஞ் சலியினரா யருளான் மேலைக்
கருதரிய வமருலகங் கைக்கொண் டாரே.

கபிலர், பரணர், நக்கீரர், கல்லாடர் முதலிய நாற்பத்தொன்பது பேரும் மதுரைக் கடைச்சங்கப் புலவர்களாயிருந்து தமிழை வளர்த்தனர்.

தரணியிற் பொய்ம்மை யிலாத்தமிழ்ச் சங்க மதிற்கபிலர்
பரணர்நக் கீரர் முதனாற்பத் தொன்பது பல்புலவோ
ரருணமக் கீயுந் திருவால வாயரன் சேவடிக்கே
பொருளமைத் தின்பக் கவிபல பாடும் புலவர்களே.

—திருத்தொண்டர் திருவந்தாதி.

இவ்வறிஞர் சோமசுந்தரக் கடவுளிடத்தே மிகுந்த அன்புள்ளவர்களாய்ப் பொய்யடிமையில்லாத புலவரென்னும் புகழ்பெற்று இறைவர் திருவடி நிழலையடைந்தனர்.

பதினொராந் திருமுறையில் இவர்கள் செய்த பாடல்களைக் காணலாம்.

# புகழ்ச்சோழ நாயனார்

பொழின்மருவுங் கருவூர்வாழ் புகழார் சோழர்
போதகம்போ லென்னுயிரும் போக்கு மென்றே
யழலவிர்வாள் கொடுத்தபிரா னதிக மான்மே
லடர்ந்தபெரும் படையேவ வவர்கொண் டேய்ந்த
தழல்விழிகொ டலைகாண்பார் கண்ட தோர்புன்
சடைத்தலையை முடித்தலையாற் றாழ்ந்து வாங்கிக்
கழல்பரவி யதுசிரத்தி னேந்தி வாய்ந்த
கனன்மூழ்கி யிறைவனடி கைக்கொண் டாரே.

புகழ்ச் சோழநாயனார், சோழநாட்டிலே சோழ அரசமர பிலே பிறந்து உறையூரிலிருந்து அரசாண்டனர். திருக் கோயில்கள் எங்கும் முறைப்படி எப்போதும் பூசைகளை நடத்துவிப்பவர்; அடியவர்கட்கு அவர்கள் குறிப்பறிந்து வேண்டுவன கொடுப்பவர்; திருநீற்று நெறியைப் பரிபால னஞ் செய்து அரசு புரிந்தவர்.

ஒருநாள் தேசமன்னர்கள் கொண்டுவந்த திறைகளைப் பார்க்கும்பொருட்டுத் தமது குல மரபினரது தலைநகராகிய கருவூருக்குச் சென்று சிங்காசனத்திலிருந்து அரசர் பலரும் கொண்டுவந்திருந்த திறைகளைப் பார்த்து அவர் கட்கு அருள்புரிந்தார். இப்படி நிகழும் நாளில் மந்திரி மார்களை நோக்கி, "இன்னும் திறை கொடாத அரசர் யாராவது உண்டோ, தெரிந்துரைப்பீர்" என்றார்.

அந்நாளில் சிவகாமியாண்டார் சிவபெருமானுக்குச் சாத்தும்படி கொண்டுவந்த மலர்களை அவர் பட்டத்துயானை சிந்தினது. அதைக்கண்ட எறிபத்த நாயனார் யானையையும் பாகர்களையும் கொன்றார். தமது யானை செய்த குற்றத் துக்காகப் புகழ்ச்சோழ நாயனார் தம்மையுங் கொல்லும் படி தமது வாளைக் கொடுத்த செயற்கருஞ் செய்கையி னால் திருத்தொண்டில் பேர்பெற்று விளங்கினார்.

மந்திரிமார், "மலைநாட்டரசனான அதிகன் என்பவன் திறை கொண்டு வரவில்லை" என்றார்கள். புகழ்ச்சோழ நாயனார் "ஓர் சேனையை அனுப்பி அவ்வரசனை வென்று வாருங்கள்" என்றார். படைத்தலைவரும் மந்திரிமாரும்

சேனையுடன் சென்று அம் மலைநாட்டு அரசனோடு போர் செய்ய, அதிகன் மலையரணில் ஓடி யொளித்தனன். புகழ்ச் சோழர் படையினர் அவன் சேனையோடு சண்டைசெய்து அம் மலையரணை உடைத்தெறிந்து அத்தேசத்திலுள்ள பல பொருள்களையும் போரில்மாண்ட அதிகனுடைய படை வீரரின் தலைகளையுங் கொண்டு கருவூருக்கு வந்தனர். அவர்கள் கொண்டுவந்த தலைகள் ஒன்றில் புன்சடை யிருக்கக் கண்டு மனங்கலங்கி கைதொழுது கண்ணீர் விட்டு அழுதார். திருநீற்று நெறியைப் பரிபாலனஞ் செய்து தாம் அரசு புரிந்தது மிகவழகா யிருக்கிறதென்று துயருற்றார். "சடைமுடியை உடையவர் சிவநெறியைக் கண்டவரே! அவர் தலையைக் கொண்டுவரக் கண்டும் இவ் வுலகை அரசாள இருந்தேனே" என்றார். இதற்காகப் பழி தாங்குவேனென்று துணிந்தார். மந்திரிமாரை நோக்கித் தம் மகனுக்கு முடி சூட்டும்படி வகுத்துத் தீக்குண்டம் வளர்க்கும்படி கட்டளை யிட்டார். அந்தச் சடைமுடி யைப் பொற்றும்பாளத்திலிட்டுத் தலையிற் சுமந்து அக்கி னியை வலம்வந்து ஐந்தெழுத் தோதிக்கொண்டு அக்கினிக் குண்டத்தில் புகுந்தருளி நடராசமூர்த்தியின் திருவடி நிழலை யடைந்தார்.

சிவகாமியாண்டார் கொண்டுவந்த பூங்கூடையைச் சிந்தின தமது பட்டத்துயானையையும் பாகர்களையும் கொன்ற எறிபத்த நாயனாரிடஞ்சென்று தம்மையுங் கொல்லும்படி வாளைக் கொடுத்ததும், புன்சடையைக் கண்டமாத்திரத்தில் தாம் பழிதாங்கினதும், இந் நாயனார் அரசவாழ்விலும் அடியார் பத்தியை எவ்வளவு மேலானதாகக் கொண்டனர் என்பது சொல்லவும் வேண்டுமோ?

# நரசிங்கமுனையரைய நாயனார்

நாடுபுகழ் முனைப்பாடி நாடு மேய
    நரசிங்க முனையர்புவி நயந்து மன்று
ளாடுமவ ராதிரைநா ளடியார்க் கம்பொ
    னமுதளிப்பா ரொளிவெண்ணீ றணிந்து தூர்த்த
வேடமுடை யவர்க்கிரட்டிச் செம்பொ னீந்து
    விடுத்தழகா ராலயங்கள் விளங்கச் செய்து
தோடலர்தா ருடையபிரா னருளை யாளத்
    தோன்றினா ரெனையருளி னூன்றி னாரே.

நரசிங்கமுனையரைய நாயனார் திருமுனைப்பாடி நாட்டில் அரசுபுரிந்த ஓர் குறுநில மன்னர். திருநீற்று நெறி விளங்கச் சிவனடியாருக்குத் திருத்தொண்டு செய்வதே பெரும் பேறென்னுங் கொள்கை யுடையவர். பல சத்துருக்களை வென்று அரசாண்டு வந்தார்.

விபூதி தரித்த அடியார்களைப் பேரன்போடு பணிந்து அவர்களுக்கு வேண்டிய தொண்டுகளைச் செய்து திருவமுதூட்டிப் பொன்னுங் கொடுத்து வருவார். திருவாதிரை நாளில் விசேடபூசை செய்வித்து அன்று வரும் அடியார்களுக்கு அமுது படைத்து அவர்களுக்குத் தனித்தனியே ஆளுக்கு நூறு பொன்னுக்குக் குறையாது கொடுப்பார். ஒரு திருவாதிரைநாளில் வந்த அடியார்களுள் ஒருவர் விபூதியணிந்து "காமக்குறி மலர்ந்த வூனம்நிகழ் மேனியராய்" வந்திருந்தபோது மற்ற அடியார்கள் பார்த்து இகழ்ந்து ஒதுங்கினர். அதைக்கண்ட நாயனார் தூர்த்தவேடமுள்ளவராயினும் விபூதி தரித்தவரை இகழ்ந்து உலகத்தார் நரகத்தில் வீழாவண்ணம் அவரை அழைத்துப்போய் வணங்கினார். அவருக்கு இரட்டைப் பங்குப் பொன்னுங் கொடுத்து (இருநூறு பொன்) இனியன சொல்லி விடை கொடுத்து அனுப்பிவிட்டார். இப்படிப் பல தொண்டுகள் செய்யும் நெறிநின்று திருந்திய சிந்தையராய் இறைவர் திருவடி நிழலையடைந்தார்.

விபூதியின் மகிமையும் அடியார் பத்தியின் விசேடமும் இளையான்குடிமாற நாயனார் சரிதத்திலும் இன்னும் வேறு அடியார் சரிதங்களிலும் காணலாம். இந்நாயனார் சுந்தரமூர்த்தி நாயனாரை வளர்த்தவர்.

நாதனுக்கூர் நமக்கூர் நரசிங்க முனையரையன்
ஆதரித் தீசனுக் காட்செயுமூர் அணி நாவலூர்.

—சுந்தரர் தேவாரம்.

# அதிபத்த நாயனார்

அலைபாருங் கடனாகை நகருள் வாழு
மதிபத்தர் பரதவர்க ளதிபர் வேலை
வலைவாரி வருமீனிற் றலைமீ னீசன்
வார்கழற்கே யென்றுவிடு மரபார் பன்னாட்
டலையான தொருமீனே சார நாளுந்
தந்தொழிலால் விடுத்துமிடி சாரச் செம்பொ
னிலையாரு மணிநயந்த மீனொன் றெய்த
நீத்தருளா லிறைவனடி நேர்ந்து ளாரே.

இவர் சோழநாட்டிலே நாகப்பட்டணக் கரையிலுள்ள நுளைப்பாடியில் பரதவர் குலத்தில் பிறந்தவர். பரதவர்களுக்குத் தலைவராய் விளங்கியவர். அவர்கள் வலைப்படுத்தும் மீன்களினால் வருஞ் செல்வத்தில் மிகுந்தவர். சிவபிரான்பால் பேரன்புடையவர். நாள்தோறும் அகப்படும் மீன்களில் ஒரு தலைமீனை அம்பலக் கூத்தனுக்கென்று மிகுந்த அன்போடு குளிர்ந்த சமுத்திரத்தில் விட்டு வருவார். வலையில் ஒருநாள் ஒரேமீன் வந்தாலும் அதை நடராசமூர்த்திக்கென்றே கடலில் விட்டுவிடுவார். இன்றவர் செயலால் பல நாளாக, நாளொன்றுக்கு ஒரு மீனாகவே வலையிலகப்பட்டபோதிலும் அதையும் சிவபெருமானுக்கென்றே கடலில் விட்டுவந்தார். அதனால் செல்வம் குறைந்துபோகச் சுற்றத்தார் பசியினால் வருந்தினர். அப்படிப் பசிநோயினால் வருந்தியும் தம் மனம் கலங்காது தமது நெறியில் வழுவாது நின்றார். இறைவன் இந்நாயனாரது அன்பெனும் அமுதையுண்டார். ஒருநாள் வீசின

வலையில் ஒரே மீன் அகப்பட்டது. அதை இறைவர்க் கென்று கடலில் விட்டார். அதன்பின் இறைவன் செயலி ஞல் மிக விநோதமான ஒரு பொன்மீன் அகப்பட்டது. விலை மதிப்பில்லாத நவமணிபொலிந்த அதன் உறுப்புகளை அதிபத்த நாயனர் கண்டு, அந்த மீன் தமது இறைவ ராகிய சிவனுக்கே உரியதாகும் என்று நினைந்து "அப் பெருமான் கழலை அடைவாயாக" என்று கடலில் விட்ட னர். அப்பொழுது சிவபெருமான் இடபாரூடராய் வெளிநின்று காட்சி கொடுத்தருள, நாயனர் வணங்கிச் சிவபெருமான் திருவடிகளை அடைந்தார்.

திருத்தொண்டு செய்யும்போது துன்பங்கள் வரினும் அதனல் மனந்தளராமை வேண்டும் என்பதை முதுமொழி வெண்பா கூறுகின்றது.

"என்றுமொரு மீனேவந் தின்மைமிக வுந்தளரார்
துன்றே ரதிபத்தர் சோமேசா—மன்றே
அடுக்கி வரினு மழிவிலா னுற்ற
விடுக்க ணிடுக்கட் படும்."

இந்நாயனர் தமது மரபுத்தொழிலைச் செய்வதோடு மனம் வாக்குக் காயங்களினல் சிவபெருமானை வணங்கினர். தாமும் தம் சுற்றத்தவரும் பசியினல் வருந்தும்போது, வலையிலகப்பட்ட பொன் மீனைச் சிவபெருமானுக்கு உகந்தது என்று கடலில் விட்டமையினல் இவர் எம்பெருமான்மீது வைத்திருந்த அன்பின் திறத்தை என் னென்று சொல்லுவது !

# கலிக்கம்ப நாயனர்

கடவுளருட் கண்ணுர்கள் பயிலுந்தொல்லைக்
கடந்தைநகர் வணிகர்கலிக் கம்ப ரன்பர்க்
கடிமையுற வமுதளிப்பா ரடியா னீங்கி
யருளுருவா யன்பருட னணைய வேத்தி
யிடையிலவ ரடியிணையும் விளக்கா நிற்ப
விகழ்மனைவி கரகமலி யிரண்டு கையும்
படியில்விழ வெறிந்தவள்செய் பணியுந் தாமே
பரிந்துபுரிந் தரனருளே பற்றி னரே.

சோழமண்டலத்தில் பெண்ணுகடமென்னும் பதியில் வணிகர் குலத்தில் கலிக்கம்ப நாயனர் அவதரித்தார். உலகப் பற்றற்றுத் திருத்தூங்கானை மாடத்தில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானுக்குத் திருத்தொண்டு செய்து வந்தார். சிவபெருமானை வழிபடுதல்போலச் சிவனடியாரை வழிபடாதொழியின் அவ்வழிபாடு பயன்படாதென எண்ணினர். நாடோறும் அடியார்களை அழைத்து மிகுந்த ஆசையோடு கறி, நெய், தயிர், பால், தேன், சர்க்கரை முதலிய பதார்த்தங்களுடன் திருவமுது செய்வித்து, வேண்டிய பொருள்களும் மகிழ்ச்சியோடு உதவி வந்தார்.

"ஆனவன்பர் தாமென்று மரனாரன்பர்க் கமுது செய
மேன்மை விளங்கு போனகமும் விரும்புகறி நெய்தயிர் தீம்பா
றேனினினிய கனிகட்டி திருந்தவமுது செய்வித்தே
யேனை நிதியம் வேண்டுவன வெல்லா மின்பமுற வளிப்பார்."

—பெரியபுராணம்.

அடியார் பூசை எல்லாப் புண்ணியங்களிலும் சிறந்தது.

"தண்டது சிந்தை தபோதனர் தாமகிழ்ந்
துண்டது மூன்று புவன முண்டது
கொண்டது மூன்று புவனமுங் கொண்டதென்
றெண்டிசை நத்தி யெடுத்துரைத் தானே."

(திருமந்திரம்)

அடியார் பூசையின் மகிமை இளையான்குடிமாற நாயனர், காரைக்காலம்மையார் சரித்திரங்களில் காணலாம்.

தம் மனைக்கு வரும் அடியார்களின் பாதங்களை அவர்கள் திருவமுது செய்வதற்குமுன் விளக்குமவர், ஒருநாள் வழக்கம்போல் வீட்டுக்கு வந்த அடியார்களைத் தமது மனைவியார் கரகநீர் வார்க்க, நாயனர் தமது கரங்களினல் விளக்கினர். அப்போது அடியவருள் ஒருவர், முன் தங்களிடம் வேலைக்காரனக இருந்து பணிவிடையைவிட்டுச் சென்று சிவவேடந் தாங்கி வந்திருந்தார். அதை அறிந்த மனைவியார் கரகநீர் வார்க்கத் தாமதம் செய்தார். நாயனர் அது கண்டு வெகுண்டார். தமது உடைவாளினல் மனைவியின் கைகளைத் தறித்துக் கரகத்தைத் தாம் கைப்பற்றினர். கரகநீரைத் தாமே வார்த்துக் கழுவினர். அடியார்களை திருவமுது செய்வித்தார். இப்படித் தொண்டுகள் பல செய்து இறைவர் திருவடி நிழலையடைந்தார்.

எக்குலத்தவராயினும் சிவ வேடந்தாங்கி வந்தால் அவரைச் சிவமாகப் பாவித்துப் பூசிக்கும் கொள்கையினையுடையவர் இந் நாயனர். இவர் அடியார் வசப்பட்டு அவர்கள் பத்தியில் நின்ருரென்பது தம் மனைவியென்றும் பாராது அவர் கைகளை வெட்டியதனல் அறியலாகும்.

---

# கலிய நாயனர்

தடமதில்சூ ழொற்றியூர் நகருள் வாழுஞ்
சக்கரப்பா டியர்குலமெய்த் தவமா யுள்ளார்
படர்புகழார் கலியனர் நலியுங் கூற்றைப்
பாய்ந்தவர்க்கு விளக்கெரிக்கும் பரிவான் மற்ருே
ருடலிலராய்ச் செக்குழல்வார்க் கதுவு நேரா
துயர்மனைவி யைக்கொள்வா ருளரு மின்றி
மிடறுதிர மகனிறைய வரிய நாதன்
வியன்கைகொடு பிடிப்பவருண் மேவி னரே

தொண்டைநாட்டிலே திருவொற்றியூரில் செக்கார் மரபில் கலியநாயனர் பிறந்தார். மிகுந்த செல்வமும் சிவபக்தியுமுடையவர். இரவும் பகலும் அளவிறந்த திருவிளக்குகளைத் திருவொற்றியூர்க் கோயிலில் உள்ளும்

புறமும் ஏற்றுவார். இந்தத் திருத்தொண்டை இந்நாயனார் நெடுங்காலமாகச் செய்துவந்தனர்.

திருக்கோயில்களில் திருவிளக்கிடுதல் பெரும் புண்ணியம்.

"நலங்கொளகி லாலு நறும்புகையுங் காட்டி
யிலங்கிடவா னெய்விளக்கு மிட்டு" —சைவசமயநெறி.

"விளங்க நல்விளக் கிடுதலெம் மடியார்க்
கேவ லானவை செய்தலிச் சரியை யியற்ற வல்லவர்க்
கெம்முல களிப்போம்" —திருவாதவூரர் புராணம்.

"விளக்கினர் பெற்ற வின்ப மெழுக்கினாற் பதிற்றியாகும்"
—தேவாரம்.

நமிநந்தியடிகள் நாயனார் சரித்திரத்தில் விளக்கிடுதலின்பயன் இனிது விளங்கப்படுதல் கண்டுகொள்க.

கலிய நாயனார் இப்புண்ணியத்தைச் செல்வ மிகுந்த போது செய்ததோடு, வறுமை வந்தபோதும் செய்யும் திறமையுடையார் என்பதை உலகத்தாருக்குக் காட்டும் பொருட்டு அவருடைய செல்வம் நாளுக்குநாள் குறைந்து போகும்படி சிவபெருமான் திருவருள் செய்தார். செல்வம் குறைந்ததும், கூலிக்கு எண்ணெய் விற்றுவரும் ஊதியங் கொண்டு விளக்கேற்றி வந்தார். அதுவுங் கிடையாமையினால் மனம் தளர்ந்து செக்காட்டி அதனால் வரும் கூலி கொண்டு எண்ணெய் வாங்கித் திருவிளக்கிட்டார். பின்னர், செக்காட்டுங் கூலியாளர் அதிகரித்தப்படியால், அந்த வேலையும் கிடையாமல் வீடு முதலியவைகளை விற்றுத் தமது திருப்பணியைச் செய்துவந்தார். ஒரு பொருளுக்கும் வழியில்லாதபோது தம் மனைவியையாவது விற்று எண்ணெய் கொள்ள விரும்பி, நகரத்திலுள்ள வீதிகள் தோறும் விலை கூறினார். வாங்குவோரில்லாமையால் மனஞ்சோர்ந்து நின்றார்.

உலகத்தில் ஒருவனுக்கு அருமையான அவன் மனைவி புதல்வர் செல்வம் என்னும் இவைகளைப் பார்க்கிலும் சிவத்திலும் சிவ தொண்டிலும் மேலானபற்றுடையவராயிருந்தால் அவருக்கே சிவ பெருமானும் இனியர். இதையறிந்த நாயனாரும் தமக்குள்ள யாவற்றினும் சிவபெருமானும் அவருக்குச் செய்யும் திருத்தொண்டுமே விசேடம் என்று எண்ணினார்.

கனியி னுங்கட்டி பட்டக ரும்பினும்
பனிம லர்க்குழற் பாவைநல் லாரினும்
தனிமு டிகவித் தாளு மரசினும்
இனியன் றன்னடைந் தார்க்கிடை மருதனே. —தேவாரம்.

தாம் செய்த திருத்தொண்டைச் செய்தற்குப் பொருளின்மையால் மனைவியை விற்க விரும்பியுங் கொள்வாரில்லாது கோயிலுக்குச் சென்று அகல்களில் திரிகளையிட்டு எண்ணெய்க்குப் பதிலாக உதிரத்தால் நிரப்ப எண்ணி, வாளினால் தமது கழுத்தை யறுக்கத் தொடங்கினார். அப்போது சிவபெருமான் இடபாரூடராய் எழுந்தருளி மிடறு அரியும் தம்மடியவர் கையைப் பிடித்தருளினார். பிடித்ததும், நாயனார் உற்றவூறு நீங்க உச்சிமேற் கைகுவித்து நின்றார். இறைவர் அப்போது நாயனாருக்கு முத்திகொடுத்தருளினார்.

---

# சத்தி நாயனார்

விரிதருகா விரிநாட்டு வரிஞ்சை யூர்வாழ்
வேளாளர் சத்தியார் விமலர் பாதத்
துரியவர்க ளடிபரவு மொருமை யார்நா
வோவாமே யைந்தெழுத்து முரைக்கு நீரா
ரிருளின்மிட றுடையபிரா னடியார் தம்மை
யிகழ்வார்நாத் தண்டாயத் திடுக்கி வாங்கி
யரியுமது திருத்தொழிலா வுடையார் மன்று
ளாடியசே வடிநீழ லடைந்து ளாரே.

இந்நாயனார் சோழநாட்டிலே வரிஞ்சியூரில் வாய்மையிற் சிறந்த வேளாளர் குலத்தில் பிறந்தார். சிவபெருமான் திருவடிகளை மறவாது மனம், மொழி, மெய்களால் போற்றிவந்தார். சிவனடியார்களை வசைமொழி கூறுகின்றவர்கள் எவராயினும், அவர்கள் நாவைக் குறடுபோன்ற ஆயுதத்தாலிழுத்து, தமது கைச்சத்தியினால் அரிவதனால் சத்திநாயனார் எனும் திருநாமம் பெற்றார்.

அத்த ராகிய வங்கண ரன்பரை
யித்த லத்தி லிகழ்ந்தியம் பும்முரை

வைத்த நாவை வலித்தரி சத்தியாற்
சத்தி யாரெனு நாமந் தரித்துளார்

—பெரிய புராணம்.

இவ்வாறு பலநாள் திருத்தொண்டு சிறப்புடன்செய்து சிவபெருமான் திருவடிகளை அடைந்தார்.

சிவனடியார்களை இகழ்தல் அவர்களுக்கு இடர்செய்தலாகிய தீமைகளைச் செய்வோர் நரகதுன்பத்தை யடைவர். ஒருவர் செய்யும் இடரைக்கண்டு மற்றோருங் கெட்டுப்போவார்கள். அப்படிக் கெட்டுப் போகாத வண்ணம் தடுத்தல் புண்ணியம். எறிபத்த நாயனார்போலவே இந்நாயனாரும் சிவனடியார்களுக்கு வரும் இடரைநீக்கும் அன்பு நெறியில் நின்று முத்தியின்பம் அடைந்தார்.

---

# ஐயடிகள் காடவர்கோனாயனார்

வையநிகழ் பல்லவர்தங் குலத்து வந்த
மாமணிமா நிலமுழுது மகிழ்ந்து காக்கு
மையடிகள் காடவர்கோ னருளால் நூல்க
ளறிந்தரசு புரிந்திடுத லமையு மென்றே
பொய்யினைய வுடல்வாழ்வு கழியு மாறு
பொருந்தியிடும் புகழ்வெண்பாப் புலியூர் மேவுஞ்
செய்யதிரு வடிமுதலாப் பதிக டோறுஞ்
செப்பினா ரென்வினைக டப்பி னாரே.

இந்நாயனார் தொண்டைமண்டலத்திலே காஞ்சீபுரத்தில் பல்லவகுலத்தரசரா யிருந்தார். சைவ வைதிக மார்க்கங்கள் விளங்க அரசுபுரிந்தார். அரசுபுரிதல் இன்னலெனக் கருதி அதனை வெறுத்து, அரசின் உரிமையையும் தமது புத்திரனிடம் ஒப்படைத்து, சிவபெருமானிடங் கொண்ட பேரன்பினால் பூமியிலுள்ள சிவதலங்கள் தோறுஞ் சென்று சிவபெருமானை வணங்கிவருவாராயினார். தாம் சென்று வணங்கின தலங்களிலெல்லாம் ஒவ்வொரு திரு வெண்பாப் பாடித் துதித்தனர். இங்ஙனம் வெகுகாலம் திருத்தொண்டு செய்துகொண்டிருந்து பிறகு பரமர் திருவடிநிழலையடைந்தார்.

இவருடைய பாடல் க்ஷேத்திரத் திருவெண்பா எனப்படும். அது பதினொராந் திருமுறைப் பிரபந்தங்களுள் ஒன்றாகும்.

# கணம்புல்ல நாயனர்

இலகுவட வெள்ளாற்றுத் தென்பால் வாழு
மிருக்குவே ளூரதிப ரெழிலார் சென்னிக்
கலைநிலவா ரடிபரவுங் கணம்புல்லர் தில்லைக்
கருதுபுலீச் சரத்தரற்குக் காதற் றீப
நிலைதரத்தா மிடமிடியா லொருநாட் புல்லா
னீடுவிளக் கிடவதுவு நேரா தாகத்
தலைமயிரி னெரிகொளுவு மளவி னுதன்
றுவாதவாழ் வருளுந் தன்மை யாரே.

கணம்புல்ல நாயனர் இருக்கு வேளூரிலே பிறந்தார். பெருஞ் செல்வர். நற்குணமுடையவர். சிவபக்தர். செல்வத்தினுல் அடையும் பயன் திருவிளக்கேற்றுதலாம் என்று கொண்டு சிவாலயங்களில் திருவிளக்கேற்றித் துதிக்கும் திருத்தொண்டு செய்துவந்தார். இவர் இத்திருத்தொண்டை நெடுங்காலம் செய்துவரும்பொழுது வறுமை வந்தெய்தியது. தமது வீட்டுப் பொருள்களை விற்றுச் சிதம்பரஞ் சென்று திருப்புலீச்சரம் என்னும் ஆலயத்தில் திருவிளக்கேற்றும் திருத்தொண்டு வழாது செய்துவந்தார். பொருள்களெல்லாம் ஒழிந்துவிடக் கணம்புல்லுகளை அறுத்துவிற்று அப்பணத்துக்கு நெய்வாங்கி விளக்கெரித்தார். கணம்புல்லறுத்து விற்றமையால் கணம்புல்ல நாயனர் என்னும் நாமத்தைப்பெற்றனர். ஓர்நாள் தாம் கொண்டுவந்த புல் விலைப்படாமையால் அப்புற்களையே விளக்காக எரித்தார். எரிக்கவேண்டிய நேரம்வரையில் புல் எரிவதற்குப் போதாமையால் தமது முடிச்சிகையை எரித்தார். உடனே சிவபெருமான் திருத்தொண்டர்மீது பெருங் கருணை வைத்துச் சிவலோகத்தில் இருக்கும் பெரும் பதவியைக் கொடுத்தருளினுர்.

திருத்தொண்டு இரந்து செய்வதிலும் தன் முயற்சியால் செய்வதே நன்று.

"எண்ணெயிரப் பஞ்சியுட லேவருத்தித் தீபமிட்டீர்
துண்ணென் கணம்புல்லர் சோமேசா—நண்ணியிடில்
ஆவிற்கு நீரென் றிரப்பினு நாவிற்
கிரவி னிளிவந்த தில்."                    —முதுமொழி வெண்பா.

திருவிளக்கிடுதல் பெரும்புண்ணியம் என்பது நமிநந்தியடிகள் நாயனார், கலிய நாயனார் சரித்திரங்களில் காணலாம்.

---

# காரி நாயனார்

திருக்கடவூர் வருமுரவோர் காரி யாராந்
திகழ்தொண்டர் வண்டமிழ்நூ றிருந்த வோதி
விருப்பொடுதம் பெயராற்பா விளம்பி மும்மை
வேந்தரையு முறைமுறையே மேவி யங்க
ணுரைத்தவுரை நயமாக்கி யவர்பா லேய்ந்த
வொண்பொருளா லாலயங்க ளோங்கச் செய்து
தரைக்குளருந் தவர்க்கேவ றகமுன் போற்றுந்
தன்மையா லருள்சேர்ந்த நன்மை யாரே.

காரி நாயனார் திருக்கடவூரில் மறையவர் குலசிரேஷ்டராய் அவதரித்துத் தமிழ் நூல்களை ஆராய்ந்து மிகப் பாண்டித்தியம் பெற்றார். அவர் தமது பெயராற் கோவை பாடித் தமிழ்நாட்டு வேந்தரிடமுஞ் சென்று அவர்கள் மகிழும்படி உரைத்த வுரைகளை நயமாக்கி அவர்களிடமிருந்து பெறும் திரவியங்களைக்கொண்டு சிவாலயங்களைக் கட்டுவித்தார். சிவனடியார்களுக்கு வேண்டும் திரவியங்களைக் கொடுத்துச் சிவபத்தியை மறவாதவராயிருந்து சிவபதம் அடைந்தார்.

கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம். கோயில் வேண்டிய இடங்களில் கட்டுவித்தல் பெரும் புண்ணியம். "திருக்கோயிலில்லாத திருவிலூரும்" என்னும் தேவாரமும் நோக்கத்தக்கது.

# நின்றசீர் நெடுமாற நாயனார்.

*கன்னல்மலி நெல்வேலிக் கவிஞர் மாறர்*
*கவுரியர்கோ னமணருறு கலக்க மெல்லாம்*
*பொன்னெயில்சூழ் சிரபுரக்கோ னிணைய மாற்றிப்*
*புனிதமிகு நீறணிந்து போற்றி செய்து*
*மன்னுபுகழ் மங்கையருக் கரசி யாரா*
*மலர்மாது மணிமார்ப மகிழ்ந்து மாற்றார்*
*வெந்நிடுதல் கண்டரசு புரிந்து காழி*
*வேந்தருள் சேர்ந்தபெரு விறலி னாரே.*

நின்றசீர் நெடுமாற நாயனார் மதுரையில் அரசாண்ட பாண்டிய மன்னரில் ஒருவர். சமணர் போதனையில் அகப்பட்டுச் சமண சமயத்தில் பிரவேசித்திருந்தார். சோழ ராசாவுடைய புதல்வியாகிய மங்கையர்க்கரசியை மணம் புரிந்தார். அவரது மந்திரியார் குலச்சிறை நாயனார். இவ்விருவர் மூலமாகத் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளின் திருவருளைப் பெற்றார். அவங் திருக்கரத்தால் விபூதி தரிக்கப்பட்டமையால் தமது கூன் நிமிர்ந்து நெடுமாறனார் எனப் பெயர் பெற்றனர். தம்மை எதிர்த்து வந்த அரசர்களைப் போர்முனைதோறும் வென்று, சைவ பரிபாலனஞ் செய்து, சிவநேசம் மாறாதவராய்ச் செங்கோல் நடத்தி வரும் நாளில் தமது ஞான குருவாகிய திருஞானசம்பந்த சுவாமிகள் திருவருளால் முத்தியடைந்தார்.

*" பிள்ளையார் வைப்பினிற் றீப்பெய்வித்த மீனவன்றீத்*
*துன்று வெப்பு நோயுழந்தான் சோமேசா—என்னில்*
*பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் றமக்கின்னா*
*பிற்பகற் றாமே வரும்"*

தனக்கு ஒரு பயனைக் குறித்தாவது வைரம் பற்றியாவது சோர்வினாலாவது ஒருயிர்க்குந் துன்பந்தருமவைகளைச் செய்யாமை கூறப்படும்.

# வாயிலார் நாயனர்

ஞாயிலார் மதிற்றிருண்டை நாட்டு மேன்மை
நண்ணுமயி லாபுரியின் வேளாண் டொன்மை
வாயிலார் மலவில்லா னடியே போற்றி
மறவாமை தலைநின்ற மனமே செம்பொற்
கோயிலா வுயர்ஞானம் விளக்கா நீராக்
குலவியவா னந்தமன்பே யமுதாக் கொண்டு
தாயிலா னிருசரண நிகழ வேத்துந்
தன்மையா ரருள்சேர்ந்த நன்மை யாரே.

இந்நாயனர் திருமயிலாப்பூரிலே வேளாளர் குலத்தில் பிறந்தார். அவர் சிவபெருமானை ஒருபொழுதும் மறவாது தமது மனமாகிய ஆலயத்திலிருத்தினர். ஞானமாகிய திருவிளக்கேற்றி, பேரானந்தமாகிய திருமஞ்சனமாட்டி, அன்பென்னுந் திருவமுதை அமைத்து, ஞானபூசையை நெடுங்காலஞ் செய்து சிவபதம் பெற்றனர்.

"மறவாமை யானமைத்த மனக்கோயி லுள்ளிருத்தி
யுறவாதி தனையுணரு மொளிவிளக்குச் சுடரேற்றி
யிறவாத வானந்த மெனுந்திருமஞ் சனமாட்டி
யறவாணர்க் கன்பென்னு மமுதமைத்தர்ச் சனைசெய்வார்"

—பெரிய புராணம்.

திருமந்திரத்தில் ஞானபூசையின் பெருமை வருமாறு கூறப்படும்:—

"உள்ளம் பெருங்கோயி லூனுடம் பாலயம்
வள்ளற் பிரானார்க்கு வாய்கோ புரவாசற்
றெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கங்
கள்ளப் புலனைந்துங் காளா மணிவிளக்கே"

# முனையடுவார் நாயனார்

பொன்னிவளந் தருநாட்டுப் புகழு நீடூர்ப்
பொருவிறிரு மலிவேளாண் டொன்மை மிக்கார்
முன்னியவர் முனையடுவா ரிகலார் போரின்
முரணழிவார் தமக்காக மொழிந்த கூலி
மன்னுநிதி கொண்டுசயங் கொடுத்து வந்த
வளர்பொருளா லிறைவனடி வழுவா வன்பர்க்
கன்னமவர் நசையின்மிக மிசைய நல்கு
மன்பர்துன்ப மவையாவு மகன்று ளாரே.

இந்நாயனார் சோழநாட்டிலே திருநீடூரில் வேளாளர் குலத்தில் உதித்தவர். சிவபெருமானிடத்திலும், சிவனடியார்களிடத்திலும் பேரன்புடையவர். போர் வீரனுமாய்ப் போர்முனைதோறும் வெற்றியடைபவருமாய் இருந்தார். சத்துருக்களின் போர்முனையில் தோற்றவர்கள் இவரிடம் வந்து கூலி பேசினால் அவர்களுக்கு உதவியாகச் சென்று பகைவரைவென்று, அதனால் வரும் ஊதியத்தைச் சிவனடியார்களுக்குச் சொன்ன சொன்னபடி நிரம்பக் கொடுத்துத் திருவமுது செய்விப்பார். முனையடுவார் என்னும் நாமமும் பெற்றார். பலநாள்களாக இப்படி அரிய தொண்டுசெய்து முத்தியடைந்தனர்.

# கழற்சிங்க நாயனர்

காடவர்தங் குலமுவந்த கழலார் சிங்கர்
காதன்மிகு தேவியுடன் காவ லாரூ
ராடவல பெருமானைப் பணிவா ரங்கோ
ரகன்றமலர் தனைமோந்த வரிவை மூக்கைச்
சேடுடைய செருத்துணையா ரரியச் சேட்டுத்
திறலரசர் மலரெடுத்த செங்கை யென்றே
சூடகமுன் கைதடிந்து ஞாலங் காத்த
தூய்மையா ரருள்சேர்ந்த வாய்மை யாரே.

இந்நாயனர் காடவர் குலத்திற் பிறந்தார். சிவபெருமானிடத்தில் மிகுந்த அன்புள்ளவர். இறைவர் திருவருளால் சத்துருக்களை வென்று சைவநெறியை வளர்த்து அரசுபுரிந்தார். சிவதலங்கள்தோறும் சென்று இறைவனை வணங்கித் திருத்தொண்டு செய்துவந்தார். ஒருநாள் சிவதலங்களைத் தரிசித்துத் தேவியுந் தாமுமாகத் திருவாரூருக்குச் சென்றனர். திருக்கோயிலுட் சென்று வன்மீகத் தியாகராச மூர்த்தியைத் தரிசிக்கும்போது தேவியார் அவ்வாலயச் சிறப்பினை ஒவ்வொன்ருகப் பார்த்துவந்து திருமாலைகட்டும் மண்டபத்தின் பக்கத்தில் விழுந்திருந்த ஒரு புதுப்பூவை எடுத்து மோந்தார். அதைக் கண்டு செருத்துணை நாயனர் அம்மலரைப் பூமண்டபத்தில் எடுத்து மணந்தாரென நினைத்து, விரைந்தோடி வந்து, கூந்தலைப் பிடித்திழுத்துப் பூவை மணந்த மூக்கை அறுத்தார். தேவியார் புலம்பினர். தேவியார் பக்கத்தில் வந்த அரசர், இப்படிச் சிறிதும் அஞ்சாது இவர் கொடுஞ்செயல் செய்தாரே என்று கோபங்கொண்டனர். அப்போது செருத்துணை நாயனர், 'இவள் சுவாமிக்குச் சாத்தும் மலரை எடுத்து மோந்தபடியாலன்றே அப்படிச் செய்தேன்' என்ருர். அப்பொழுது கழற்சிங்க நாயனர் 'எடுத்த கையையன்றே முன் துணிக்கவேண்டும்' என்று கூறி, உடைவாளையுருவிப் பட்டத்துத் தேவியாரது மலரெடுத்த கையைத் தறித்தார். அப்போது தொண்டர் ஆர்த்தனர்; தேவர்கள் மலர்மாரி பொழிந்தனர். இவர் நெடுநாள் சைவநெறி தழைத்தோங்க அரசுபுரிந்து முடிவிற் சிவபதமடைந்தனர்.

# இடங்கழி நாயனர்

கோனாட்டுக் கொடும்பாளூ ரிருக்கும் வேளிர்
  குலத்தலைவ ரிடங்கழியார் கோங்கிற் செம்பொ
னேனற்றூர் மன்றின்முக டம்பொன் வேய்ந்த
  வாதித்தன் மரபோர்நெற் கவர்ந்தோ ரன்பர்
போரநாப்ப ணிருளின்கட் காவ லாளர்
  புரவலர்முன் கொணரவவர் புகலக் கேட்டு
மானேற்றூ ரடியாரே கொள்க வென்று
  வழங்கியர சாண்டருளின் மன்னி னாரே.

இடங்கழி நாயனர் கொடும்பாளூரில் குறுநிலமன்னர் குலத்தில் பிறந்தவர். கனகசபையின் முகட்டைச் செம்பொன்னால் வேய்ந்த ஆதித்தன் வமிசத்தினர். சிவபெருமானிடத்தில் மிகுந்த அன்புடையவர். சிவனடியார்களுக்கு வேண்டுவன செய்துவந்தனர். சைவநெறி தழைத்தோங்கத் திருக்கோயில்கள் எங்கும் அர்ச்சனைகள் விதிமுறை விளங்க அரசுபுரிந்தார்.

சைவநெறி வைதிகத்தின் தருமநெறி யொடுந்தழைப்ப
மைவிரவுந் திருமிடற்றூர் மன்னியகோ யில்களெங்கு
மெய்வழிபாட் டர்ச்சனைகள் விதிவழிமேன் மேல்விளங்க
மொய்வளர்வண் புகழ்பெருக முறைபுரியு மந்நாளில்.

—பெரியபுராணம்.

சிவாலயங்களில் நித்திய வழிபாடுகள் திருவிழாக்கள் தவறாது நடைபெறுதற்கு வேண்டியன ஏற்படுத்திச் சைவநெறி முறைப்படி நடக்கச் செய்தல் அரசன் கடனாகும். அரசன் நீதி குன்றினல் அவனுக்குங் குடிகளுக்கும் கேடு உண்டாகும்.

ஆற்றரு நோய்மிகு மவனி மழைகுன்றும்
போற்றரு மன்னரும் போர்வலி குன்றுவர்
கூற்றுதைத் தான்றிருக் கோயில்க ளானவை
சாற்றிய பூசைக டப்பிடிற் றானே.

முன்னவனார் கோயிற் பூசைகண் முட்டிடின்
மன்னர்க்குத் தீங்குள வாரி வளங்குன்றுங்
கன்னங் களவு மிகுந்திடுங் காசினிக்
கென்னரு ணந்தி யெடுத்துரைத் தானே.

—திருமந்திரம்.

தருமநெறியோடு அரசுசெலுத்தி வரும்போது ஒரு நாள் சிவனடியார்களுக்குத் திருவமுது நியமமாகப் படைக்கும் அடியவர் ஒருவர் அமுது படைக்கப் பொருளில்லாமையால் மனந்தளர்ந்தார். அடியார் பூசையிற்கொண்ட அளவற்ற ஆசையின் மேலீட்டினால் அவ்வடியவர் செய்வது இன்னதென்று தெரியாது அரசனது நெற்கொட்டகாரத்திலிருக்கும் நெல்லை இராத்திரியில் புகுந்து முகந்தெடுத்தார். அதைக்கண்ட காவலாளர் அவரைப் பிடித்து வந்து இடங்கழி நாயனார்முன் விட்டனர். இடங்கழி நாயனார் அவ்வடியவரை நோக்கி, "நீர் நமது பண்டாரத்தை ஏன் கவர்ந்தீர்?" என்று வினவினார். அவ்வடியவர் 'தான் சிவனடியார்களுக்கு அமுது செய்விக்கும் திருத்தொண்டுக்கு முட்டுப்பாடு வந்தமையால் இப்படிச் செய்தேன்' என்றார். அதுகேட்ட அரசர் மிக இரங்கி 'இவரன்றோ நமது பண்டாரம்!' என்று கூறி, அவரைப் போகவிட்டு நெற்பண்டாரங்களையும் இன்னும் வேண்டிய நிதிப்பண்டாரங்களையும் திறந்துவிட்டுச் சிவனடியார்களை எடுத்துக்கொள்ளும்படி பறையறைவித்தார். இப்படித் தொண்டு செய்து நெடுங்காலம் திருநீற்றின் நெறி தழைத்தோங்கத் தண்ணளியோடு அரசாண்டு இறைவர் மலரடி சேர்ந்தார்.

# செருத்துணை நாயனர்

இரைத்தணையார் புனற்பொன்னி மருக னன்னுட்
டெழிலாருந் தஞ்சைநக ருழவ ரேத்துஞ்
செருத்துணையார் திருவாரூர் சேர்ந்து வாழ்வார்
செல்வமிகும் பல்லவர்கோன் றேவி வீழ்ந்த
மருத்துணையார் மலரெடுத்து மோப்பக் கண்டு
வளமலிபூங் கத்தியா லவண்மூக் கீர்ந்த
கருத்துணையார் விறற்றிருத்தொண் டினையே செய்து
கருதலரு மமருலகங் கைக்கொண் டாரே.

செருத்துணை நாயனர் சோழநாட்டிலே தஞ்சாவூரில் வேளாளர் குலத்தலைவராய் அவதரித்தார். சிவபெருமானிடத்தில் பேரன்பு பூண்டு சைவர் என்று எல்லோரும் சொல்லத்தகும் திருத்தொண்டில் நிற்பவர். திருவாரூருக்குப்போய்த் திருக்கோயிலில் உள்ளும்புறமும் பல திருப்பணிகள் செய்து சுவாமியைக் காலந்தோறும் வணங்கிக்கொண்டு வருவார். ஒருநாள் கழற்சிங்க நாயனரும் அவர் பட்டத்துத் தேவியும் இறைவரை வழிபடத் திருக்கோயிலுக்கு வந்தார்கள். பட்டத்துத்தேவி பூமாலை தொடுக்கும் மண்டபத்துக்கருகே விழுந்துகிடந்த பூவை எடுத்து மோந்தார். அதனல் செருத்துணை நாயனர் தேவியின் கூந்தலைப் பிடித்திழுத்து மூக்கை யிறுத்துவிட்டனர். இந்நாயனர் நெடுங்காலம் திருத்தொண்டின் வழி நின்று சிவபதம் அடைந்தார்.

சிவபெருமான் சடைமுடியில் சாத்தும்படியான பூவை எடுத்து மோந்தது குற்றம் என மனதிற்பட்ட மாத்திரத்தில் இராசாவின் பட்டத்துத்தேவி என்பதையும் மறந்து, அவரது மூக்கை அரிந்ததனல் திருத்தொண்டின் மேன்மையும், அவர் பத்தியின் வலிமையும் இவ்வளவு என்று அளவிடக்கூடுமோ!

# புகழ்த்துணை நாயனார்

*புண்ணியர்கள் புகழழகார் திருப்புத் தூர்வாழ்*
*புகழ்த்துணையா ரகத்தடிமைப் புனிதர் சின்னாண்*
*மண்ணிகழ மழைபொழியா வற்கா லத்தால்*
*வருந்துடல நடுங்கிடவு மணிநீ ரேந்தி*
*யண்ணன்முடி பொழிகலச முடிமேல் வீழ*
*வயர்ந்தொருநாட் புலம்பவர னருளா லீந்த*
*நண்ணலரு மொருகாசுப் படியால் வாழ்ந்து*
*நலமலிசீ ரமருலக நண்ணி னாரே.*

புகழ்த்துணை நாயனார் செருவிலிபுத்தூரில் சிவமறையோர் குலத்தில் பிறந்தவர். சிவலிங்கப்பெருமானை ஆகம விதிப்படி மிகுந்த அன்போடு பூசை செய்துவந்தார். தேசம் எங்கும் பஞ்ச முண்டாகப் போசனங் கிடையாது பசியினால் வருந்தியும் தாம் செய்த பூசையை நியமம் தவறாது செய்துவந்தார். ஒருநாள் திருமஞ்சனம் ஆட்டும் பொழுது பசியினால் சரீரம் தளர்ந்திருந்தமையால் திருமஞ்சனக்குடம் கையிலிருந்து தவறிச் சிவபெருமான் திருமுடியின்மேல் விழுந்தது. அதனால் மிகவும் மனம் வருந்தி நடுங்கி இறைவர் திருவடிகளில் விழுந்து அயர்ந்து திருவருளினால் நித்திரை செய்யலானார். இறைவர் சொப்பனத்தில் தோன்றி, "பஞ்சகாலம் நீங்கும் வரையும் நித்தம் ஓர் காசு இங்கு வைப்போம்" என்றருளிச்செய்தார். நாயனார் இடர் நீங்கி எழுந்து சிவபெருமான் றிருவருளால் பீடத்தின்கீழ் ஓர் காசிருக்கக் கண்டு எடுத்துக் களிகூர்ந்து சிவார்ச்சனையைத் தவறாது செய்து வந்தனர். பஞ்சம் நீங்கியபின்னும் நெடுங்காலம் மெய்யடிமைத் தொழில் செய்து சிவபெருமான் திருவடிநிழலை அடைந்தார்.

*"நேயபுகழ்த் துணையார் நீராட்டுங் கைதளர்ந்துன்*
*றூயமுடி மேல்வீழ்ந்தார் சோமேசா—வாயுங்கால்*
*தானந் தவமிரண்டுந் தங்கா வியனுலகம்*
*வானம் வழங்கா தெனின்"*

—முதுமொழி வெண்பா.

இதனால் கடவுளது ஆணையின் உலகமும் அதற்கு உறுதியாகிய அறம், பொருள் இன்பங்களும் நடத்தற்கு ஏதுவாகிய மழையினது சிறப்புக் கூறப்படுகின்றது.

சிவார்ச்சனை செய்தல் பெரும் புண்ணியமாகும்.

“ புண்ணியஞ் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு
வண்ண லதுகண் டருள்புரியா நிற்கு
மெண்ணிலி பாவிக ளெம்மிறை யீசனை
நண்ணறி யாம னழுவுகின் றாரே ” —திருமந்திரம்.

சிவபூசையின் பெருமையைச் சண்டேசுர நாயனர், திருநீல நக்க நாயனர் சரிதங்களிற் காணலாம்.

இந் நாயனர் தாம் பசியினல் வருந்தி, திருமஞ்சனக் குடத்தை எடுக்கமுடியாதிருந்தபோதும், சிவபூசையைக் கைவிடாது செய்ததனல் சிவபெருமான் அவருக்குக் காசு வழங்கினர். இவரது பெருமையைச் சுந்தரமூர்த்தி நாயனர் தாம்பாடிய தேவாரத் திருப்பதிகத்தில் சிறப்பித்துப் பாடினர்.

“ அகத்த டிமைசெய்யு மந்தணன்றானரி சிற்புனல்
கொண்டுவந் தாட்டுகின்றான்
மிகத்த ளர்வெய்திக் குடத்தையு நம்முடி மேல்விழுத்
திட்டு நடுங்குதலும்
வகுத்தவ னுக்குநித்தற் படியும் வருமென்
றொருகாசினை நின் றநன்றிப்
புகழ்த்துணை கைப்புகச் செய்துகந்தீர் பொழிலார்
திருப்புத் தூர்ப்புனித னீரே.

---

# கோட்புலி நாயனர்

குலவுபுகழ் நாட்டியத்தான் குடிவே ளாளர்
கோட்புலியார் குவித்துயர்த்த செந்நெற் கூடு
நிலவணிவார்க் கமைத்தானை நிறுத்தி யொன்னர்
நேர்மலைவார் திருவாணை நினையா தேநெற்
சிலமிடியா லழித்தபடி யறிந்து வாளாற்
சேர்ந்தபெருங் கிளைஞருடல் சிதற வீசி
யிலகுமொரு குழவியையு மெறிந்து நாத
னெண்ணரிய கருணைநிழ லெய்தி னாரே.

கோட்புலி நாயனர் சோழதேசத்திலுள்ள நாட்டியத்தான் குடியில் வேளாளர் குலத்தில் தோன்றினர். சோழராசாவிடம் சேனதிபதியாயிருந்து புகழ்பெற்றவர். அத்தொழிலினல் வரும் பெரும்பொருளையெல்லாம் திருக்

கோயில்தோறும் திருவமுதுக்காகச் சம்பா நெல் வாங்கி நெற்கூடாகக் கட்டிவைப்பார். இத்திருப்பணியை நெடுங் காலஞ் செய்துவரும்போது அரசன் ஏவுதலினால் போர் முகத்துக்குச் சென்றார். அவர் போர்முடிந்து திரும்பி வரும் வரைக்கும் அமுதுபடிக்காக வேண்டிய சம்பா நெற்களை வாங்கி நெற்கூடுகளைக் கட்டிவைத்தார். தமது உறவினர்களை அழைத்து 'நெற்கூட்டை எடுக்க நினைப்பீர்களானால், திருவிரையாக்கலி' என்னுஞ் சிவபெருமானைக் குறித்த ஆணையை ஒவ்வொருவருக்கும் தனியாகக் கூறிச் சென்றனர்.

*திருக்கோயில்களில் சிவபெருமானுக்குத் திருவமுது செய்வித்தல் பெரும் புண்ணியம்.*

*" சாலியின் விசிட்ட ராச சாலியாற் சமைத்த வன்ன*
*மேலைய பலத்தின் மிக்க தசகுணம் விளக்கு மீண்டுங்*
*கோலிய பலங்க ளேறுங் கொழுவிய நெய்யுங் கூடி*
*லேலவே கறியுங் கூடி லேற்றமுன் னிசைத்த வாற்றும்."*

—சிவதருமோத்தரம்.

நாயனார் உறவினர்களுக்கு இப்படிச் சொல்லிப் போருக்குச் சென்ற சில நாட்களில் தேசத்தில் பஞ்சம் வந்தது. சுற்றத்தார் போசனமில்லாது இறந்துபோவதிலும், சிவபெருமானுக்குத் திருவமுதுக்காகக் கட்டிவைத்த நெல்லையாவது எடுத்து உண்டு பிழைத்துப் பஞ்சம் நீங்கிய பின் குற்றமறக் கொடுப்போமென்று எண்ணி, நெல்லைக் கூடு குலைத்து எடுத்து உபயோகித்தார்கள். நாயனார் சண்டை முனையில் வெற்றிபெற்று அரசனிடம் திரவியங்கள் பெற்றுத் திரும்பிவந்தார். சுற்றத்தார் செய்ததை அறிந்து அவர்களை வெட்டிவிடுவதாகத் தீர்மானித்தார். தம்மை எதிர்கொண்ட சுற்றத்தாருக்கினிய வார்த்தைகள் கூறி நெற்கூடுகளைப்பற்றி அறியாதவர்போல, அவர்களுக்கு வஸ்திரம் பொருள் முதலிய வெகுமதி கொடுக்கும்படி அழைப்பவர்போல் வீட்டுக்கு வரச்செய்தார். எல்லாரும் வந்தபின் கோட்புலி என்னும் தமது பெயருடைய காவலாளைத் தலைவாயிலில் வைத்தார். சிவபெருமான் ஆணையை மறுத்த இவர்களை உயிருடன் வைக்கலாகா

தென்று வாளால் தந்தை தாயார் உடன்பிறந்தவர் மனைவி சுற்றத்தார் பணிவிடையாட்கள் முதலிய எல்லாரையும் வெட்டி வீசினார். காவற்காரனாகிய கோட்புலி, வெட்டுக் குட்படாது தப்பியிருந்த ஓர் ஆண் குழந்தையை வெட்டா வண்ணம் தடுத்து, 'இப்பிள்ளை அவ்வன்னத்தைத் தின்ற தன்று. ஒரு குடிக்கு ஒரு புதல்வன்; இருக்கட்டும்' என்று கூறி வணங்கினான். அவனுக்கு மறுவுத்தரமாக நாயனார், 'அவ்வன்னத்தை யுண்டவளின் பாலை இக்குழந்தை குடித்தது' என்று அதையும் எடுத்தெறிந்து வாளால் இரண்டு கூறாக வெட்டினார்.

அவரது அன்பின் பெருக்கைக்கண்ட சிவபெருமான் உடனே தோன்றி "அன்பனே! உன் சுற்றத்தார்கள் உன் கைவாளினாலே தங்கள் பாவங்களிலிருந்து நீங்கப்பெற்று சுவர்க்கத்தை யடைந்தனர். நீ இவ்வண்ணமே நம்முடன் வருவாய்" என்று கருணை செய்தருளினர்.

"அங்கிலையே சிவபெருமா னன்பனைதிர் வெளியேநின்
றுன்னுடைய கைவாளா லுறுபாச மறுத்தகிளை
பொன்னுலகின் மேலுலகம் புக்கணையப் புகழோய்நீ
யிந்நிலைநம் முடனணைகென் றேவியெழுந் தருளினார்."

—பெரியபுராணம்.

சிவத்துரோகம் செய்தவர்கள் நரகெய்துவது திண்ணமாயினும், கோட்புலி நாயனார் வாளினால் வெட்டுண்டதனால் சுற்றத்தவர் பாவம் நீங்கப்பெற்றுப் புண்ணியலோகம் அடைந்தார்கள். அதுபற்றியே, 'உன்னுடைய கைவாளா லுறுபாச மறுத்தகிளை' என்றார்.

இந்நாயனார் தமது புதல்விகளாகிய சிங்கடி வனப்பகை என்னும் இருவரையும் சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கு அர்ப்பணஞ் செய்தார். அவர் அவ்விருவரோடும் மகண்மை கொண்டாடினர்.

கூடா மன்னரைக் கூட்டத்துவென்ற
கொடிநற் கோட்புலி சென்னி
நாடார் தொல்புகழ் நாட்டியத்தான்குடி
நம்பியை நாளும் மறவாச்
சேடார் பூங்குழற் சிங்கடியப்பன்
திருவாரூர னுரைத்த
பாடீராகிலும் பாடுமின் தொண்டீர்
பாடநம் பாவம்பற் றறுமே.

வளங்கி ளர்பொழில் வாழ்கொளி புத்தூர்
மாணிக்கத் தைமறந் தென்னினைக் கேனென்
றுளங்கு ளிர்தமி ழூரன்வன் றொண்டன்
சடையன் காதலன் வனப்பகை யப்பன்
நலங்கி ளர்வயல் நாவலர் வேந்தன்
நங்கை சிங்கடி தந்தை பயந்த
பலங்கி ளர்தமிழ் பாடவல் லார்மேற்
பறையு மாஞ்செய்த பாவங்க டானே.

—சுந்தரர் தேவாரம்.

---

# பத்தராய்ப் பணிவார்

தொண்டரடித் தொழல்பூசைத் தொழின்மகிழ்த லழகார்
துளங்கியவர்ச் சனைபுரித லுருகுதிமிய மங்கள்
கொண்டபணி திருவடிக்கே கொடுத்த லீசன்
குணமருவு மருங்கதையைக் குலவிக் கேட்டு
முண்டிவிழி துளும்பன்மயிர் சிலும்ப லுன்னன்
மருவுதிருப் பணிகாட்டி வருப வாங்கி
யுண்டிகொளா தொழிதலென விவையோ ரெட்டு
முடையரவர் பத்தரென வுரைத்து ளாரே.

சிவனடியார்களைக் கண்டால் அவர்களது குணம் குலம் விசாரியாது அவர்களைச் சிவம் எனப் பாவிப்பவர். அன்புடன் அவர்களைப் பூசிப்பவர். சிவபெருமானுக்குத் திருத்தொண்டு செய்து அர்ச்சிப்பவர்களைக் கண்டால் மனமகிழ்பவர். சிவபெருமானையும் அடியார்களையும் அன்போடு அர்ச்சிப்பவர். தாங்கள் செய்யும் புண்ணியங்களைச் சிவப்பிரீதியாகச் செய்பவர். மறுபிறப்பில்லாத பெருந்தன்மையை யுடையவர். சிவகதைகளைக் கேட்கும்போது ஆனந்தக் கண்ணீர் பெருகப் புளகங்கொண்டு வணங்குபவர். தங்கள் சீவனத்துக்காகத் தவவேடம் தரியாதவர். என்றும் சிவத்தியானமுடையவர். இவர்களே பத்தராய்ப் பணிவாராவார்.

"நின்றாலு மிருந்தாலுங் கிடந்தாலு நடந்தாலு
மென்றாலுந் துயின்றாலும் விழித்தாலு மிமைத்தாலு
மன்றாடு மலர்பாத மொருகாலு மறவாமை
குன்றாத வுணர்வுடையார் தொண்டராங் குணமிக்கார்."

—பெரியபுராணம்.

## பரமனையே பாடுவார்

அருந்தமிழால் வடகலையா லருளா லொன்று
 லறிவுநெறி மருவுமருங் கவிகள் யாவுந்
திருந்தியவா னவர்பணிய மன்று ளாடுந்
 தேவர்பிரான் கழலிணையே சேர வோதி
விருந்திடுநா வுடையபயன் மேவி னோர்தா
 மேலானோ மெனமகிழ்ந்து விழிநீர் சோரப்
பரிந்தருளாற் பரமனையே பாட வல்ல
 பான்மையா ரெமையாளு மேன்மை யாரே.

திரிபுரதகனம் செய்தவரும், மெய்ப்பொருளாயுள்ள வரும், உலகனைத்துமாயுள்ளவரும், ஐந்தொழில் கூத்தைச் செய்பவரும், பிரம விஷ்ணுக்களால் காண்டற்கரியவருமாகிய முழுமுதற்கடவுளை வேதாசமங்களால் தோத்திரம் பண்ணுவோர், பரமனையே பாடுவார் என்று சொல்லப்படுவர்.

மறந்தும் புறந்தொழா மாண்பினர்; பொய்ம்மை யாளரைப் பாடாதவர்.

## சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்

பாரணவும் புலனந்தக் கரண மொன்றும்
 படராமே நடுநாடி பயிலு நாதங்
காரணபங் கயன்முதலா மைவர் வாழ்வுங்
 கழியுநெறி வழிபடவுங் கருதி மேலைப்
பூரணமெய்ப் பரஞ்சோதிப் பொலிவு நோக்கிப்
 புணர்ந்தணைந்த சிவானுபவ போக மேவுஞ்
சீரணவு மவரன்றோ வெம்மை யாளுஞ்
 சித்தத்தைச் சிவன்பாலே வைத்து ளாரே.

தாங்கள் அப்பியாசம் பண்ணும் யோக முறைப்படி சிவபெருமானைத் தரிசித்து நடராசமூர்த்திக்குத் திருத்தொண்டு செய்யும் நல்வழியை யடைந்தவர்களான யோகிகளே சித்தத்தைச் சிவன்பால் வைத்தார் என்று புகழப் படுவர்.

## திருவாரூர்ப் பிறந்தார்

பொங்கியமா தவமுடையார் வருண நான்கிற்
பொருந்தினர்க ளல்லாத புகழி னுள்ளார்
சங்கையிலா வருந்தவமுன் புரிந்தா ரிங்குச்
சார்விலா ரிறைவனருள் சார்த லாலே
கங்கைவாழ் சடைமுடியா னருளை நீங்காக்
கணநாத ரெனவாழுங் கருத்தர் கன்னிச்
செங்கண்வரால் வளர்வாவி திகழு மாரூர்ச்
சிறந்துளா ரெமையாளப் பிறந்து ளாரே.

திருவாரூரிலே சிவநெறியில் நிற்கின்றவர்களாய்ப் பிறந்தோர் எக்குலத்தவராயினுஞ் சிவபெருமான் திருவருளைப் பெறுதலினால் கணநாதராயிருக்கும் பெரும் பேறுபெற்றவர்கள்.

திருவாரூர்ப்பிறந்தார் சிவகணநாதர்கள் என்று சிவபெருமான் கூறியதுகேட்ட நமிநந்தி யடிகள் அங்குள்ளாரை அப்படியே இருக்கக்கண்டு துதித்தனர் என்றால் அவர்கள் பெருமை எத்தன்மையதாகும்!

---

## முப்பொழுதுந் திருமேனி தீண்டுவார்

செப்பலருந் தவமுடைய செம்மை யாளர்
சிறுகாலே மலர்வாவி திகழ மூழ்கி
யொப்பிறிரு நீறணிந்து நியதி யாற்றி
யோர்வாமே யைந்தெழுத்து முரைத்து மேன்மைத்
தப்பில்சிவா கமவிதியா லின்பா லன்பாந்
தன்மையா னன்மையாந் தகையா ரென்று
முப்பொழுதுந் திருமேனி தீண்ட வல்ல
முறைமையார் பிறவிதெறுந் திறமை யாரே.

கௌசிகர், காசிபர், பாரத்துவாசர், கௌதமர், அகத்தியரென்று பஞ்சரிஷி கோத்திரத்திலே ஜனித்த சிவப்பிராமணர்கள் ஆதிசைவர் எனப்படுவர். தீட்சை அபிஷேகம் முதலிய பூசைகளைச் செய்தற்கு உரியராவர். அவர்கள் முப்பொழுதினும் சிவபெருமானை அர்ச்சிப்பார்கள். ஆதலால், அவர்களே முப்பொழுதுந் திருமேனி தீண்டுவார் என்று சொல்லப்படுவர்.

## முழுநீறு பூசிய முனிவர்

கற்பமனு கற்பமுப கற்ப மென்றிக்
கட்டளைந்த திருநீறுங் கனற்க ணீறும்
பொற்புடைய வாஞ்சா னங்கி யாறு
பொல்லாத பூமியெதிர் புனித லாகா
வற்புதமாந் திரிபுண்ட மதியின் பாதி
யகிலர்ங்கந் தீபமிகு மழகார் வட்ட
முற்பொலிய வுடலணியு முறையா ரன்றே
முழுநீறு பூசவல்ல முனிவர் தாமே.

கற்பம், அனுகற்பம், உபகற்பம் எனும் மூவகைப் பட்ட விபூதியை, அல்லது நித்தியாக்கினியில் எடுத்த விபூதியை, உத்தூளனம், திரிபுண்டரம், பிறைவடிவம், முக்கோணம், வட்டமாகச் சிவாகம விதிப்படி அன்போடு பூசுகின்றவர்களை முழுநீறு பூசிய முனிவரென்பர்.

---

## அப்பாலுமடிச் சார்ந்தார்

தாராரு மூவேந்தர் பயிலுந் தொல்லைத்
தமிழ்நாட்டப் புறத்திறைவன் சரணஞ் சார்ந்த
சீராருந் தொண்டர்களு மண்ட ரேத்துந்
திருத்தொண்டத் தொகையருளாற் செப்புங் கால
தோராருந் தொடையிலுறு திப்பா லப்பா
லெந்தைபிரா னடியடைந்த வியல்பி னோரு
மாராத காதலுடை யவர்க ளன்றே
வப்பாலு மடிச்சார்ந்த வடியார் தாமே.

சேர சோழ பாண்டியர் என்னும் மூவேந்தருக்கும் உரிய தமிழ் நாடல்லாத மற்றைய நாடுகளில் இறைவர் அருளால் முத்தியடைந்தவர்களும், திருத்தொண்டத் தொகையில் சொல்லும் அடியார்களுக்கு முந்தியும் பிந்தியும் உள்ள அடியார்கள் அப்பாலுமடிச்சார்ந்தார் எனப்படுவர்.

இக்குழுவில் திருவிசைப்பாக்காரர் ஒன்பதின்மரும் பதினோராந் திருமுறைப் பிரபந்த ஆசிரியர்களாகிய இளம்பெருமானடிகள், அதிராவடிகள், பட்டினத்துப் பிள்ளையார், நம்பியாண்டார் நம்பி முதலியோரும், சேக்கிழாரும், சந்தானகுரவர் நால்வரும் அடங்கலாம் போலும்.

# பூசலார் நாயனர்

பொருவருந்தண் டகநாட்டு நின்ற வூர்வாழ்
பூசுரர்கோப் பூசலார் புந்தி யாலே
யிருநிதியந் தேடியா லயமு மாக்கி
யெழுந்தருளப் பண்ணுவதா வெண்ணுங் காலை
யரனதனைக் காடவர்கோற் கருள மன்ன
னங்நகர மணைந்தவ்வா றறிந்து தாழ
விரவுமனக் கோயிலுற விருத்தி யங்கண்
வேண்டுவகொண் டிறைஞ்சியருண் மேவி னரே.

பூசலார் நாயனர் தொண்டை நன்னாட்டிலே திருநின்றவூரில் வாழும் மறையவர் குலத்தில் பிறந்தார். சிவபெருமானிடத்தில் மிகுந்த அன்புள்ளவர். அடியார்களுக்கு வேண்டிய பொருளைத் தேடிக் கொடுப்பவர். அவர் ஓர் சிவாலயம் கட்ட விரும்பினர். எங்குந் திரிந்து பொருள் தேடியும் கிட்டாமையால் நைந்தார். பிறகு மனத்தினல் ஓர் ஆலயங்கட்ட எண்ணினர். அதற்காக வேண்டிய தச்சரையும், சகல பொருள்களையும் மனதிலேயே நாளுக்கு நாள் சேகரித்து, நல்ல தினத்தில் அடிகோலி, இரவுபகல் நித்திரையின்றிப் பல நாளானபின் கட்டி முடித்தார். தூபி கிணறு குளம் திருமதில் முதலியவைகளையும் நினைவினல் அமைத்துக் கும்பாபிடேகத்துக்குரிய சுபதினமும் நியமித்தார்.

அக்காலத்தில் காடவர்கோன் என்னும் அரசன், கருங்கல்லினல் பெரும் செலவிட்டு ஓர் ஆலயம் காஞ்சியிற் கட்டினன். பிரதிட்டை செய்ய நியமித்த நாளுக்கு முந்திய நாளிரவில் பூசலார் நாயனரது அன்பின் திறத்தை விளக்கும் வண்ணம் சிவபிரான் அரசனுடைய சொப்பனத்தில் தோன்றி, "நின்றவூரிலிருக்கும் பூசலன் நமக்கோர் ஆலயங்கட்டி இருக்கின்றன். நாளைக்கு நாம் அங்கே எழுந்தருளுவோம். உனது கோயில் பிரதிட்டையை நாளைய தினம் செய்யாது, பின்னொரு தினம் வைத்துக்கொள்வாய்" என்று கூறி மறைந்தருளினர்.

காடவர்கோன் விழித்தெழுந்து பூசலார் நாயனாரைக் கண்டு வணங்க விரும்பி நின்றவூரையடைந்தார். அந்த இடத்தில் பூசலார் நாயனார் கட்டிய கோயில் எங்கே உளதென்று விசாரித்தார். "அவர் அப்படி ஒரு கோயில் இங்குக் கட்டியதில்லை" என நின்றோர் கூறினர். அரசன் பூசலாரைத் தேடிச் சென்று ஆலயப்பணி நிறைவேற்றிய முறையை அவரிடம் அறிந்து அதிசயங்கொண்டு, அவரை வணங்கித் தன் நகர் சென்றான். பூசலார் நாயனார் தம் மனத்தினுல் கட்டிய கோயிலில் சிவபெருமானை நிறுத்தித் திருத்தொண்டு செய்து முத்தியடைந்தனர்.

அன்பரு மமைத்த சிந்தை யாலயத் தரனார் தம்மை
நன்பெரும் பொழுது சாரத் தாபித்து நலத்தி னோடும்
பின்புபூ சனைக ளெல்லாம் பெருமையிற் பலநாட் பேணி
பொன்புனை மன்று ளாடும் பொற்கழ னீழல் புக்கார்.

—பெரியபுராணம்.

காயமே கோயி லாகக் கடிமன மடிமை யாக
வாய்மையே தூய்மை யாக மனமணி யிலிங்க மாக
நேயமே நெய்யும் பாலா நிறையநீ ரமைய வாட்டிப்
பூசனை யீச னார்க்குப் போற்றவிக் காட்டி னோமே.

—அப்பர் தேவாரம்.

இவர் மானச வழிபாட்டை மேற்கொண்டவர்.

# மங்கையர்க்கரசியார்

மங்கையர்க்குத் தனியரசி வளவர்குலக் கொழுந்து
 மன்னவர்சூழ் தென்னவர்க்கு மாதேவி யார்மண்
சங்கைகெட வமண்சமயஞ் சாட வல்ல
 சைவசிகா மணிஞானத் தமிழிற் கோத்த
பொங்குதிரு வருளுடைய போத வல்லி
 பொருவினெடு மாறனார் புயமேல் வாழுஞ்
செங்கலச முலையாட னருளா லின்பஞ்
 சேர்ந்தவரைப் புகழ்ந்தடியேன் வாழ்ந்த வாறே.

சோழராசன் புதல்வியாகிய மங்கையர்க்கரசியார் சிறு வயதிலேயே சிவபத்தியில் மேம்பட்டவரா யிருந்தார். பாண்டியராசனுக்குப் பட்டத்துத் தேவியானார். திருஞான சம்பந்த சுவாமிகள் தாம் பாடிய திருப்பதிகத்தில்,

"மங்கையர்க் கரசி வளவர்கோன் பாவை வரிவளைக் கைம்மடமானி
 பங்கயச் செல்வி பாண்டி மாதேவி"

என்று சிறப்பித்துப் பாடத்தக்க பெருந்தன்மை வாய்ந்தவர்.

பாண்டிநாட்டில் பரவியிருந்த சமண சமயத்தை, திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் திருவருளால் நீங்கச் செய்து சைவ சித்தாந்த சமய பரிபாலனஞ் செய்தற்குத் தமது நாயகருக்கு வழித்துணையாயிருந்து அவரோடு சிவபதமடைந்தார்.

சேக்கிழார் சுவாமிகள் இவ் வம்மையாரை "எங்கள் தெய்வம்" எனப் போற்றுகின்றார்.

சுரந்த திருமுலைக்கே துய்யசிவ ஞானஞ்
சுரந்துண்டார் பிள்ளையெனச் சொல்லச்—சுரந்த
தனமுடையாள் தென்பாண்டி மாதேவி தாழ்ந்த
மனமுடையா ளன்பிருந்த வாறு.

என்னும் திருக்களிற்றுப்படியார் பாசுரத்தால் இவ்வம்மையாரின் தலையன்பை அறியலாம். சிவப்பிரகாசர் இதனை விசித்திரமாகக் கற்பிக்கின்றனர்.

இலைபடர்ந்த பொய்கை யிடத்தழுதல் கண்டு
முலைசுரந்த வன்னையோ முன்னின்—சிலைவிளம்பக்
கொங்கை சுரந்தவருட் கோமகளோ சம்பந்தா
இங்குயர்ந்தா ளார்சொல் லெனக்கு.

# நேச நாயனார்

சாலியர்கோக் காம்பீலித் தலைவர் மேன்மை
தாவாத புகழ்நேசர் தஞ்சொ லென்றும்
கோலியவைந் தெழுத்தோதிச் சிந்தை யுன்னிக்
கொண்டபொரு ளன்பர்கொளக் கொடுத்து வாழ்வார்
சீலமிகுந் திருத்தொண்டர்க் குடையுங் கீளுந்
திருந்தியவெண் கோவணமுஞ் சேர வீந்து
பாலனைய வொளிநீற்றான் பாத மேத்திப்
பரலோக முழுதாண்ட பான்மை யாரே.

நேசநாயனார் காம்பீலி நகரத்திலே சாலியர்குலத்தில் பிறந்தார். சிவபத்தி யுடையவர். சிவபெருமான் திருவடிகளை மறவாது பஞ்சாட்சரத்தை என்றும் ஓதுகின்றவர்.

தமது மரபிற்கேற்ப அடியார்களுக்கு வேண்டிய உடையும் கீளும் கோவணமும் நெய்துகொடுத்து நாள்தோறும் அவர்களை வணங்கித் துதித்து முத்தி யடைந்தனர்.

“உடையொடு நல்ல கீளு மொப்பில்கோ வணமு நெய்து
விடையவ ரடியார் வந்து வேண்டுமா றீயு மாற்றா
லிடையறா தளித்து நாளு மவர்கழ லிறைஞ்சி யேத்தி
யடைவுறு நலத்த ராகி யரனடி நீழல் சேர்ந்தார்.”

—பெரிய புராணம்.

சிவனடியார்களுக்குக் கௌபீனம் முதலிய உடு புடைவைகளீதல் பெரும் புண்ணியம்.

நாற்ற மாமல ரோனெழி னாரணன்
போற்று சங்கர னன்பர்க்குப் பொங்கிழை
யாற்று கோவண மீந்தவ ராயிரந்
தேற்று கோடி யுகஞ்சிவ லோகரே.

—சிவபுண்ணியத் தெளிவு.

# கோச்செங்கட்சோழ நாயனார்

வெண்ணாவ லிறைகொளிநூற் பந்தர் செய்த
வியன்சிலம்பி யதுவழித்த வெள்ளா னைக்கை
யுண்ணுடிக் கடித்தவுட லொழியச் சோழ
னுயர்குலத்துச் சுபதேவன் கமலத் தோங்கும்
பெண்ணாகி யவள்வயிற்றில் வைகிச் செங்கட்
பெருமானுய்த் தென்னவராய்ப் பெருங்கோயில் பலவுங்
கண்ணார்வித் துயர்தில்லை மறையவர்க்கு மாறையுள்
கனகமய மாக்கியருள் கைக்கொண் டாரே.

"தலையிற் புறவினிறையளித்த சோழர்" என்றபடி, ஓர் புறாவின் உயிரைக் காக்கும்வண்ணம் அதைப் பிடித்த வேடனுக்குத் தன் உடலிலிருந்து அப் புறாவுக்குச் சரி எடையாகத் தசையை அரிந்துதவிய சிபிச்சக்கரவர்த்தி அரசாண்ட சோழதேசத்திலே காவிரி நதியிலுள்ள சந்திர தீர்த்தத்தின் அருகாமையிலுள்ள காட்டிலிருந்த வெண்ணாவல் மரத்தின்கீழ் விளங்கிய சிவலிங்கத்தை, அந்தக் காட்டிலிருந்த தவத்தின் மிக்கதோர் வெள்ளானை கண்டது. நாள்தோறும் தன் துதிக்கையினால் பூவும் நீருங்கொண்டு வந்து பூசைசெய்து வந்தது. அதனால் அத்தலம் திருவானைக்கா என்று அழைக்கப்படும் பெருமை வாய்ந்தது.

ஞானமுடைய ஓர் சிலந்தி அந்தச் சிவலிங்கத்தின் மேல் சருகு உதிராவண்ணம் தன் வாய் நூலினால் மேற்கட்டி செய்தது. சிவலிங்கத்தை வணங்கவந்த யானையானது அம் மேற்கட்டி அனுசிதம் என்றெண்ணி அந்த வலையைச் சிதைத்துவிட்டது. யானை தன் கையை வீசியதனால் மேற்கட்டி சிதைந்ததெனச் சிலந்தி நினைத்து மறுபடியும் அதைக் கட்டியது. மறுநாள் அதையும் யானை சிதைத்து விட்டது. சிலந்தி தான் சிவபெருமான்மீது சருகு உதிரா வண்ணம் வருந்திக் கட்டிய நூல் வலயத்தை யானை அழிக்கலாமோ எனக் கோபங்கொண்டு வெள்ளானையினது துதிக்கையினுள்ளே புகுந்து கடித்தது. வெள்ளானை வேகமாகக் கையைப் பூமியில் மோதி இறந்தது. அதன் கையுள்ளே இருந்த சிலந்தியும் உயிர் நீங்கியது.

சிவபெருமான் யானைக்கு வரம் கொடுத்தார். சிலந்தியைச் சோழராசாவுக்குப் பிள்ளையாகப் பிறக்கும்படி அனுக்கிரகஞ் செய்தார்.

அந்நாளில் புத்திரப்பேற்றைவேண்டி அம்பலக்கூத்தனை வணங்கிய சுபதேவன் என்னுஞ் சோழராசனுடைய தேவி யாகிய கமலவதியார் திருவயிற்றில், சிறந்த திருத்தொண்டு செய்த சிலந்தியானது குழந்தையாக வந்து தங்கியது.

கமலவதியாருக்கு மகவு பிறக்கப்போகும் வேளையில் சோதிடர் 'அப்பிள்ளை இன்னுமொரு நாழிகைசென்று பிறக்குமேல் புவனம் மூன்றையும் அரசுபுரியும்' என்று சொன்னார்கள். அதுகேட்ட கமலவதி, 'என் பிள்ளை ஒரு நாழிகை கழித்துப் பிறக்கும்படி என்னைத் தலை கீழாகத் தூக்கிக் கட்டி வையுங்கள்' என்றாள்.

"கழையார் தோளி கமலவதி தன்பாற் கருப்ப நாணிரம்பி
விழைவார் மகவு பெறவடுத்த வேலை யதனிற் காலமுணர்
பழையா ரொருநா ழிகைகழித்துப் பிறக்கு மேலிப் பசுங்குழவி
யுழையார் புவன மொருமூன்று மளிக்கு மென்ன வொள்ளிழை
[யார்"

"பிறவா தொருநா ழிகைகழித்தென் பிள்ளை பிறக்கும் பரிசென்கா
லுறவார்த் தெடுத்துத் தூக்குமென வுற்ற செயன்மற் றதுமுற்றி
யறவா ணர்கள்சொல் லியகால மணையப் பிணிவிட் டருமணியை
யிறவா தொழிவாள் பெற்றெடுத்தென் கோச்செங் கண்ண
[னோவென்றாள்."

—பெரியபுராணம்.

"நன்முகுர்த்தம் வருமளவு நளிமைந்தன் பிறவாமை
யென்முயன்று மெனவரச னினைகின்ற செயல்கேளா
வன்மதியிற் கமலவதி மற்றென்னைத் தலைகீழா
வெண்மணிநூ புரத்தாளின் யாத்தினித்தூக் குகவென்றாள்"

—திருவானைக்காப் புராணம்.

கமலவதி விரும்பியபடி கட்டித் தூக்கிவிட்டுச் சோதிடர் சொன்ன காலம் வருமளவில் கட்டை நீக்கி விட்டார்கள். கமலவதி இறவாது மகவைப்பெற்றுக் கண்ணால் பார்க்கும்வரையும் இருந்தாள். பிள்ளையைக் கண்டவுடன், "இறவாதொழிவாள் பெற்றெடுத்தென் கோச்செங்கண்ணனே" என்றாள். குழந்தை பிறந்ததும் தேவி சிவபதமடைந்தாள். சுபதேவன் அப்பிள்ளையை வளர்த்து அதற்கு அரசுரிமை சூட்டித் தான் தவஞ்செய்து இறைவர் திருவடியடைந்தான்.

கோச்செங்கட்சோழ நாயனார் சிவபெருமான் திருவருளினால் முற்பிறவியில் சிலந்தியாயிருந்து சிவதொண்டு செய்த காரணத்தினால் சோழராசனாகப் பிறந்ததை உணர்ந்தார். சிவலிங்கப் பெருமான்மீது சருகு உதிரா வண்ணம் நூலினால் மேல் விமானம் செய்த தொண்டினால் அரசனாகப் பிறப்பேனாகில், விசேட திருத்தொண்டுகள் செய்தால் முத்தி கைகூடும் என்று எண்ணி சிவாலயங்கள் பல கட்டுவித்துப் பரிபாலனம் செய்துவந்தார்.

" கோதை வேலான் கோச்செங்கட் சோழன் முனிக் குவலயத்தி
லாதி மூர்த்தி யருளான்முன் னறிந்து பிறந்து மண்ணாள்வான்
பூத நாதன் றான்மகிழ்ந்து பொருந்தும் பெருந்தன் சிவாலயங்கள்
காத லோடும் பலவெடுக்குந் தொண்டு புரியுங் கடன்பூண்டார்."

—பெரியபுராணம்.

தாம் சிலந்தியாயிருந்து பூசித்த திருவானைக்காவிலுள்ள வெண்ணாவலையுள்ளமைத்துச் சிவபெருமானுக்குத் திருக்கோயில் கட்டுவித்தார். மந்திரிகளையேவிச் சோழமண்டலத்தில் வேறு பல சிவாலயங்களைக் கட்டுவித்தார். அக்கோயில்கள்தோறும் அமுது படி முதலிய நித்திய நிபந்தங்கள் நடைபெறும் வண்ணம் அமைத்தார். சிதம்பரத்தில் தில்லைவாழந்தணருக்குத் திருமாளிகைகள் கட்டுவித்தார். பின்னும் பல திருத்தொண்டுகள் செய்து பூவலயம் பொதுநீக்கி யாண்டருளிச் சபாநாயகரது திருவடிநிழலை யடைந்தார்.

இந் நாயனார் சிலந்திப் பூச்சியாயிருந்து செய்த தொண்டு காரணமாகச் சோழராசனாகப் பிறந்தார் என்பதைத் தேவாரத்தில் பல இடங்களிற் சிறப்பிக்கப் பட்டுள்ளது. அவற்றுள் சில:—

" தெருண்ட வாயிடை நூல்கொண்டு சிலந்தி
சித்திரப் பந்தர் சிக்கென வியற்றச்
சுருண்ட செஞ்சடை யாயது தன்னைச்
சோழ னாக்கிய தொடர்ச்சிகண் டடியேன்
புரண்டு வீழ்ந்துநின் பொன்மலர்ப் பாதம்
போற்றி போற்றியென் றன்பொடு புலம்பி
அருண்டென் மேல்வினைக் கஞ்சிவந் தடைந்தே
னவ டுதுறை யாதியெம் மானே.

—சுந்தரர்.

செங்கட் பெயர்கொண் டவன்செம் பியர்கோன்
அங்கட் கருணை பெரிதா யவனே
வெங்கண் விடையா யெம்வெறு வலுளாய்
அங்கத் தயர்வா யின ளாயிழையே. —சம்பந்தர்

# திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனர்

பிறங்கெருக்கத் தம்புலியூர் வாழும் பேரியாழ்
பேணுதிரு நீலகண்டப் பெரும்பாண ஞர்சீர்
நிறந்தருசெம் பொற்பலகை யால வாயி
னிமலன்பாற் பெற்றுரூர் நேர்ந்து சிவன்வாயி
றிறந்தருளும் வடதிசையே சேர்ந்து போற்றித்
திருஞான சம்பந்தர் திருத்தாள் வாழ்த்தி
யறந்திகழுந் திருப்பதிகம் யாழி லேற்றி
யாசிறிருப் பெருமணஞ்சேர்ந் தருள்பெற் றுரே.

இவர் திருவெருக்கம்புலியூரிற் பிறந்து சிவபெருமானுடைய புகழை யாழிலமைத்துப் பாடிவருவார். சோழ நாட்டிலுள்ள பல தலங்களையும் வணங்கியபின் மதுரைக்குப் போய்த் திருவாலவாய் வாயிலையடைந்து சந்நிதானத்தில் நின்று யாழ் வாசித்தார்.

"திரிபுர மெரித்த வாறுந் தேர்மிசை நின்ற வாறுங்
கரியினை யுரித்த வாறுங் காமனைக் காய்ந்த வாறு
மரியயற் கரிய வாறு மடியவர்க் கெளிய வாறும்
பரிவினற் பாடக் கேட்டுப் பரமனு ரருளி னலே."
—பெரிய புராணம்.

அன்றிரவு சோமசுந்தரக்கடவுள் அடியார்களுக்குக் கனவில்தோன்றிக் கட்டளையிட்டபடி அழைத்துச்சென்று திருமுன்பே விட்டனர். அங்கிருந்து யாழ் வாசிக்கவும், அவருக்குப் பொற்பலகை யிடுமாறு அசரீரி யுரைத்தது. அடியார்கள் அங்ஙனமே பொற்பலகையிட்டனர். திருநீலகண்ட யாழ்ப்பாணர் பொற்பலகையிலேறி யாழ் வாசித்தார்.

அங்கிருந்து திருவாரூர் சென்று வணங்கித் திருவருள் பெற்றுச் சீர்காழிக்குப்போய்த் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளைப் பணிந்து, அவர் பாடுந் திருப்பதிகங்களை யாழிலிட்டு வாசிக்கும் அருளைப்பெற்று அவரைப் பிரியா திருந்து அவருடைய திருமணத்தைத் தரிசித்து அவருடன் முத்தியடைந்தார்.

சிவபெருமானை யாழிலிட்டு வாசித்துத் துதிப்பது பெரும் புண்ணியமென்பது ஆனாய நாயனார் சரித்திரத்தாலறியலாம்.

---

# சடைய நாயனார்

சங்கையிலா வரன்மறையோர் நாவலூர் வாழ்
　　தவராதிபர் தம்பிரான் றோழ ராய
வெங்கள்பிரான் றவநெறிக்கோ ரிலக்கு வாய்த்த
　　விசைஞானி யார்தனய ரெண்ணார் சிங்க
மங்கையர்க டொழும்பரவை மணவாள நம்பி
　　வந்துதிக்க மாதவங்கள் வருந்திச் செய்தார்
வெங்கணரா விளங்குமிளம் பிறைசேர் சென்னி
　　விடையினா ரருள்சேர்ந்த சடைய னாரே.

இவர் திருநாவலூரில் வாழ்ந்தவர். ஆதிசைவப் பிராமண குலத்தினர். ஆன்மாக்கள் மெய்ஞ்ஞானத்தைப் பெற்றுய்யும்பொருட்டுத் திருக்கயிலாய மலையிலிருந்து பூவுலகத்துக்கு எழுந்தருளிய சுந்தரமூர்த்தி சுவாமிகளைப் புத்திரனாகப்பெற்ற பெரும்பேற்றை யுடையவர்.

---

# இசைஞானியார்

நாவற் றிருப்பதிக்கோர் செல்வச் சைவ
　　நாயகமாஞ் சடையனார் நயந்த வின்பப்
பூவைக் குலமடந்தை பொற்பார் கொம்பு
　　புனிதமிகு நீறணிந்து போற்றி செய்தே
யாவிற் றிகழ்தலைவன் வலிய வாண்ட
　　வாரூர ரவதரிக்க வருந்தவங்கள் புரிந்தார்
யாவர்க்கு மெட்டாத விசைந்த வின்ப
　　விசைஞானி யெனஞான மெளிதா மன்றே.

இவ்வம்மையார் சடைய் நாயனாரது இல்வாழ்க்கைத் துணைவி. கற்புக்கு அரசி. சிவபெருமானால் வலிய வந்து ஆட்கொள்ளப்பட்ட சுந்தரமூர்த்தி சுவாமிகளைப் புத்திரனாகப்பெற பெருந்தவம் புரிந்தவர். இப்பிராட்டியார் பெருமை இவ்வளவென்று சொல்லமுடியுமோ? முடியாது.

---

# வெள்ளானைச் சருக்கம்

*சுந்தரமூர்த்தி நாயனாரைக் காப்பியத் தலைவராக வைத்துச் சேக்கிழார்பெருமான் பெரியபுராணம் என வழங்கும் திருத்தொண்டர் புராணத்தைப் பாடியருளினர். சுந்தமூர்த்தி நாயனார் சரிதையைக் காப்பியத்தின் முதலில் தடுத்தாட்கொண்ட புராணத்திலும், இடையில் ஏயர்கோன் கலிக்காம நாயனார் சேரமான்பெருமாணாயனார் புராணங்களிலும், கடைசியில் வெள்ளானைச் சருக்கத்திலும் வைத்துப் பாடியருளினர் சேக்கிழார் பெருமான். இந்தச் சருக்கத்தில் சுந்தரமூர்த்தி நாயனார் வெள்ளையானையின்மேல் தமது தோழரான சேரர்பெருமானுடன் திருக்கைலாயம் எழுந்தருளிய வரலாறு கூறப்படும். இந்த வரலாறு சுந்தரமூர்த்தி நாயனார் சரிதையில் முன்னரே எழுதப்பட்டுளது.*

*வேதம் ஓதும்போது பிரணவத்தை முதல் இடை கடையில் வைத்து ஓதுதல் மரபு. சேக்கிழார் பெருமானுக்கு நடராச வள்ளலார் "உலகெலாம்" என்று அடியெடுத்துக் கொடுத்தருளியவாறு, முதலாகிய மறைமொழியை "உலகெலா முணர்ந்தோதற் கரியவன்" எனப் பெரிய புராணத்தின் முதலிலும், "ஐந்தெழுத்தோதியேறினார் உய்ய உலகெலாம்" என இடையிலும், (திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் புராணம் 216-ம் பாசுரம்.)*

*"மன்று ளாரடி யாரவர் வான்புகழ்*
*நின்ற தெங்கும் நிலவி யுலகெலாம்"*

*என இறுதியிலும் வைத்தருளினர்.*

*திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் திருவாய்மலர்ந்தருளிய "தோடுடைய செவியன்" என வரும் திருப்பதிகத்தை முதலிலும், "நிலவி யுலகெலாம்" என்று முடியும் பெரிய புராணத்தை இறுதியாயும் கொண்டுளது தமிழ்வேதம். ஓங்காரத்தில் தொடங்கி மகரத்தில் முடிவாகிறது. அதாவது, "ஓம்" என்ற பிரணவ வடிவாய்ப் பன்னிரண்டு திருமுறைகளும் திகழ்கின்றன என்பதாம்.*

## திருச்சிற்றம்பலம்

உலகெ லாமுணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்.

சோதி முத்தின் சிவிகைசூழ் வந்துபார்
மீது தாழ்ந்துவெண் ணீற்றொளி போற்றிநின்(று
ஆதி யார்அருள் ஆதலின் ஐந்தெழுத்(து)
ஓதி யேறினார் உய்ய உலகெலாம்.

என்று மின்பம் பெருகு மியல்பினால்
ஒன்று காதலித் துள்ளமு மோங்கிட
மன்று ளாரடி யாரவர் வான்புகழ்
நின்ற தெங்கும் நிலவி யுலகெலாம்.

திருச்சிற்றம்பலம்.

திருத்தொண்டர் புராணச் சுருக்கம் முற்றுப்பெற்றது.

அனுபந்தம்

# மாணிக்கவாசக சுவாமிகள்

செய்யதிரு வாதவூர் வந்தருளி யமைச்சரெனச் சிறந்து நீடு
வையமிசை வழுதிநீதி கொண்டரனைத் குருந்தடியில் வணங்கி ஞால
முய்யவருட் பணியாற்றி நரிபரியாச் செய்துநதி யுடைப்பி லெங்க
ளையன்முடி மிசையுவந்து மண்சுமக்க வன்பினுரு வாயி னாரே.

எங்குமா கியவழகன் மேனிபிரம் படிதாங்க வேங்கிப் புத்தர்
மங்கவா ரருள்செய்து மூகைபே சிடவழங்கி மணிமன் றூடு
மெங்கணுயகன்கரத்தா லேடுமெழுத் தாணியுங்கொண் டெழுதப்பாடி
அங்கண்மே வியசோதி தன்னிலிரண் டறக்கூடி யமர்ந்திட் டாரே.

பாண்டிவளநாட்டில் மேன்மையிற் சிறந்த திருவாதவூரிலே ஆதிசைவ மரபிலே மாணிக்கவாசக சுவாமிகள் திருவவதாரஞ் செய்தார். அவர் தந்தையார் பெயர் சம்புபாதாசிரிதர். தாயார் பெயர் சிவஞானவதியார். அவர் பிள்ளைத்திருநாமம் திருவாதவூரர். தவமெனும் பெரிய வித்திலே முளைத்துப் பிறவி என்னும் சேற்றினின்று நீங்கித் திருவருள் என்னும் குருத்து வளர்ந்து உயிருக்கு உறுதி பயக்காத செயல்களாகிய களைகளினின்று நீங்கி ஒருகாலும் அறியாத பேரின்பம் விளையும் தெய்வ நெற்பயிரைப்போல வளர்ந்தனர்.

> தவமெனும் பெரிய வித்துட் டங்கியே யங்கு ரித்துப்
> பவமெனும் பங்க நீங்கிப் பயிலருட் குருத்துண் டாகி
> யவமெனுங் களைக ணீங்கி யாக்குவோ னருளா லுண்மைச்
> சிவமெனும் விளைவுண் டாக வளர்ந்தது தெய்வச் சாலி
>
> —திருவாதவூரடிகள் புராணம்.

பிறவிதீரச் சிவஞானமாகிய அமுதை உண்பவராகிய வாதவூரருக்குத் தேன் சர்க்கரை முக்கனி பசுவின்பால் முதலியவைகளை அன்னத்தோடு கலந்து நல்ல தினத்தில் ஊட்டினர். குடுமி வைத்தல், கல்வி தொடங்குதல், பூணூலணிதல் முதலிய சடங்குகளை மங்கல நாட்களில் அப்பிள்ளைக்குப் பெற்றோர் செய்துவைத்தனர். இறைவர்

திருவருளினால் திருவாதவூரர் எல்லாக் கலைகளையும் பதினாறு வயதில் கற்றுத் தேர்ந்தார். திருவாதவூராின் நற்குண நற்செய்கைகளைப் பாண்டியமன்னன் கேட்டு அவரை வருவித்து உரிமைகளை வழங்கி உபசரித்து அவரோடு கொண்டாடி நண்பனாயினான். சில நாட்களில் பாண்டியமன்னன் அவருடைய ஆற்றலை நன்றாய் அறிந்து அவரைத் தனது முதன் மந்திரியாக்கித் தென்னவன் பிரம ராயன்* என்னும் பட்டப்பெயரை மற்ற அரசர்கள் மதிக்கு மாறு அவருக்கு நல்கினான். திருவாதவூரடிகள் நவரத்தின பரணம், பீதாம்பரம், மதிக்குடை, சிவிகை, சாமரம், யானை முதலியவைகளைப் பாண்டியனிடம் சன்மானமாகப் பெற்றார். பெரிய இன்பத்தோடும் செல்வத்தோடும் அரசனது படைத்தலைவர் சூழப் பூரணசந்திரனைப்போல் விளங்கினார். பாண்டியராசனும் குடிகளும் மகிழும் வண்ணம் அறஞ்செய்வோரைக் காக்கும் கவசமும் கண்ணு மாகவும் அதற்கு மாறானவருக்குத் தண்டனை செய்த லால் இடும்பையாகவும் ஏழைகளுக்குத் தாயைப்போல அன்பு செய்து அரசன் நீதியை நடுநிலைமையோடு நடத்தி வந்தார்.

கடவுள் உயிர் உலகம் என்னும் முப்பொருள்களின் இயல்பைச் சந்தேக விபரீதமற உணர்ந்து இப் பிரபஞ்சப் பற்றைவிட்டு நீங்குமாறு ஞானாசிரியரைத் தேடினார். அகத்துறவு பூண்டிருந்தும் பாண்டிய மன்னனது இராச நீதியை நடத்திவந்தனர்.

> தீத்திற வினை யினாலே சிறைப்படு முயிரை யெல்லாம்
> பார்த்தன ருலக வாழ்விற் பயனிலை யென்று தேர்ந்து
> கூத்தினர் தன்மை வேறு கோலம்வே றாகு மாபோ
> னீத்தனர் மனத்தின் முன்போ னிகழ்த்தினர் வழுதி நீதி.

—திருவாதவூரடிகள் புராணம்.

---

* தென்னவன் பிரமராயன் : அறிவுக்கு அரசன்

| | | |
|---|---|---|
| தென்னவன் | — | பாண்டியன் |
| பிரமம் | — | அறிவு |
| ராயன் | — | அரசன் |

இந்நாளில் அரிமர்த்தன் பாண்டியன் மந்திரிமார் அந்தணர் புலவர் சூழத் தனது சிங்காசனத்தில் கொலுவீற்றிருக்கும்போது சில தூதுவர் வந்து அரசனை வணங்கி ஆரியதேசத்து வணிகர் சோழதேசத்துக் கடற்கரையில் நல்ல சாதிக் குதிரைகளைக் கொண்டுவந்திருப்பதைத் தாங்கள் நேரே கண்டதாகச் சொன்னார்கள். அதனைக் கேட்ட அரசன் மகிழ்ந்து திருவாதவூரடிகளை நோக்கி அங்கே சென்று நல்ல குதிரைகளை வாங்கிவரும்படி தன்து திரவியசாலையில் புகுந்து அளவில்லாத பொன்னை எடுத்துக் கொடுத்தான். அந்தப் பொன்னைப் பெற்றுக்கொண்டு நல்ல சுபதினத்தில் திருவாலவாய் சென்று இறைவரை வணங்கி அனுமதிபெற்று முத்துச்சிவிகையின்மீது சேனை வீரர் சூழ மதுரைமாநகரைக் கடந்து, நாடுகளையும், காடுகளையும், மலைகளையும் தாண்டி, தெய்வ வழி செல்லும் திருவாதவூரடிகள் திருப்பெருந்துறை என்னும் பதியை வந்தடைந்தார். அப்பதியின் பக்கத்தில் புன்னை, சந்தனம், சண்பகம், நாரத்தை, செருந்தி, கோங்கு, பாதிரி, பலா, கமுகு, தென்னை, குரா, முருக்கு, மகிழ் முதலிய மரங்கள் நெருங்கிய பூஞ்சோலையில், அன்னம், மயில், கோகிலம் முதலிய பட்சிகள் நெருங்கியிருந்தன. மந்திகள் மரங்களின் கிளைகளிலிருந்து பாயும்தோறும் வண்டுகள் எழுந்து அடியார் தோத்திரம்போலப் பாடின. அந்தச் சோலையின் மலர்களிலிருந்து அடியார் கண்ணீர் சொரிவதைப்போல தேன் துளிகள் விழுந்தன. பூக்கொத்துகள் நிறைந்த கொம்பர்கள் இறைவர்முன் நின்றுருகும் அன்பரைப் போல் தாழ்ந்து நின்றன. இவ் வனப்புள்ள சோலையின் மத்தியில், ஓர் அழகிய குருந்தமரம் நின்றது. இறைவர் திருவாதவூரடிகளின் பக்குவத்தை உணர்ந்து அவரை ஆட்கொள்ள அந்தக் குருந்தமரத்தின்கண்ணே தொண்டர்கள் சூழத் திருவாதவூரடிகளைப்போல ஓர் மானுட வடிவம் தாங்கி எழுந்தருளித் திருவாதவூரடிகளது பந்தமறும் காலத்தை எதிர்பார்த்திருந்தார். திருவாதவூரடிகளை இனிமேல் பற்றுநிற்கும் பாசம்போல் அங்குள்ள காயா மரங்கள் கரிய பூக்களை மலர்ந்தன. அடிகளுக்கு

இனிமேல் பிறப்பில்லையெனக் கையினாற் காட்டுவார்போலக் காந்தட்செடிகள் மலர்ந்து அசைந்தன. மன்மதன் பிறரை வருத்தும் பாவத்தை நீக்கியருளப் பற்காட்டி நிற்பவர் போல் முல்லைச் செடிகள் மலர்ந்தன. எங்கும் நிறைந் திருக்கும் இறைவரது திருக்கண் நோக்கினால் திருவாதவூ ரடிகளது பிறவி இவ்வளவில் ஒழியுமென்று கருதி உயர்ந்த மரங்கள் தங்கள் நிலையை அறிந்து இரங்கினாற்போல் மலர் களாகிய கண்களிலிருந்து, தேனாகிய கண்ணீரைச் சொரிந் தன. இவ் வனப்புள்ள பூஞ்சோலையானது இறைவர் திரு வாதவூரடிகளுக்கு அருள்செய்யும் இடமெனத் தேவர்கள் பூமலர் சொரிந்தாற்போலப் பூக்களைச் சொரிந்தது. திரு வாதவூரடிகளுக்குப் பசி தாகம் தீர்க்க எதிரேற்று நிற்கும் அடியார்களைப்போலத் தாழைகள் நீறணிந்து சோறு ஏந்தி நின்றன. தடாகங்களிலுள்ள செந்தாமரைகள் பெருந் தபோதனர்போல் மலர்ந்தன. பிறர் நயம் கருதும் நல்ல அறிவினர்போலக் கரும்புகள் வளர்ந்தன. குலமாதர் களின் முகத்தை அவர் காதலர் நாடில் அம்மாதர்களின் பயிர்ப்பு நிலைபோலச் செந்நெல் விளைந்து தலை வணங்கின. திருவாதவூரடிகள் சோலையைக் கண்டு மகிழ்ந்தார். நெஞ்சு நெக்குருகினார். சோலையின் பாங்கர் வந்தபோது தொண்டர்கள் சிவாகமம் ஓதும் ஒலியைக் கேட்டனர். ஏவலாளர்களை நோக்கி, "இவ்வொலி யாதென்று அறிந்து வாருங்கள்" என்று அனுப்பினார். அவர்கள் போய் வந்து "குருந்தமர நிழலில் பத்தர்கள் சூழச் சிவபெருமா னுக்கு ஒப்பான ஒரு சிவயோகியார் வீற்றிருக்கின்றார்" என்றனர். அதைக் கேட்டதும் திருவாதவூரடிகள் பெரு மகிழ்வுற்றார். அச் சோலையினுட் சென்றார். சிவிகையி னின்றும் இறங்கிப் பரமாசாரியரது தெய்வசபையைக் கண்குளிரக் கண்டார். மண்டிய பேரன்புடன் பரமாசாரி யரை வணங்கினார். இறைவரே தம்மை அடிமைகொள்ள இத்திருமேனி கொண்டனரென்று எண்ணினார். முக மெலாம் கண்ணீர் சொரிய "என்னை இன்று அடிமை கொள்வாய்" என்று வணங்கினார்.

மின்னினு நிலைமை யில்லா விழுப்பொருள் யாவும் வேண்டேன்
உன்னடி யடைந்து நாயே னுறுபவ மொழித்தல் வேண்டும்
என்னையின் றடிமைக் கொள்வா யெம்முயிர்க் கிறைவா வென்று
முன்னுற வணங்கி நின்றார் முகமெலாம் கண்ணீர் வார.

—திருவாதவூரடிகள் புராணம்.

இறைவர் திருவாதவூரடிகளை நோக்கி, "நீ முன் பண்ணிய தவத்தினாலே இன்று உன்னை அடிமைகொள்ள இத்தலத்தில் வந்தோம்" என்றருளினார். அடிகளின் பாசம் நீங்கப் பரிந்து அருட்பார்வை செய்தார். பரமாசாரியர் திருவாதவூரடிகளுக்கு ஐந்தெழுத்தை உபதேசித்தருளித் தமது திருவடிகளை அவர் சிரசின்மேல் வைத்தருளினார்.

"எவர்க்குமெய்ஞ் ஞான மாமஞ் செழுத்தையு முணர்த்த வேண்டி
யவத்தொழி லகற்றி யாளுஞ் சிவத்தைமுன் னாக மாறித்
தவப்பெரு வடிவங் கொண்டார் தண்டமிழ் பாடு மன்பர்
செவிப்புலன் வழியே சிந்தை யுறத்திரு வாய்ம லர்ந்தார்."

—திருவாதவூரடிகள் புராணம்.

எவ்வுயிர்க்கும் மெய்ஞ்ஞானத்தைக் கொடுப்பது ஐந்தெழுத்து. சிவயநம என்னும் ஐந்தெழுத்தில் சிகரம் சிவத்தையும், வகரம் அருட்சத்தியையும், யகரம் ஆன்மாவையும், நகரம் திரோதாயி சத்தியையும், மகரம் மலத்தையும் குறிக்கும் எனச் சித்தாந்த நூல்கள் கூறும். திரோதாயிசத்தி ஆன்மாவைப் போகத்திற் செலுத்துமென்பர். யகரமாகிய ஆன்மாவுக்கு இருபக்கத்திலும் அருட்சத்தியாகிய வகரம் இருக்கும் வண்ணமும், சிகரத்தை முதலிலும், கடைசியிலும் வைத்து உபதேசம் செய்தனர். அதாவது நகரத்தையும், மகரத்தையும் நீக்கி அந்த இடங்களில் முறையே வகரத்தையும் சிகரத்தையும் வைத்தனர். இதை இருதலை மாணிக்கமென்பர். இந்த முறையில் ஆன்மா சத்தியோடு சேர்ந்து பின்னர்ச் சிவத்தோடு சேரும். பரம அஞ்செழுத்தும் ஒன்றும் பரா பரா என்பதும் இதுவே.

"மாயநட் போரையு மாயா மலமெனு மாதரையும்
வீய விட்டோட்டி வெளியே புறப்பட்டு மெய்யருளாந்
தாயுடன் சென்றுபின் றாதையைக் கூடிப்பின் றாயைமறந்
தேயுமதே நிட்டையென்றா னெழிற்கச்சி யேகம்பனே."

எனப் பட்டினத்தடிகள் கூறியதும் இதுவே. மாயநட்போர் என்றது மகரத்தையும், மாயாமல மெனுமாதர் என்றது நகரத்தையும் குறிக்கும்.

சிவபெருமான் மானுடச்சட்டை சாத்திவந்து தமக்கு அருள் புரிந்தார் என்பதைத் திருவாதவூரடிகள் திருவாசகத்தில் பல இடங்களில் பாடியருளினார்.

திருமாலும் பன்றியாய்ச் சென்றுணராத் திருவடியை
உருநா மறியவோ ரந்தணனா யாண்டுகொண்டான்
ஒருநாம மோருருவம் ஒன்றுமில்லாற் காயிரந்
திருநாமம் பாடிநாந் தெள்ளேணங் கொட்டாமே

—தெள்ளேணம்.

பத்தர் சூழப் பராபரன் பாரில் வந்து பார்ப்பானெனச்
சித்தர் சூழச் சிவபிரான் தில்லை மூதூர் நடஞ்செய்வான்
எத்தனாகிவந் தில்புகுந் தெமையாளுங் கொண்டெம் பணிகொள்வான்
வைத்த மாமலர்ச் சேவடிக்கணஞ் சென்னி மன்னி மலருமே.

—சென்னிப்பத்து.

கருணையின் பெருமை கண்டேன் காண்க
புவனியிற் சேவடி தீண்டினன் காண்க
சிவனென யானுந் தேறினன் காண்க
அவனெனை யாட்கொண் டருளினன் காண்க.

—திருவண்டப்பகுதி. 60-63.

இறைவர் திருப்பெருந்துறையில் குருந்தமரத்தின்கீழ் எழுந்தருளித் தமக்கு அப் பாசத்தை நீக்கிச் சிவப்பேறுண்டாகச் செய்தருளினார் என்று திருவாசகத்தில் அருட்பத்தின் ஒவ்வொரு திருப்பாசுரத்தினும் கூறுகின்றார். தாம் ஓர் ஞானாசாரியாரைத் தேடியதை இப்பதிகத்தின் இரண்டாம் அடியில் கூறியதும் ஓர் அகச்சான்றாகும்.

"நிருத்தனே நிமலா நீற்றனே நெற்றிக்
கண்ணனே விண்ணுளோர் பிரானே
ஒருத்தனே யுன்னை யோலமிட் டலறி
யுலகெலாந் தேடியுங் காணேன்
திருத்தமாம் பொய்கைத் திருப்பெருந் துறையில்
செழுமலர்க் குருந்தமே வியசீர்
அருத்தனே யடியே னுதரித் தழைத்தால்
அதெந்துவே யென்றரு ளாயே."

—அருட்பத்து.

பரமாசாரியர் திருவாதவூரடிகளுக்குப் பதிபசு பாசம் என்னும் முப்பொருளின் இயல்பையும், சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய நான்கு பாதங்களின் தன்மையை

யும் உபதேசித்தனர். அப்போது திருவாதவூரடிகள் திருப்பெரு ஞானவடிவமாகித் தமது உடல் பொருள் ஆவி மூன்றையும் இறைவரிடம் ஒப்படைத்து விண்ணப்பம் செய்து வணங்கினார். பாண்டியமன்னன், கொடுத்த பொருள்களை எல்லாம் தமது பரமாசாரியர் முன்புவைத்து வணங்கினார். இறைவர் கட்டளைப்படி அந்தத் திரவியம் முழுவதையும் திருப்பணிக்கும் அடியவர்களுக்கும் வறியவர்களுக்கும் உதவினார். மந்திரிக் கோலத்தோடு வந்த அடிகள் திருநீறுபூசப் பெற்ற திருமேனியோடு கூடிய கோவண வுடையரானார். ஆனந்தக் கண்ணீர் பொழியும் கண்களை யுடைய கோலங்கொண்டு சிவன் முத்தராய் விளங்கினார். தமது பரமாசாரியரை அன்போடு பார்த்து நிற்பர்; அழுவர்; கைகளைக் குவித்து வணங்குவர்; கீழே விழுந்து வணங்குவர்; பின்னெழும்புவர்; முன்காட்டிப் பின்னுக்கு நடப்பர்; பிரிவாற்றாது மீண்டும் வருவர்; சிவஞான முதிர்ச்சியினால் இராப்பகலைப் பிராரதவராவர். பித்தர், பாலர், பிசாசர் கொள்கையுடையவரானார். அடிகளின் தோத்திரத்தைக் கேட்ட இறைவர் "உனக்கு மாணிக்கவாசகன்" என்னும்பெயர் தந்தோம் என்றனர். அடிகள் பசுகரணங் கெட்டுச் சிவகரணம் பெற்று நிலவினர்.

" அன்புடன் நோக்கி நிற்ப ரழுவர்கை தொழுவர் வீழ்வ
ரின்புற வெழுவர் பின்பா லேகுவ ரிரங்கி மீள்வர்
நன்பகல் கங்குல் காணார் ஞானநல் லறிவே கண்டு
கொன்புனை பித்தர் பாலர் பிசாசர்தங் கொள்கை யானார்.
—திருவாதவூரடிகள் புராணம்.

"பித்தென்னை யேற்றும் பிறப்பறுக்கும் பேச்சரிதாம்
அத்தமே யாக்குமவந் தென்மனத்தை—அத்தன்
பெருந்துறையா னாட்கொண்டு பேரருளால் நோக்கு
மருந்திறவாப் பேரின்பம் வந்து." —திருவெண்பா.

திருவாதவூரடிகள் தன் வசமற்றுத் தான் அற்றுச் சிவபெருமானது திருவருளில் வசப்பட்டு நின்றார். இவ்வுலகில் தமக்குச் சொந்தமான பொருள் ஒன்றுமில்லை என்று கண்டார். தம்மை இறைவரிடம் ஒப்படைத்தபோது தாம் குதிரை வாங்கக் கொண்டு வந்த பாண்டியனது பொருளையும் தமது பரமாசாரியரிடம் ஒப்

படைத்தல் முறையே. தமது முதல்வர் கட்டளைப்படி அத்திரவி யத்தை அடியார்களுக்கும், ஏழைகட்கும், திருப்பணிக்கும் கொடுத்தது முறையே. இது பாண்டியனைப் பின்னர் அடிமைகொள்ளும் வண்ணம் இறைவர் செய்த ஓர் திருவிளையாட்டாகும். அடிகள் செயல்கள் எல்லாம் சிவன் செயலென்றுணர்க.

திருவாதவூரடிகள் முக்த நிலையை அடைந்திருந்த போது அவருடன் சென்ற சேனுவீரர் அவரை வணங்கிப் பாண்டிய மன்னன் முனியாமுன்னம் குதிரைகளை வாங்குதற்கு அழைத்தார்கள். திருவாதவூரடிகள் அவர்களை நோக்கி,

"மையலா முணர்வின் மிக்கீர் யாவரூர் மாயா பேதப்
பொய்யெலா முரைத்தல் வேண்டாம் போமினி யகல வென்றார்"

சேனுவீரர் உடனே அவர் நிலைமையைக் கண்டு மனம் நொந்து பாண்டியனிடம் சென்று கூறும்போது, "பிரமராயர் திருப்பெருந்துறை சென்ற சமயத்தில் அங்கே பக்கத்திலுள்ள ஓர் பூஞ்சோலையில் குருந்தின்கீழ் அடியார் சூழ ஓர் பெரியார் இருந்தார். அவரைக் கண்டதும் மகிழ்ந்து வணங்கினார். அந்தப் பெரியவர் நமது தென்னவன் பிரமராயரை ஆட்கொண்டனர். அப்பெரியார் கட்டளைப்படியே திரவியங்களை எல்லாம் செலவழித்துவிட்டார். திருநீறும் கோவணமும் தரித்துக்கொண்டு ஒருவரோடும் பேசாது பித்தரானார் என்றார்கள். அரசன் அதைக் கேட்டதும் மிகுந்த கோபம்கொண்டு கடுநடைத்தூதரிடம் அவருக்கோர் ஓலையனுப்பி உடனே அழைத்து வரும்படி கட்டளையிட்டான். தூதுவர் திருப்பெருந்துறையை அடைந்து திருவாதவூரடிகளை வணங்கி அரசன் திருமுகத்தைக் காட்டினர். தமது பரமாசாரிய மூர்த்தியின் திருமுகத்தையல்லாது வேறொன்றையும் பார்க்க விருப்பமில்லாத திருவாதவூரடிகள் அந்த ஓலையை வாசிக்கும்படி சொன்னார். தூதரில் ஒருவன் அவ் வோலையை வருமாறு வாசித்தான்:—

தென்னவ னெழுது மோலை தென்னவன் பிரம ராய
னென்னுநம் மமைச்சர் காண்க வெல்லையி றனங்கொண் டேகிக்
கொன்னுறு பரிகொ ளாமற் கோவணங் கொண்டீ ரது
மன்னர்தங் கருமஞ் செய்வார் வண்மையென் றுவகை யுற்றேம்,

வையக மன்ன ராகி வாழ்தலின் மனைக டோறு
மெய்திய வுதரத் தீயா லிரப்பது பெருமை யென்று
மெய்தகத் தம்மை யாண்ட வேந்தரைப் பிழைத்து வேறு
செய்வது பலிக்கு மென்றுந் தேர்ந்தநூற் றுணிவுங் கண்டேம்.

மன்னரை யடைந்து வாழ்தல் வஞ்சகஞ் சுமிழு நாகந்
தன்னுடன் மருவி வாழுந் தன்மையென் றுணர்தி ராயிற்
றன்னுமிவ் வோலை காணும் பொழுதுநந் தூதர் தம்மோ
டிந்நகர் வருக மாற னெழுத்தென வியம்பி நின்றான்.

திருவாதவூரடிகள் புராணம்.

இந்த வாசகங் கேட்ட திருவாதவூரடிகள் தன்னை அடிமைகொண்ட சிவபெருமானுக்கும் சிவனடியாருக்கும் தான் அடிமையாக, அரசன் தான் எனக்கு அண்ணல் என்றும், தனக்கு யான் ஏதோ பிழை செய்தேன் என்றும் சொல்வதொக்குமோ? பாண்டியனுக்குப் பிழை செய்யவில்லை என்றும், சிவபெருமானுக்கு அடிமையாதலினால் இயமதூதர்தாமும் தம்மிடம் ஓலைகொண்டுவந்து கொடுக்க அஞ்சுவார் என்றும் எண்ணினார்.

தேவர்கோ வறியாத தேவ தேவன்
செழும்பொழில்கள் பயந்துகாத் தழிக்குமற்றை
மூவர்கோ னாய்நின்ற முதல்வன் மூர்த்தி
மூதாதை மாதாளும் பாகத் தெந்தை
யாவர்கோ னென்னையும்வந் தாண்டு கொண்டான்
யாமார்க்குங் குடியல்லோம் யாது மஞ்சோம்
மேவினோம் அவனடியா ரடியா ரோடும்
மேன்மேலுங் குடைந்தாடி யாடு வோமே.

—திருச்சதகம்.

தமது பரமாசாரியாரிடம் சென்று வணங்கிப் பாண்டியன் எழுதிய செய்தியை முறையிட்டனர்.

போயரன் றிருத்தா ளேத்திப் புண்ணிய வடிவே போற்றி
யாயிரஞ் சுடிகைப் பாம்பை யலரென முடித்தாய் போற்றி
மாயிரு ஞாலங் காக்கு மன்னவ னெழுது மோலைப்
பாயிர மிதுகே ளென்று மொழிந்தனர் பழுதி லாதார்.

திருவாதவூரடிகள் புராணம்.

பரமாசாரியர் அதனைக் கேட்டுப் புன்முறுவல் செய்து 'அறிவில்லாதவர்போல் நீ வருந்தவேண்டாம். ஆவணி,

பூரதத்து மூலநாளாகும் சுபதினத்தில் நாமே குதிரைகளை அரசனுக்குச் செலுத்தி வருவோம். இப்போது நீ தூதரோடு அரசனிடம் சென்று ஆவணிமூல நட்சத்திரமாகிய சுபதினத்தில் குதிரைகள் வருமென்றும், ஓலை அனுப்பியது கண்டு முன்னர் வந்தோம்'' என்றும் தெரிவிக்கும்படி கூறி, அரசனுக்கு உபகாரமாக விலை உயர்ந்த ஓர் மாணிக்கமணியையும் கொடுத்தருளினர். திருவாதவூரடிகள் இறைவரை வணங்கி மந்திரிக்கோலம்பூண்டு தூதுவரோடு மதுரை வந்து சேர்ந்தார். பாண்டியன் முன் சென்று சிவபெருமான் கொடுத்த மாணிக்கத்தைச் சன்மானம் செய்தனர். பாண்டியன் மனமகிழ்ந்து அவரை உபசரித்து ஆசனத்திருத்தினன். அப்பால் குதிரை கொள்ளப்போனபின் நடந்த செய்தியை வினவினன். அடிகள் அரசனை நோக்கி "உமது திரவியங்களைக் கொண்டு சென்று நல்ல குதிரைகளை வாங்கினேன். அவைகள் மதுரைமாநகரத்துக்குக் கொண்டு வருவதற்குப் பொருந்திய தினம் ஆவணிமூல நட்சத்திரம். அந்நாள் வரும்வரையும் திருப்பெருந்துறையில் இருந்தேன். இதற்கிடையில் நீர் மற்றவர்கள் சொல்லைக் கேட்டுக் கோபித்து எழுதின ஓலை கண்டதும் வந்தேன். குதிரைக் கூட்டங்கள் ஆவணிமூல நட்சத்திரநாளில் வரும்'' என்று விடைகொடுத்தார். அரசனும் அவரோடு இனிய மொழிகள் பேசி முன்போல் நட்புப்பாராட்டி அவரை மாளிகைக்கு அனுப்பினன். அடிகளும் தமது மாளிகைக்குப்போய் இருந்தார். குதிரைகள் வரும் என்று சொன்ன ஆவணி மூலநட்சத்திரத்திற்கு இரண்டு தினங்களுக்குமுன் திருப்பெருந்துறையிலேனும் அடுத்த ஊர்களிலேனும் குதிரைகள் இல்லை என்பதை அரசன் அறிந்து உடனே கோபங் கொண்டான். அடிகளை வருத்திக் குதிரை வாங்குவதற்குக் கொடுத்த பொருள்களை எல்லாம் வாங்கும்படி தண்டலாளருக்குக் கட்டளையிட்டான். தண்டலாளர் அரசன் கட்டளைப்படி திருவாதவூரடிகளைச் சிறைச்சாலையில் அடைத்தார்கள். திருவாதவூரடிகள் வருந்துவதைக் காண்பது பாவம் என்று கருதினாற்போல மேற்கடலில் சூரியன் தாழ்ந்தான். அடுத்தநாட் காலையில் தண்டலாளர் திருப்

பெருந்துறையில் அடியார்களுக்குக் கொடுத்த அரசனது பொருள்களை எல்லாங் கொடுக்கும்படி வெய்யிலில் நிறுத்தித் தண்டஞ் செய்தனர். அப்போது அடிகள் தம்மை ஆட்கொண்ட பரமாசாரியரைத் தியானஞ்செய்து 'நாயேன் படுந் துயரம் அறிந்திலையோ? மன்னனுக்கு நீரே குதிரைகளைக் கொடுப்பதாகச் சொன்னது பொய்யாகுமோ? இந்த உலக வாழ்க்கையை விட்டுத் தேவரீரை வந்தடைந்த என்னை மீளவும் பாண்டியனிடம் அனுப்பினீர்! ஆற்றுநீர் சமுத்திரத்திற் கலந்தபின் சமுத்திரநீராவதல்லது ஆற்றுநீர் என்று சொல்லுவதுண்டோ? அடியேனுக்கு இங்கு ஒருவர் துணையுமில்லை! தேவரீரது அடிமையை வெய்யிலில் நிறுத்தினால் அது உமக்குப் பெருமையாகுமா? உமக்கு அடிமையாகிய யான் துன்பத்தை யனுபவித்தால், இனிமேல் யார்தான் தேவரீருக்கு அடிமையாவர்? கடையவனாகிய நான் சொல்லுவது தேவரீரது திருவுளத்திற்கு ஏற்குமோ'? என்று போற்றினார்.

"பாரொடு விண்ணாய்ப் பரந்த எம்பரனே
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
சீரொடு பொலிவாய் சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
யாரொடு நோகே னார்க்கெடுத் துரைக்கே
னாண்டநீ யருளிலை யானால்
வார்கட லுலகில் வாழ்கிலேன் கண்டாய்
வருகவென் றருள்புரி யாயே"

—வாழாப்பத்து.

"வேண்டத் தக்க தறிவோய்நீ வேண்ட முழுதுந் தருவோய் நீ
வேண்டு மயன்மாற் கரியோய்நீ வேண்டி யென்னைப் பணிகொண்டாய்
வேண்டி நீயா தருள்செய்தா யானு மதுவே வேண்டி னல்லால்
வேண்டு பரிசொன் றுண்டென்னி லதுவு முன்றன் விருப்பன்றே."

அன்றே யென்ற னாவியு
முடலு முடைமை யெல்லாமுங்
குன்றே யனையா யென்னையாட்
கொண்ட போதே கொண்டிலையோ

வின்றே ரிடையீ றெனக்குண்டோ
வெண்டோள் முக்க ணெம்மானே
நன்றே செய்வாய் பிழைசெய்வாய்
நானோ விதற்கு நாயகமே.

—குழைத்த பத்து.

இறைவர் தமது அன்பருக்கு அருள்புரியும் பொருட்டுக் காட்டிலுள்ள நரிகளைக் குதிரைகளாகமாற்றித் தேவர்களைக் குதிரை வீரராகக்கொண்டு, தாம் ஓர் வனப்பு வாய்ந்த ஆரிய தேசத்துக் குதிரை வணிகர் வேடம்பூண்டு அவற்றை மதுரைக்குச் செலுத்தி வந்தனர். குதிரைக் கூட்டத்தைக் கண்டவர்கள் பாண்டிய மன்னனிடம் சென்று ஆரிய தேசத்துக் குதிரைகள் மதிராபுரிக்கு வந்தன என்று வணங்கிச் சொன்னார்கள். அரசன் மிகவும் மகிழ்ந்தான். திருவாதவூரடிகளைச் சிறைச்சாலையிலிருந்து நீக்கினான். குதிரைகளைப் பார்க்கவரும்படி அவரை அழைத்துச்சென்று மணிப் பந்தர் நிழலில் சேனைகள்சூழ இருந்தான். அப்போது குதிரைக் கூட்டங்கள் கடல் பரந்து வருதல்போல ஆவணி மூலநட்சத்திர தினத்திலே மதுரையம்பதியில் வந்து நிறைந்தன. உடைவாள், வேற்படை, வில், அம்பு முதலியவை அணிந்த வனப்புமிக்க குதிரைவீரர்களின் மத்தியில் அவர்கள் தலைவராகிய சோமசுந்தரக் கடவுள் அரைக்கச்சு, உடைவாள், பச்சை நீலம் முதலிய பல நிறங்களுள்ள மணிமாலைகளையும், பட்டுச் சட்டையும் தொப்பியும் ஆகிய இவற்றை அணிந்து ஒரு கரத்தில் சவுக்கும்கொண்டு ஓர் வெண்மையாகிய குதிரையின்மீது, குதிரையினிருபக்கங்களிலும் தொங்கக்கட்டிய மணிகளும், கச்சையில் கட்டிய மணிகளும் இன்னிசை யொலிப்ப, சாமரைகள் இடைக்கிடையொளி விளங்க, திருமுடியின்மீது கவித்த செழுங்குடை வயங்க ஆரிய தேசத்து மன்னனைப்போல வந்தருளினார். பாண்டியன் குதிரை வீரரின் பேரழகைக்கண்டு அதிசயித்தான். திருவாதவூரடிகள் தாம் எண்ணிய சிவப்பேற்றையும் குதிரைக் கூட்டத்தையும் தமக்குப் பரமாசாரியர் கொடுத்தருளினர் என்று மகிழ்ச்சியோடு வாளாநின்றார். இறைவருக்குப் பக்கங்களில் நின்ற குதிரை வீரர்கள் தங்கள்

வேல் படைவாள் முதலியவைகளை வீசி ஆர்ப்பரித்து விளையாட்டுப் போலிச்சண்டை செய்தனர். பாண்டியன் மகிழ்ந்து குதிரைவீரரின் தலைவரைக் 'குதிரையேற்றம் செய்து காட்டும்படி கேட்க' என்று அடிகளிடம் சொன்னான். குதிரைவீரர் தலைவராகிய இறைவரைக்கொண்டு குதிரையேற்றம் செய்விக்கும்படி பாண்டியன் சொன்னதைக் கேட்டு மாணிக்கவாசகப் பெருமான் மனம் வருந்தினர். தம் வருத்தத்தை வெளியே காட்டாது குதிரை வீரர் தலைவரிடம் சென்று மனத்தால் வணங்கினர். அன்பின் மேலீட்டினல் கண்ணீர் ததும்பி உள்ளம் வெதும்பினர்.

பாண்டியனுடைய விருப்பத்தைப் பரியின்மீது எழுந்தருளிவந்த பரமாசாரியரிடம் விண்ணப்பம் செய்தனர். சிவபெருமானும் அதற்கு இசைந்தனர். பாண்டியன் முற்பிறவியில் செய்த தவப்பேற்றினல் அவன் நேரே காணப் பல வகையான குதிரை ஏற்றங்களைக் காட்டித் தாளத்திற்கேற்ற நடனத்தோடு வேதமாகிய குதிரையைச் செலுத்திக் கொண்டு பாண்டியனுக்கு முன் வந்தார். தமிழ்மாறன் வியந்து அவருக்கோர் விலை மதித்தற்கரிய பீதாம்பரத்தைக் கொடுத்தான். குதிரைவீரர் அதனைத் தன் சவுக்கின்மீது ஏற்றுப் புன்னகை செய்தனர். குதிரையினின்றுமிறங்கி அப் பீதாம்பரத்தைப் பணிந்து வாங்கித் தலையில் அணிந்து கொள்ளவில்லை யென்று பாண்டியன் மயக்கத்தினல் வெகுண்டான். அரசர்கள் வெகுமதியாகக் கொடுக்கும் கலைகள் யாவையும் சவுக்கின்மீது ஏற்றுக்கொள்வது அத் தேசத்து வழக்கமென்று திருவாதவூரடிகள் பாண்டியனுக்குச் சொல்லி அவன் கோபம் அடங்கச் செய்தனர். பின்னர் அரசன் அசுவலக்கண நூலில் கற்றுத் தேறினவர்களை அழைத்து அக் குதிரைகளின் இலட்சணங்களைக் கேட்டறிந்தான். தான் கொடுத்த பொருளினும் பார்க்க, குதிரைகள் எண்மடங்கு விலைபெறும் என மகிழ்ந்து குதிரைக் கூட்டங்களைக் கயிறுமாறித் தரும்படி குதிரைத் தலைவராகிய இறைவரைக் கேட்டான். அவ்வண்ணமே கயிறுமாறிக் கொடுத்ததும் குதிரைப் பாகர்கள் குதிரைகளை எல்லாம் பாண்டியனது குதிரைப்பந்தியில் சேர்த்தார்கள். குதிரை

வீரர்கள் தாங்கள் முன்வந்த திசை நோக்கிச் சென்றனர். பாண்டியனும் அடிகளை நோக்கி "உம்மால் பரிகளைப் பெற்றேன்" என்று அன்பு பாராட்டி அவரைத் தனது மாளிகைக்கு அனுப்பிச் சேனைகள் சூழத் தன் அரண்மனைக் குச்சென்றான்.

இறைவரே நரியைக் குதிரையாக்கிக் குதிரைச் சேவகனாய் வந்த திருவிளையாடல்களைக் குறித்து மாணிக்கவாசகப்பெருமான் திருவாசகத்தில் ஆங்காங்குப் பாடியருளினர்.

> அரியொடு பிரமற் களவறி யொண்ணான்
> நரியைக் குதிரை யாக்கிய நன்மையும்
> ஆண்டுகொண் டருள அழகுறு திருவடி
> பாண்டி யன்றனக் குப்பரி மாவிற்
> றீண்டு கனக மிசையப் பெறாஅ
> தாண்டா னெங்கோ னருள்வழி யிருப்ப
> ..........................................
> குதிரைச் சேவக னாகிய கொள்கையும்
>
> கீர்த்தித்திருவகவல்.

> நரியைக் குதிரைப் பரியாக்கி ஞாலமெல்லா நிகழ்வித்துப்
> பெரியதென்னன் மதுரையெல்லாம் பிச்சதேற்றும் பெருந்துறையாய்
> அரிய பொருளே யவிநாசியப்பா பாண்டி வெள்ளமே
> தெரிய வரிய பரஞ்சோதீ செய்வ தொன்று மறியேனே.
>
> —ஆனந்தமாலை.

'மதுரையெல்லாம் பிச்சதேற்றும் பெருந்துறையாய்' என்பது பரி நரியானதைக் குறிப்பாக உணர்த்தியவாறு. "நரியைக் குதிரை செய்வானும் நரகரைத் தேவு செய்வானும்" என்பது அப்பர் சுவாமிகள் வாக்கு.

ஒரு நாமம் ஓருருவம் ஒன்றுமில்லாத இறைவர் தாம் அடிமை கொண்ட அன்பரான மாணிக்கவாசகப் பெருமானிடத்துத் தோழமை காட்டிப் பாண்டிய மன்னனைப் பக்குவப்படுத்தி அடிமை கொள்ளும் பொருட்டுப் பரியின்மீது வந்தருளினர். சைவசித்தாந்தக் கொள்கையும் இதுவே.

பாண்டியன் பக்குவமில்லாத மயக்க நிலையிலிருந்தமையால் இறைவரே பரியின்மீது எழுந்தருளினர் என்று அடிகள் மன்னனுக் குச் சொல்லுதற்குப் பதிலாகப் பட்டுப் பீதாம்பரத்தைச் சவுக்கின் மீதேற்றுக் கொண்டபோது அது ஆரிய தேசத்தவர்கள் வழக்கம் என்று கூறி அரசனின் கோபம் தணிவித்தது அரசன் பக்குவமடை

வதற்காம். பின்னர் அரசன் தானே யுணரத்தக்க நிலையையடைந் தான் என்பது நோக்கத் தக்கது. அது,

"நரகொடு சுவர்க்க நானிலம் புகாமற்
பரகதி பாண்டியர்க் கருளினை போற்றி."

—போற்றித் திருவகவல்.

"திண்போர் விடையான் சிவபுரத்தார் போரேறு
மண்பால் மதுரையிற் பிட்டமுது செய்தருளித்
தண்டாலே பாண்டியன் றன்னைப் பணிகொண்ட
புண்பாடல் பாடிநாம் பூவல்லி கொய்யாமோ."

—திருப்பூவல்லி

எனவரும் திருவாசகங்களினால் புலப்படும்.

அன்றிரவில் அக்குதிரைகளெல்லாம் இறைவர் திரு வருளால் ஊளையிடும் நரிகளாயின. மதுராபுரியிலுள்ள வர்கள் நித்திரை செய்யாவண்ணம் ஊளையிட்டன. அங்கு நின்ற பழைய குதிரைகளைக் கொன்று கூச்சலிட்டன. கடைவீதி இராசவீதி மண்டபங்கள் முதலிய இடங்களில் சென்று கூக்குரல் செய்தன. பாண்டியனுடைய படை வீரர்கள் ஆயுதந்தாங்கி அந்த நரிகளை எதிர்த்தார்கள். நரிகளெல்லாம் சிங்கம்போல் அமர்செய்யத் தொடங்கின. மதுராபுரியில் உள்ளவர்கள் சிலர் வீதிகளில் கூடுவார்கள். சிலர் நரிகளை ஓட்டுவார்கள். சிலர் ஓடியொளிப்பார்கள். சிலர் ஓடி மறைவிடம் தேடுவார்கள். சிலர் எதிர்சென்று போர் செய்வார்கள். சிலர் தங்களைக் காத்துக்கொள்ளும் வண்ணம் சோமசுந்தரக்கடவுளை வணங்குவார்கள். சிலர் தங்கள் வீடுகளுட்சென்று கதவுகளை அடைப்பார்கள். நமது நாட்டின் தவக் குறைவினால் பரிகள் நரிகளா யினவோ என்பார்கள். மன்னன் செங்கோல் கொடிதா னதோ என்பார்கள். இதன் காரணம் என்னவோ என்று இரங்கினார்கள். குதிரைக் காவலாளர் அரசனிடம் சென்று பரி நரியான செய்தியைச் சொன்னார்கள். பாண் டியன் பெரும் கோபம் கொண்டான். இறைவன் திருவரு ளால் நரிகளெல்லாம் ஊரை விட்டோடின. அரசன் உடனே தண்டம் செய்யும் வன்கணாளரை அழைத்து நரிக ளைக் குதிரையாக்கிக் கொண்டுவந்த முதன் மந்திரியாரை

அழைத்து வரும்படி கட்டளையிட்டான். அவர்கள் சென்று அடிகளை அழைத்தபோது புன்முறுவல் செய்து திருநீற்றை யணிந்து அரசன்முன்பு சென்று அருகு நின்றார். பாண்டியன் அடிகளைக் கண்டதும் மிகுந்த கோப முடையவனாய் மந்திரிமாரை நோக்கி, "நம்முடைய பொருள்களை யெல்லாம் திருப்பெருந்துறையில் இரப்பவர் கட்குக் கொடுத்துவிட்டு நாட்டிலுள்ள நரிகளை எல்லாம் நல்ல குதிரையாக்கிய மாயத்தைக் கண்டீரோ" என்றான். தண்டத்தலைவரை நோக்கி, "என் கண்முன்னே இல்லாது இவரைக்கொண்டுசென்று வெய்யிலில் கோடுகூறிக்கோட்டி னில் நிறுத்திக் குதிரைகொள்ளக் கொண்டுசென்ற திரவி யங்களை எல்லாம் வாங்குங்கள்" என்று கட்டளைசெய் தான். தண்டம்செய்வோர் திருவாதவூரடிகளை வெய்யிலில் நிறுத்தி வருந்தச் செய்தனர். அப்போது அடிகள் "நரி யைக் குதிரையாக்கிய தம்மிறைவரை நினைந்து பிரம விட்டுணுக்களால் அறியப்படாத சோதியே! கனகசபை யிலே ஐந்தொழில் கூத்துச்செய்தருளும் கடவுளே! என்னை அடிமைகொண்ட தேவரீருடைய திருவருள் இன்று எனக்கு இல்லையோ? இன்று யான் படும் துன்பத்தைப் பார்த்தி லீரோ"? என்று வணங்கினர்.

உரியே னல்லே னுனக்கடிமை
யுன்னைப் பிரிந்திங் கொருபொழுதுந்
தரியே னாயே னின்னதென்
றறியேன் சங்கரா கருணையினாற்
பெரியோ னொருவன் கண்டுகொ ளென்றுன்
பெய்கழ லடி காட்டிப்
பிரியே னென்றென் றருளிய வருளும்
பொய்யோ எங்கள் பெருமானே.

—திருவாசகம் எண்ணப் பதிகம்.

இறைவன் திருவாதவூரடிகள் படுந் துன்பங்களை நீக்கி யருள வைகையாற்றில் பெருவெள்ளம் வரச்செய்தனர். வைகையாறு கடல்போல் இரண்டு கரைகளையும் இடித்துப் பெருக்கெடுத்து மதுராபுரியின் மதில்களையிடித்துப் பட்டி னத்தை அழிப்பதுபோலப் பெருகியது. மதுரைவாசிகள்

எல்லோரும் கலங்கினார்கள். கடவுளை வணங்கினார்கள். வெள்ளம் குறையாது பெருகினது. அரசனும் அஞ்சி மந்திரியாரை நோக்கித் தான் நீதிதவறி நடந்ததுண்டோ என்று வினவினான்.

ஆதியாங் கடவுளெந்தை யாலவா யமலன் மங்கை
பாதியான் சிறந்த பூசை பண்டையிற் குறைந்த துண்டோ
நீதியாந் தவத்தின் மிக்கார் நெஞ்சகம் புழுங்க மண்மேற்
றீதியாஞ் செய்த துண்டோ செப்புமி னமைச்ச ரென்றான்.

—திருவாதவூரடிகள் புராணம்.

மந்திரிமார் அரசனை நோக்கி, "திருவாதவூரடிகள் துன்பம் நீக்கி அவர் மனம் மகிழச்செய்தால் வைகையாறு ஊரை அழிக்காது" என்றார்கள். அரசனும் அப்படியே அடிகளை அழைத்து, "சிவனடியார் கையில் நீர் கொடுத்த பணம் நமதேயானால் அதன்பயன் நமக்கன்றி மற்றவர்க்கு ஆகமாட்டாது. உம்மை வருந்தச்செய்தது என்மேல் குற்றம். நான் செய்த அக்குற்றத்தை மன்னித்து வைகையாறு இந்த நகரத்தை அழிக்காவண்ணம் அடைப்பிக்கவேண்டும்" என்று வேண்டினான். அப்போது விருப்பு வெறுப்பில்லாத திருவாதவூரடிகள் வைகைப்புனல் ஊர் கொளாதவண்ணம் இறைவனை நினைந்தார். வைகைப் பெருக்கானது வடிந்தடங்கியது. அடிகள் வைகைக் கரைக்குச் சென்றார். பாண்டிய மன்னவனுடைய காரிய தரிசிகள் அடிகளை வணங்கி, "யாது செய்யவேண்டும்" என்றார்கள். ஊரவர்கள் எல்லோரும் வந்து வைகைக் கரையை அடைக்கவேண்டுமென்று பறையறைவிக்கும்படி சொன்னார். நகரவாசிகள் கூடையும் மண்வெட்டியும் கொண்டு வைகைக்கரைக்கு வந்து ஒவ்வொருவரும் தத் தமக்கு அளந்துவிடப்பட்ட பங்கை அடைத்தார்கள். அப் போது பிட்டு விற்றுச் சீவனஞ்செய்யும் செம்மனச்செல்வி என்னும் நரைமூதாட்டியின் பங்குமட்டும் அடைபடாம லிருப்பதை அரசனது காரியதரிசிகள் கண்டு அவளிடம் சென்று அந்த அம்மையாருக்குத் துன்பம் செய்தனர். அம்மை தமது பிட்டினைக் கூலியாக ஏற்று வைகைக்

கரையை அடைப்பாரில்லாமையினால் சோமசுந்தரக்கடவுளைத்தோத்திரம்பண்ணி முறையிட்டாள். சோமசுந்தரக்கடவுள் அம்மையாருக்கோர் கூலியாளாய்க் கந்தைத்துணியுடுத்துத் தோள்மேல் மண்வெட்டியும் தலையின்மீது கூடையும் கொண்டு பெரும்பசி யுடையார்போல அவ்வம்மையார் முன்வந்து 'தன்னை மகிழ்வுடன் ஏவல் கொள்வார் உளரோ'? என்று கேட்டனர். அம்மையார் கவலைநீங்கி 'மைந்த! நீ எனக்கு இங்கு ஆளாய் வருக' என்றார், "முன்னரே கூலி தருவதாயின் கூலியாளாக வருவேன்" என்றார். அம்மையார், 'உண்ணும்பொருட்டு இனிய பிட்டைக் கூலியாகக் கொடுப்பேன்; பிட்டு வேண்டாம் என்றால் அதனைவிற்று அந்தியில் கூலி தருவேன்' என்றாள். "அன்னே! இப்போது பெரும் பசியுடையேன்; ஆதலால் இனிய பிட்டுக் கொடுப்பாயாயின், அதை உண்டு பசிதீர்த்து உனக்கு அளந்துவிடப்பட்ட வைகைக்கரையின் பங்கை அடைப்பேன்" என்றார். அம்மையார் பிட்டினை அள்ளிக்கொடுத்தார். கூலியாளர் தன் கந்தைத்துணியை விரித்துப் பிட்டினைவாங்கி இன்புற அமுதுசெய்து பின்னும் நிறையப் பிட்டினைவாங்கி வைகைக்கரைக்கு அம்மையாரோடு சென்று அவீர் பங்கை அடைக்கத் தொடங்கினர். கூலியாளர் இடைக்கிடை மண்ணை வெட்டுவர். வெட்டியமண்ணைக் கூடையிலிடுவர். அதனைச் சுமந்து வைகைக்கரையில் கொட்டுவர். பின்னர் இளைத்தவர்போல் வேர்ப்பர். பிட்டினை அள்ளி உண்பர். விண்ணப்பர் கொடுத்த இறைச்சியமுதினும் நன்றென்று அம்மையார்மீது அருட்பார்வை செய்வர். கூடையைத் தலைமீது வைத்துக் கூத்தாடுவர். இதனைக் கண்ட அம்மையார் தன் கருமத்தைப்பற்றிப் பேசாது பாண்டியன் தூதுவர் இவரைக் கண்டால் துன்பஞ் செய்வாரே என்று நினைத்தார். அப்போது கூலியாளராகிய இறைவர், "தாயே நீ ஒன்றுக்கும் இரங்கவேண்டாம்; நான் விரைவில் உனது பங்கை யடைப்பேன்; நீ உனது வீட்டுக்குப் போவாயாக" என்றனர். அம்மையார் தன்வீடு சென்றதும், வள்ளலார் கொன்றைமர நிழல் சயனமாகவும் மண்கூடை தலையணையாகவும் வைத்துப் பள்ளிகொண்டார். அப்போது பெரு

வாழ்வின் மிக்கோராகிய திருவாதவூரடிகள் தமது காரிய தரிசிகளைப் பார்த்து அவரவர்க்கு அளந்துவிட்ட பங்குகளெல்லாம் அடைபட்டனவோ என்று பார்க்கும்படி பணித்தார். அவர்கள் வைகைக்கரைக்குப் போய் எல்லோருடைய பங்குகளும் உயரமாய் அடைபட்டிருக்கச் செம்மனச்செல்வி பாகம்மட்டும் தாழ்ந்திருப்பதைக் கண்டனர். அம்மையாருக்காகக் கூலியாளாய் வந்த ஒருவன் ஒழுங்காய் வேலை செய்யாது சொற்கேளாதவனாய்க் கொன்றைமர நிழலில் தூங்குவதைக் கண்டனர். காரிய தரிசிகள் அவனைத் தங்கள் முன்னிலையில் கொண்டுவரும்படி பணித்தனர். அவர்களில் ஒருவன் கோபங்கொண்டு தன் பக்கத்தில் நின்றவனைப் பார்த்துப் பெருமானைக் "குருதி சோரவடிக்க" என்று கட்டளையிட்டான். அவனும் அவ்வண்ணமே செய்தான். அந்த அடியானது அறிவுள்ளனவும் அறிவில்லாதனவுமாகிய எல்லா உலகங்களிலும் பட்டது. கூலியாளாய் வந்த இறைவர் மறைந்தருளினர். திருவாதவூரடிகள்மீதும் அவ்வடி பட்டது. அப்போது அவர் அறிவழிந்து பின் தேறினார். காரிய தரிசிகள் அவரிடம் விரைந்துசென்று இறைவன் திருவிளையாடல்களை எல்லாம் சொன்னார்கள். நரகில் தான் வீழா வண்ணம் பெருமான் கூலியாளாய் எழுந்தருளி வந்தாரே என்று விழுந்து புரண்டு அடிகள் புலம்பினார்.

"அழுங்கியரும் பெருநரகி லடியேனும் வீழாம
லெழுந்தருளும் பெரியோனே யெங்கணுளா யென்றென்று
தொழுங்கரமுங் கண்ணீருந் துளங்கியமெய்ப் புளகமுமாய்
விழுந்துபுரண் டிவ்வாறு புலம்பினர்மெய் யன்பாளர்."

—திருவாதவூரடிகள் புராணம்.

"மண்சுமந்து கூலிகொண் டக்கோவான் மொத்துண்டு
புண்சுமந்த பொன்மேனி பாடுதுங்கா ணம்மானாய்."

திருவம்மானை, 8.

"திண்போர் விடையான் சிவபுரத்தார் போரேறு
மண்பால் மதுரையிற் பிட்டமுது செய்தருளித்
தண்டாலே பாண்டியன் தன்னைப் பணிகொண்ட
புண்பாடல் பாடிநாம் பூவல்லி கொய்யாமோ."

திருப்பூவல்லி, 16.

"பிட்டு நேர்பட மண்சு மந்த பெருந் துறைப்பெரும் பித்தனே
சட்ட நேர்பட வந்திலாத சழக்க னேனுனைச் சார்ந்திலேன்
சிட்ட னேசிவ லோக னேசிறு நாயி னுங்கடை யாயவெங்
கட்ட னேனையு மாட் கொள்வான் வந்த காட்டினாய் கழுக்குன்றிலே."
—திருக்கழுக்குன்றப் பதிகம்.

என்னும் திருவாசகப் பாக்கள் இத்திருவிளையாடலுக்கு ஓர் அகச் சான்றாகும்.

பாண்டிய மன்னனும் சோமசுந்தரக் கடவுளின் திருவிளையாடல்களை எல்லாம் அறிந்துணர்ந்தான். தான் நரகத்தில் புகாமல், செய்த பிழைகளைப் பொறுத்தருளவேண்டும் என்று வணங்கினான். அடிகள் பாண்டிநாட்டை அரசாளவேண்டும் என்றும், தான் அடிகளுக்குத் தொண்டு செய்ய வேண்டும் என்றும் குறையிரந்தான். திருவாதவூரடிகள் தம்மைத் திருப்பெருந்துறைக்குப் போகவிடுவதே இவ்வுலகத்தைத் தருதலாம் என்றார். அரசன் அன்பர்களுக்கு அரச வாழ்வில் ஆசையிலதென்றுணர்ந்து அடிகளை வணங்கி விடைபெற்றுத் தன் மாளிகை சென்றான். திருவாதவூரடிகள் பேரின்ப வாழ்வை விரும்பி மந்திரிக் கோலத்தை நீத்து தவவேடம்பூண்டு ஆலவாய் அண்ணலை வணங்கித் திருப்பெருந்துறைக்குச் சென்றார். அத்தலத்தில் பரமாசாரியர் அடியார்கள் நடுவிலிருப்பக்கண்டு விழுந்து வணங்கினார்.

அண்டருக் கரியாய் போற்றி யடியவர்க் கெளியாய் போற்றி
வண்டமிழ்ப் பாண்டி நாடு வாழமண் சுமந்தாய் போற்றி
கண்டவர்க் கினிய மேனி காட்டியென் சென்னி மீது
முண்டகத் திருத்தாள் வைத்த முத்தனே போற்றி போற்றி
—திருவாதவூரடிகள் புராணம்.

மெய்தான ரும்பி விதிர் விதிர்த்துன் விரையார் கழற்கென்
கைதான் றலைவைத்துக் கண்ணீர் ததும்பி வெதும்பி யுள்ளம்
பொய்தான் றவிர்ந்துன்னைப் போற்றி சயசய போற்றி யென்னுங்
கைதானெ கிழவிடே னுடையா யென்னைக் கண்டு கொள்ளே
—திருவாசகம்

அடியார் கூட்டத்தில் இருந்த பரமாசாரியர் அக் கூட்டத்தைவிட்டுப் புறப்பட்டார். அடியார்கள், எம்மை

விடுதியோ' என்று நொந்தார்கள். இறைவர் அவர்கள் மேல் அருட்பார்வை செய்து "இப்பொய்கையில் ஓர் சோதி தோன்றும். அப்போது நீங்கள் அச் சோதியில் புகுந்து நம்மைச் சேருங்கள்" என்று சொல்லிச் சென்றார். எல்லோரும் நின்றனர். திருவாதவூரடிகள் பரமாசாரியர் பின் சென்றார். அப்போது பரமாசாரியர் அன்பு கூர்ந்து மற்ற அடியார்கள் சோதியில் புகும்போது அடிகளை அச் சோதியில் புகாது உத்தரகோச மங்கை, திருக்கழுக் குன்றம் முதலிய பதிகளை வணங்கித் தில்லைக்கு வரும் படியும் அங்கே முத்தி கொடுப்பதாகவும் கூறிமறைந்தருளி னார். திருவாதவூரடிகள் அடியார் கூட்டத்தில் வந்திருந் தார்.

அந்நாள் அற்புதப்பத்து, அதிசயப்பத்து, குழைத்த பத்து, சென்னிப்பத்து, ஆசைப்பத்து, வாழாப்பத்து, செத்திலாப்பத்து, புணர்ச்சிப்பத்து, அருட்பத்து, திரு வார்த்தை, எண்ணப்பதிகம், வெண்பா, திருப்பள்ளி யெழுச்சி, ஆனந்தமாலை, உயிருண்ணிப்பத்து, பிரார்த் தனைப்பத்து, பாண்டிப்பதிகம் முதலிய திருவாசகங்களை அருளிச் செய்தார்.

புணர்ச்சிப் பத்திலுள்ள மணிகள் அடிகளின் ஞானாதீத நிலைமை யைக் காட்டும் இப்பதிகப்பாடல்களை நாவலர் தமது இறுதிக் காலத் தில் மனனஞ் செய்திருந்ததாகக் கூறுப.

ஒருநாள் இறைவர் கூறியவாறு, ஒரு சோதி தோன்றி யது. அடியார்கள் எல்லாரும் அந்தச் சோதியில் புகுந் தனர். திருவாதவூரடிகள் அச் சோதியில் புகாது பரமா சாரியருடைய திருவடியை நினைந்து வருந்தினார். பின்னர், தெளிந்து இறைவரை வணங்கினார்.

"பொழிகின்ற துன்பப் புயல்வெள் ளத்திினின் கழற்புணை கொண் டிழிகின்ற அன்பர்க ளேறினவர் வான் யானிடர்க் கடல்வாய்ச் சுழிசென்று மாதர்த் திரைபொரக் காமச் சுற வெறிய அழிகின் றனனுடை யாயடியே னுன் னடைக் கலமே."

—அடைக்கலப்பத்து.

இறைவர் கட்டளைப்படி உத்தரகோசமங்கை சென்றார். அத்தலத்தில் இறைவரை வணங்கினார். அப்போது இறைவரது பரமாசாரியத் திருவுருவங்காணாது மயங்கிப் பின் தெளிந்து நீத்தல் விண்ணப்பம் பாடினர். ஒவ்வொரு திருப் பாட்டிலும் இரண்டாம் அடியில் "என்னை விடுதி கண்டாய்" என்று கூறிப் பாடினார். இறைவர் தமது பரமாசாரியத் திருமேனியைக் காட்டியருள வணங்கிச் சில நாள் அப்பதியில் தங்கினார்.

கடையவ னேனைக் கருணையி னாற்கலந் தாண்டு கொண்ட
விடையவ னேவிட் டிடுதிகண் டாய்விறல் வேங்கையின் தோல்
உடையவ னேமன்னு முத்தர கோசமங் கைக்கரசே
சடையவ னேதளர்ந் தேனெம்பிரா னென்னைத் தாங்கிக் கொள்ளே

—திருவாசகம்.

பின்னர்ப் பல பதிகளையும் வணங்கித் திருவிடைமருதூர் பணிந்துத் திருவாரூர் சென்று, திருப்புலம்பல் பாடியருளினார்.

பூங்கமலத் தயனொடுமா லறியாத நெறியானே
கோங்கலர்சேர் குவிமுலையாள் கூறாவெண் ணீறாடி
ஓங்கெயில்சூழ் திருவாரூ ருடையானே யடியேனின்
பூங்கழல்க ளவையல்லா தெவையாதும் புகழேனே.

—திருப்புலம்பல்

அப்பால் பல பதிகளையும் வணங்கிச் சீர்காழி வந்தடைந்து தோணியப்பரை வணங்கி "உன்னைச் சிக்கெனப் பிடித்தேனெங்கெழுந்தருளுவதினியே" என்று ஒவ்வொரு திருவாசகத்தின் இறுதியிலும் வைத்துப் பாடியருளினார்.

உம்பர்கட் கரசே யொழிவற நிறைந்த
யோகமே யூற்றையேன் றனக்கு
வம்பெனப் பழுத்தென் குடிமுழு தாண்டு
வாழ்வற வாழ்வித்த மருந்தே
செம்பொருட் டுணிவே சீருடைக் கழலே
செல்வமே சிவபெரு மானே
எம்பொருட் டுன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே.

அம்மையே யப்பா வொப்பிலா மணியே
அன்பினில் விளைந்த வாரமுதே
பொய்ம்மையே பெருக்கிப் பொழுதினைச் சுருக்கும்
புழுத்தலைப் புலையனேன் றனக்குச்
செம்மையே யாய சிவபத மளித்த
செல்வமே சிவபெரு மானே
இம்மையே யுன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே.

பால் நினைந் தூட்டுந் தாயினுஞ் சாலப்
பரிந்துநீ பாவியே னுடைய
ஊனினை யுருக்கி யுள்ளொளி பெருக்கி
யுலப்பிலா வானந்த மாய
தேனினைச் சொரிந்து புறம்புறந் திரிந்த
செல்வமே சிவபெரு மானே
யானுனைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. 9

—பிடித்தபத்து.

சிலநாள் சீர்காழியில் தங்கினர். பின்னர், திருமுதுகுன்றம், திருவெண்ணெய்நல்லூர் முதலிய பதிகளை வணங்கித் திருவண்ணாமலை சென்று சேர்ந்தார். அத்தலத்தில் தம்மை அடிமைகொண்ட பரமாசாரியத் திருமேனியை இறைவர் காட்டக் கண்டு வணங்கி மகிழ்ந்து அங்கே சில நாள் வசித்தனர். அப்பதியில் மார்கழிமாசத் திருவாதிரை தினத்துக்கு முன் பத்துநாளும் மகளிர் உதய காலத்தில் வீடுகள்தோறும் ஒருவரையொருவர் அழைத்துக் கூட்டிச்சென்று தடாகங்களில் நீராடிப்போவதைக் கண்ட திருவாதவூரடிகள் அம்மகளிர் பாடியதாக 'ஆதியு மந்தமுமில்லா வரும்பெருஞ் சோதியை' என்று தொடங்கித் திருவெம்பாவை என்னும் பதிகம் பாடியருளினர்.

திருவெம்பாவை ஒன்பது சத்தியின் திருவிளையாட்டென்பர்.

அவ்வாறே மங்கைப்பருவத்தை உடைய மகளிரது அம்மானை என்னும் விளையாட்டைக் கண்டு அம்மகளிர் பாடிய

தாக அம்மானை என்னும் திருவாசகத்தைப் பாடியருளினர். பின்னர், காஞ்சிபுரம் சென்று வணங்கித் திருக்கழுக் குன்றம் வந்தருளினர். அப்பதியில் இறைவர் தமது பர மாசாரிய திருவடிவத்தைத் தரிசிப்பித்தார். அடிகள் வணங்கி மகிழ்ந்து திருவாசகத்தின் இறுதியில் "வந்து காட்டினாய் கழுக்குன்றிலே" என்று வைத்துப் பதிகம் பாடியருளினர்.

பிணக்கி லாதபெ ருந்து றைப்பெரு மானுன் னாமங்கள் பேசுவார்க்
கிணக்கி லாததோ ரின்ப மேவருந் துன்பமே துடைத் தெம்பிரான்
உணக்கி லாததோர் வித்து மேல்விளை யாம லென்வினை யொத்தபின்
கணக்கி லாத்திருக் கோல நீவந்து காட்டி னாய்கழுக் குன்றிலே.

— திருக்கழுக்குன்றப் பதிகம்.

அப்பதியிலிருந்து முல்லைநிலம் மருதநிலம் முதலிய நாடுகளைக் கடந்து தில்லைநகரின் எல்லையை வந்தடைந்தார். தில்லையின் உயர்ந்த மதில்களையும் திருக்கோபுரங்களையும் பொற்குடங்கள் வைக்கப்பட்டுள்ள பல மாளிகைகளையும் திருவாதவூரடிகள் கண்டு மகிழ்ந்தார். வேத ஒலியும் தேவர்கள் தோத்திர ஒலியும் சங்கீதவொலியும் கூத் தொலியும் சிவாகம ஒலியும் செந்தமிழ்ப்பாடல் ஒலியும் தில்லையில் கடல்போல ஆர்த்தன. திருவாதவூரடிகள் திருவீதியைக் கடந்து திருக்கோபுரத்தை வணங்கித் திருக் கோயிலுட் சென்று பொன்னம்பலத்தை வலம் வந்து சிற்சபையில் கூத்தப்பெருமானைத் தரிசித்துப் பேரன் போடு "இந்திரியவய மயங்கி" என்று தொடங்கி ஒவ் வொரு திருவாசகத்தின் இறுதியிலும் "கண்டேனே" என்று சொல்லிப் பாடியருளினர்.

"இந்திரிய வயமயங்கி இறப்பதற்கே காரணமாய்
அந்தரமே திரிந்துபோ யருநரகில் வீழ்வேற்குச்
சிந்தைதனைத் தெளிவித்துச் சிவமாக்கி யெனையாண்ட
அந்தமிலா ஆனந்தம் அணிகொடில்லை கண்டேனே."

—கண்டபத்து

கூத்தப்பெருமான் முன்னிலையில் ஆன்ம சேட்டை யற்றுச் சித்திரப்பாவைபோல் நெடுநேரம் நின்றார். இறை வனை வணங்கவேண்டும் என்பதையும் மறந்தார். கோயிற் காவலாளர் சொல்வதையும் தாம் கேளாது பித்தம் பிடித்த வரைப்போல் நின்றார். பின்னர் உடம்புக்கு உயிர்வந்தாற் போலத் திருக்கரங்களைத் தலையில் குவித்துச் "சிவ சிவ போற்றி" என்றார்.

குன்றாவிருண் மூலந்திகழ் குறியாகிய சுடரு
மன்றாகிய வெளியூடு மகிழ்ந்தாடிய வொளியு
மொன்றாகிய வநுபூதியி லுற்றார்செய லற்றார்
நின்றாரசை வில்லாவொரு நிலையோவிய மானார்.

மைகால்குழ லுமைபங்கினன் வழிபாடு மறந்தே
கைகாலசை விலவாயின கண்ணுஞ்சிறி திமையா
செய்காரிய மென்னோவிது தெருளாமரு ளென்னா
மெய்காவலர் மணிமன்றை விடப்போமினி யென்றார்.

பூண்டருள் கொண்ட காவல் புரிபவ ருரைத்தல் கேளார்
தாண்டவ நிகழுஞானத் தன்மையின் றன்மை நாடிக்
காண்டரு துரியா தீதக் கழிபரத் தொளியின் மூழ்கி
நீண்டதோர் தம்ப மாகி நின்றனர் நெடிது போது.

போமெனப் போகா ரொன்றும் புகல்கிலர் பித்தங் கொண்டா
ராமெனக் காவ லாள ரஞ்சிநின் றழுங்கு மெல்லைச்
சாமுடற் குயிர்வந் தெய்துந் தன்மைபோற் குவிந்த கஞ்சத்
தேமலர்க் கரமேற் கொண்டு சிவசிவ போற்றி யென்றார்.

—திருவாதவூரடிகள் புராணம்.

சுந்தரமூர்த்தி நாயனாரும் இவ்விதமான நிலையில் நின்று அம்பலக்கூத்தனை வழிபட்டனர்.

(21-ம் பக்கம் பார்க்க)

மாணிக்கவாசகப்பெருமான் தில்லையில் ஓர் பன்ன சாலையில் எழுந்தருளியிருந்தார். அந்நாளில் குலாப்பத்து, கோயின்மூத்ததிருப்பதிகம், கோயிற்றிருப்பதிகம், கீர்த்தித் திருவகவல், திருவண்டப்பகுதி, போற்றித் திருவகவல்,

என்னும் திருவாசகங்களைப் பாடினார். தில்லையில் மடந்தையர் சுவாமிக்குச்சாத்தப் பரிமளப் பொடியை இடிக்கும் போது அவர்கள் பாடிய உலக்கைப் பாட்டைக்கேட்டு அப்பெண்கள் பாடினதாக "முத்துநற்றாம் பூமாலை தூக்கி" என்றெடுத்து "பொற்சுண்ணமிடித்து நாமே" என்று இறுதிதோறும் வைத்துத் திருப்பொற்சுண்ணம் என்னும் திருவாசகத்தைப் பாடினார். சிறுமகளிர் விளையாட்டைப் பார்த்து அவர்கள் ஒருவர்க்கொருவர் சொன்னதாகத் திருத்தெள்ளேணம், திருவுந்தியார், திருத்தோணோக்கம், திருப்பூவல்லி, திருப்பொன்னூசல் முதலிய திருவாசகங்களையும் பாடியருளினார். ஓர் சிறுபெண் தாயைநோக்கிச் சொன்னதாக அன்னைப்பத்தும், பக்கத்தில் பாடும் தும்பியைப் பார்த்து இறைவரைப் பாடுவாய் என்று திருக்கோத்தும்பியும், பாடும் இளங்குயிலைப் பார்த்துக் குயிற்பத்தும், கிளியைப்பார்த்துத் தசாங்கமும், சிவபெருமானையன்றி வேறு கடவுளரை முழுமுதற்கடவுளென வணங்குவோரைக் கண்டு தாம்பயப்படுவதாக அச்சப்பத்துமாகிய திருவாசகங்களைப் பாடியருளினார். தில்லைவாசிகளாகிய எல்லோரும் தமிழ் வேதமாகிய திருவாசகங்களைப் பாராட்டி ஓதி மகிழ்ந்தனர். திருவாதவூரடிகள் தில்லைநாதன் திருக்கூத்தைத் தரிசித்து வணங்கிச் சிவானந்தமுற்றிருந்தனர்.

அந்நாளில் ஓர் மாதவர் சோழநாட்டு வளங்களைக்கண்டறிந்து தில்லையை வணங்கி ஈழநாட்டின் வளப்பங்களையறிய விரும்பி அங்குச் சென்றார். ஈழநாட்டில் அப்போது புத்தசமயம் பரவியிருந்தது. தாம் போயிருக்கும் இடங்களில் "பொன்னம்பலம் வாழ்க" என்று சொல்வாராயினர். அதனைக்கண்ட புத்தசமயத்தவர்கள் தங்கள் ஈழநாட்டரசனிடம் சென்று "பிச்சை யெடுத்துண்ணும் ஓர் சைவன் இந்நகரில் வந்திருக்கிறான்; அவன் நிற்கும்போதும் இருக்கும்போதும் 'பொன்னம்பலம் வாழ்க' என்று சொல்லுகிறான்" என்று அறிவித்தார்கள். அரசன் அவனைத் தன் சபைக்கு அழைத்து வரும்படி கட்டளையிட்டான். அவர்கள் அம்மாதவரிடஞ் சென்று, "எங்கள் அரசன் உம்மை

அழைக்கின்றான் வாரும்" என்றார்கள். "விருப்பு வெறுப்பிலாது பிச்சையேற்றுண்ணும் எனக்கும் உங்கள் அரசனுக்கும் என்ன தொடர்புண்டு" என்றார் மாதவர். "அரசன் தன் நாட்டில் சஞ்சரிக்கும் எல்லோரையும் பாதுகாப்பது அவன் கடனாகும்; ஆதலினால் அரசன் அழைக்கும்போது அவனைப் போய்ப்பார்ப்பது உமது கடன்" என்றனர் புத்தர்கள். பின்னர், மாதவர் அரசன் சபைக்குச் சென்றார். அரசன் தனது புத்த குருவோடு சேனைசூழ அமர்ந்திருந்தான். சிவவேடம் பூண்டமாதவர் அரசன் சபையில் சென்றதும் "பொன்னம்பலம் வாழ்க" என்று சொல்லிக்கொண்டு அரசன் திடுக்கிட அருகிலிருந்தார். அரசன் அப் பெரியாரை நோக்கி, "இப்போது இங்கே பொன்னம்பலமென்றுரைத்த தென்கொல்" என்றான். "காவிரி வளம் பொருந்திய நாட்டில் தில்லையென்றொரு தலமிருக்கின்றது. அத் தலம் பூமியின்கண்ணுள்ள எல்லாப்பதிகளுக்கும் முதலாயுள்ளது. அங்குள்ள பொன்னம்பலத்தில் இறைவன் ஐந்தொழிற் கூத்துச்செய்தருளுவர். அத் திருக்கூத்தினைத் தரிசனை செய்பவர் இவ்வுலகினில் இனிமேல் பிறவாதவர்களாவர். கொடிய பாவிகளும் 'பொன்னம்பலம்' என்று ஒரு தரம் உச்சரித்தால் ஐந்தெழுத்தை இருபத்தோராயிரத்து அறுநூறுதரம் உரைத்ததற்கு ஒப்பாகும்" என்றார். அப்போது பக்கத்திலிருந்த புத்தகுரு "பிடகநூலை அருளிச்செய்த நம் கடவுளேயல்லாது, வேறு கடவுளும் உண்டோ" என்று வெகுண்டார். "மூன்று தினத்துள் தில்லைசென்று அங்குள்ள சைவர்களோடு வாதுசெய்து அத் தில்லையை நம் புத்த கடவுளது பள்ளியாக்குவேன்" என்று தில்லைக்குத் தமது பரிவாரங்களுடன் சென்றார். ஈழ தேசத்து மன்னனும் தன் செல்வமகளது ஊமைத்தன்மை சிதம்பரம் சென்றால் நீங்கும் என்ற கருத்தோடு தன்னுடைய சேனை சூழச் சிவிகைமீது தன் மகளுடன் புறப்பட்டுத் தில்லையை வந்தடைந்தான். அவ்வரசன் வருதற்கு முன்னரே வந்த புத்தகுரு சிதம்பரத்திலுள்ள ஓர் மண்டபத்தில் வந்திருந்தார். அரசனும் புத்த குருவைக்கண்டு இறைஞ்சி மகிழ்ந்திருந்தான்.

திருக்கோயிலில் பணி செய்யும் திருத்தொண்டர்கள் ஒருங்குகூடிப் புத்த குருவைநோக்கி, "இத்தில்லைமா நகரத்தில் தங்குதல் கூடாது; போய்விட வேண்டும்" என்று சொன்னார்கள். புத்தகுரு "சோழ அரசன் முன்னே சைவசமயம் பொய்ச்சமயம் என்றும் எம்புத்தரே முழுமுதற்கடவுளென்றும் தாபித்தாலல்லாது நான் இவ்விடத்தைவிட்டுப் போவதில்லை" என்றார். இதனைக்கேட்டவர்கள் இச் செய்தியைத் தில்லைமாநகரில் உள்ள எல்லோருக்கும் அறிவித்தனர். எல்லோரும் திருக்கோயிலுக்கு வந்து ஒருங்குகூடிப் புத்த குருவிடம் சென்று "நீர் அஞ்சாத இறுமாப்புடன் ஒன்றையும் மதியாது வந்திருப்பதன் காரணம் என்ன" என்றார்கள். அப்போது புத்த குரு "உங்களுடைய கடவுள் முதற்கடவுளென்று நீங்கள் நாட்ட முயன்றால் நான் அதனை மறுத்து எங்கள் கடவுளே முழுமுதற் கடவுள் என்று நிலைநிறுத்துவேன்; நீங்கள் எனக்கெதிரே வாதம் செய்யுங்கள்" என்றார். புத்த குருவை முனிந்து துரத்தினால், அவரது வினாக்களுக்கு விடைகூற முடியாமல் துரத்தியதாக இவ்வுலகோர் இழிவாய்ப் பேசுவர் என நினைந்து, வாதுசெய்து வெல்வதே முறையெனத் தேர்ந்து, சோழ மன்னனுக்கும் மற்றைய பெரியோருக்கும் ஓலை எழுதி தில்லைக்கு வரும்படி அழைத்தனர். புத்தகுருவை நோக்கி 'இன்று ஒரு தினம் நீர் இங்கே இருக்கலாம். நாளைய தினம் உம் இழிவை உலகிற்குக் காட்டுவோம்' என்று சொல்லித் தங்கள் இல்லம் சென்றார்கள். அன்றிரவு அம்பலக்கூத்தன் அவர்கட்குக் கனவில் தோன்றி "திருவாதவூரன் என்னும் உண்மை அன்பன் இந்தத் தில்லையின் எல்லையில் இருக்கிறான். நீங்கள் அவனிடம் சென்று இச் செய்தியைச் சொன்னால் அவன் வந்து புத்தர்களைத் தப்பாது வாதில் வெல்வான்" என்று சொல்லி மறைந்தருளினார்.

கனவு கண்டவர்கள் எல்லோரும் எழுந்து இறைவர் கருணையை வியந்து போற்றி ஆலய மண்டபத்தில் வந்து கூடித் தாம் கண்ட கனவுகளைச்சொல்லி மன்றினாடும்

ஐயனை வியந்து கூறித் தங்கள் மனக்கவலை நீங்கித் திருவாதவூரடிகள் இருக்கும் பன்னசாலைக்கு விரைந்து சென்றார்கள். சிவயோகத்தினின்று எழுந்த திருவாதவூரடிகளை வணங்கித் தங்களுக்குக் கனவில் இறைவன் கூறியருளிய செய்தியைச் சொன்னார்கள். அடிகளும் தம்மிடம் வந்தவர்களோடு உடனே கனகசபைக்குச் சென்று, அம்பலக் கூத்தனை வணங்கி அருள்பெற்றுப் புத்தகுருமார் இருக்கும் மண்டபத்துக்குச் சென்று அவர்களுக்கு எதிரே ஆசனத்தின்மீது அமர்ந்தார். சோழராசனும் வித்துவான்களோடு நடேசப்பெருமானை வணங்கி வாதுசெய்ய இருப்போரின் மண்டபத்தை அடைந்து திருவாதவூரடிகளின் திருவடிகளை வணங்கித்துதித்து அடிகளின் அருகில் இடப்பட்ட ஆசனத்திருந்தான். ஈழதேசத்து மன்னனும் சோழமன்னனை வணங்கி அவ்விடமிருந்தான். வாதி பிரதிவாதிகளின் கூற்றைக் கேட்டுத் தீர்ப்புச் செய்வதற்கு மத்தியஸ்தராகத் தெரிந்தெடுக்கப்பட்டவர்களும் அரசனுக்குப் பக்கத்திலிருந்தார்கள். சமயவாதத்தைக் காணப் பலரும் வந்து கூடினர். சோழமன்னன் திருவாதவூரடிகளை வணங்கி "நமது சைவசித்தாந்த மார்க்கத்தை நிலைநிறுத்துதல் தேவரீரது கடமையாகும்" என்றான். திருவாதவூரடிகள் "நீர் இங்கு வந்த காரணம் யாதென்று" புத்தகுருவைக் கேட்டனர். அவர் "எங்கள் கடவுளையன்றி வேறு கடவுள் இல்லை என்று உம்மோடு வாது செய்து வென்று பொன்னம்பலத்தைப் புத்த கோயிலாக்க வந்தேன்" என்றார். திருவாதவூரடிகள் புன்முறுவல் செய்து, "உங்கள் கடவுள் இலக்கணமும் அவரடியிற் சேரும் முத்தியின் தன்மையும் யாதென்று கூறுவீர்" என்றனர். அண்ணலார் கேட்டதும் புத்தகுரு கோபங்கொண்டவராகிப் "பிறவிக்குருடனுக்குச் சூரியன் ஒளியைக் காட்டுதல் கூடுமோ? அதுபோல நுண்ணறிவில்லாத உமக்கு எங்கள் கடவுளின் இலக்கணத்தைச் சொல்லியும் அறியமாட்டீர். சொல்வதாயின் பல்லாயிரம் நாக்கள் வேண்டும். நம் கடவுள் கொல்லாமை முதலிய தருமங்களைக் கூறும் பிடகநூலை வகுத்தார். அன்பு உடையவர். பல யோனிதோறும் பிறந்து உயிர்கட்கு

நன்மை செய்வர். கொலை முதலான குற்றங்களை நீத்து அரசமர நிழலில் உருவத்திருமேனி எடுத்து வீற்றிருப்பர். கருவிற் சேரும் உருவம் வேதனை குறிப்புப் பாவனையுடன் விஞ்ஞானப் பஞ்ச கந்தங்கள் கூடி உடம்பு உண்டாகும். அந்தக் கந்தங்களில் உண்டாகும் பல உணர்வே உயிராகும். அவ்வண்ணம் கூடின கந்தங்கள் ஒவ்வொன்ருக முழுவதும் அழிவதே முத்தி'' என்ருர்.

திருவாதவூரடிகள் புத்தகுருவை நோக்கி ''உம்முடைய கடவுள் நல்ல அறத்தைக் கூறும் பிடகநூலை வகுத்தனர் என்று முன்னர்க் கூறினீர். உணர்வுண்டாகிக் கணநேரத்தில் அழிந்திடும் என்று பின்னர்க் கூறினீர். அறிவு கணப்பொழுதில் அழியுமாளுல் சொல்லையும் பொருளையும் தேடி நூல் செய்தவன் முன் அறிவு அழிந்திடுமாளுல் உமது பிடகநூலை உம்முடைய கடவுள் எப்படிச் செய்தார்? ஆகையால் அறநூலென்பதுமக்கில்லை. உயிர்களின் பொருட்டு உம் கடவுள் பிறந்தனர் என்றீர். பிறவி என்பது அறிவுண்டாகி மயங்குவது என்றீர். ஆதலால் உம் கடவுள் மயக்கத்துக்கு உட்பட்டவர். அவ்வாறு கடவுளே மயக்கத்திற் படுவாராளுல் மற்றவர் மயக்கத்தைத் தீர்ப்பது எவ்வாருகும்? உம் கடவுள் கொல்லாமை கொண்டொழுகுவர் என்றும் பல வகையான பிறப்புக்களையும் எடுப்பார் என்றும் முன் சொன்னீர். பூமியில் புலி நரியாகப் பிறக்கும்போது பசி வந்தால் மற்ற மிருகங்களைக் கொன்று தின்னுது பச்சிலைகளையோ தின்னும்? உருவம் முதலாகவுள்ள ஐந்து கந்தம்கூடி உடனே அழியும் என்றீர். ஆகையால் உம் கடவுளுக்கு உருவமேது? பூரண ஞானமில்லாத புத்தகுருவே! பஞ்சகந்தமும் அழிவதே முத்தி என்னும் பிடகநூலை யார் சொல்லிவைத்தனர்? உமது புத்தகடவுளர் எல்லாம் தங்களைப் பத்து மாதமும் சுமந்துபெற்ற தாய்மார் உயிர் துறக்கும் வண்ணம் வயிற்றைப் பீறிக்கொண்டு பிறக்கிறதாகவா உம் பிடகநூல் சொல்லும்? அப்படியான பாதகம் செய்வோர் கடவுளாவரோ? பூதங்களின் சேர்க்கையில் அறிவு உண்டாகு

மன்றி உருவினுக்கு வேறு உயிர் இல்லை என்றீர். இராக் காலத்தில் நீர் தூங்கும்போது உம் முகத்தின்மீது ஏறிப் போகும் பாம்பினை நீர் அறியமாட்டீர். பூதங்களின் சேர்க்கையால் உண்டான உடம்பு பாம்பேறிப் போவதை அறியாதது என்ன காரணம்? உடம்பும் உயிரும் சேர்வதினால் அறிவுண்டாகும் என்பது உம் பிடகநூலில் இல்லை. ஆகையால் உயிர்வேறு உடம்புவேறு என்று நீர் இப்போதே சொல்வீராக. வானமுமில்லை வானத்தோசையுமில்லை என்று உம் நூல் பிதற்றும். நிலம், புனல், தீ, காற்று நான்கும் கலப்பதற்கு இடமாகும் வானில் நிகழ்ந்துள செய்தி கூறக்கடவீர். இடம் திசை என்னும் இவைகளை, இவ்வழக்கென்று கூறும் நீரே உம் கடவுளை உத்தரதிசையின்கண் உள்ள அரசமரமென வணங்குவதெப்படி? மரம் முதலியன உயிர் இல்லாதவை என்றீர். அப்படியானால் நீராகிய உணவு உண்டகாலத்தில் வளர்தலும் உணவில்லாதகாலத்தில் உலர்ந்தழிதலும் எப்படி? மக்கள் தீவினைப்பயனை நுகர்தற்கு அம் மரங்களாய்ப் பிறப்பர் என்று நீர் சொல்வது எப்படிப் பொருந்தும்? ஓர் உயிரைக் கொல்வது குற்றமென்றும் பிறர் கொன்றதைத் தின்பது குற்றமில்லை என்றும் உம் நூல் கூறும். ஓர் உயிரைக் கொன்று உமக்குத்தந்து உம் பசியைத் தீர்த்த ஒருவன் கொலைசெய்த பாவத்தையடைவது உமக்குச் சம்மதமா? ஐந்து கந்தங்களும் அழிவதே முத்தி என்றீர். ஐந்து கந்தங்களாய் உயிர் கெடுமாயின் முத்தி பெற்றார் யார்"? இவ்வாறு திருவாதவூரடிகள் புத்தர் கொள்கைகளை மறுத்துக் கண்டனம் செய்தனர். புத்தகுரு இவைகளைக் கேட்டு வெகுண்டார். அடிகளை நோக்கி, "எங்களுக்குக் கடவுளுமில்லை முத்தியுமில்லை என்றீர். உங்கள் கடவுளின் இலக்கணமும் நீங்கள் அடையும் முத்தியின் தன்மையும் என்ன" என்றார். அப்போது திருவாதவூரடிகள் இவ்வாறு கூறுகின்றார் :—

"எங்கள் கடவுள் ஆன்மாக்கள் உய்யும்பொருட்டுக் கல்லாலவிருட்சத்தின் கீழிருந்து நால்வர்க்கும் அறங்களை

உரைத்தார். அடியார் கண்டு தொழும்வண்ணம் இந்தக் கனகசபையில் நடனம் செய்தருளுவர். திருமேனியில் நீறணியப் பெற்றவர்; அம்பிகைபாகர். அவர் பெருமைகளை இத்தன்மையன என்று சொல்வது அரிது". என்ற அளவில் புத்தகுரு அடிகளை அம்மட்டில் நில்லும் என்று தடுத்துக் கூறுகின்றார்:—

"கல்லாலவிருட்சத்தின்கீழ் உமது கடவுள் செபமாலை கொண்டிருந்தார் என்றீர். தியானித்தற்குத் தன்னினும் பெரிய ஓர் கடவுள் உண்டெனநினைந்தோ! உலகத்தார் வழிபடும்பொருட்டுக் கனகசபையில் நடிப்பர் என்றீர். தம்மினும் உயர்ந்த அறிவுடையார் காண நடிப்பதேயன்றி தமது இச்சையினால் நடிப்பார் உண்டா? இல்லையே. திருநீற்றைத் தமது சிவந்த திருமேனியில் ஏன் தரித்தார்? திருநீறு சுத்தம் என்று தரித்தாரோ? உமது கடவுள் மங்கையர் பங்கினன் என்று மேன்மையாக உரைத்தீர். பூமியில் எவரேனும் பாதிப் பெண்வடிவுடன் உளரோ? அவர் பெண்ணோடிருக்க நீர் ஏன் துறவியானீர்?" என்று வினவ, திருவாதவூரடிகள் புன்முறுவல்செய்து கூறுவார்:—

"நமது கடவுள் செபமாலை கொண்டிருத்தல் உலகத்தார் தவம்செய்யும் பொருட்டேயாம். படைக்கல வித்தையை மாணாக்கருக்குப் பயிற்றுவிக்கும் ஆசிரியன் தன் கையில் படைவாள் கொண்டுள்ளவாறு" என்றறிவீர். விறகின்கண் தீயைப்போல உயிர்க்குயிராய் நின்று ஆன்மாக்களை ஈடேற்றி யாளும்வண்ணம் கனகசபையில் நடிக்கின்றார். அதனால் தன்பொருட்டாக நடிக்கவில்லை யென்றறிவீர். திருநீறணிந்தது உயிர்களுக்குப் பிறவித் துன்பங்களைத் தீர்க்கும்பொருட்டென அறிவீர். அது சிசுக்களின் நோயை நீக்கும்பொருட்டுத் தாய்மார் உட்கொள்ளும் மருந்துபோலாம். உலகத்தார்க்குப் போகங்களைக் கொடுப்பதற்குப் போகியாகவும், யோகமுத்தியை உதவுதற்கு யோகியாகவும் கடவுள் வடிவங் கொண்டருளுவர் என்றறிவீராக" என்றார். புத்தர்கள் ஒழுங்கான முறை

யில் வாது செய்யாது கலகம் விளைவித்தனர். அப்போது திருவாதவூரடிகள் புத்தர்கள் நாவிலிருந்து சரஸ்வதியை விட்டு விலகும்படி வேண்டினர். புத்தர்கள் எல்லோரும் ஊமையர் ஆயினர். ஈழமன்னன் அடிகளை வணங்கிப் "பிறவிதொடுத்துப் பேசவல்லார்களை ஊமையாக்கினீர். பிறவிதொடுத்து ஊமையாயிருக்கும் என் புதல்வியைப் பேசப்பண்ணினால் நான் உமக்கடிமை'' என்றான்.

அடிகள் அந்தக் கன்னிகையைச் சபையின்கண் அழைப்பித்துத் தனக்கெதிரேயிருத்தி, அவளுக்கு அருள் புரிந்து புத்தர் உரைத்த கேள்விகட்கெல்லாம் 'நீயே விடை சொல்வாய்' என்று பணித்தனர். புத்தர் கேள்விகளுக் கெல்லாம் கன்னிகை கூறிய விடைகளைத் திருவாதவூரடிகள் "திருச்சாழல்" என்னும் பதிகத்தில் அமைத்துப் பாடி யருளினார்.

ஈழமன்னனும் திருவைந்தெழுத்தோதித் திருநீற ணிந்து அடிகளை வணங்கினான். சோழமன்னனும் தில்லை வாசிகளும் அம்பலக்கூத்தனை வணங்கி அடிகளைத் தொழு தனர். ஈழமன்னன் புத்தர்களின் ஊமைத்தன்மை நீங்க வேண்டும் என்று அடிகளை வணங்கி விண்ணப்பஞ் செய் தான். திருவாதவூரடிகள் அவர்கள்மேல் அருட்பார்வை செய்தருள யாவரும் ஊமைத்தன்மை நீங்கித் திருநீ றணிந்து சைவரானார்கள்.

"வாழ்வாத வூரர் வளவனவை முன்னெதிர்த்துச்
சூழ் தேரரை வென்றார் சோமேசா—தாழ்வகல
ஆற்றி னளவறிந்து கற்க வவையஞ்சா
மாற்றங் கொடுத்தற் பொருட்டு."

எனவரும் முதுமொழி வெண்பாவும்,

"குணமென்னும் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேயுங் காத்த லரிது."

என்னும் திருக்குறளும் இங்கு நோக்கத் தக்கவை.

தில்லைவாழந்தணர்கள் திருவாதவூரடிகளைத் தில்லையில் இருக்கும்படி வேண்டினர். அடிகள் தில்லையம்பதியில் யோகநிஷ்டையிலிருந்தனர். அப்போது திருப்பள்ளியெழுச்சி, திருப்படையெழுச்சி, அச்சோப்பதிகம், யாத்திரைப்பத்து முதலிய திருவாசகங்களைப் பாடியருளினார். அடிகள் அங்குறையுநாளில் அம்பலக்கூத்தர் ஓர் வேதியர் வடிவங் கொண்டு திருவாதவூரடிகள் முன்சென்று நின்றபோது, அவர் வேதியரை நோக்கி, "நீர் எங்குளீர் கூறும்" என, வேதியர் "நாம் பாண்டி மண்டலத்தில் உளேம்" என்றார். பாண்டி மண்டலம் என்றதும் அடிகள் முன்னிலும் வேதியரிடம் அன்பு பெருகி, "இங்குவரவேண்டிய காரணம் என்ன?" என்றார். "நீர் இறைவனைப் பரிமேலேறிவரச் செய்தமையால் பாண்டிநாடு ஏனைய நாடுகளிலும் சிறந்த பெருவாழ்வடைந்துளது. நீர் திருப்பெருந்துறையில் பரமாசாரியரை அடைந்து திருவடிச்சேவை செய்து திருக்கழுக்குன்றம் முதலிய பதிகளை வணங்கித் தில்லை வந்து புத்தரை வாதில் வென்ற செய்தி யாவும் பாண்டிநாட்டார் கேட்டறிந்து இன்புறுகின்றனர். இறைவன்மேல் நீர் பாடிய திருப்பாடல்களை ஓதுவான் கருதி இங்கு வந்தேன். அவைகளை யான் எழுதுமாறு நீர் விளங்கவிளம்பிவிடவேண்டும்" என்றார். அப்போது அடிகள் சொல்லவும் ஐயர் அவைகளை ஏட்டில் எழுதினார். இன்னும் இறைவர்மேல் கோவை பாடவேண்டுமென்று திருவாதவூரடிகளைக் கேட்டார்; அதனையும் எழுதி முடித்தபின் ஐயர் மின்னலைப்போல மறைந்தருளினார். அடிகள் எங்குந் தேடியும் காணாமையால் அம்பலக்கூத்தர் என்று அறிந்தார். கண்ணீர் பொழிந்தார். தேவரீர் எங்கே போனீர் என்று கூறி மண்மேல் வீழ்ந்தார். சிவானந்தக்கடலில் மூழ்கினார். அம்பலக்கூத்தர் தாம் எழுதிய ஏட்டின் இறுதியில்-வாதவூரன் விளம்பிட மன்றுள் அம்பலவன் கையெழுத்தென்று காப்புச்செய்து பொன்னம்பலத்தின் பஞ்சாட்சரப்படியில் வைத்தருளினர். வைத்த ஏட்டைப் பூசை செய்யும் அந்தணன் கண்டு அப்புதுமையைத் தில்லையுள்ளார் அனைவருக்கும் அறிவித்தான். தில்லைவாசிகள் எல்

லோரும் புத்தகத்தைக் கண்டார்கள். இது தெய்வீகம் என்று எண்ணினார்கள். அந்தணரில் ஒருவர் அப்புத்த கத்தை மலர்களினால் பூசித்தெடுத்துக் கட்டவிழ்த்து வாசித் தார். தமிழ் வேதமாகிய திருவாசகம் அறுநூறும் திருக் கோவையார் நானூறும் வாசித்தபின் இறுதியில் 'வாதவூரன் சொல்லத் திருச்சிற்றம்பலமுடையான் கையெழுத்து' என் றிருப்பதையும் வாசித்தான். கேட்டவர்கள் எல்லோரும் புளகம் கொண்டார்கள். ஆனந்தக் கண்ணீர் சொரிந்தார் கள். வீட்டு நெறிக்கு இனி வேறு நூலுண்டோ என்று வியந்தார்கள். இந்நூலின் பொருளைக் கேட்போம் என்று திருவாதவூரடிகளிடம் சென்று நடந்த செய்தியைச் சொன் னார்கள். அடிகள் இறைவர் திருவடிகளை நினைந்து அழு தார். இறைவர் தம்மிடம் வந்து செய்த திருவிளையாடல் களை அவர்கட்குச் சொன்னார். திருவாசகமாகிய தமிழ் வேதத்தின் பொருளைத் தங்களுக்கு உணர்த்தவேண்டும் என்று அடிகளைக் கேட்டார்கள். அடிகள் நடராசப்பெரு மான் முன்னிலையில் சொல்லுவதாகப் பொன்னம்பலத் துக்கு வந்தார். அனைவரும் பின் தொடர்ந்தனர். அடிகள் பொன்னம்பலம் வந்ததும் "தமிழ்மாலைக்கு இவர் தான் பொருள்" என்று உரைசெய்து எல்லாரும் காணமறைந்து இறைவருடன் இரண்டறக் கலந்தனர். யாவரும் குதூ கலம் கொண்டார்கள். மனம் நெஞ்சு நெக்குவிட்டு உருகினார்கள். மகிழ்ந்தார்கள். கைகளைக்கூப்பி வணங் கினார்கள். பூதகணநாதர் ஆனந்தக் கூத்தாடினார்கள். தேவர்கள் பூமாரி பொழிந்தனர். எல்லோரும் தமிழ் வேதமாகிய திருவாசகம் என்னும் தேனமுதருந்தி ஆனந்த பரவசராய்த் துதி யெடுத்தார்கள்.

"திருவாத வூரடிகள் சரிதையே சிவசரிதை
திருவாத வூரடிகள் ஞானமே சிவஞானம்
திருவாத வூரடிகள் திருவாக்கே சிவவாக்குத்
திருவாத வூரடிகள் சிவமிஃதென் சிந்திதமே."

அதுகண்டு எல்லோரும் அம்பலவாணனை வணங்கித் தத்தம் இல்லம் சென்றார்கள்.

நாயனார் அறுபான்மும்மை நாயன்மார் குழுவிற் சேராத தனியடியவர். சிவகரணமுற்று அறிவாற் சிவனேயாய் விளங்கியவர். குரு உபதேசம் பெற்ற திருப்பெருந்துறையில் இவருக்கே எல்லா உற்சவாதிகளும் நடத்தப்படுகின்றன. மார்கழி மாதத் திருவாதிரைக்கு முன் பத்துத் தினங்களிலும் திருவெம்பாவை பூசைச் சிவாலயங்களிலெல்லாம் நடப்பதும் சுவாமிகளின் தனிச் சிறப்பைக் காட்டுவதாம்.

தானே முத்தி தருகுவன் சிவனவன்
அடியன் வாத வூரனைக்
கடிவின் மனத்தாற் கட்டவல் லார்க்கே.

திருவாசகம் கருங்கல்நெஞ்சையும் கரைக்கக்கூடியது. மனதை உருக்குவதில் இதற்குச் சமானமான நூல் இவ்வுலகில் இல்லையென்பது துணிபு. திருக்கோவையார் ஞான நூல். "பாவேனைப் பாடுவதுன் பாட்டு" என்பது இருநூற்களுக்கும் பொருந்தியது.

மாணிக்கவாசகர் திருவடி வாழ்க.

திருச்சிற்றம்பலம்.

## திருத்தொண்டர் வணக்கம்

அண்டரு நான்முகத் தயனும் யாவருங்
கண்டிட வரியதோர் காட்சிக் கண்ணவா
யெண்டகு சிவனடி யெய்தி வாழ்திருத்
தொண்டர்தம் பதமலர் தொழுது போற்றுவாம்.

## வாழ்த்து

*மழைவ ழங்குக மன்னவ னோங்குக*
*பிழையில் பல்வள னெல்லாம் பிறங்குக*
*தழைக வஞ்செழுத் தோசை தரையெலாம்*
*பழைய வைதிக சைவம் பரக்கவே.*

திருச்சிற்றம்பலம்